

# பெருந்தகை

## பி.ஏ.சி. ஆர்






இறைவனே இந்த மாளிகையின் தலைவர் !

ஒவ்வொரு உணவு வேளையிலும்

கண்ணுக்குப் புலப்படாத விருந்தாளியாக

அமைகிறார் !

மௌனமாக ஒவ்வொரு

உரையாடலையும் இங்கு உற்றுக் கேட்கிறார் !

# பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

'எழுத்துச்செம்மல்'

குன்றக்குடி பெரியபெருமாள்

இந்நூல்
1994 ஆம் ஆண்டு வெளியான வரலாற்று நூல்களில் மிகச்சிறந்த நூல் என தேர்ந்தெடுக்கப் பட்டு தமிழக அரசால் முதல் பரிசு வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றது.

வெளியீடு :

அமரர் பி.ஏ.சி. இராமசாமி ராஜா
நூற்றாண்டு விழாக் குழு
இராஜபாளையம் - 626 117.

முதற் பதிப்பு : 1994 / 5000 பிரதிகள்
இரண்டாம் பதிப்பு : 1997 / 2000 பிரதிகள்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| பெயர் | : | பெருந்தகை பி.ஏ.சி.ஆர். |
| துறை | : | வாழ்க்கை வரலாறு |
| ஆசிரியர் | : | குன்றக்குடி பெரியபெருமாள் |
| வெளியீடு | : | அமரர் பி.ஏ.சி.ஆர்.<br>நூற்றாண்டு விழாக் குழு<br>இராஜபாளையம் - 626 117. |
| வெளியிட்ட நாள் | : | 24.4.1994 |
| வடிவம் | : | 21 செ.மீ. x 14 செ.மீ. |
| அச்சும் அமைப்பும் | : | PREMIER OFFSET PRINTERS,<br>MADRAS - 8. PHONE : 826 60 21 |
| அட்டை அமைப்பு | : | FOUNTAIN-HEAD<br>COMMUNICATION PVT LTD., MADRAS. |
| விலை | : | ரூ. 60 |



# பாராட்டுரை

**R. VENKATARAMAN**
FORMER PRESIDENT OF INDIA

PHONE : 4936789
'POTHIGAI'
GREENWAYS ROAD
MADRAS - 600 028.

அமரர் பி.ஏ.சி. ராமசாமி ராஜா அவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்திற்கு அணிந்துரை எழுதுவதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். சென்னை மாநிலத்தில் தலைவர் காமராஜ் அவர்கள் முதலமைச்சராக இருந்த காலத்தில் நான் தொழில் அமைச்சராகப் பணியாற்றும் வாய்ப்பு எனக்குக்கிட்டியது. அப்பொழுதே ராஜா அவர்கள் பல தொழில்களை துவக்கியிருந்தார்கள். இராஜபாளையம் நூற்பாலை, சர்ஜிகல் காட்டன் தொழிற்சாலை போன்றவற்றை திறம்பட நடத்தி வந்திருந்தார். பெரிய -சிமெண்ட் தொழிற்சாலை அமைக்கும் முயற்சியில் அப்பொழுது அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். அன்று முதல் திரு. ராமசாமி ராஜா அவர்களுடன் எனக்கு நெருங்கிய தொட ர்பு ஏற்பட்டது.

ராமசாமி ராஜா அவர்களின் கம்பீர தோற்றம், அவரது அன்பு கனிந்த சொற்கள், கனிவான மனம், கடவுள் பக்தி, தர்ம சிந்தனை அனைத்தும் கண்டோர் மனதைக் கவர்ந்தன. அறக்கட்டளைகள் அமைத்து கல்விக்கூடங்கள் பல நிறுவினார். தான் பெற்ற செல்வம் மக்களுக்குப் பயனளிப்பதாக இருக்க வேண்டுமென்ற ஆர்வம் கொண்டவர். ஆகவேதான் அவரிடத்தில் தொழிலாளர்கள் மிகப் பரிவு, பாசத்துடன் ஒத்துழைத்தனர்.

ராமசாமி ராஜா அவர்கள் தொழில்துறை நிபுணர் என்று கூறினால் மிகையாகாது. மெட்ராஸ் சிமெண்ட் ஆலை வைக்கும் பொழுது அவருக்குப் பல தடைகள், குறுக்கீடுகள் எல்லாம் எழுந்தன. அவையனைத்தையும் மனம் தளராமல், பிறர் மனம் நோகாமல், கருமமே கண்ணாயினார் என்ற முறைப்படி சமாளித்து அதனை ஆரம்பித்த பெருமை சொல்லாமல் விவரிக்க இயலாது. அக்காலத்தில் தொழில் துவங்குவது என்றால் தொல்லை துடங்குவது என்ற நிலை. கனிப்பொருள்பற்றாக்குறை, மத்ய அரசு அனுமதி வழங்குவதில் முட்டுக்கட்டை, முதலீடுகள் செய்வோர் குறைவு, நிதி உதவும் ஸ்தாபனங்களின் காலதாமதம் என்று அடுக்கிக் கொண்டே போகலாம். இவையனைத்தையும் கடந்து தொழில் நிறுவினால் பலருக்கு வேலை வாய்ப்பு, மின்சாரம், பள்ளிகள், மருத்துவ வசதி போன்ற சமூக வளர்ச்சி அனைத்தும் ஏற்படுகின்றன. ராஜா அவர்கள் பொருள்

ஈட்ட வேண்டுமென்ற நோக்கத்துடன், சமூக நலப் பணிகளையும் செய்ய வேண்டுமென்ற ஆர்வம் பெற்றிருந்தார். ராஜபாளையம் பகுதி மக்களுக்குத் தந்தையாக உருவெடுத்தார்.

நல்லெண்ணம் படைத்தவர்கள் பரம்பரை சீரோங்கி வளரும் என்பதற்கு ராமசாமி ராஜா அவர்கள் குடும்பம் ஓர் எடுத்துக் காட்டு. அன்னார் மகன் திரு. ராமசுப்பிரமணிய ராஜா அவர்கள் தந்தை நிறுவிய தொழில்களை வளர்த்ததல்லாமல், பல புதுத் துறைகளிலும், நாட்டில் பல பகுதிகளிலும் தொழில் நிறுவனங்கள் அமைத்துள்ளது எங்களுக்கெல்லாம் பெருமகிழ்ச்சி அளித்துள்ளது.

"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல்"

என்ற வள்ளுவர் வாக்கை நிறைவேற்றிய பெருமை, ராமசுப்பிரமணிய ராஜாவுக்கு உரித்தானது. தந்தையைப் போலவே, வினயமான பேச்சு, அமரரை உய்விக்கும் அடக்கம், சலியாத உழைப்பு, உழைப்புக்கேற்ற ஆற்றல் எல்லாம் ஒருங்கே பெற்றவர். மூன்றாவது தலைமுறையில் வரும் திரு. வெங்கட்டராம ராஜா அதே வழியில் வந்து கொண்டிருப்பது பெருமைக்குரியது. மூன்று தலைமுறையினரோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது.

ராஜா அவர்களின் நூற்றாண்டுவிழாக் கொண்டாடுவது சாலப் பொருத்தமானது. தொழில் துறையில் முன்னோடியாக பணியாற்றி வழி காட்டியவர். பண்பாட்டுக்கு ஓர் கலங்கரை விளக்கு. அன்னார் சரித்திரம் இளைய சமுதாயத்துக்கு படிப்பினையாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

நூலாசிரியர் குன்றக்குடி பெரிய பெருமாள் பல அரிய செய்திகளைத் திரட்டி இனிய தமிழில் எழுதியுள்ளார். ராஜா அவர்கள் மேற்கொண்ட பல அயல்நாட்டுப் பயணங்களைப் பற்றிய விவரங்கள் இடம் பெற்றுள்ளன. அன்னாருடைய குண சிறப்புகள் தெளிவாக வரையப்பட்டுள்ளன. படிப்பதற்கு சுவையான, தெளிவான நடை மேற் கொண்டிருப்பது ஆசிரியர் திறனுக்குச் சான்று.

வாழ்க ராமசாமி ராஜா திரு நாமம் !
வளர்க அன்னார் வித்திட்ட பணிகள் !

ஆர். வெங்கட்ராமன்



# பதிப்புரை


பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா
தலைவர் : அமரர் பி.ஏ.சி. ராமசாமி ராஜா
நூற்றாண்டு விழாக் குழு

'ராமமந்திரம்'
இராஜபாளையம்
626 117


என் தந்தையார் அமரர் பி.ஏ.சி. ராமசாமி ராஜா அவர்களின் பிறந்ததின விழாவை வருடா வருடம் தொழிலாளர்களும் நகர மக்களும் சுமார் 30 ஆண்டுகளாகச் சிறப்பாக கொண்டாடி வருகிறார்கள். இந்த ஆண்டு அவர்களது 100-வது பிறந்த தின விழாவை சிறப்பாக கொண்டாட வேண்டும் என்று எல்லோரும் விரும்பினார்கள்.

ஏற்கனவே என் தந்தையார் அவர்களின் திருவுருவச்சிலையை 1971 ஆம் ஆண்டில் நிறுவி சிறப்புச் செய்த அப்பெருமக்களின் விருப்பத்தையும் ஆர்வத்தையும் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். நூற்றாண்டு விழாக்குழுத் தலைவராகவும் என்னை இருக்குமாறு கேட்டுக் கொண்டார்கள். பெருமக்களின் விருப்பத்திற்கு இசைந்து, என் தலைமையில் நூற்றாண்டு விழாக்குழு அமைக்கப் பெற்றது. விழாக் குழுவினர் என் தந்தையார் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதி வெளியிட வேண்டுமெனவும் தீர்மானித்தார்கள்.

என் தந்தையார் அவர்களது தொழில் ஆக்கங்களும், பொதுநல ஆர்வங்களும், எல்லாவற்றிற்கும் மேலாகத் தெய்வபக்தியும், தீர்க்க தரிசனத்துடன் வடிவமைத்த திட்டங்களும் எண்ணிப் பார்க்கின்றபோது, எனக்கு அவர்களிடத்து பக்தியும், மரியாதையும் பெருகும். அவர்கள் எனக்குக் கூறிய பல அறிவுரைகள், எனக்கு மட்டுமின்றி, எல்லோருக்கும் பயன்தருமென நம்பினேன். வாழ்வாங்கு வாழ்ந்த அவர்களின் பயனுடைய வாழ்க்கை, வரலாற்று நூலாக வெளிவருவது பலருக்கும் பயனளிக்குமெனக் கருதினேன்.

என் தந்தையார் அவர்கள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்த பெருமக்கள் ஒரு சிலர்தான் இப்போது வாழ்ந்து வருகிறார்கள். எனவே அவர்களது வாழ்க்கை வரலாற்றை எழுதுவதற்கு, தந்தையார் அவர்களின் டைரிகளும், அவர்களோடு பழகிய ஒரு சிலரின் அனுபவங்களும், எங்கள் குடும்பத்தாரின் நினைவுகளும் ஆதாரங்களாக அமைந்தன. அத்தகைய ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டே, வாழ்க்கை வரலாற்றை எழுத வேண்டி இருந்தது.

பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா அவர்களின் பரிந்துரையின்படி "எழுத்துச்செம்மல்" குன்றக்குடி பெரிய பெருமாள் அவர்களை இப்பணியினை ஏற்றுக்கொண்டு நிறைவேற்றுமாறு கேட்டுக் கொண்டேன்.

என் தந்தையார் அவர்களுடன் நெருங்கிப் பழகிய முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் உயர்திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்களையும், இந்திய தேசியத்தொழிற்சங்கக் காங்கிரஸ் தலைவர் உயர்திரு. ஜி.ராமானுஜம் அவர்களையும், மற்றும் எங்கள் உறவினர்களையும், நகரப் பெருமக்கள் சிலரையும், எங்கள் தொழிலகங்களிலும், கல்வி நிலையங்களிலும் பணியாற்றும் அலுவலர்களையும் சந்தித்துப் பேட்டி கண்டு, செய்திகளைச் சேகரிக்குமாறு நூலாசிரியரைக் கேட்டுக் கொண்டேன். அவர்களும் அனைவரையும் சந்தித்து, பயனுள்ள செய்திகளைப் பதிவு செய்து, நூலை எழுதத் தொடங்கினார்கள். என் வேண்டுகோளுக்கு இணங்கி, இம்முயற்சிக்கு ஒத்துழைத்த பெருமக்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது தந்தையார் அவர்களின் ஜனன காலத்திலிருந்து, அவர்கள் அமரரான வரை உள்ள சம்பவங்களையும், தகவல்களையும் இலக்கியச் சுவையுடன் பயனுள்ள வகையில் தொகுத்து, நல்ல தமிழில் எழுதப் பெற்றுள்ள இந்நூல் தந்தையார் அவர்களுடைய வாழ்க்கையின் முழுச்சித்திரத்தைக் காணுமாறு சிறப்பாக அமைக்கப் பெற்றுள்ளது. என் தந்தையார் அவர்கள் தொடங்கிய எங்கள் "ராம்கோ" நிறுவனங்களின், தற்கால வளர்ச்சி நிலைகளும் இந்நூலில் விவரிக்கப் பெற்றுள்ளன.

தந்தையார் அமரர் பி.ஏ.சி. ராமசாமி ராஜா அவர்களின் நூற்றாண்டு விழாவில், அவர்களைப் பற்றிய இந்நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறேன். என் தந்தையார் அவர்களோடு நெருங்கிய அன்புடன் பழகிய மதிப்பிற்குரிய உயர்திரு. ஆர்.வெங்கட்ராமன் அவர்கள் இந்நூலுக்குப் பாராட்டுரை வழங்கி, அவர்களது திருக்கரங்களாலேயே வெளியிடும் நிகழ்ச்சி, எனக்குப் பெருமகிழ்ச்சி அளிக்கிறது.

இந்த நூலைப் படிக்கும் அனைவருக்கும் குறிப்பாக இளைஞர்களுக்கு, எனது தந்தையார் அவர்கள் வகுத்த வழி, நீண்டகாலப் பெரும் பயனை நல்குமென்ற நம்பிக்கையை வளர்க்கும். நேர்மையான வழியில், தன்னம்பிக்கையுடனும், தெய்வ பக்தியுடனும் .பணியாற்றினால், வியாபாரம் தொழில் முதலிய எல்லாத்துறைகளிலும் முன்னேறமுடியுமென்ற உறுதியை ஊட்டும். அவர்கள் காட்டிய அறவழியில், தன்னல மற்ற எண்ணத்துடன் செயலாற்றுகிற அனைவரும் வெற்றியடைவது திண்ணமாகும்.

இந்நூலை எழுதிய "எழுத்துச்செம்மல்" குன்றக்குடி பெரியபெருமாள் அவர்கள், என் தந்தையாரிடத்து ஈடுபாட்டுணர்வோடு, சிரத்தையுடன் நூலை உருவாக்கியுள்ளார்கள். இந்நூல் உருவாக்கம் கொள்வதில் பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா அவர்களும், எஸ்.என். சுப்பிரமணியம் அவர்களும் பெரிதும் துணைபுரிந்துள்ளார்கள். இப்பெருமக்களுக்கு என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

பி. ஆர். ராமசுப்பிரமணிய ராஜா

## படைப்புரை



குன்றக்குடி பெரிய பெருமாள்

'பாரதி இல்லம்'
குன்றக்குடி
623 206

உண்மைதான் !

மருக்கொழுந்தை தொட்ட கை, மணக்கத்தானே செய்யும்?

சந்தனத்தில் இட்ட விரல், கமழத்தானே செய்யும்?

ஒத்தது அறிந்து உயிர் வாழ்ந்த வித்தகப் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். சித்தத்தை வெளிப்படுத்தும் சீரிய வாழ்க்கையைத் தொட்டதால், எனது எழுத்துக்களுக்கு ஒரு புதிய 'சுகந்தம்' வந்து சேர்ந்தது !

அருமையும் பெருமையும் கொண்ட ஒரு மாமனிதர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். வாழ்ந்த பெருவாழ்வை, வையகம் அறிய வரலாறு ஆக்கியதால், என் உள்ளத்திற்குள் ஓர் அரிய 'சுகம்' கமழ்ந்தது !

எழுத்துக்குச் சுகந்தமும், எனக்குச் சுகமும் வந்து சேர, உழைத்த நேரங்கள், நான் வாழ்ந்த நேரங்களில் உன்னதமானவை; உயர் நலம் கொண்டவை; புண்ணியமானவையும் கூட !

தாகங்களைப் போக்கும் ஓர் ஊருணியாய், தனிச்சுவையளிக்கும் கனிகளைச் சுமந்த உள்ளூர்ப் பழுத்த ஒரு பயன் மரமாய், நோய்களைத் தீர்த்தருளும் மருந்தாகி, பேரறிவாளராய், நயனுடை நாயகராய், பெருங்குணப் பெருந்தகையாய்ப் புகழார்ந்து வாழ்ந்து, மானுடத்தைச் சிறக்கச் செய்த மா மனிதர் பி.ஏ.சி.ஆர்.. போற்றற்குரிய அப் பெருமகனாரின் புனித வரலாற்றை என்றென்றும் ஏற்றுச் சுமந்து நிற்க என் எழுத்தை உருவாக்கிய நேரம், மனித குலத்திற்குப் பயனும்

படிப்பினையும் நல்கப் பயன்படுமென்பதால், அந்த நேரம் 'உன்னதமானது' 'புண்ணியமானது' என உரைப்பதில் உரிய பொருள் உண்டுதானே?

இருப்பத்தைந்து ஆண்டுக்காலம் இராஜபாளையத்தில் வாழ்ந்திருக்கப் பேறு பெற்றவன்நான். ஓர் அரசாங்க அலுவலகத்தில் பணியாற்றினேன். தேசப்பற்றும், தெய்வபக்தியும், இலக்கிய உணர்வும் கொண்ட இராஜபாளையத்தில் வாழக் கொடுத்து வைத்த வாய்ப்பு - இறைவனின் பெருங்கருணையால் கிடைத்த அருட்கொடை !

இராஜபாளையத்தில் வாழ்ந்த போது, பெருங் குணப் பண்பின் இருபெரும் 'ராஜா'க்கள் என் இதயத்தைக் கவர்ந்தனர். வாழ்ந்த பகுதியையே மனித குலத்தின் நலமான வாழ்வுக்குத் தொழிற் துறையால், வளம் கொழிக்கச் செய்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர்; வாழ்ந்த இல்லத்தையே வாழும் மனிதர்களின் இதய நலத்திற்கென ஈந்து புகழ் பெற்ற தியாகச் செம்மல் பி.எஸ்.கே. ஆகிய இரு பெரு மக்களின் ஆக்கமுடைய நோக்கங்கள், என் நெஞ்சில் நேயம் மிகுந்த தாக்கங்களை நீந்தச் செய்திருந்தன ! எனவே வாய்ப்புக் கிடைக்கும் நேரமெல்லாம் அந்த இருபெரும் ராஜாக்களின் பெரு நல வாழ்வைச் சொல்லிச் சொல்லி மனம் கொள்வதிலும், மனம் மகிழ்வதிலும் வேட்கை கொண்டிருந்தேன்.

இராஜபாளையத்தில் இருந்தபோது, என் இலக்கிய உணர்வுக்கும், எழுத்துலகப் பிரவேசத்திற்கும் ஊக்கமும், ஆக்கமும் அளித்த உள்ளார்ந்த பெருமக்கள் பலரில், என்னிடத்து நெருக்கமும், நெஞ்சார்ந்த உறவும் கொண்டுள்ள பேரறிஞர், இலக்கிய உலகில் தமக்கெனத் தனித்ததோர் உன்னதப் புகழ் கொண்டிருக்கும் பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா, ஓராண்டுக்கு முன்னர் ஒருநாள் என்னை அழைத்தார். பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் நூற்றாண்டு வருவதை நினைவுபடுத்தி, "ஏற்கனவே அப்பெருமகனாரிடம், ஆழ்ந்த பற்றுதல் கொண்டிருக்கும் நீங்கள், அவரது வாழ்க்கை வரலாற்றை எழுதினால், நன்றாக அமையுமெனக் கருதி, ராஜாவிடம் உங்களைப் பரிந்துரைத்திருக்கிறேன்." என்றார்.

பெற்றறியாப் பெரு மகிழ்ச்சி கொண்டேன் நான் !

பின்னர் ராமமந்திரத்திற்கு ராஜாவிடம் என்னை அழைத்துச் சென்றார் மு.கு.ஜகந்நாத ராஜா. ராஜாவை நான் நன்கு அறிவேன். ராஜா ஒரு சிறிதே என்னை அறிவார்கள். எனினும் தமது தந்தையார் பி.ஏ.சி.ஆரைப் போலவே, மனிதர்களின் முகத்தைப் பார்த்ததும், ராஜா, மனத்தைப் படித்துவிடும் திறன் மிகுந்தவர்களென்பதை தெளிவாக அறிந்திருந்தேன். எனவே நம்பிக்கையுடன் சென்றேன். எதிர்பார்த்ததைப் போலவே என்மேல் நம்பிக்கை வைத்துத் தமது தந்தையார் அவர்களின் வரலாற்றை, எழுதும் பொறுப்பை என்னிடம்

4813

வழங்கியதோடு, வரலாற்றை உருவாக்குவதற்கு அடிப்படையான ஆதாரச் செய்திகளை எப்படியெல்லாம் திரட்டவேண்டுமென ராஜா அறிவுறுத்தவும் செய்தார்கள்.

ராஜா அவர்களின் வழி காட்டலில் என் பணியைத் தொடங்கினேன்.

சென்னைக்குச் சென்று, முன்னாள் இந்தியக் குடியரசுத்தலைவர் ஆர்.வி. அவர்களிடம்,பெருந்தகை பி.ஏ.சி.ஆர், பற்றிய செய்திகளை அறிய ராஜா ஆவன செய்து, என்னை அவர்களிடம் அழைத்துச் சென்றிருந்தார்கள். மேதகு ஆர்.வி. பெருந்தகையின் பெருங்குணப் பண்புகளையெல்லாம் பெரு மகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தார்கள்.

அவர்கள் வழங்கிய செய்திகள் வரலாற்றின் பல அத்தியாயங்களில் பயன்படுத்தப் பயன் பெற்றுள்ளன.

இந்திய தேசீயத் தொழிற்சங்கக் காங்கிரஸ் பெருந்தலைவர் திருமிகு. ஜி.இராமானுஜம் தொழில் துறையில் பெருந்தகையுடன் பல்லாண்டுப் பழக்கமுடையவர்கள். தமது நெருக்கமான அலுவல்களுக்கிடையே நெடுநேரம் பி.ஏ.சி.ஆர். பற்றிய செய்திகளை மிகுந்த உற்சாகத்துடன் தெரிவித்து உதவினார்கள்.

பெருந்தகை தொடங்கிய தொழில்களிளெல்லாம் பல்லாண்டுக் காலம் பணியாற்றும் பேறுபெற்ற 'ராம்கோ' இயக்குநர் திருமிகு. எஸ். அர்ஜுன ராஜா, பல மணி நேரம் நினைவில் நின்ற தகவல்களை எல்லாம் வாஞ்சையோடு வழங்கினார்கள். இராஜபாளையம் ஆலைப் பொது மேலாளர் திரு. எஸ். ஆர். இராஜகோபாலன், தாம் ஆலையில் பணியாற்றச் சேர்ந்த காலத்திலிருந்து பெருந்தகையின் இயக்க இயல்புகளையும், இனிய சுபாவங்களையும் எடுத்துரைத்தார்கள்.இராஜபாளையம் நகர் மன்றத் தலைவராகவீற்றிருந்த அமரர் பி.எல். துரைசாமி ராஜா, இராஜபாளையம் ரயில் தொடர்பு பெறுவதற்குப் பெருந்தகையின் பேருழைப்பைப் பற்றிப் பெரிதும் நன்றிப் பெருக்கோடு தெரிவித்து மகிழ்ந்தார்கள். பெருந்தகையின் குடும்ப மருத்துவராகவிருந்த அமரர் டாக்டர். பத்மநாபன் பல்வேறு செய்திகளை உள்ளார்ந்து உரைத்து உதவினார்கள். சமஸ்கிருதப் பண்டிதர் கே.ஜி. கிருஷ்ணமூர்த்தி, பெருந்தகையின் திருவார்ந்த பேருள்ளத்தைத் தெளிவுபடுத்தினார்கள்.

திருமிகு. எம்.ஆர்.எஸ். இராதாகிருஷ்ண ராஜா, பெருந்தகையின் மைத்துனர் ஆவார்கள். அவர்கள் பல சுவையான நிகழ்ச்சிகளையும், செய்திகளையும் வழங்கினார்கள். பொருத்தமான இடங்களில் அவைகள் வரலாற்றில் இணைக்கப் பெற்றுள்ளன.

பி.ஏ.சி.ஆரின் மருமகனார் திருமிகு. எஸ்.எஸ். இராமச்சந்திர ராஜா குழந்தைப் பருவம் முதலாகவே பெருந்தகையுடன் இனிய தொடர்பு கொண்டிருந்தவர்கள். எனவே அவர்கள் வழங்கிய தகவல்கள் முழுமையும் வரலாற்றில் இடம் பெற்றுப் பயனளித்துள்ளன.

பெருந்தகையின் பங்காளிகளும், ஒரே வாசலைக் கொண்ட ஓர் இல்லவளாகத்தில் பி.ஏ.சி.ஆருடன் வாழ்ந்தவர்களுமாகிய திருவாளர்கள் மைனர் பி.ஏ. சக்கராஜா, பி.ஏ. பீமராஜா, பி.ஏ. ஜெகந்நாத ராஜா, பி.ஏ. ஜெகதீஸ்வர ராஜா ஆகிய பெருமக்கள் உறவார்ந்த பழமையான செய்திகளை தெரிவித்து உதவினார்கள்.

பெருந்தகையின் குடும்பத்தைச் சேர்ந்த பெண்மணிகள், தாங்கள் நினைந்து போற்றித் தெய்வமாகவே மதிக்கும் பெருந்தகையைப் பற்றிக் கனிந்த அன்புடன் கருணை நிறைந்த பல தகவல்களைக் கூறினார்கள். பி.ஏ.சி.ஆரின் துணைவியார் சேதுராமம்மாள், புதல்விகள் லிங்கம்மாள், சேதுராமம்மாள், சிட்டம்மாள், பேத்தியும் மருமகளாருமான சுதர்சனம் அம்மையார் ஆகியோர் வழங்கிய தகவல்கள், பி.ஏ.சி.ஆரின் உயர்ந்த குணப் பண்புகளை உணர்ந்து, உரிய இடங்களில் வாழ்க்கைச் சரித்திரத்தில் இணைக்கத் துணை நின்றன.

பெருந்தகையின் திருக்குமாரர் ராஜா அவர்கள், நூற்றாண்டு விழாக் குழுவினரின் விருப்பத்தை ஏற்று, தமது தந்தையார் அவர்களின் நூற்றாண்டுப் பெருவிழாவில், பெருந்தகையின் வரலாற்றை வெளியிடக் கருதிப் பல்வேறு பணிகளுக்கிடையே, நான் விரும்பியபோதெல்லாம், தம் தந்தையார் பற்றிய செய்திகளை மிகுந்த ஆர்வத்துடனும், சிரத்தையுடனும் தெரிவித்து உதவினார்கள். தந்தையாரின் டைரிகளைப் படித்து வரலாற்றில் பயன்படுத்தற்குரிய நிகழ்ச்சிகளை, தகவல்களை வழங்கினார்கள். வரலாற்றை எழுதத் தொடங்கிய வேளையில், அவ்வப்போது, அதன் வடிவமைப்பு உருவாக்கம் பற்றி அரிய வழியுணர்த்தியும், உரிய ஆலோசனைகள் வழங்கியும் ஆற்றுப்படுத்தினார்கள். பல மணி நேரங்களை இந்தப் பணிக்காக அவர்கள் அளித்துள்ள அருமை, என் நெஞ்சை நெகிழ்வித்தது.

பெருந்தகையின் பேரரும், ராஜாவின் புதல்வருமான திருமிகு. பி.ஆர்.வெங்கட்டராம ராஜாவைச் சென்னையில் சந்தித்தபோது, சுவையும் பயனும் மிளிருமாறு வரலாற்றை உருவாக்கம் கொள்ளச் செய்யுங்களென உற்சாகப்படுத்தினார்கள்.

பெருந்தகையுடன் பல்லாண்டுகள் அணுக்கமாகப் பணியாற்றி அரிய பேற்றினைப் பெற்றிருக்கும் இராஜபாளையம் மில்ஸ் பர்சனல் மேனேஜர் திருமிகு. எஸ்.என். சுப்பிரமணியம், இந்தப் பணியைத் தொடங்கிய நேரத்திலிருந்து அனைத்து முயற்சிகளுக்கும் பெருந் துணையாக அமைந்து, அவ்வப்போது

பெருந்தகை பற்றிய புதிய புதிய செய்திகளை வழங்கி, எழுதும் பணிக்கு உரமளித்து ஊக்கமுட்டி வந்தார்கள்.

பெருந்தகையின் பள்ளிப் பருவத்தில் உடன் பயின்ற பொன்னையா (கோனார்) தமது நூற்றிரண்டாவது வயதில் ஒரு கிராமத்தில் வாழ்ந்து வருகிறாரென திருமிகு. எஸ்.என்.எஸ், அங்கு என்னை அழைத்துச் சென்றார். முதிய மூத்த பருவத்தில் இருப்பினும், பொன்னையா, பெருந்தகை பற்றி உற்சாகமாக எடுத்துரைத்தார். பெருந்தகையின் பள்ளிப் பருவத்தைப்பற்றிய பதிவுகளையும், ஆவணங்களையும் ஸ்ரீவில்லிப்புத்தூர் சி.எம்.எஸ். மேனிலைப்பள்ளி, இந்து மேனிலைப் பள்ளி நிர்வாகிகள் மகிழ்ந்து காட்டினர்.

நிலையாமையைத் தன் இயல்பாகக் கொண்ட இந் நிலவுலகில், நிலைபேற்றை விரும்பிய பெருமக்கள், பிறர் நலம் போற்றும் செயற்கரிய செயல்களாற்றித் தம் புகழை நிலை நிறுத்தி மறைகின்றனர். அவர்களின் பூத உடல் மறைந்ததே தவிர, புகழ் உடல் மரணமிலாப் பெருவாழ்வு பெற்று விடுகின்றது. என்றென்றும் மக்கள் மனத்தில் அவர்கள் வீற்றிருக்கின்றனர். அத்தகைய பேற்றினைப் பெற்றவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். என்றென்றும் மானுடர் மனத்தில் இடம் பெறும் பெருமைக்குரிய அப் பெருந்தகையை, இனிய தமிழின் வரிவடிவத்திலும் எழுந்தருளச் செய்துள்ள வரலாற்று முயற்சிக்குப் பேருதவி புரிந்த மரியாதைக்குரிய மேதகு ஆர்.வி, திருமிகு. ஜி.ஆர். மற்றும் பெருந்தகையின் அலுவலர்கள், அன்பர்கள், உறவினர்கள், குடும்பத்தினர்கள் அனைவரையும் பணிவோடும், நன்றிக் கனிவோடும் போற்றித் தொழுகின்றேன்.

இத்தகைய பெரும் பணிக்கு நம்பிக்கையோடு என்னை ஆற்றுப்படுத்திய 'குருபக்தமணி' ராஜா அவர்களையும், வாய்ப்புக்கு உள்ளார்ந்து உதவியுள்ள பன்மொழிப் புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா அவர்களையும் என்றென்றும் நினைவில் மதிப்பேன், நெஞ்சில் துதிப்பேன்.

அறுபது கோடி பாரத மக்களை ஆண்ட, செங்கோல் பிடித்த தங்கக்கரத்தால் இந்நூல் வெளியிடப் பெறுகின்றது ! பெருமைக்குரியவர் வரலாற்றைப் புகழுக்குரியவர் வழங்குகின்றார்கள் ! எத்தகைய சிறப்பு இது? அணிந்துரை நல்கி, அகம் குளிர வெளியிட்டு உதவும் மேதகு ஆர்.வி. அவர்களுக்கு மீண்டும் என் நன்றியைப் படைக்கிறேன்.

நூலை அச்சுருவாக்கி அழகிய அமைப்பில் வழங்கியுள்ள சென்னை PREMIER OFFSET PRINTERS அச்சக உரிமையாளர்களுக்கும், அட்டை அமைப்பை எழிலுருவாக்கித் தந்த சென்னை FOUNTAIN-HEAD நிறுவனத்தார்க்கும், அச்சுத் திருத்துவதில் உதவியாக அமைந்த நண்பர் என்.எஸ். முத்து கிருஷ்ண ராஜாவுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தெய்வ பலமும், திருவருள் நலமும் பெற்றிருந்த பெருந்தகையின் வாழ்க்கை வரலாற்றை உருவாக்கிக் கொண்டிருந்த வேளையில், எனக்குப் பல நலன்கள் வந்தன! இந்நூலைப் படிக்கும் அனைவருக்கும் அத்தகைய நலன்கள் கூடி வருமென பெரிதும் நான் நம்புகிறேன். எனது நம்பிக்கை நனவாக, எல்லாம் வல்ல முருகப் பெருமானைப் பிரார்த்திக்கிறேன்.

குன்றக்குடி பெரியபெருமாள்



# பொருளடக்கம்

சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடம்

ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹா சுவாமிகள்

அவர்களுக்குச் சமர்ப்பணம்



பெருந்தகை பி.ஏ.சி. ராமசாமி ராஜா

இராஜபாளையம்

1894 - 1962

# 1

# ஓங்கார உதயமும் உன்னத இதயமும்

உலகம் கண்டிராத ஓர் அதிசயம் !

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் நடந்தது !

பாரத தேசத்தின் தென்கோடியிலிருந்த சேர நாட்டில் நடந்த நிகழ்ச்சி !

ஏழு வயதான ஒரு தவப்பிள்ளை, குருகுல வாசம் செய்து, வேதம், வேதாந்தம், ஸ்மிருதி, புராணம், சாத்திரம், காவியம் ஆகிய அனைத்தையும் கசடறக் கற்றுத் தெளிந்தது !

எட்டாவது வயதிலேயே 'சந்நியாசம்' பெற்றது !

உலகத்தவர் உய்வதற்குரிய மெய்ப்பொருள் தத்துவம் ஒன்றை மேலோங்கச் செய்ய, காடு மலையெல்லாம், நாடு நகரமெல்லாம் பாத யாத்திரையாகப் பாரத தேசமெங்கும் பயணம் மேற்கொண்ட அந்த ஞானப்பிள்ளை, கொண்ட குறிக்கோளை நிலை நாட்டியது!

அந்த அதிசயப் பிள்ளையான அற்புத நாயகரை, 'ஆதிசங்கரர்' என்றும், 'பகவத் பாதர்' என்றும் மக்கள் நெகிழ்ந்தும் மகிழ்ந்தும் அழைத்தனர். 'அவதார மூர்த்தி' எனப் போற்றினர். ஆம்; பகவானே பகவத்பாதராக அவதாரம் செய்து திருவருள் பாலித்ததாகவும் பாரத நாட்டு மக்கள் பரிபூரணமாக நம்பினர்.

பகவத்பாதர் சங்கரர் 'சிவானந்த லஹரி' யில் 'பக்தி என்றால் என்ன?' என்பதை எளிமையாகப் பொருத்தமான எடுத்துக் காட்டுகளுடன் விளக்கி உள்ளார்.

அவைகளில் ஓர் எடுத்துக்காட்டு :

"அங்கோலம் நிஜபீஜஸந்ததி"

'அங்கோலம்' ஒரு மரம்; அழிஞ்சில் மரம்; இது ஓர் அபூர்வ மரம். அந்த மரத்தில் முளைத்த விதை - நிஜ ஸந்ததி பீஜ - கீழே விழும். விழுந்தவுடன் மெள்ள மெள்ள மரத்தை நோக்கி நகரும் ! மரத்தில் ஏறிப் பட்டையோடு ஒட்டிக் கொள்ளும் ! பின்னர் சில நாட்களில் மரத்தோடு மரமாகப் போய்விடும் !

'மரத்திலிருந்து உருவான விதை, மீண்டும் மரத்தோடு ஐக்கியம் ஆகி விடுவதைப் போல, பரமாத்மாவிடமிருந்து தோன்றுகிற ஜீவாத்மா, முடிவில் பரமாத்மாவுடன் இணைக்கச் செய்வதே பக்தி' என்றார் பகவத்பாதர் ஆதிசங்கரர்.

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் வாழ்க்கை வரலாற்றை ஓரளவு முழுமையாக அறிந்து கொண்ட பின்னர், எழுதத் தொடங்குகின்ற இந்த நேரத்தில், ஆதிசங்கர பகவத்பாதர் அருளிய 'பக்தி' பற்றிய எடுத்துக் காட்டு விளக்கம், என் நினைவில் நிழலாடியது! அதனையே மேலே குறிப்பிட்டுள்ளேன்.

'**பி.ஏ.சி.ஆர்.**' எனப் பொது மக்களால் அன்போடும், மரியாதையோடும் அழைக்கப் பெற்ற இராமசாமி ராஜா, பெருங் கருணையினால் - பேராற்றல் கொண்ட பெருந் தொழிலதிபராக விளங்கினார்; பேரன்பினால் - பேருறவு பெற்ற சமுதாயத் தலைவராகத் திகழ்ந்தார்; பெருந் தொண்டினால் பெரும் புகழ் படைத்த பொதுநலச் சான்றோராக வாழ்ந்தார்; பெருங்குணப் பண்பால் - பெரு மதிப்புடன் நகரின் நடு நிலை நாயகராகக் கருதப் பெற்றார்.

இத்தனை பெருமை பெற்ற அப்பெருமகனாரின் அருமைப் பேருள்ளம், ஒருமையுடன் பகவத்பாதர் ஆதிசங்கரரின் பக்தி விளக்கத்தை, முழுமையாக ஏற்றுக் கொண்ட பக்குவப்பட்ட மூர்த்தமாகத் திகழ்ந்தது !

விழித்திருக்கும் நேரமெல்லாம், அழிஞ்சில் மரத்து விதையைப் போன்று, ஆண்டவனது திருவடியை நோக்கியே ஆத்மாவை நகர்த்திக் கொண்டிருந்தார் அப்பெருந்தகை.

உயர்ந்தவற்றிலெல்லாம் உயர்ந்த உன்னத அத்வைதத் தத்துவத்தை, சாதுக்களிடமும், சன்மார்க்க சீலர்களிடமும், சாத்திரமறிந்த ஞானச் செல்வர்களிடமும் வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம், வினாத் தொடுத்து விளங்கிக் கொள்வதில், வாழ்வு முற்றும் பெரும் வேட்கை கொண்டிருந்தார் அப் பெருமகனார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர். திருச்செந்தூர் முருகப் பெருமானிடம் ஆழ்ந்த பக்தியும், அளவிடற்கரிய ஈடுபாடும் கொண்டவர்.

ஒரு முறை திருச்செந்தூர் சென்று, முருகப் பெருமானைத் தரிசித்து, இராஜபாளையத்திற்குக் காரில் திரும்பிக் கொண்டிருந்தார் அப் பெருமகனார். காரின் முன் சீட்டில், டிரைவருக்கு அருகே, உடன் அழைத்துச் சென்றிருந்த பள்ளி ஆசிரியர் ஒருவர் அமர்ந்திருந்தார்.

பின்னே அமர்ந்திருந்த பி.ஏ.சி.ஆர், ஆசிரியரிடம் "வாத்தியாரே! என்ன வாயே திறக்காம இருக்கீங்க?" என்றார்.

"ஒண்ணுமில்லே, ராஜா! உங்களண்டே ஒரு கேள்வி கேட்கலாமான்னு நெனச்சுண்டிருக்கேன்" என்றார் ஆசிரியர்.

"கேளுங்களேன்"

"இப்போ பிரார்த்தனை பண்றோமே, அதனாலே மனசு அமைதிப்படறது, சாந்தப்படறது, அதெல்லாம் சரி! பிரார்த்தனையோட நோக்கம் - பகவானை நம் பக்கம் இருக்கச் செய்து, நம்முடைய செயல்களுக்கெல்லாம் துணையா இருக்கச் செய்வதுதானே?" என வினவினார் ஆசிரியர். சற்று வாய்விட்டுச் சிரித்த ராஜா, "வாத்தியாரே! பகவானை நம் பக்கம் இருக்கச் செய்வதா! எதிர்ப்பக்கம் இருக்கச் செய்வதா? என்ற கேள்விக்கே இடமில்லை. நாம் பகவானின் பக்கம் இருக்க வேண்டும், அதற்காகத்தான் பிரார்த்தனை!" என்றார் பி.ஏ.சி.ஆர். கொஞ்ச நேர மௌனத்திற்குப்பின், "வாத்தியாரே! படகுப் பிரயாணம் செய்திருக்கின்றீர்களா?" என்றார் ராஜா.

"அப்படிச் சந்தர்ப்பம் வாய்த்ததில்லை.." என்றார் ஆசிரியர்.

"படகு கரையை நெருங்கியதும், படகில் இருப்பவர் கரையை நோக்கி ஒரு கொக்கியை எறிவார், எதற்காக? கரையைப் படகின் பக்கம் இழுக்கவா? இல்லை...! படகு கரையின் பக்கம் இழுக்கப்படுவதற்காகத்தான்!" என்று கூறிய ராஜாவை, முன் சீட்டிலிருந்த ஆசிரியர் திரும்பிப் பார்த்து, கரங்களைத் தலைக்கு மேல் கூப்பி வணங்கினார்.

"சூரிய வெளிச்சம் எங்கும் ஒன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் தண்ணீர், கண்ணாடி, மெருகிட்ட உலோகம் ஆகியவற்றில் நன்றாய்ப் பிரதிபலிக்கிறது. அது போலத் தான் பகவானுடைய பிரகாசமும். அது எல்லோரிடமும் சமமாய் இருக்கின்றது. ஆனால் அருள் உள்ளத்தில், தூய இருதயத்தில் பகவான் நன்றாகப் பிரகாசிக்கிறார்" என்றார் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

ராஜாவின் பொருளார்ந்த திருவாக்கால், அருளார்ந்த அப்பெருமகனாரின் திருவுள்ளத்துள் நிறைந்திருந்த இறை ஒளியின் பிரகாசத்தை ஒருவாறு ஊகித்து அறிய முடிகிறதல்லவா?

**வி**ழாக் காலங்களில், தொழிற்சாலை ஊழியர்களுக்குப் 'போனஸ்' பற்றிய பேச்சு வார்த்தைக்குத் தொழிலாளர் தலைவர்கள், தொழிலதிபர்களைச் சந்திப்பதென்பது ஒரு வழக்கமான நடைமுறை.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர். பெருந்தொழிலதிபர் அல்லவா?

அனைத்து இந்திய அளவில் பிரபலமான தொழிலாளர் தலைவர் ஒருவர், அவரைப் பலமுறை சந்தித்ததுண்டு. தொழிலாளர் தலைவருக்கு ஆன்மீகத்திலும், தத்துவங்களிலும் ஆழ்ந்த ஞானமும், ஈடுபாடும் உண்டென்பதை பி.ஏ.சி.ஆர். தெளிவாக அறிவார். எனவே பேச்சு வார்த்தைக்கு வந்து எதிரே அமர்ந்திருப்பவரிடம், வேதாந்த நெறிகள் பற்றியும். அத்வைத தத்துவம் பற்றியும் உரையாடத் தொடங்கிவிடுவார் ராஜா. தொழிலாளர் தலைவரும் மிகுந்த உற்சாகத்துடன் கலந்துரையாடிக் கருத்துக்களைப் பறிமாறிக் கொள்வதில் பரவசத்துடன் ஈடுபடுவார். ஒரு மணி நேரம் அந்த

சந்திப்பு நிகழ்ந்தால், கடைசி ஒரிரண்டு நிமிடங்களில் தான் போனஸ் பற்றிய பேச்சு இடம் பெறும்!

இளமைக் காலத்திலிருந்தே நம்மாழ்வார் திருப்பா சுரங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, திரும்பத் திரும்பப் பாசுரங்களைப் பாடிப் பாடி இன்புறுவார் ராஜா. நம்மாழ்வார் பற்றியும், அப் பெருமான் அருளிய பாசுரங்கள் பற்றியும், தொழிலாளர் தலைவரிடம் உருகி உரைப்பார்; உருகவும் உரைப்பார் ராஜா. தொழிலாளர் தலைவர் யார் என்பதைச் சொல்லாவிடினும், இதற்குள் ஊகித்து உணர்ந்து கொண்டிருப்பீர்கள். ஆம்; அனைத்து இந்திய அளவில் பல்லாண்டுகளாகத் தொழிலாளர்களின் நலத்திற்காகப் பாடுபட்டு வரும் புகழ்மிகு 'ஜி.ஆர்.' எனப்போற்றி உரைக்கப் பெறும் ஜி. இராமானுஜம்தான் அவர்!

"பி.ஏ.சி.ஆருடன் பேச்சு வார்த்தைக்குச் செல்வதென்பது, ஓர் ஆலயத்திற்குள் நுழைவது போன்ற உணர்வை ஏற்படுத்தும்" என மகிழ்ந்து கூறினார் ஜி.ஆர்.

சொற்களில் சூடும், சூழலில் முரணும் உருவாக்கம் கொள்கிற ஊதியம் சம்பந்தமான பேச்சு வார்த்தைக் களத்திலும், அருட் தத்துவங்களையும், ஆன்மீக நெறிகளையும் ஆராய்கின்ற மனப்பாங்கு ஒரு தொழில் அதிபருக்கு இருந்ததென அறிகிறபோது, அப் பெருந்தகையின் உள்ளம் எந்த அளவிற்குப் பண்பட்டுப் பக்குவத் தன்மையை எட்டியிருந்த தென்பதை உணர்கின்றோம். ஏது செய்திடினும், எது மொழியினும் இதயத்துள் இறையுணர்வே நிறைந்திருந்ததை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் வாழ்க்கை முழுவதும் நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளின் வழியே பார்க்கின்றோம்.

பொருள் ஈட்டும் நோக்கத்தில்தான் தொழில்கள் உருவாகின்றன. தொழில் ஆக்கமே செல்வ நோக்கம்தான். வருமானம் வருவதற்குத்தானே வணிகமும், தொழிலும்? ஆனால் பி.ஏ.சி.ஆர். பொருள் நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு தொழில்களை உருவாக்கவில்லை. அப் பெருமகனாரின் அருள் உள்ளம், தாம்

வாழ்ந்த பகுதி மக்களுக்கு வேலை வாய்ப்பை அளித்து, அவர்கள் வருத்தமில்லாமல், வறுமைப்படாமல் வாழ்ந்திருக்க வேண்டுமென எண்ணியது. அந்தக் கருணை நிறைந்த எண்ணமே பெருந்தொழில்கள் உருவாகக் காரணமானது.

"தொழிலைத் தொண்டாக்கிக் கொண்டவர் ராஜா! தெய்வ பக்தி கொண்ட ராஜா, திருவிளங்க மனத்துள் அருள் விளங்க வாழ்ந்தார். அவருக்குத் தொழில் ஆர்வம் வந்ததே, பணம் சம்பாதிக்க வேண்டுமென்ற நோக்கத்தால் அல்ல; பலருக்கு உதவி செய்ய வாய்ப்பாக அமையுமே என்றுதான் தொழில்களைத் தொடங்கினார்," என்றார் நமது முன்னாள் ஜனாதிபதி ஆர்.வெங்கட்ராமன்.

உண்மைதான் !

தெய்வ நம்பிக்கையால் அமையும் கருணை உள்ளம்தான், தொழிலையே தொண்டாகக் கருதும். பிறர் நலம் பேணக் கூடிய இரக்க உணர்வு அருள் மயமான உள்ளத்திற்கே உரிய இயல்புதான்! அதை வெறும் அறிவினால் அடைய முடியாது. அருள் அனுபவத்தில் தான் ஆத்மவித்தை வந்து சேரும். மனம் தெய்வத்தின் திருவருளால் விரிந்து, பரந்து, அருள் அனுபவத்தால் ஆழப்பட வேண்டும். அப்போது அங்கே ஞானம் தோன்றும். ஞானச் செறிவே ஆத்மவித்தையை நெறிப்படுத்தும். ராஜாவின் வாழ்க்கை நெறிப்படுத்தப் பெற்ற ஆத்ம வித்தைக்குரிய அடித்தளமாக அமைந்திருந்தது !

"**வா**ரக் கணக்காக உணவில்லாமல் என்னால் இருக்க முடியும். சிறிது நேரம் தண்ணீரும் இல்லாமல் இருந்து விடுவேன். ஆனால் பிரார்த்தனை செய்யாமல் என்னால் ஒரு நிமிஷம் கூட வாழ முடியாது" என்றார் காந்தியடிகள்.

கடவுள் பக்தியில் காந்தியடிகளின் கருத்தைத் தமது வாழ்வில் முழுமையாகப் பின்பற்றியவர் பி.ஏ.சி.ஆர். எந்த நேரமும் இறையுணர்வில் மனத்தை லயிக்கச் செய்து, ஆத்ம வித்தை நிகழும் அரங்கமாகத் திகழ வைத்தார். ஒவ்வொரு நாளின் தொடக்கமும் ஆத்ம வித்தையின் அரங்கேற்றமாக அமையும்!

அதிகாலை நான்கு மணிக்கே எழுந்து, படுக்கையில் அமர்ந்தவாறே, வழிபாடு செய்யத் தொடங்கி விடுவார் அப்பெருமகனார். 'ஓம்' எனும் பிரணவ மந்திரம் அப் பெருந்தகையின் உள்ளத்திலிருந்து உதடுகளின் வழியே உதயமாகி மெல்ல ராம மந்திரத்தைத் துயில் எழுப்பும்! ('ராம மந்திரம்' பி.ஏ.சி.ஆர். உருவாக்கி வாழ்ந்த மாளிகை) நாளின் தொடக்கம் அந்த மாளிகையைப் பொறுத்தவரை, பி.ஏ.சி.ஆர். வாழ்ந்த போது, ஓங்கார உதயமாகவே அமைந்திருந்தது.

பிரணவ மந்திரத்திற்குப் பின்னே, நம்மாழ்வார் திருவாய்மொழி, பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு, தாயுமானவர் பாடல் முதலிய அருட் பாசுரங்களை அப் பெருமகனார் பாடிப்பாடி நெகிழ்வார்! தினமும் கேட்கும் பாட்டொலி, மாளிகையில் வாழ்ந்த அனைவருக்குமே மனப்பாடம்! மனப்பாடம் ஆன பாசுரங் களையெல்லாம், இன்றும் அப் பெருமகனாரின் குடும்பத்தார் சொல்லிச் சொல்லி நெஞ்சம் நெகிழ்கின்றனர்.

வீட்டில் இருக்கும்போது மட்டுமல்ல, வெளியே சென்று தங்கும்போதும், சொல்லப்போனால் ரயிலில் பயணம் செய்து கொண்டிருக்கும்போதும் அதிகாலைப் பிரார்த்தனையை, அதுவும் நான்கு மணிக்கே எழுந்து வழிபாடு செய்வதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தார். ஒரு நாளும் அந்த உதய ஓங்காரம் அப்பெருமகனார் வாழ்ந்தவரை நின்று போனதில்லை; நிறுத்தப்பட்டதும் இல்லை!

கூட்டுக் குடும்பமாக வாழ்ந்த தாயாதிகள், பிரிவினை செய்து கொண்ட பின், தனித் தனியாக வீடுகளைக் கட்டிக்கொண்டனர். பி.ஏ.சி.ஆர், தமது குடும்பத்திற்கெனத்தாமே திட்டமிட்டு, மாளிகை போன்றதொரு வீட்டை உருவாக்கி மகிழ்ந்தார். இராஜபாளையம் பகுதியில், ராஜாவின் வீட்டைப் போல் ஒரு மாளிகை கட்டப்பட வில்லையாகையால், வியப்பிற்குரிய அந்த வித்தக மாளிகையை நாள்தோறும் மக்கள் திரளாக வந்து, கண்டு உவந்தனர்! பார்த்துப் பார்த்துப் பரவசம் கொண்டனர்!

காட்சிப் பொருளாகிக் கம்பீரத் தோற்றமுடன் விளங்கிய அந்தக் கவின்மிகு மாளிகைக்கு, பெருந்தகை பி.ஏ.சி.ஆர். ஒரு பெயர் சூட்டி ஆனந்தித்தார்.

என்ன பெயர் அது?

"ராம மந்திரம்"

அப்பெருமகனாரின் நெஞ்சமர்ந்த நெறியை, சூட்டிய பெயர் சூட்சுமமாகச் சொல்கிறதல்லவா?

ராம மந்திரத்தில் குடியேறி, ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர், ராஜா இலண்டனுக்குச் சென்றிருந்தார்.

அங்கே ஒரு நண்பரின் வேண்டுதலுக்கு இணங்கி, அவர் இல்லத்துக்கு விருந்தினராகப் போனார்.

வீட்டிற்குள் காலடி எடுத்து வைத்த பி.ஏ.சி.ஆர். விழிகளை அகல விரித்துச் சிலைபோல சற்று நேரம் நின்று விட்டார்! வேறொன்றுமல்ல; வீட்டின் நுழை வாயிலில் இடம் பெற்றிருந்த பலகையில், எழுதப் பெற்றிருந்த 'மணி வாசகம்' அகத்துள் சிலிர்ப்பையும், முகத்தில் வியப்பையும் ஊட்டியது!

"கிறிஸ்து பெருமானே இந்த வீட்டின் தலைவர்! அப் பெருமானே ஒவ்வொரு உணவு வேளையிலும் காண முடியாத விருந்தாளியாக அமைகிறார்! அப்பெருமானே நமது உரையாடல்களை மௌனமாக வீற்றிருந்து உற்றுக் கேட்கிறார்" (CHRIST IS THE HEAD OF THIS HOUSE; THE UNSEEN GUEST AT EVERY MEAL; THE SILENT LISTENER TO EVERY CONVERSATION) என ஆங்கிலத்தில் பொறிக்கப் பெற்றிருந்த வாசகத்தின் அருமை பி.ஏ.சி.ஆர். மனத்தைப் பெரிதும் ஈர்த்தது.

அப்போதே, மனத்துள் தம் மாளிகையின் நுழைவாயிலில் இது போன்றதொரு மணி வாசகத்தைப் பொறிக்க வேண்டுமென முடிவு செய்தார் அப்பெருமகனார். வாசகத்தில் ஒரே ஒரு வார்த்தையை மட்டும் மாற்றினார். 'CHRIST' என்பதற்குப் பதிலாக

'GOD' எனப் பொறிக்கச் செய்தார்.

'கடவுள் இந்த மாளிகையின் தலைவராக வீற்றிருக்கிறார்' எனத் தொடங்கும் ஆங்கிலத்தில் எழுதப் பெற்ற 'அருள்வாசகம்', பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தாமே திட்டமிட்டு, சொல்லப்போனால் தீர்க்க தரிசனத்தோடு உருவாக்கிய, அரண்மனை போன்று தோற்றமளிக்கும் (Palace look) 'ராம மந்திரம்' மாளிகையின் கம்பீரமான நுழைவாயிலில் எழுதப் பெற்றுப் பொருத்தப் பெற்றுள்ளதை இன்றும் காணலாம்.

பதியே எங்கும் நிறைந்தருளும் பரஞ்சுடரைக் கதியே அளிக்கும் கருணாமூர்த்தியை, தமது மாளிகையின் தலைமை நிதியாய்க் கொண்ட ராஜாவின் மதியும் மனமும், எத்தகைய உணர்வில் திளைத்திருந்தன என்பதை அந்த மணிவாசகப் பலகை, ராம மந்திரம் மாளிகையில் எந்த நாளும் எடுத்தியம்பும் 'கலங்கரை விளக்கம்' அல்லவா?

**வீ**தியில் வருகிறாள் ஓர் இளம் பெண். அவள் தலையில் தண்ணீர்க் குடம் ஒன்றைச் சுமந்து வருகிறாள். வீதி முழுவதும் அவளுக்குத் தோழிகள். விட்டு விடுவார்களா அந்தப் பெண்ணை? அவளோடு உரையாடுகின்றனர்; கேலி பேசுகின்றனர்; அவளோ வினாக்களுக்குச் சூடாக விடை அளிக்கிறாள்; வீதி வழியே தோழிகளுடன் கை வீசி விளையாடவும் செய்கிறாள்! என்றாலும் தலையில் வைத்த தண்ணீர்க் குடத்தை அவள் மறந்து விடவே இல்லை! கருத்தும் களிப்பும் தோழிகளிடத்து இருப்பினும், கைகளை வீசித்தெருவில் நடந்து வரினும், அவள் கவனம் முழுவதும் தலையில் உள்ள தண்ணீர்க் குடத்தில் ஊன்றி நிற்கிறது!

இத்தகைய எடுத்துக் காட்டைக் கூறி, பக்குவமுடைய பண்பட்ட மனத்தின் பாங்கினை அறிவுறுத்தினார் பட்டினத்தார்.

"எத்தொழிலைச் செய்தாலும் ஏது அவத்தைப் பட்டாலும்
முத்தர்மனம் இருக்கும் மோனத்தே – வித்தகமாய்க்
காதிவிளை யாடி இரு கைவீசி வந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்"

பத்தராய்ப் பக்குவப்பட்ட மனத்தராய், இறைநெறியில் முழுமையாகத் திளைத்த முத்தராய் வாழ்ந்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். எத்தனை எத்தனையோ தொழில்களை உருவாக்கினும், எப்படி எப்படியோ வாழ்வின் இயக்கங்களில் கலந்திருப்பினும், அப் பெருமகனாரின் சித்தமும், புத்தியும் பகவானின் திருவடிகளை நோக்கியே பயணித்துக் கொண்டிருந்தன!

வாழ்வு முற்றும் நாளின் தொடக்கத்தை ஓங்கார உதயமாக மடல் அவிழச் செய்து, புகழ் மணக்கும் உன்னத வரலாற்றை உருவாக்கிக் கொண்ட புண்ணிய சீலர் பி.ஏ.சி.ஆர்.

அருள் மனம் கொண்டிருந்த அப் பெருந்தகையின் வாழ்க்கை வரலாறு, அறிகின்ற உள்ளத்திற்குப் பயன் அளிக்கும்; படிப்பினையும் நல்கும்.

* * *

# 2

## படைவீரர் பாசறையும் பாளையத்து ராஜுக்களும்

'பாளையம்' என்றால் படையினர் தங்கியிருக்கும் கூடாரம்; பாசறை, படைவீடு என்றெல்லாம் கூறுவதுண்டு. நாட்டின் பாதுகாப்புக் கருதி, படை வீரர்களை ஒரிடத்தில் கூட்டமாக முகாமிட்டு இருக்குமாறு செய்யும் வழக்கம், பண்டைக் காலம் முதலாகவே இருந்து வந்துள்ளது. ஆந்திர நாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்கு வருகை புரிந்து, குடியேறிய படை வீரர்களாகிய ராஜுக்கள், பாசறை அமைத்து முகாமிட்டிருந்த பகுதி 'ராஜுக்கள் பாளையம்' என அழைக்கப் பெற்றுப் பின்னர் 'ராஜுபாளையம்' ஆகி, இப்போது 'ராஜபாளையம்' எனப் பெயர் பெற்றுள்ளது.

பாண்டிய நாட்டைச் சுந்தர பாண்டியன் ஆட்சி செய்த காலத்தில், (கி.பி. பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதி) வட நாட்டிலிருந்து படையெடுத்து வந்த முகமதியத் தலைவன், பாண்டி நாட்டைச் சிதைத்துச் சின்னாப் பின்னப் படுத்திச் சூரையாடி விட்டான். இதனையறிந்த விஜயநகர சாம்ராஜ்ய மன்னர், தமது தளபதிகளில் ஒருவராகிய கம்பண்ண உடையாரைப் பாண்டிய நாட்டைச் சீர்ப்படுத்த அனுப்பி வைத்தார். உடையாருடன் புறப்பட்டு வந்த படை வீரர்களில் ராஜுக்களும் இருந்தனர். பாண்டிய நாட்டைப் பதினான்கு பிரிவாகச் செய்து, அவைகளின் பாதுகாப்பிற்கென அங்கங்கே படை வீரர்களைத் தங்கச் செய்தனர். தாற்காலிமாகச் சிலஇடங்களிலும், நிரந்தரமாகச் சிலஇடங்களிலும் படை வீரர்கள் முகாமிட்டிருந்தனர். நிரந்தரமாகத் தங்கிய இடங்கள் பாளையங்கள் ஆயின. இந்தப் பாளையங்களின் தலைவர்களே பின்னால் பாளையக்காரர்களாகவும், ஜமீன்தாரர்களாகவும் கருதப் பெற்றனர். ஆனால் உருவான எல்லாப் பாளையங்களும் பாளையக் காரர்களையோ ஜமீன்தார்களையோ பெறவில்லை.

இராஜபாளையத்தைத் தோற்றுவித்தவர்கள் 'பூசப்பாடி' என்று வீட்டுப் பெயர் கொண்ட ராஜுக்களேயென, தென்னிந்திய சமூகங்களைப் பற்றி எழுதிய அறிஞர் 'தர்ஸ்டன்' குறிப்பிட்டுள்ளார்.

ஆந்திராவிலிருந்த 'பூசப்பாடி எஸ்டேட்' விஜயநகர சமஸ்தானமாக உருவெடுத்ததாகவும் கூறப்படுகின்றது. ஆந்திர நாட்டிலிருந்த பல்வேறு கிராமங்களின் பெயர்களைக் கொண்டு, வீட்டுப் பெயர்கள் உருவாகி உள்ளன. தமிழ் நாட்டிற்கு வந்து பாண்டிய நாட்டில் தங்கிய படை வீரர்களான ராஜுக்கள், ஆந்திர நாட்டின் இருபத்து ஆறு கிராமங்களிலிருந்து புறப்பட்டு வந்துள்ளனர். எனவேதான் இராஜபாளையத்திலுள்ள ராஜுக்கள் 'பூசப்பாடி', 'கொட்டிமுக்கலூர்', 'ஏரகொண்டல' முதலிய இருபத்தாறு வீட்டுப் பெயர்களைக் கொண்டு விளங்கி வருகின்றனர்.

அறு நூறு ஆண்டுகளுக்கு முன், ஆந்திராவிலிருந்து தமிழ் நாட்டுக்குப் படை வீரர்களாகக் குடியேறிய ராஜுக்கள் தமிழர்களோடு தமிழர்களாக மிகுந்த உறவு பூண்டு வாழ்ந்து வருகின்றனர். தமிழர்கள் அவர்களை 'ராஜுக்கள்' என அழைப்பதை விடுத்து, தமிழில் 'ராஜாக்கள்' என அண்மைக் காலமாக அழைத்து வருகின்றனர்.

பூசப்பாடி எஸ்டேட்டிலிருந்து வந்த ராஜுக்களே இந்தப் பகுதிக்கு முதன் முதலாக வந்து குடியேறியவர்களெனச் சொல்லப்படுகிறது. அந்தக் குழுவின் தலைமைப் பொறுப்பை கிருஷ்ணம ராஜு என்ற சின்ன ராஜு ஏற்றிருந்த காரணத்தால், அவரே இராஜபாளையத்திற்கு வந்த 'முதல் ராஜா' எனக் கருதப்படுகின்றார்.

கி.பி. பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், விசுவநாத நாயக்கர் பாண்டிய நாட்டின் அதிபரானபோது, அவரது அமைச்சராக விளங்கிய தளவாய் அரியநாத முதலியார், மேலும் ஆந்திராவிலிருந்து ராஜுக்களை ராஜபாளையம் பகுதிக்குக் குடியேற்றினார்.

இராஜபாளையம் வந்த முதல் ராஜாவுக்கு நான்கு புத்திரர்கள். அவர்கள் நால்வரும் நாயக்க மன்னர்கள் காலத்தில், தலை சிறந்த தளபதிகளாக விளங்கியுள்ளனர். நால்வருள் சின்னைய ராஜா பெரும் புகழ் பெற்ற சேனாதிபதியாக, மக்களின் பாராட்டுதலுக்கும், மன்னரின் போற்றுதலுக்கும் உரியவராய்த் திகழ்ந்திருக்கிறார். இப் பெருமகனார் ஒய்வு பெற்றபோது, கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் மதுரை மன்னர் சொக்கநாத நாயக்கர், ஓர் இனாம் சாசனம் வழங்கியுள்ளார். சின்னைய ராஜாவின் போர்த்திறன், வீர தீரம் பற்றியெல்லாம் மிக விளக்கமாகக் குறிப்பிடப் பெற்றுள்ள அந்த இனாம் சாசனத்தில், இன்றைய இராஜபாளையத்தின் பழையபாளையம் தானசாசனமாக சின்னைய ராஜாவுக்கு வழங்கப் பெற்றுள்ளது.

மேற்கு மலைத் தொடரின் அருகே, மதுரைக்குத் தெற்கே ஏறத்தாழ அறுபது மைல் தொலைவில், காடாகக் கரடு முரடான பூமியாக வனாந்தரமாகக் கிடந்த பகுதியில், நாட்டின் அமைதி காக்கப் 'பாடி வீடு' அமைத்துப் பாளையமாக உருவாக்கி வாழ்ந்த ராஜுக்கள், முதலில் கோட்டை அமைத்துத்தான் குடியிருந்திருக் கின்றனர். பொதுவாகப் போர் வீரர்கள் தங்கியிருந்த இடங்களி லெல்லாம் பாதுகாப்புக் கருதி, கோட்டைகள் இருந்துள்ளன. ஊரைச் சுற்றிலும் ஒட்டு மொத்தமாகக் கோட்டைச் சுவர்கள் எழுப்பப் படாவிடினும், போர் வீரர்கள் வசிக்கும் பகுதிகளைக் கோட்டைச் சுவர் சூழ்ந்திருக்கும். அத்தகைய கோட்டை, ராஜுக்கள் வசித்த பாளையத்திலும் இருந்திருக்கிறது. கோட்டைகளைத் தலைமை பூண்டுள்ளவர் பெயரால் அழைப்பது அந்தக் காலத்து வழக்கம். 'கட்டபொம்மு கோட்டை', 'புலித்தேவர் கோட்டை' என்றெல்லாம் வழங்கப்பட்டது போல, 'ராஜுக்கள் கோட்டை' எனப் பொதுத்தன்மையில் பாளையத்துக் கோட்டை அழைக்கப் பெற்றது குறிப்பிடத்தக்கது. இன்றைக்கும் இராஜபாளையத்திலுள்ள 'பழையபாளையம்', 'புதுப்பாளையம்' பகுதிகளை மக்கள் 'ராஜாக்கோட்டை' என்றே குறிப்பிட்டுச் சொல்வது எண்ணிப் பார்க்கத் தக்கது.

இராஜபாளையத்தின் வடக்கு எல்லையிலிருந்து, தெற்கு எல்லை வரை மூன்று மைல் தொலைவிற்குப் பரந்து, விரிந்து நீளமான சங்கிலித் தொடர்போலக் காட்சி தரும் நகரம், பழங்காலத்தில் 'பழையபாளையம்' 'புதுப்பாளையம்' என இரு தனித்தனிக் கிராமங்களாகவே விளங்கி இருக்கிறது. இந்தப் பாளையங்களுக்கு இடையே இருந்த பகுதிகள் காடுகளாகவே இருந்திருக்கின்றன. பழைய பாளையத்தில் 'பெரிய கடைத்தெரு' புதுப்பாளையத்தில் 'மதுரை ராஜா கடைத்தெரு' ஆகிய இரண்டுமே அந்தக் காலத்துக் கடை வீதிகள். போர் வீரர்களான ராஜுக்களின் குடும்பங்களுக்கு, வேண்டிய அன்றாடத் தேவைகளை அளிக்கக் கூடிய சிறு சிறு கடைகளே அப்போது இடம் பெற்றிருந்தன.

கால வளர்ச்சியில், தங்கள் உணவுத் தேவையை உற்பத்தி செய்து கொள்கிற நோக்கம், பரந்துபட்ட அளவில் பாளையத்து ராஜுக்களிடம் உருவான காரணத்தால் பக்கங்களிலிருந்த நிலங்களைப் பண்படுத்தி விவசாயம் செய்வதில் ராஜுக்கள் விருப்பம்கொண்டனர். எனவே பெரும்பான்மையான ராஜுக்கள், ஆங்கில ஆட்சி வருவதற்கு முன்னமேயே, விவசாயப் பெருங்குடியினராய் பாளையத்தில் வேரூன்றி உள்ளனர். ஆங்கில ஆட்சியின் ஆரம்ப கால கட்டத்தில், விவசாயத் தொழிலில் ராஜுக்கள் சமூகம் தீவிரமாக ஈடுபடத் தொடங்கியது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வணிகத்தில் நாட்டமும், வாழ்வின் பாதுகாப்பில் தேட்டமும் கொண்ட பல்வேறு சமூகங்களைச் சார்ந்தோர், பாளையங்களின் இடையேயும், சுற்று வட்டகையிலும் குடியேறினர். ஆங்கில ஆட்சியின் காரணமாக மக்களின் எண்ணப் போக்கில் விரிந்த உறவும், புதிய உணர்வும் விளைந்து, பாளையத்தைப் பேரூராக்கி, 'நகரம்' என மதிப்பிடத் தக்க தகுதி நாளும் உருவாக்கம் கொள்ளத் தொடங்கியது.

பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதும், பாண்டிய நாட்டில் பாளையக்காரர்களால் கலகங்களும், குழப்பங்களும் நடந்த வண்ணம் இருந்தன. குடி மக்களின் வாழ்விற்குப் பாதுகாப்பில்லாத

நிலை, எல்லாப்பகுதிகளிலும் இருந்து வந்தது. என்றாலும் அச்சமில்லாத தன்மையை, அமைதியான சூழலை ராஜுக்கள் வாழ்ந்து வந்த பாளையம் பெற்றிருந்ததோடு, ஒழுக்க நெறியும், கட்டுப்பாடான முறையும் ராஜுக்களிடம் நிலவி வந்ததை அறிந்ததால் தான், அந்தப் பகுதிக்கு பல்வேறு சமூகங்களைச் சேர்ந்தோர் குடி புகும் எண்ணத்தைக் கொண்டனர். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் அங்கொன்றும், இங்கொன்றுமாக குடியேறி வாழ்ந்து வந்த மக்கள், போகப் போகக் குக்கிராமங்களாக விளங்கிய பாளையங்களை அடையாளம் காண முடியாத அளவில் குடியேற்றம் செய்யத் தொடங்கிவிட்டனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பாளையங்கள் இணைந்து பேரூராக வடிவம் கொண்டன!

ஆங்கில ஆட்சியின் காரணமாக, இராஜபாளையத்தின் போக்கில் ஒரு புதிய திருப்பம் உருவாகிக் கொண்டிருந்தது.

பழையபாளையத்தில் ஒருவரும், புதுப்பாளையத்தில் ஒருவரும் செல்வ வளமும், செல்வாக்கு நலமும் கொண்ட ராஜுக்கள் குடும்பங்களைச் சார்ந்தோர் கிராம ஆட்சி நிர்வாகத்தை மேற்கொள்ளும் 'கிராம முன்சீப்' எனும் பொறுப்பை ஏற்றிருந்தனர்.

'பூசப்பாடி' எனும் வீட்டுப் பெயரைக் கொண்ட ஒரு புனிதரே, முதன் முதலில் குடியேறி, 'இராஜபாளையம் நகர்' உருவாக்கம் பெற மூல நாயகர் ஆனார். அதே 'பூசப்பாடி'யைச் சேர்ந்த ஒரு புண்ணிய சீலர், புதுப்பாளையத்தின் கிராம முன்சீப் வீட்டில் பிறந்து, இராஜபாளையம் நகருக்குப் புதுப்பொலிவூட்டிப் புகழ்முடி சூட்டினார்! வேறு யார்?

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா தான்!



# 3

# பெற்றோர் விரதமும் பெருந்தகை ஜனனமும்

வருந்திப் பாடுபடும் உழைப்பும், உடலை வருத்திக் கொண்டு செயற்படும் முனைப்பும் உழவுத் தொழிலுக்கு அடிப்படை யானவை, கடினமான தொழில்தான் விவசாயம்; எனினும் கண்ணியமானது; சொல்லப்போனால் புண்ணியமானது! உலகத்தார்க்கு உணவு அளிக்கின்ற உன்னதத் தொழில் அல்லவா விவசாயம்? எனவேதான் திருவள்ளுவர் அதனைத் தலையாய தொழில் என்றார்.

"உழவே தலை" திருவள்ளுவரின் திருவாக்கு.

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்றும் போற்றிப் பாராட்டினார் அந்தத் தெய்வப் புலவர்.

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே!" என்பது 'மணிமேகலை' வாசகம்.

உயிர் வளர்க்கும் உயரிய தொழிலான விவசாயம், தொழில் களுக்குள்ளே தலையாயது; தலை சிறந்தது.

சீரிய தொழிலாய்ச் சிறந்து மிக்கோங்கும் விவசாயத்தை, இராஜபாளையத்தில் பரம்பரை பரம்பரையாகச் செய்து வந்த ராஜுக்கள் குடும்பங்களில் பூசப்பாடி தாத்தி ராஜா புதல்வர் சக்க ராஜா குடும்பம், பெரும் பெரும் விவசாயப் பண்ணைகளைக் கொண்டிருந்த பிரபலமான குடும்பம்.

சக்க ராஜாவிற்கு நான்கு புதல்வர்கள், அழக ராஜா, சஞ்சீவி ராஜா, அங்கைய ராஜா, பெத்தி ராஜா ஆகிய நால்வரும் தலைமுறை தலைமுறையாகப் பேணிச் செய்துவந்த தலையாய தொழிலான

விவசாயத்தில், மிகுந்த ஈடுபாட்டோடு கவனம் செலுத்தி வந்தனர்.

சின்னைய ராஜா, பெத்தி ராஜா, சக்க ராஜா, சங்கர ராஜா ஆகிய நால்வரும் பூசப்பாடி ச. அழக ராஜாவின் குமாரர்கள்.

அழக ராஜாவின் மூத்த புதல்வர் சின்னைய ராஜா, மரபு வழி வந்த 'கிராம முன்சீப்' பொறுப்பை ஏற்று, இராஜபாளையத்தில் மரியாதைக்குரியவராக ராஜுக்கள் சமுதாயத்தில் மதிப்புப் பெற்று வாழ்ந்திருந்தார். பொதுமக்கள் சின்னைய ராஜாவிடம் காட்டிய பேரன்பாலும், சின்னைய ராஜா பொது மக்களிடம் கொண்டிருந்த பரிவாலும், நகரில் அப்பெருமகனார் செல்வாக்குடைய சிறந்த மனிதராக விளங்கினார்.

செல்வ வளமும், செல்வாக்குப் பலமும் பெற்றிருந்த சின்னைய ராஜாவிற்கு மனத்துள் ஒரு சஞ்சலம் குடி கொண்டிருந்தது. ஆனால் அதை எவரிடமும் அப் பெருமகனார் காட்டிக் கொண்டதே இல்லை. குறிப்பாகத் தம் வாழ்க்கைத் துணைவியார் சிட்டம்மாளிடம் ஒரு சிறிதும், தமக்கு உள்ள மனக்கவலையைத் தெரிந்து கொள்ள சந்தர்ப்பம் கொடுத்ததில்லை. சிட்டம்மாளுக்கும் மனத்துள் துயரச் சுமை, நாள்தோறும் வலுப்பெற்று வந்ததென்னவோ உண்மைதான். ஆனால் அந்த உண்மையின் நிழல்கூட கணவர் சின்னைய ராஜாவிற்குத் தெரிந்துவிடக் கூடாதென்பதில் அந்த அம்மையார் கவனம் செலுத்தி வந்தார்.

தம்முடைய சஞ்சலத்தை மனைவி அறிந்தால், மனக் கலக்கம் கொள்வாளே, மனத்துயரம் அடைவாளே எனக் கணவரும், தன்னுடைய துயரத்தைக் கணவர் அறிந்தால், மனம் உடைந்து போவாரே, மனத் துன்பம் கொள்வாரே என மனைவியும் எண்ணிக் கொண்டிருந்த அந்தப் பண்பட்ட உள்ளங்கள் புண்பட்டுக் கொண்டுதான் இருந்தன! அப்படி என்ன மனக்கவலை? அப்படி என்ன மனத்துயரம்? புண்பட அவர்களுக்குள் புகுந்த சஞ்சலம் தான் என்ன? எல்லாருக்கும் ஏற்படுகிற துயரம்தான்! எல்லாருக்கும் ஏற்படுகிற ஏக்கம் தான்! வேறொன்றுமல்ல!

திருமணமாகி, ஒரு மனப்பட்ட தம்பதிகளுக்கு, வெகு நாட்கள் ஆகியும் வீட்டில் 'மரபு மணம்' கமழவில்லை என்றால், சோகமும் தாகமும் ஏற்படுவது இயல்புதானே? திருமணத்திற்கு உரிய பயனே மரபை உருவாக்குவது தானே? மங்கலம் என்பது மனை மாட்சி, நன்கலம் நன் மக்கட் பேறல்லவா? 'இல்லறப் பயன் ஈடேறவில்லை' என்ற கவலைதான் இருவர் உள்ளத்துள்ளும் புகுந்து, புண்பட வைத்தது. ஒரு நாள் சிட்டம்மாள், சின்னைய ராஜாவிடம் பணிவோடு வேண்டினார். "கொஞ்ச நாட்களுக்கு முன் வந்தாரே ஒரு சாஸ்திரியார்? அவர் சொல்லிக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. நீங்களே 'போகலாம்' எனச் சொல்வீர்களென நினைத்திருந்தேன்.."

"சரி, நானும் அதைப்பற்றி எண்ணிக் கொண்டேதான் இருந்தேன். அடுத்த வாரம் புறப்பட்டுப் போவோம். ராமேஸ்வரம் சென்று, விரதமிருந்து, தீர்த்தமாடி ஒரு மண்டலம் தங்கி வருவோம்" என்றார் சின்னைய ராஜா.

**சி**ன்னைய ராஜாவும், சிட்டம்மாள் அம்மையாரும் இராமேஸ்வரம் புறப்பட்டுச் செல்வதற்குரிய ஆயத்த வேலைகளைக் கிராம முன்சீப் சின்னைய ராஜா செய்யத் தொடங்கினார். இராமேஸ்வரம் செல்வதற்கு அந்தக் காலத்தில் ரயில் ஏது? பஸ் ஏது? நடந்து செல்ல வேண்டும்! அல்லது மாட்டு வண்டியில்தான் ற்றுக்கணக்கான மைல்களைக் கடந்தாக வேண்டும்! போய்ச் சேருவதற்கு நான் கைந்து நாள்கள் ஆகும். அங்கங்கே இரவு நேரங்களில் தங்கியிருந்து சென்றாக வேண்டும்.

ஒரு நல்ல நாளில் உறவினர்களிடமெல்லாம் சொல்லிக் கொண்டு, சின்னைய ராஜாவும் சிட்டம்மாள் அம்மையாரும் வண்டியில் புறப்பட்டுச் சென்றனர். இராமேஸ்வரத்தில் ஒரு மண்டலம் தங்கியிருந்த அப் பெருமக்கள் தீர்த்த மாடினர், விரதம் கைக் கொண்டனர், வேள்விகள் நடத்தி நாளும் பொழுதும் இறையுணர்வில் திளைத்தனர், எழுந்தருளியுள்ள இராமநாதசாமிக்கு முன்னே, நினைத்த போதெல்லாம் சென்று நின்று, உருகி அழுதனர்; உள்ளார்ந்து தொழுதனர். பின்னர் இராஜ பாளையத்திற்கு வண்டியிலேயே திரும்பினர்.



இராமேஸ்வரம் திருத்தலம்

பணிவார் பிணி தீர்த்தருளும் பரம்பொருளின் திருவருளால், சிட்டம்மாளின் திருவயிறு வாய்த்தது! ஆம், அம்மையார் கருவுற்றார்.

சின்னைய ராஜாவின் மனம் - மகிழ்ச்சி மலர்கள் சிரித்த மனோகரப்பூங்கா ஆயிற்று ! சிட்டம்மாளின் உள்ளம் ஆனந்த அமிழ்தம் பெருக்கெடுக்கும் பாற்கடல் ஆயிற்று! உறவுப் பெண்களின் முகங்கள் 'அப்படியா?' என வியப்பாலும், களிப்பாலும் விகசித்தன ! உற்றார் அறிந்து உவகை கொண்டனர்! ஊரார் வந்து வாழ்த்துக் கூறினர்!

புலர்காலைப் பொழுதொன்றில், அருகில் சயனித்திருந்த கணவரைத் தட்டி எழுப்பினார் சிட்டம்மாள்.

கருவுற்றிருக்கும் காலம் அல்லவா? மிகுந்த கலக்கத்துடன் எழுந்த சின்னைய ராஜா, பதறியவாறே "என்ன? என்ன?" எனக்கேட்டார்.

"ஒன்றும் பயப்பட வேண்டாம்! நல்ல கனவு ஒன்று கண்டேன். அதை உங்களிடம் தெரிவிக்கும் ஆசையில்... உங்கள் உறக்கத்தைக் கெடுத்து விட்டேன்...." எனப் பணிவோடு, நெளிந்து குழைந்தார் சிட்டம்மாள்.



பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவைப் பெற்றெடுத்துப் பேறுபெற்ற
அன்னையார் சிட்டம்மாள் அம்மையார்

“அப்படியா? சரி, சரி சொல்லு... கேட்போம்” என்றார் சின்னைய ராஜா.

இராஜபாளையத்திற்கு அருகே உள்ள சங்கரன் கோயிலுக்கு சின்னைய ராஜாவும், சிட்டம்மாள் அம்மையாரும் வழி பாட்டிற்காகச் சென்றுள்ளனர். பிரார்த்தனையை முடித்துக் கொண்டு, நேத்திக் கடன்களையெல்லாம் செலுத்திவிட்டுத் திருக்கோயிலின் திருக்குளத்தருகே உள்ள மண்டபத்தில் வந்து அமர்ந்திருக்கின்றனர். இதுவரை கேட்டிராத இன்னிசைச் சப்தத்தை இருவரும் செவி இனிக்கக் கேட்டு வியப்படையும் வேளையில், பகவான் சங்கரநாராயணர் அவர்களுக்கு எதிரே எழுந்தருளுகின்றார். மகிழ்ந்தும், நெகிழ்ந்தும் இருவரும் எழுந்து கைகூப்பிய பின், பகவானின் திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து நின்றபோது, கோமதி அம்பிகையும் சங்கர நாராயணருக்குப் பக்கத்தில் காட்சி அளிக்கிறாள். அம்பிகையின் திருக்கரங்களில் ஏந்தியுள்ள ஆண் குழந்தை ‘குவா குவா’ எனக் குரல் எழுப்பி அழுகின்றது. சிட்டம்மாள் குழந்தையைப் பெற்றுக் கொள்ளும் வேட்கையால் கரங்களை நீட்டுகிறார். பகவான் சங்கர நாராயணர் அம்பிகையிடம் குழந்தையைக் கொடுத்து விடுமாறு கண்களால் சைகை செய்து புன்னகை பூக்கின்றார். அம்பிகை அளிக்க, ஆர்வத்துடன் குழந்தையை வாங்கி மார்போடு அணைத்து மகிழ்கிறார் சிட்டம்மாள்!

கனவு நைந்தது ! விழிப்பு வந்தது ! சிட்டம்மாள் எழுந்து கணவரை எழுப்பினார் !

“சிட்டம்மா ! உன் வயிற்றில் வளரும் சிசு... ஆண் சிசு தான் ! நமக்கு ஆண் குழந்தைதான் பிறக்கப் போகிறது. சரி நாம் இன்று சங்கரன் கோயிலுக்குப் போய் வருவோம்” என்றார் சின்னைய ராஜா.

அந்த நாளும் வந்தது ! புனித உயிர் ஒன்று, மனிதக் குழந்தையாய்ப் பூமிக்கு வந்தது ! முன்னைப் பிறப்பின் முயன்ற தவத்தினால், சின்னைய ராஜாவின் செல்வனாய் வந்து பிறந்தது! புண்ணியத்தைக் கட்டிக் கொண்டு புகழ் சேர்க்க வந்த பிள்ளை, சிட்டம்மாளை அன்னையாகக் கொண்டது ! அந்தக் குழந்தை பிறந்த நாள் -

'பூசப்பாடி'யாருக்குப் புதிய பெருமிதம் தோன்றிய நாள் !

ராஜபாளையத்தாருக்கு அற்புதக் கீர்த்தி அரும்பிய நாள் !

அந்த நாள் . 24 . 4 . 1894

ஆம் ! கோட்டை கட்டி அந்த நாளில் வாழ்ந்த ராஜுக்கள் குலம் விளங்க, இராஜபாளையத்தில் கேட்டை நட்சத்திரத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைதான் பின்னர் பெரும் புகழ் ஈட்டிய, பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா எனக் கூறவும் வேண்டுமா?



பெருந்தகை பி.ஏ.சி.ஆர். பிறந்த வீடு

* * *

# 4

# பிள்ளைப் பருவமும்
# பள்ளிப் பருவமும்

குலம் விளங்க, குடும்பம் விளங்க, உற்றார் விளங்க, ஊரும் விளங்கப் பெற்றோரின் பெருந் துயர் நீங்கப் பிறந்த நற்றவக் குழந்தைக்கு 'நாமகரணம்' சூட்ட வேண்டு மல்லவா?

வாராது போல் வந்த வைரமணிச் சுடர் ஆயிற்றே?
விரதமிருந்து பெற்ற வேள்விப்பயன் ஆயிற்றே?
திருவருளால் அரும்பித் திரண்டு வந்த தெய்வக்கனி ஆயிற்றே? 'இல்லை இனி ஒரு துயர்' எனப் பெற்றோரின் 'பிள்ளைக்கலி' தீர்க்க வந்த, அந்தப் பேரழகுக் குழந்தைக்கு, 'என்ன பெயர் வைத்திடலாம்?' எனச் சின்னைய ராஜா ஒரு கணம் சிந்தித்தார். ராமேஸ்வரத்தில் எழுந்தருளிய இராமநாத சுவாமி, அவரின் எண்ணத்துள் நின்று புன்னகைத்தார். 'ஆகா, அந்தப் பெருமானின் திருவருளால் ஆகி வந்த பிள்ளை அல்லவா?' பெருமானின் திருப் பெயரையே பிள்ளைக்குச் சூட்டுவது முறையாக அமையுமென முடிவுக்கு வந்தார் சின்னைய ராஜா.

'இராமசாமி ராஜா' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தனர் பெற்றோர்.

குழந்தை இராமசாமி ராஜா 'கொழு கொழு' என்றிருப்பான், 'தள தள'' வென அவன் தேகமெங்கும் செழுமை சேர்ந்திருக்கும், கடைந்தெடுத்த பதுமையாகக் காண்போரைக் கவர்ந்திழுக்கும் புதுமையாகத் திண்மையான தேகப் பொலிவுடன் திகழ்ந்திருந்தான், பிறை நிலவாய்ச் சிறு நெற்றியும், எள் மலர் போல் அமைந்திருக்கும் மூக்கின் இரு புறமும் வானக் கருமையன்ன வட்டக் கரு விழியும், செந்தாமரை வண்ணம் கொண்ட சிற்றிதழ்த் திருவாயும் பெற்று, அழகும் ஆரோக்கியமும் மிளிரும் எழிலோவியமாகத் திகழ்ந்தான் குழந்தை இராமசாமி ராஜா !

அவனது தேகப் பொலிவையும், தெவிட்டாத பேரழகையும்

பார்த்துப் பார்த்து உள்ளம் பூரித்தார் அன்னை சிட்டம்மாள். என்றாலும் குழந்தை இராமசாமி ராஜாவின் சிறு குறும்பும், 'துரு துரு' வென ஓடி ஆடி அடிக்கும் 'லூட்டி'யும், எந்த நேரமும் கண்ணுறங்காது கவனம் செலுத்த வேண்டிய கட்டாயத்தை, சிட்டம்மாள் கொண்டிருக்க வேண்டிய அவசியத்தை உருவாக்கின. எனவே இராமசாமி ராஜாவைப் பெற்றெடுக்கும் பேறு பெற்ற அன்னை சிட்டம்மாளின், உள்ளம் பூரித்திருப்பினும், உடல் என்னவோ தளர்ந்து மெலிந்தது !

பொதுவாகக் குழந்தைகள் 'துரு துரு' வென இருப்பது இயல்பான ஒன்றுதான். அதிலும் செல்வக் குடும்பத்தில் செல்லமாக வளர்க்கப் பெறும் குழந்தைகளுக்கு 'வால்' முளைத்து விடுவது உண்டு ! பின் கேட்கவா வேண்டும் ! வீடும் களேபரம் ஆகி விடும் ! குழந்தையை நாடும் தாயரும் களைத்துப் போய், குறும்புக்கு ஈடு கொடுக்க இயலாதவராய், உள்ளம் பூரித்திருப்பினும், உடலில் மிடுக்கற்றுப் போய் மெலிந்து போய்விடுவர்.

சின்னைய ராஜாவிற்கு எத்தனையோ வெளிக்காரியங்கள். 'கிராம முன்சீப்' பொறுப்பு வேறு இருக்கிறதே? வீட்டில் வெகுநேரம் இருந்து இராமசாமியுடன் கொஞ்சவோ, குலாவவோ, அவன் குறும்புகளுக்கு ஈடு கொடுத்து எதிர் கொள்ளவோ இயலுவதில்லை. ஆனால் சிட்டம்மாளுக்கோ குழந்தையைக் கட்டிக் காக்க வேண்டிய பொறுப்பில், இரவு பகல் எந்நேரமும் கவனம் செலுத்தியாக வேண்டும். அதனால் உடல் தளர்ந்தாலும், மெலிந்தாலும், பிரார்த்தனையால் வந்துற்ற பிள்ளையை, 'தேனே, அமிர்தமே, செல்வத் திரவியப் பூமானே' என அழைத்து அரவணைத்து அன்பு மீதூர வளர்த்து வந்தார்.

இராமசாமி ராஜாவுக்கு ஐந்து வயது ஆனபோது 'வித்யாரம்பம்' செய்ய விரும்பிய சின்னைய ராஜா, ஒரு விழா எடுத்தார். உற்றார் உறவினர்களை அழைத்தார், அவர் கிராம அதிகாரி ஆயிற்றே? ஊரார் சிலரையும் வரவழைத்தார். தமிழ்ப் பண்டிதர் சுப்பராஜா கண்ணெனத்தகும் கல்வியறிவை ஊட்டுவிக்க வந்து சேர்ந்தார்.

பாலகன் இராமசாமி ராஜாவுக்குச் ஜரிகை வேலைகள் செய்யப்



தமிழ்ப் பண்டிதர் சுப்பராஜா - பி.ஏ.சி.ஆருக்கு
'வித்யாரம்பம் செய்வித்த ஆசிரியர்'

பெற்ற புத்தாடைகள் அணிவிக்கப் பெற்றன. காதில் கடுக்கன், கரங்களில் காப்புகள், கழுத்தில் அழகிய வேலைப்பாட்டுடன், டாலர் கோர்த்த சங்கிலி ஆகியவை அணிவித்த பின், 'கரு கரு'வென வளர்ந்திருந்த சிகையைப் பின்னிச் சிறு கொண்டையாக்கிப் பூவும் சூட்டிய பிற்பாடு, ஜரிகைக் குல்லாவைத் தலையில் சூட்டினர்.

ஆசனத்தில் அமர்ந்திருந்த ஆசிரியரை வணங்கி எழுந்தான் இராமசாமி ராஜா. ஆசிரியர் சொல்லியவாறே, மழலை மாறாத கீச்சுக் குரலில் முணு முணுத்தான் இராமசாமி ராஜா.

ஹரி ஓம் ! நன்றாகக் குருவாழ்க ! குருவே துணை !

மூன்று முறை முணு முணுத்து முடிந்தது. எதிரே பரப்பப் பட்டிருந்த பச்சை அரிசியில் 'அட்சராப்பியாசம்' தொடங்கியது. இராமசாமி ராஜாவின் ஆட்காட்டி விரலைப் பிடித்துக் கொண்டு, அரிசியில்

'ஆனா' 'ஆனா' எனச் சொல்லியவாறே மூன்று முறை ஆசிரியர் எழுதினார். அப்படியே பசும்பாலில் பாலகனை எழுத்தாணி கொண்டு எழுதச் செய்து, அந்தப் பாலை இராமசாமி ராஜாவிடம் கொடுத்து அருந்தச் சொன்னார் ஆசிரியர்.

ஆரம்பப் பாடசாலையில் பயின்று கொண்டிருந்தபோதே, அந்த இளம் பிராயத்தில், கற்றுக் கொள்வதில் ஆர்வம் காட்டி வந்த இராமசாமி ராஜாவின் நினைவாற்றலை, சொல்லிக் கொடுத்ததும் பற்றிக் கொள்ளும் படிப்பாற்றலை ஆசிரியர், சின்னைய ராஜாவிடம் வந்து கூறி மகிழ்வார். சின்னைய ராஜாவோ 'அப்படியா?' என ஆசிரியரிடம் வியந்து கேட்டு மகிழ்ந்து போவார். உடனே வீட்டுக்குள் சென்று சிட்டம்மாளை அழைத்து, "உன் பையனின் புத்தி சாலித்தனத்தை வாத்தியார், ரொம்பத்தான் புகழ்கிறார்" என்பார். அந்த அம்மையார் பெருமிதத்துடன் சிரித்துக் கொண்டே, "அதிலென்ன ஆச்சரியம்? யானையின் குட்டி யானைக்குட்டி தானே? பூனைக்குட்டி யாவா போகும்?" என்பார். இருவரும் சற்று நேரம் தங்கள் பையனை பற்றியே பேசி மகிழ்வர்.

நடுநிலைக் கல்வியையும் இராஜபாளையத்திலேயே பயின்று பெற்றுக் கொண்ட இராமசாமி ராஜாவை, உயர்நிலைக் கல்வி பெற ஸ்ரீவில்லிபுத்தூர் சி.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் சேர்த்தார் சின்னைய ராஜா.

இராஜபாளையத்திலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் பத்து மைல் தூரம் உள்ளது. அந்தக் காலத்தில் இராஜபாளையத்திலிருந்து நடந்தே சென்று, உயர்நிலைப் பள்ளியில் மாணவர்கள் படித்து வரும் பழக்கம் இருந்தது ! கற்றுக் கொள்ளப் புத்தக மூட்டையும், மதியம் உணவு கொள்ள கட்டுச் சாதமும் சுமந்து அதிகாலையிலேயே மாணவர்கள் இராஜபாளையத்திலிருந்து புறப்பட்டு விடுவார்கள். கண்மாய்க்கரை ஓரமாகவே நடந்து சென்று, மாலை பள்ளி முடிந்ததும், நடந்து இராஜபாளையத்திற்குத் திரும்பி, ஒவ்வொரு நாளும் முன்னிரவு நேரத்தில் மாணவர்கள் வீடு வந்து சேர்வார்கள். பி.எஸ். குமாரசாமி ராஜா, பள்ளிப் பருவத்தில் நடந்து சென்று

படித்ததை வெகு சுவாரஸ்யமாக 'எனது இளமை நினைவுகள்' என எழுதி வெளியிட்டுள்ளார்.

கிராம முன்சீப் சின்னைய ராஜா, தமது செல்வ மகனைத் திங்கள் காலையில் வண்டியிலேற்றி ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அனுப்பி விடுவார். சனிக்கிழமை மாலை வண்டியை அனுப்பி, இராஜபாளையத்திற்கு வரவழைத்துக் கொள்வார். இடைப்பட்ட நாள்களில் இராமசாமி ராஜாவை, தலைமை ஆசிரியர் பொறுப்பில் ஸ்ரீவில்லிபுத்தூர் பள்ளி விடுதியிலேயே தங்கியிருக்கச் செய்வார்.

பத்தாம் வகுப்புவரை சி.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் பயின்ற இராமசாமி ராஜா, பள்ளி இறுதி வகுப்பை, ஸ்ரீவில்லிபுத்தூர் இந்து உயர்நிலைப் பள்ளியில் பயின்று, தேர்வில் (எஸ்.எஸ்.எல்.ஸி) பள்ளி நிர்வாகம் பாராட்டும் படியான மதிப்பெண்கள் பெற்று வெற்றி பெற்றார்.



ஸ்ரீவில்லிபுத்தூர் சி.எம்.எஸ். உயர்நிலைப்பள்ளி

கல்வியில் மட்டுமின்றி விளையாட்டுகளிலும் மிகுந்த விருப்பத்தோடு பங்கு கொள்வான் இராமசாமி ராஜா, அந்தக் காலத்தில் 'கண்ணாம்பூச்சி', 'சடுகுடு', 'கோலி ஆடுதல்' ஆகியவை தானே விளையாட்டுகள், இவைகளில் அவ்வப்போது பங்கு கொள்ளும் இராமசாமி ராஜா, குதிரை விளையாட்டில் மிகுந்த ஈடுபாட்டுடன் நண்பர்களோடு அடிக்கடி ஆடி மகிழ்வான்.

தோற்றுப்போன பையன் குதிரையாகக் குனிந்து நிற்க வேண்டும், வெற்றி பெற்றவன், குனிந்து நிற்பவன் முதுகில் ஏறி, அவனது குடுமியைக் கடிவாளமாகக் கையில் பற்றிக் கொண்டு (அந்தக் காலத்துச் சிறுவர்கள் குடுமி வைத்துக் கொண்டிருப்பார்கள். அப்போது 'கிராப்'பெல்லாம் கிடையாது) 'ஹை.... ஹை' என்பான். குனிந்து நிற்பவன் குனிந்தவாறே ஓட வேண்டும். இந்த விளையாட்டில் பல தடவை இராமசாமி ராஜாவின் பக்கமே வெற்றி வந்து சேரும். எனவே பல முறை இராமசாமி ராஜா குதிரைச் சவாரி செய்யினும், சில தடவை குதிரையாகவும் குனிந்து நின்றதுண்டு !

ஸ்ரீவில்லிபுத்தூர் சி.எம்.எஸ். உயர்நிலைப்பள்ளியில் பயின்று கொண்டிருந்த போதும், வகுப்பில் முதல் ஐந்து மாணவர்களுக்குள் ஒருவனாகவே இராமசாமி ராஜா மதிப்பெண்கள் பெறுவது வழக்கம். அது கிறிஸ்துவ சமயத்தார் நடத்தும் பள்ளி. அதற்காக, தான் நெற்றியில் 'திருமண்' இட்டுச் செல்லும் வழக்கத்தை ஒரு நாளும் நிறுத்திக் கொண்டதில்லை. அறிவார்ந்த மாணவனாக விளங்கியதோடு, ஆசிரியர்களிடம் காட்டிய பணிவால், ஆசிரியர்களின் அன்பிற்குரியவனாகவும் விளங்கினான் இராமசாமி ராஜா.

சின்னைய ராஜா தமது செல்வ மகனுக்குத் திருமணம் செய்து வைக்க விருப்பம் கொண்டார். சிட்டம்மாளிடம் கேட்ட போது, அந்த அம்மையாரும் தனக்கு மருமகள் வருகை தருவதில் பெரு விருப்பம் இருந்து வருவதைக் கணவரிடம் வெளிப்படுத்தினார்.



பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் வாழ்க்கைத் துணைவியார்
அம்மணி அம்மாள்

பிறகென்ன?

இராமசாமி ராஜா மணமகன் ஆனார் !

பழையபாளையம் என்.ஏ. இராமசாமி ராஜாவின் திருமகளார் அம்மணி அம்மாள் மணமகள் ஆனார் !

இளங்கோ அடிகள், கோவலன்-கண்ணகி திருமணத்தைக் குறிப்பிட்டுப் பேசுகின்ற போது, கோவலன் 'ஈர் எட்டு ஆண்டு அகவையான்' என்றும் கண்ணகி 'ஈர் ஆறு ஆண்டு அகவையாள்' என்றும் கூறுவார். திருமணம் நிகழ்கிற போது கோவலனுக்கு வயது பதினாறு; கண்ணகிக்கு வயது பன்னிரண்டு. மணமகன் பதினாறு வயதிலும், மணமகள் பன்னிரண்டு வயதிலும் இருந்தனர்.

ஆனால் இங்கே மணமகன் இராமசாமி ராஜாவுக்கே வயது பன்னிரண்டுதான் ! மணமகளாக வந்த அம்மணி அம்மாளுக்கு வயதோ பதின்மூன்று !

'பால்ய விவாகம்' அந்தக் காலத்தில் பழக்கப்பட்ட ஒன்று. பருவ வயது வருவதற்கு முன்னமேயே, அன்பைச் செலுத்துவதற்கென்ற இடத்தையும், எல்லையையும் வகுத்து விடுவது! விதை ஊன்றும்போதே செடி படருவதற்குரிய கொம்பையும் நட்டு விடுகின்ற முறை ! இல்லையா ?

1906 ஆம் ஆண்டு இராமசாமி ராஜா - அம்மணி அம்மாள் திருமணம் இராஜாபாளையத்தில், பெற்றோர் மகிழ, உற்றாரும் ஊராரும் வாழ்த்த பொலிவோடும், புகழோடும் நடந்தது.

திருமணம் ஆன பிறகும், இராமசாமி ராஜா பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தார். ஸ்ரீவில்லிபுத்தூர் சி.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து, அங்கேயே விடுதியில் தங்கிப் பயின்றார்.

பள்ளி இறுதி வகுப்பில் தேர்வு பெற்ற இராமசாமி ராஜா, இராஜபாளையத்தில் மூன்று, நான்கு ஆண்டுகள், பெற்றோருடனும் தமது வாழ்க்கைத் துணைவியாருடனும்

வாழ்ந்திருந்தார். என்றாலும் மேலும் கற்க வேண்டும். கற்றுத் தெளிய வேண்டுமென்ற வேட்கையைத் தமது தந்தையாரிடம் வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்.

இருபதாம் ற்றாண்டின் உதய காலத்தில் இராஜபாளையம் சிறு கிராமமாகத்தான் இருந்தது. நகரம் விரிவடையாத அந்தக் காலத்திலேயே, எம்.எஸ். இராமசாமி ராஜா என்ற பெரியவர் ஒரு ஜின்னிங் ஃபாக்டரியை நடத்திக்கொண்டிருந்தார். முதன் முதலில் இராஜபாளையத்திற்கு சப்பட்டை, பஞ்சவர்ணம் ஆகிய மாங்கனி வகைகளைக் கொண்டு வந்து விளைய வைத்தவர் இராமசாமி ராஜா எனக் கூறப்படுகிறது. அவருக்கு ஒரு பஞ்சாலையை உருவாக்க வேண்டுமென்றஎண்ணம் அப்போதேஏற்பட்டு, அந்த எண்ணத்தைக் கிராம முன்சீப் சின்னைய ராஜாவிடம் வந்து தெரிவித்து ஆலோசித்தார்.

இராமசாமி ராஜாவின் எண்ணம் வெற்றிபெற வேண்டுமென வாழ்த்தி, கிராம முன்சீப் சின்னைய ராஜா, ஒரு தாம்பாளத்தில் வெற்றிலை பாக்குடன் ஒரு தொகையையும் வைத்து மகிழ்ச்சியுடன் வழங்கினார். வழங்கிய தாம்பாளத்தைப் பணிவோடு வாங்கிய எம்.எஸ்.இராமசாமி ராஜா, சின்னைய ராஜாவிற்கு அருகே நின்று கொண்டிருந்த அவரது குமாரர் இராமசாமி ராஜாவிடம் (பி.ஏ.சி.ஆர்.) தாம்பாளத்துடன் வாழ்த்திக் கொடுத்த தொகையையும் அளித்து, பின்னர் வந்து பெற்றுக் கொள்வதாகச் சொல்லிச் சென்றார். அப்போது இராமசாமி ராஜாவுக்கு வயது இருபது இருக்கலாம். எம்.எஸ். இராமசாமி ராஜா பஞ்சாலை நிறுவவில்லைதான். ஆனால் வாழ்த்திக் கொடுத்த தொகையை எவரிடம் அளித்துச் சென்றாரோ, அந்த இளைஞர் பின்னொரு காலத்தில், இராஜபாளையம் நகரில் ஒரு பஞ்சாலையை நிறுவிய செயல் எண்ணி மகிழத்தக்கது!

**சி**ன்னைய ராஜா, தமது புதல்வனின் விருப்பத்திற்கு உடன்பட்டு மேற்படிப்புக்கு இராமசாமி ராஜாவை எங்கு அனுப்பலாமெனப் பலரிடம் வினவிக் கொண்டிருந்தார்.

அந்தக் கால கட்டத்தில் இராஜபாளையத்தில் வாழ்ந்த மக்களிடம் கல்வி, வணிகம், பொது வாழ்க்கை ஆகியவற்றில் ஒரு புதிய மலர்ச்சி தோன்றிக் கொண்டிருந்தது. பல இளைஞர்கள் வெளியூர் சென்று கல்லூரிகளில் படிக்கத் தொடங்கி இருந்தனர். சிலர் பட்டம் பெற்று நகருக்குத் திரும்பி இருந்தனர்.

பலருடைய பரிந்துரைகளைக் கருத்தில் கொண்ட சின்னைய ராஜா தமது புதல்வன் இராமசாமி ராஜாவை திருநெல்வேலிக்கு அனுப்பிக் கல்லூரியில் பயிலச் சேர்த்து விடத் தீர்மானித்தார். எனவே 1917 ஆம் ஆண்டு இராமசாமி ராஜா திருநெல்வேலி இந்து கல்லூரியில், அப்போதிருந்த 'இன்டர்மீடியட்' வகுப்பில் சேர்ந்து கற்கத் தொடங்கினார்.

அளப்பரிய வேட்கையுடன், படித்துப் பட்டம் பெறும் நோக்கத்துடன், நெல்லை சென்ற இராமசாமி ராஜாவின் எண்ணம் நிறைவேறவில்லை.

சின்னைய ராஜா 1918 ஆம் ஆண்டு மரணமடைந்தார்.

படிப்பைப் பாதியிலேயே விட்டு விட்டு, எல்லையில்லாத கவலையுடன் இராமசாமி ராஜா, இராஜபாளையத்திற்குத் திரும்ப நேர்ந்தது.

* * *

# 5

# குடும்பப் பொறுப்பும், தலைமைச் சிறப்பும்

உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு எத்தகையது?

'முட்டையிலிருந்து பறந்து சென்றுவிடும் பறவையைப் பார்த்திருக்கின்றீர்களா ?'

'பார்த்திருக்கின்றோம்.'

'முட்டையைத் தனிமைப்படுத்தி விட்டுப் பறவை எங்கோ பறந்து சென்று விடுகிறதல்லவா ?'

'ஆமாம்.'

முட்டைக்கும், அதனுள் இருந்த பறவைக்கும் உள்ள தொடர்பு போன்றதுதான் உடலுக்கும் உயிருக்கும் உண்டான தொடர்பு !

இப்படி விளக்கியவர் திருவள்ளுவர்.

"குடம்பை தனித்து ஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு"

(குடம்பை என்றால் முட்டை ; புள் என்றால் பறவை; நட்பு என்றால் தொடர்பு. )

'நிலையாமை' பற்றிச் சொல்ல வந்த திருவள்ளுவர், 'நேற்று இருந்தவன் இன்றைக்கு இல்லை' எனப் பேசும் பேச்சுத் தான் உலகம் கொண்டிருக்கும் பெருமை; நிலையில்லாதவற்றை நிலையானது எனக் கருதுகிற அறிவு - அற்ப அறிவு; என்றெல்லாம் கூறி தூங்குவது போன்றது இறப்பு, தூங்கி விழிப்பது போன்றது பிறப்பு என்றார்.

மரணம் மனித வாழ்க்கையில் இயல்பானதுதான். பிறந்தவை அனைத்தும் ஒரு நாள் இறந்தவை ஆவது இயற்கையானது தான்.

" ஓடுகின்றனன் கதிரவன் அவன்பின்
ஓடுகின்றன ஒவ்வொரு நாளாய்!"
என்றார் வள்ளல் பெருமான் இராமலிங்கர்.

"இப்பிறப்பை நம்பி இருப்பாரோ?" எனக் கேட்டார் பட்டினத்தார். எல்லாம் சரிதான்! மரணம் என்பது நிகழ்வது உறுதி என அறிந்தும், இறப்பு என்பது இயல்பானதென உணர்ந்தும், மரணத்தை எதிர் கொள்கிற மனிதன், மரணச் செய்தியைச் செவிப்படுத்துகிற மனிதன், மனம் கலங்காமல், அறிவு குறையாமல், உணர்வு ஒடுங்காமல் இருக்க முடிகிறதா, என்ன ?

கல்லூரி மாணவராய் நெல்லையில் படித்துக் கொண்டிருந்த இராமசாமி ராஜா, தமது தந்தையாரின் மரணச் செய்தியைக் கேட்டபோது அதனைத் தாங்கிக் கொள்ள முடியுமா? ஆற்றிக் கொள்ளத்தான் இயலுமா? தாங்கிக் கொள்ள இயலாத துயரத்துடன், செய்தி சொல்ல வந்த உறவினருடன் இராஜபாளையத்திற்குப் புறப்பட்டார்.

ஆற்றிக் கொள்ள இயலாத அகத் துயரத்தோடு, மாற்றிக் கொள்ள முடியாத மனச் சஞ்சலத்தோடு, உற்றார், உறவினர்களின் பரிவு நிறைந்த முகபாவங்களை எதிர் கொண்டு, தந்தைக்கு உரிய இறுதிச் சடங்குகளையெல்லாம் செய்து முடித்தார் இராமசாமி ராஜா. சோகத்தில் ஆழ்ந்திருந்த தனது அன்னையார் சிட்டம்மாள் அம்மையாருக்கும், தங்கை ராமம்மாளுக்கும் ஆறுதலும், தேறுதலும் கூறிக்கொண்டே இருந்தார் இராமசாமி ராஜா.

**தா**த்திராஜாவின் குமாரர் சக்கராஜாவிற்கு நான்கு புதல்வர்கள், அழகராஜா, சஞ்சீவிராஜா, அங்கையராஜா, பெத்திராஜா ஆகிய நால்வருமே கூட்டுக் குடும்பமாகவே வாழ்ந்து வந்தனர். அந்தக் காலங்களில் கூட்டுக் குடும்ப மனப்பான்மை, குலப்பண்பாகவே கருதப்பெற்றது. அழக ராஜாவின் மைந்தர் சின்னைய ராஜா, சக்கராஜாவின் புதல்வர் சஞ்சீவி ராஜா, அங்கைய ராஜாவின்

புதல்வர்களான சக்கராஜா, பீம ராஜா, பெத்திராஜா குடும்பத்தினர் அனைவரும் ஒரே குடும்பமாகவே ஒரே கோட்டை வளாகத்தில் வாழ்ந்தனர். இராமசாமி ராஜாவிற்கு ஏறத்தாழ முப்பது வயது ஆகும்வரை கூட்டுக் குடும்பமாகவே வீட்டுச்சூழல் விளங்கியது. சின்னைய ராஜாவின் தந்தையார் அழகு ராஜாவின் தம்பி சஞ்சீவி ராஜாவின் மகன் பி.எஸ். குமாரசாமி ராஜாதான் தமிழ்நாட்டின் பிரதமராகவும், ஒரிஸ்ஸா கவர்னராகவும் பொறுப்பு வகித்துப் பெரும் புகழ் ஈட்டிய காங்கிரஸ் பேரியக்கத் தலைவர். இந்திய சரித்திரத்தில் இராஜபாளையத்தைத் தனியொரு அத்தியாயமாக இடம்பெறச் செய்த 'பி.எஸ்.கே' என அழைக்கப்பெற்ற குமாரசாமி ராஜாவும் இந்தக் கூட்டுக் குடும்பத்தின் ஒரே வளாகத்தில் குடியிருந்து வாழ்ந்தவர்தான் !

சின்னைய ராஜாவின் மறைவுக்குப் பின், மரபு வழியாகப் பொறுப்புக் கொண்டிருந்த 'கிராம முன்சீப்' பதவி, இராமசாமி ராஜா ஏற்றுக் கொண்டார். கூட்டுக் குடும்ப மூத்த தலைமுறையின் வாரிசாக இராமசாமி ராஜா இருந்ததால், கிராம அதிகாரியாக இருக்க வேண்டிய கட்டாயமும், குடும்பத்தை நிர்வகித்து நடத்திச் செல்ல வேண்டிய பொறுப்பும் அப் பெருமகனாரை



-பிரம்மாண்டமான குதிர்கோட்டை (நெற்களஞ்சியம்)

வந்தடைந்தன. அப்போதெல்லாம் விவசாயமே அந்தக் குடும்பத்தின் இயக்கத்திற்கு அச்சாணியாக இருந்தது. ஓராண்டில் விளைந்து வரும் தானியங்களைப் பாதுகாத்து வைக்க, அந்தக் காலத்தில் கட்டப்பட்ட 'குதிர்கோட்டை' அமைப்பை இப்போது பார்க்கும்போதும் பிரமிப்பாக உள்ளது! இன்று சிதிலமடைந் துள்ள அந்தக் கோட்டைகளின் கொள்களத்தைப் பார்க்கும்போது, 'அடேயப்பா! ஒரு வருஷத்துக்கு இவ்வளவு தானியங்களா விளைந்து வரும்?' எனக் கேட்கத்தோன்றும்! பிரம்மாண்டமான கொள்களங்கள் அவை! அவைகளின் வடிவ அமைப்பைக் காணும்போதே - அவைகளை உரிமையாகவும், உடமையாகவும் பெற்றிருந்த குடும்பத்தின் வளமையும், வாழ்க்கை நிலைமையும் தெளிவாகத் தெரிகின்றன.

இராமசாமி ராஜாவின் அடக்க உணர்வும், அன்பும், பரிவும், காட்டும் நல்லுறவும், புதுப்பாளையத்தைச் சார்ந்த ராஜுக்கள் சமூகத்தில் தலைமைப் பண்பு கொண்ட ஓர் ஒழுக்க சீலர் உருவாகிக் கொண்டிருப்பதை அடையாளம்காட்டின. பேச்சில் கண்ணியமும், பிறரை மதித்துப் போற்றுவதில் பேரார்வமும், குடும்பச் சூழலில் மரியாதைக் குரிய பெருந்தகுதியும் கொண்டிருந்த பி.ஏ.சி. இராமசாமி ராஜாவை, சமூக மக்கள் 'பி.ஏ.சி.ஆர்' 'கிராம முன்சீப்'என அன்போடு குறிப்பிடத் தொடங்கினர். ராஜுக்கள் சமூகத்திற்கு உரிமையான இராஜபாளையம் கோதண்ட ராமசாமி திருக்கோயிலுக்கு பி.ஏ.சி. ஆரை நிர்வாக அறங்காவலராக நியமித்தனர். பி.ஏ.சி. இராமசாமி ராஜாவுக்கு அப்போது வயது இருபத்து ஐந்துதான் !

இராஜபாளையம் இருபதாம் நூற்றாண்டின் உதய காலத்திலிருந்து பொது வாழ்க்கையில் ஈடுபாடு கொண்டு, தேசீய இயக்கத்தின் விடுதலைப் போராட்டங்களில் பங்கேற்றுப் பாடுபடும் தியாக சீலர்களை உருவாக்கத் தொடங்கியது. ராஜுக்கள் சமூகத்திலும் அத்தகைய தேசப்பற்றுக் கொண்ட பெருமக்கள், தேசீய இயக்கங்களில் பங்கு பற்றி வந்தனர். அவர்களில் இ.பூ. அரங்கசாமி ராஜா குறிப்பிடத்தக்க பெருமகன்

ஆவார். இராஜபாளையத்திற்குத் தனிப்புகழ் (அரசியல் துறையில்) ஈட்டித் தந்துள்ள பி.எஸ். குமாரசாமி ராஜாவுக்கு இளமைப் பருவத்தில் தேசீய உணர்ச்சியைக் கிளர்ந்தெழச் செய்தவர் அரங்கசாமி ராஜா. மகாத்மா காந்தியடிகளின் கட்டளைக்கு ஆட்பட்டு, இராஜ பாளையத்தில் முதன் முதலில் சத்தியாக்கிரக இயக்கத்தில் சிறை சென்றவர் அவர்தான்.

அப்பெருமகனாரை மிகுந்த நன்றிப் பெருக்குடன் நினைந்து போற்றிய இராஜபாளையம் மக்கள், அவர்தம் திருவுருவச் சிலையை இராஜபாளையத்தில் நிறுவி உள்ளனர். சிலையைக் கண்ணிய மாகக் காத்துக் கௌரவிக்க வேண்டுமெனக் கருதிய பி.ஆர். இராம சுப்பிரமணிய ராஜா, சிலைப்பராமரிப்பை இராஜபாளையம் ஆலையின் பொறுப்பாக்கி, சிலையைச் சுற்றிலும் அழகிய பூங்கா அமையுமாறு பேணிவருவது குறிப்பிடத்தக்கது.

இந்திய தேசீயப் போராட்டத்தில் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட அன்னிபெசண்ட் அம்மையாரைப் பற்றி, நேரம் கிடைக்கும் போதெல்லாம் குமாரசாமி ராஜாவிடம் புகழ்ந்தும் போற்றியும் பேசுவார் அரங்கசாமி ராஜா. அதனால் பி.எஸ்.கே. க்கு அம்மையாரிடம் தனிப்பற்றுதல் வளர்ந்து வந்தது. 1918 ஆம் ஆண்டு அன்னிபெசண்ட் அம்மையார் சென்னை அடையாறில் தேசீயக் கல்வி நிலையம் ஒன்றைத் தொடங்கினார். அப்போது பி.எஸ்.கே.க்கு இருபது வயது. அந்த நிலையத்தில் சேர்ந்து பயில்வதில் மிகுந்த விருப்பம் கொண்டு, புறப்படுவதற்கான முயற்சியில் முனைந்து நின்றார்.

வீட்டில் பெரியவர்கள், வேண்டியவரை சொல்லி, அந்தப் பயணத்தை வேண்டாமெனத் தடுத்து நிறுத்தப் பார்த்தனர். குமாரசாமி ராஜா கேட்பதாக இல்லை. பயண நாளையும் முடிவு செய்து விட்டார். இந்த நிலையில் பயணச் செய்தி யறிந்த பி. ஏ. சி.ஆர்., சகோதரர் பி.எஸ். குமாரசாமி ராஜாவை (பி.ஏ.சி. இராமசாமி ராஜாவை விட நான்கு ஆண்டுகள் இளையவர் பி.எஸ்.கே) அழைத்து, “குமாரசாமி ! சென்னை செல்லத் தான் வேண்டுமா?” என்றார்.



பெருந்தகை பி. ஏ. சி. ஆருடன் தியாக சீலர் பி. எஸ். கே.

“ஆமாம்” என்ற பி. எஸ். கே. யை ஒரு விநாடி உற்றுப் பார்த்துக் கொண்டே இருந்தார் பி. ஏ. சி. ஆர். குமாரசாமி ராஜாவின் வாயில் குமிண் சிரிப்பு அரும்பியது.

“வேண்டாமப்பா” என்றார் பி. ஏ. சி. ஆர்.

“சரி, நான் செல்லவில்லை” எனக்கூறிவிட்டு, அங்கிருந்து விரைவாகச் சென்று விட்டார் பி. எஸ். கே.

பி. எஸ். கே. க்கு பி. ஏ. சி. ஆரிடம் அத்துணை மரியாதை !

மரியாதை எனச் சொல்வதைக் காட்டிலும் ‘நேசம்’ எனச் சொல்வதுதான் பொருத்தமாக அமையும். அவ்வளவு அந்யோந்யம். இதில் வேடிக்கை என்னவெனில் ஒருவர் ஆங்கில ஆட்சியின் அடிப்படை அதிகாரி. ஆட்சிக் கட்டிடத்தின் அடித்தளம் ! கிராம முன்சீப் அல்லவா? இன்னொருவர் ஆங்கில ஆட்சியை நீக்கவும் போக்கவும் போராடிக் கொண்டிருந்த தேசத் தொண்டர்; விடுதலை வீரர்! இருவருமே ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்கள்; ஒரே வீட்டு வளாகத்திற்குள் வசிப்பவர்கள்! என்றாலும் ஒருவருக்கொருவர் காட்டி வந்த அன்பும், நேசமும் எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் மாற்றுக் குறைந்ததே இல்லை! காற்றும் நுழைய இயலாத நெருக்கம் அது !

இராஜபாளையத்தில் 1886 ஆம் ஆண்டு பஞ்சாயத்து போர்டு ஆரம்பமானது. அப்போது ‘யூனியன் போர்டு’ என அழைக்கப் பட்டதாம். உத்தியோகப் பற்றில்லாத ஒருவரே போர்டின் தலைமைப் பொறுப்புக்கு உரியவர். பழையபாளையத்தைச் சேர்ந்த பிரபலமான பெருமகனார் ‘ஏ. கே. டி. தர்மராஜா’ முதல் தலைவராக அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டார். அப்போது பஞ்சாயத்திற்கு நான்கே நான்கு வார்டுகள்தான்!

1922 ஆம் ஆண்டு பஞ்சாயத்து போர்டின் தலைமைப்பதவி, பி. ஏ. சி. இராமசாமி ராஜாவைத் தேடி வந்தது. 1940 வரை அப்பொருமகனார்தான் பஞ்சாயத்துத் தலைவர். தலைமைப் பொறுப்பை இடையே நான்கு ஆண்டுகள் பி.ஏ.சி.ஆர். வகிக்கவில்லை. அப்போது தலைமைப் பொறுப்பை ஏற்றவர்

பி.எஸ்.கே. ஏற்கனவே கிராம முன்சீப் பொறுப்பில் இருந்து வந்ததால், பி.ஏ.சி. ஆருக்கு மக்களிடையே தனிச் செல்வாக்கு இருந்து வந்தது. பல்வேறு சமூகங்களில் அவ்வப்போது ஏற்பட்டுவிடும் சிக்கல்கள், அப்பெருந்தகையின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டு, சுமூகமான சூழ்நிலை உருவாகுமாறு, இருபக்கமும் ஏற்றுக் கொள்ளக்கூடிய தீர்வுகளால் எளிமையாக நீங்கும். மக்களிடம் 'ராஜா தலையிட்டால் அமைதி உருவாகும்' என்ற நம்பிக்கை பெருகி நின்றது. பொதுமக்கள் பி. ஏ. சி. ஆரை 'ராஜா' என்றே குறிப்பிடுவர். பஞ்சாயத்துத் தலைமை ஏற்றவுடன் ராஜாவின் ஆளுகையில் இராஜபர்ளையம் பல நலன்களைப் பெறுமென்ற நன்னம்பிக்கைப் பரவலாகப் பொது மக்களிடம் ஏற்பட்டது.

இராஜபாளையம் பஞ்சாயத்து எல்லைக்குள் பல்வேறு சமூகங்களைச் சார்ந்த குடும்பங்கள் வாழ்ந்து வந்தன.

போர் வீரர்களாகக் குடியேறிய ராஜுக்கள் கால வளர்ச்சியில் விவசாயிகளாக மாறினார்கள். சளைக்காத உழைப்பு, சிறிதும் சலியாத முயற்சி, வாழ்வில் ஒழுக்கக் கட்டுப்பாடு ஆகிய குணப் பண்புகள் அமைந்த ராஜுக்கள் சமூகம், பஞ்சாயத்தில் செல்வாக்குப் பெற்ற சமூகமாக விளங்கியது.

தேசீய எழுச்சி நாட்டில் திரண்டு வருகிற நேரத்தில், காந்தியடிகளின் கருத்துக்கள் நாடெங்கும் பரவி வருகிற வேளையில், சுதேசிக் கைத்தறித் தொழிலுக்கு ஊக்கமும், உற்சாகமும் அளிக்கப் பெற்றன. கதர் உற்பத்தி, கைத்தறி ஜவுளித் தயாரிப்பில் ஈடுபட்டிருந்த சாலியர் சமூகம், பஞ்சாயத்தின் சில பகுதிகளில் வாழ்ந்து வந்தனர்.

வடக்குத் தெற்கு சம்மந்தபுரத்திலும், சர்வ சமுத்திர அக்ரகாரத்திலும், கோதண்ட ராமசாமி கோயில் பகுதிகளிலும், பிராமண சமூகத்தைச் சார்ந்த பெருமக்கள் வாழ்ந்து வந்தனர்.

தமிழ்நாட்டின் வீர குல மரபினர்களான மறவர் சமூகம், விவசாய வேலைகளிலும், கட்டிட நிர்மாணப் பணிகளிலும்,

வர்த்தகத்திலும் ஈடுபட்டு நகரின் புதிய உருவாக்கத்திற்கு துணை புரிந்து வந்தனர்.

வளர்ந்து வரும் ஊரின் வளமறிந்த நாடார் சமூகம், வணிகத்தில் மிகுந்த நாட்டம் செலுத்தி வந்தது.

பல்வேறு இனப் பிரிவுகள் கொண்ட ஹரிஜன வகுப்பார், முழுக்க முழுக்க விவசாய வேலைகளில் ஈடுபட்டுக் கொண்டு, பஞ்சாயத்தின் பல்வேறு பகுதிகளில் நிறைந்து வாழ்ந்து வந்தனர்.

வணிக வைசியர்கள், புளியங்குடியிலிருந்து குடியேறிய செட்டியார் சமூகத்தினர், நாயுடு சமூகத்தினர், தெலுங்கு செட்டியார்கள், தெலுங்குக் குலாலர்கள், இல்லத்து பிள்ளைமார், யாதவ சமூகத்தினர் ஆகிய பல சமூகங்களைக் கொண்டிருந்த இராஜபாளையம் பஞ்சாயத்து, கணிசமான அளவில் முகமதியர்களையும், ஓரளவு கிறித்தவர்களையும் பெற்றிருந்தது.

பல்வேறு சமூகங்களைக் கொண்ட இராஜபாளையம் பஞ்சாயத்திற்கு 8.8.1922 இல் பி. ஏ. சி. ஆர். தலைவர் ஆனார்.

தங்கள் சமூகங்களின் மகிழ்ச்சியை, நம்பிக்கையைத் தெரிவிப் பதற்காகக் கூட்டம் கூட்டமாக பி.ஏ.சி.ஆர். வீடு தேடிச் சென்று மாலைகள் அணிவித்தனர்! கற்கண்டு அளித்தனர்! கனிகளை வழங்கினர்! இந்துக்கள், முகமதியர், கிறிஸ்தவர்கள் என எந்த வேறு பாடுமின்றி, அப்பெருகனாரின் வீடு தேடிச் சென்று, பாராட்டை வாழ்த்தைத் தெரிவித்துப் பரவசம் கொண்டனர்.

பஞ்சாயத்தில் வாழ்ந்து வந்த அனைத்துச் சமூகங்களும், தம்மிடம் கொண்டுள்ள நம்பிக்கையை எண்ணிப் பிரமித்தார் பி.ஏ.சி.ஆர். 'ராஜா! ராஜா! ' என மக்கள், மதிப்போடும், மனமார்ந்த அன்போடும் தம்மிடம் கொண்டுள்ள நேய உணர்வை நினைந்து, நெகிழ்ந்தாலும், மகிழ்ந்தாலும், அப் பெருமகனாரின் நெஞ்சுள் ஓர் அச்சம் உருவானது! மக்களின் இத்தகைய பரிபூர்ண நம்பிக்கைக்குப் பாத்திரமாகப் பணியாற்ற வேண்டுமே? எதிர் பார்ப்புகளை எவ்விதக் குறையுமின்றிச் செய்து கொடுக்க வேண்டுமே ? பஞ்சாயத்தை மக்களுக்குப் பயனளிக்கும் வகையில் வடிவமைக்க வேண்டுமே? இத்தகைய எண்ணங்களால் அப் பெருந்தகையின் பேருள்ளத்தில் ஓர் அச்ச அதிர்வு உண்டானது. என்றாலும், தமது இதய தெய்மாகிய திருச்செந்தூர் முருகப் பெருமானின் திருவருட் துணை கொண்டு, மக்களின்

எதிர்பார்ப்புகளை ஈடேற்றிவிட இயலுமென்ற ஓர் உறுதியும் உள்ளத்துள் கிளைத்தது!.

பஞ்சாயத்து போர்டின் வருட வருமானம், அப்போது வெறும் நூற்றுக் கணக்கில்தான் வந்து கொண்டிருந்தது. இத்தகைய சிறிய தொகையை அடிப்படையாகக் கொண்டு சாலை, சுகாதாரம், வீதி விளக்கு, குடி தண்ணீர் முதலிய மக்களின் ஆதாரத் தேவைகளை எப்படி நிறைவு செய்ய முடியும்? முதலில் பஞ்சாயத்தின் நிதி நிலையைப் பெருக்கியாக வேண்டுமென்ற முனைப்பில், 'இயற்றல்' (Sources) எனச் சொல்லக் கூடிய வழிகளைக் கண்டறிந்தார் தலைவர் பி.ஏ.சி.ஆர். அதன்பின் அதனை எப்படி வசூலிக்கலாமென 'ஈட்டல்' முறையைத் திட்டமிட்டார்; வருகின்ற வருமானத்தைக் காத்து, காத்ததை 'இன்ன இன்ன வசதிகளுக்கு இவ்வளவு' என வகுத்துச் செலவு வகைகளைத் தீர்மானித்து, பஞ்சாயத்தின் இயக்க நடைமுறையை நெறிப்படுத்தினார்.

மிக நெருங்கிய உறவினர்களில், சில வயதான பெண்கள் 'இராமசாமி' எனப்பெயர் சொல்லி அழைக்ககூடாதவர்கள், அவரை 'முத்தையா' என வாஞ்சையோடு அழைப்பது வழக்கம்.

ஆம்; இராஜபாளையம் நகருக்குப் புகழ் சேர்க்க, தலைமைப் பண்பில் ஒரு 'முத்து ஐயா'வாக உருவாகிக் கொண்டிருந்தார் பி.ஏ.சி.ஆர்!

* * *

# 6

## சங்க அமைப்பும் சாவடிப் பொறுப்பும்

இராஜபாளையத்துச் சரித்திர புத்தகத்தில், தமிழ்ப் பண்டிதர் ஆர். சுப்ப ராஜா ஒரு தனி அத்தியாயம் ! ஆம், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், கல்வியறிவையும், தமிழுணர் வையும், பொதுநல நோக்கையும் இளைஞர்களின் மனங்களில் விதைத்து, விளைச்சலைக் கண்டு மகிழ்ந்த வித்தகப் பெருமகனார் அவர். தமிழ் இலக்கியங்களைத் தாகத்தோடு கற்றறிந்த சுப்ப ராஜா, தமிழ்மொழியின் இலக்கியச் சிறப்பை உணர்ந்து, தமிழ் அபிமானியாகவே தம்மை வரித்துக் கொண்டவர். 'தமிழ்ப் பண்டிதர்' எனக் குறிப்பிட்டால், அந்தக் காலத்தில் 'சுப்ப ராஜா' என மக்கள் புரிந்து கொள்வர். அவர் பணியாற்றிய பள்ளியை, அனைவரும் 'தமிழ்ப் பண்டிதர் சுப்பராஜா ஆரம்பப் பாடசாலை' என்றே அழைப்பார்கள்.

பி.ஏ.சி.ஆர், பி.எஸ்.கே. ஆகிய பெருமக்களுக்கு, செல்வங்களிலெல்லாம் சிறந்த செல்வமாகக் கருதப் பெறுவதும், 'விழுச்செல்வம்' எனப் போற்றப் பெறுவதுமாகிய கல்விச் செல்வத்தை ஈட்டுதற்கு 'முதல்' அளித்த மூல ஆசிரியர் அவர் ! கண்கள் என எண்ணப் பெறும் 'எண்ணும் எழுத்தும்' கசடறக் கற்கக் கை பிடித்து, அப் பெருமக்களுக்கு 'வித்யாரம்பம்' செய்வித்த முதல் குரு !

சுப்பராஜா, 1916 ஆம் ஆண்டு இளைஞர்களையெல்லாம் அழைத்து, தமிழாற்றலையும், அறிவாற்றலையும், சொல்லாற் றலையும் வளர்த்துக் கொள்வதற்கென, ஓர் அமைப்பை உருவாக்கம் செய்தார். அந்த அமைப்பு 'மீனாட்சி சகாய விவேக வித்தியானந்த சபை' என அழைக்கப் பெற்றது. அமைப்பில் மிகுந்த ஆர்வம் கொண்ட இளைஞர்களுள், பி.எஸ்.கே.யும் ஒருவர். ஞாயிறு தோறும் சபை நிகழ்ச்சி நடைபெறும். சுப்ப ராஜா

பாடசாலையில் தான், தமிழில் சொற்பொழிவாற்றும் அறிஞர் பலர் நிகழ்ச்சியில் பங்கேற்பார்கள். முதலில் இளைஞர்கள் மட்டுமே பங்கேற்ற சபை நிகழ்ச்சி, போகப் போக பெரியவர்களும் கலந்து கொள்ளும் அளவு நிகழ்ச்சிகள் பிரபலமாயின. பி.எஸ்.கே. தான் சபையின் இதயம்போல் விளங்கினார்.

1918 ஆம் ஆண்டின் பிற்பகுதி முதல், மீனாட்சி சகாய விவேக வித்தியானந்த சபை நடத்தும் நிகழ்ச்சிகளுக்குத் தவறாது பி.ஏ.சி.ஆர். வருகை தருவது வழக்கமாக இருந்தது. பி.எஸ்.கே. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் வரவேற்புரை சொல்வதைப் பழக்கமாக்கிக் கொண்டிருந்தார். இத்தகைய பயிற்சியே, பின்னால் பி.எஸ்.கே. சென்னைப் பிரதமராக வீற்றிருந்தபோது, தமிழில் உரையாற்றக்கூடிய தைரியத்தையும், திறத்தையும் அளித்தனவென்று அப் பெருமகனார் குறிப்பிட்டு எழுதி உள்ளார். பெரும்பான்மையான நிகழ்ச்சிகளுக்குத் தலைமை ஏற்பவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாதான்.

மீனாட்சி சகாய விவேக வித்தியானந்த சபை, இராஜபாளையத்தில் புகழ்பெற்று வளர்ந்து வருகின்றபோது, அன்னிபெசண்ட் அம்மையாரின் கொள்கைகளைக் கொண்ட 'சொர்ணமணி மாலைச் சங்கம்' என்றோர் அமைப்பை 1920 ஆம் ஆண்டு இராஜபாளையத்தில் கோபால் ஐயங்கார் என்றொரு தேசபக்தர் தொடங்கினார். இந்த அமைப்பின் இயக்கத்திற்கும், நிகழ்ச்சிகளுக்கும் ஆதரவும், உதவியும் வழங்கி வந்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டு, ஆந்திராவிலிருந்து வந்த ராஜுக்கள் சமூகம், காலம் செல்லச் செல்ல, பேசுவதற்கு மட்டுமே தெலுங்கைப் பயன்படுத்தி வந்தார்கள். வரி வடிவத்தை வாசிக்கவோ, எழுதவோ இயலாத நிலை, வளர்ந்து கொண்டே இருந்தது. கல்வியறிவைத் தமிழ் வழியேதான் பெற்றுக் கொண்டிருந்தார்கள். இத்தகைய போக்கை மாற்றி அமைக்க

வேண்டுமெனப் பலரும் பி.ஏ.சி.ஆரிடம் கூறிக்கொண்டே இருந்தனர். அப் பெருமகனாரும், தமது சமூக மக்களிடம் தாய்மொழியான தெலுங்கைத் தளரவிடக் கூடாதென எண்ணிப் பார்த்து, அதற்கொரு திட்டமிட்டார்.

தெலுங்குமொழியில் தேர்ச்சிபெற்ற இரு ஆசிரியர்களை ஆந்திராவிலிருந்து வரவழைத்தார். அவர்கள் தெலுங்கைத் தெளிவுறக் கற்றுக் கொடுப்பதற்கென ஒரு சங்கத்தை அமைத்தார் பி.ஏ.சி.ஆர். "ஆந்திர பாஷா அபிவிர்த்தினி சங்கம்" என அந்த அமைப்பு அழைக்கப் பெற்றது. சங்கத்தின் காரியதரிசியாக பி.எஸ். சின்ன வெங்கட்ட ராஜாவைப் பொறுப்பேற்கச் செய்து தாமே சங்கத் தலைவரானார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

ஆந்திர பாஷா அபிவிர்த்தினி சங்கத்தின் வாயிலாக, முறையாகத் தெலுங்கை கற்றுக் கொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த பி.ஏ.சி.ஆரை, ராஜுக்கள் சமூகம் பெரிதும் பாராட்டிப் போற்றியது. ஆண்கள் கற்றுக் கொள்ளும் நேரம், பெண்கள் கற்றுக்கொள்ளும் நேரம் எனப் பயிலும் நேரத்தைப் பகுத்து, விரும்புவோர் அனைவருக்கும் வாய்ப்பளித்து, சொல்லப் போனால் சிலரை விரும்ப வைத்துத் தெலுங்கு மொழிக் கல்வியின் வளர்ச்சிக்கு பி.ஏ.சி.ஆர். ஆற்றிய பணியை, ராஜுக்கள் சமூகப் பெரியவர்கள் பலர் பாராட்டினர்.

தமிழ்நாட்டில் கிராம ஆட்சி முறை புகழார்ந்தது; புராதன மானதும்கூட. அதுபோன்றே சமூகங்களின் 'கூட்டங்கள்' பழமையானவை. ஒவ்வொரு சமூகமும் தங்களுக்குள் உருவாகும் பலவிதமான சிக்கல்களை நீக்குவதற்கும், சமூக வளர்ச்சிக்கான இயக்கப் பணிகளைத் திட்டமிட்டுச் செயற்படுத்துவதற்கும் ஊர்க்கூட்டங்கள் உருவாக்கம் பெற்றுள்ளன. இந்த ஊர்க் கூட்ட அமைப்பு நீதிமன்றங்களாகவும், பஞ்சாயத்துச் சபைகளாகவும் இயங்கி வருகின்றன. இவைகளுக்கென சமூகங்கள் அலுவலகக் கட்டிடங்களை நிர்மாணிக்கின்றன. அவைகள் 'சாவடிகள்' என

அழைக்கப் பெறுவதை அறிவோம். ராஜுக்கள் சமூகத்திற்கு 'பழையபாளையம்', 'சக்க ராஜா கோட்டை', 'சிங்க ராஜா கோட்டை', 'திருவனந்தபுரம்' என நான்கு பொதுச் சாவடிகள் உள்ளன. கட்டுப்பாடும், ஒழுக்க நெறியும் கொண்ட ராஜுக்கள், தங்கள் சாவடிகளில் தீர்மானிக்கப் பெறும் முடிவுகளுக்கு உரிய மதிப்பும், நடைமுறைப் படுத்துவதில் சிரத்தையும் கொண்டவர்கள். சாவடிகளுக்கு தலைமை ஏற்போர் சமூகச் செல்வாக்குக் கொண்ட சான்றோர்களே. அத்தகை சான்றோர்களையே சாவடித் தலைமை ஏற்கச் செய்வார்கள்.

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவிற்கு 14.8.1928 இல் புதுப்பாளையம் சக்க ராஜாக்கோட்டைச் சாவடித் தலைவராகப் பொறுப்பளித்து மகிழ்ந்தது ராஜூக்கள் சமூகம்.



திருத்தி அமைக்கப் பெற்ற - சக்க ராஜாக் கோட்டைச் சாவடி - பி.ஏ.சி. ராமசாமி ராஜா கல்யாண மண்டபம்

# 7.

## கூட்டுறவு இயக்கமும் குடும்பத்திற்கோர் இல்லமும்

" யாவரும் கேளிர்! "

'யாவரும்' என்றால் - உலகத்தின் அனைத்து நாடுகளிலும் வாழ்ந்து வருகின்ற மக்கள் எனப் பொருள்தரும். 'கேளிர்' என்றால் - சுற்ற த்தார்; உறவினர்கள், 'மனிதர் அனைவரும் உறவினர்களே' என்பது தான் வாசகத்தின் கருத்து.

ராக்ஃபெல்லர் ஆனாலும் ராப்பிச்சைக்காரன் ஆனாலும் மானுடரே அல்லவா?

எந்த மூலையில் வாழ்ந்தாலும், எத்தகைய தகுதியில் வாழ்ந்தாலும் மனிதர் யாவரும் உறவினர்களேயென, இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னே, கணியன் பூங்குன்றன் எனும் தமிழ்ப் புலவன் சிந்தித்தான்.

தெலுங்கு மொழிக் கவிஞராகிய தெளிந்த ஞானி வேமனா. ஞானச் சித்தன் வேமனா, ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்தவன்.

> "உலகத்திலுள்ள மானுடர் அனைவருக்கும் ஒரே வட்டிலில் உணவு பரிமாறி, உறவு பெருக, உண்பதைப் பார்த்து மகிழ வேண்டும். அப்போது பேதங்கள் மறையும்; பேதமைகள் ஒழியும். அனைவரும் ஒரே தாயின் வயிற்றுப் பிள்ளைகள் என்ற உணர்வு சத்தியமாகும்" என்றான்

அந்த ஞானி.

உலகம் முழுவதும் வாழ்ந்த அறிவு கொண்ட புலமையினரும், அருள் கொண்ட ஞானியரும் வழங்கிய இத்தகைய கருத்துகள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஒரு வடிவம் பெற்று, ஓர் இயக்கமாக உருவெடுத்தன.

மேலை நாட்டில், ஆறேழு அன்பர்கள் கூடி, 'எனக்கு நீ', 'உனக்கு நான்', 'எல்லோருக்கும் நாம்' என்ற உணர்வுகள் மேலோங்க, 'யாருக்கும் யாரும் தாழ்ந்தவருமல்ல, உயர்ந்தவருமல்ல' என்ற நோக்கத்தைக் கொண்டு ஓர் இயக்கத்தை உருவாக்கினார்கள். அந்த இயக்கம் உலகெங்கும் பற்றிப் படர்ந்தது! 'மானுடர் அனைவரும் உறவினரே' 'உயர்வு தாழ்வு எனும் பேதங்கள் இல்லை' என்ற எண்ணத்தை ஆதார சுருதியாகக் கொண்ட அந்த இயக்கம் - கூட்டுறவு (Co-operation) எனப் பெயர் பெற்றது.

கூட்டுறவு இயக்கம் (Co-operative movement) கொஞ்சம், கொஞ்சமாக இருபதாம் நூற்றாண்டின் உதய காலத்தில் இந்தியாவில் கிளைக்கத் தொடங்கியது. ஆங்கிலேய ஆட்சியின் வல்லமை வெப்பத்திற்குக் குடை தரும் நிழலாகக் கூட்டுறவு இயக்கம் அமையுமெனக் கருதினார்கள் தேச பக்தர்கள். அத்துடன் மக்களை ஒன்றுபடுத்தும் கருவியாகவும், ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளும் மனப்பாங்கை உருவாக்கும் தூண்டு கோலாகவும் கூட்டுறவு இயக்கம் கால்கொள்ளும் எனக் கருதினர். தமிழ்நாட்டில் அங்கொன்றும், இங்கொன்றுமாகக் கூட்டுறவு நிறுவனங்கள் தோன்றத் தொடங்கிய நேரத்தில், இராஜபாளையத்திலும் அந்த இயக்கம் வேர் பிடிக்க வேண்டு மென விரும்பினார் தேச பக்தர் பி.எஸ்.குமாரசாமி ராஜா.

பி.எஸ்.கே. தமது விருப்பத்தைத் தெரிவித்தபோது பி.ஏ.சி.ஆர். சொன்னார்: "செய்ய வேண்டியதுதான்; பொதுவா நம்ம ஊர், விவசாயத்தை நம்பியது. அதனாலே விவசாயிகளுக்கு உதவுகிறமாதிரி செய்யனும்"

"நானும் அப்படித்தான் திட்டம் போட்டிருக்கேன். விவசாயி களை முதல்லே அங்கத்தினரா சேர்க்கனும்" என்றார் பி.எஸ்.கே.

"அதொன்னும் சிரமமில்லே; நம்ம சாவடிகளிலே சொல்லச் சொல்வோம்" என்றார் பி.ஏ.சி.ஆர்.

கூட்டுறவு சொசைட்டி ஒன்று தொடங்க இருப்பதை, பெரும்பான்மையான விவசாயிகள் அறிந்து மகிழ்ந்தனர்; வரவேற்கவும் செய்தனர். ஒரு சிலர் 'அதென்ன ஆயிரம் கொடுத்தவனும், பத்து ரூபாய் கொடுத்தவனும் ஒரே மாதிரி அங்கத்தினர்? அஞ்சு விரலும் ஒரே மாதிரி இருக்க முடியுமா?' எனப் பேசவும், கேட்கவும் செய்தனர். என்றாலும் 'பி.எஸ்.கே.யும், பி.ஏ.சி.ஆரும் சொல்றதினாலே, அதிலே சௌகரியம் கிடைக்கும்' என்ற நம்பிக்கையில் அங்கத்தினர்களாகவும் தங்களைப் பதிவு செய்து கொண்டனர்.

வைதீக எண்ணங்கள் கொண்டவரும், செல்வந்தரும், தமக்கெனத் தனி மரியாதை மதிப்பை எதிர்பார்ப்பவருமான வயது முதிர்ந்த ஓர் உறவினர் இராமசாமி ராஜாவைச் சந்தித்து, "என்னப்பா இது? கோவாபரேடிவ் கீவாபரேடிவ்னு இருக்கிற ஒழுங்கு முறைகளை கெடுத்துப்பிடாதீங்க! உயர்ந்தவன், தாழ்ந்தவன் ஒன்றுமில்லாமே போயிடும். இதை எதுக்காக இங்கே கொண்டு வரணும்?" எனச் சற்று கடுமையாகவே கேட்டார்.

பி.ஏ.சி.ஆர். கொஞ்ச நேரம் வாய்விட்டுச் சிரித்தார். "பாவா! ஆண்டவன் படைப்பிலே தாழ்ந்தவன், உயர்ந்தவன் என்றெல் லாம் இருக்க முடியுமா? எல்லாரும் ஒரே மாதிரியாத்தான் பிறக்கிறாங்க. குணத்தாலே சிலர் உயர்ந்திட்ராங்க. அவ்வளவு தான். கோவாபரேடிவ் சொஸைட்டி எதுக்காக? ஒருத்தருக்கு ஒருத்தர் உதவி செய்வதற்காகத்தான்! எல்லாரும் அன்பா, உறவினர்களா இருக்கத்தான்! நீங்க எனக்கு உதவியா இருக் கணும்; நான் உங்களுக்கு உதவியா இருக்கணும்! அதுதான் அடிப்படை பாவா! ஒரு கதை சொல்றேன் கேளுங்க..." என ஒரு சுவாரஸ்யமான கதையைச் சொல்லத் தொடங்கினார் பி.ஏ.சி.ஆர்.

ஒரே நேரத்தில் சொர்க்கத்திலும், நரகத்திலும் ஒரு விருந்து நடந்தது. விருந்தென்றால் தடபுடலான விருந்து. பல விதமான உணவு பரிமாறப்பட்டன. அயிட்டங்கள் அத்தனையும் ஒன்று போலத்தான். இடம்தான் வித்தியாசம். சொர்க்கத்திலும், நரகத்திலும் விருந்துக்கு வந்து அமர்ந்தார்கள். கைகளில் முழங்கையை மடக்க முடியாதபடி ஓர் இரும்புப் பட்டையைக் கட்டிவிட்டார்கள் அனைவருக்கும் ! நரகத்து விருந்தினர், கைகளை மடக்க முடியாமல், உணவு வகைகளைப் பார்த்து ஆசை கொள்வதும், வாயில் உணவை எடுத்து வைக்க இயலாமல் தவிப்பதுமாக இருந்தனர். அயிட்டங்கள் அப்படியே பரிமாறிய படியே இருந்தன. உணவை உண்டால்தானே காலியாகும்? உண்ணத்தான் முடியவில்லையே? கையை மடக்கி உணவைத் தொட முடியவில்லையே ?

சொர்க்கத்து விருந்தினரோ, கொஞ்ச நேரத்தில் உணவு வகைகளை உண்டு முடித்து விட்டனர்.

அதெப்படி?

முழங்கையை மடக்க இயலவில்லையெனில், தனக்குத் தானே உணவை வாயில் எடுத்த வைத்துக்கொள்ள முடியாது. அவ்வளவுதானே? எதிரில் அமர்ந்திருப்பவரின் வாயில் எடுத்து வைக்கலாமே? எனவே சொர்க்கத்தில் உள்ளவர்கள் இவர் அவருக்கு ஊட்டினார்; அவர் இவருக்கு ஊட்டினார் ! திருப்தியாக எல்லோரும் உண்டு முடித்தனர்!.

நரகத்தில் உள்ளவன் 'தனக்கு தனக்கு' என முயன்றான், ஒருவனும் உண்ணவில்லை!.

சொர்க்கத்திலே 'பிறருக்கு' என்ற 'டெக்னிக்' கையாளப்பட்டதால், அனைவரும் உண்டு மகிழும் நிலை ஏற்பட்டது.

கதையை முடித்த பி.ஏ.சி.ஆர். "இந்த கோவாபரேடிவ் சொசைட்டியில் சொர்க்கத்தில் கையாண்ட 'வாழ வைத்து

வாழ்வது' என்ற டெக்னிக் பின்பற்றப்படுவதால், இங்கே உயர்வு தாழ்வுக்கு இடமில்லை'' என்றார்.

கேட்டவர் ''அது சரிதான்'' எனச் சொல்லிவிட்டு எழுந்து போய்விட்டார்.

'பூபதி ராஜு கூட்டுறவு நாணய வங்கி' தொடங்குவதற்கான ஆயத்த பொதுக்குழு 24.4.1924-ல் பி.ஏ.சி. இராமசாமி ராஜா தலைமையில் நடைபெற்றது. அதன் உருவாக்கத்திற்கும், வளர்ச்சிக்கும் மிகுந்த ஆர்வத்துடன் உதவி வந்தார் பி.ஏ.சி.ஆர். நகரின் மத்தியில் கூட்டுறவு வங்கியின் கட்டிடம் அமைய



பூபதி ராஜு கூட்டுறவு நாணய வங்கி

வேண்டுமென்ற நோக்கத்தில், தமக்குச் சொந்தமான காலி இடத்தை நன்கொடையாக அளித்தார்.

இராஜபாளையம் பகுதி மக்கள் அனைவரும் மகிழ்ந்து பெருமிதம் கொள்ளுமாறு, பிரகாசம் அமைச்சரவையில் பி.எஸ்.கே, விவசாய அமைச்சராகப் பொறுப்பேற்றார். விவசாய அமைச்சராக இராஜபாளையம் வருகை தந்த தமது சகோதரர்

பி.எஸ்.கே.யை, பி.ஏ.சி.ஆர், நகரப் பிரமுகர்களுடன் குதூகலமாக வரவேற்று மகிழ்ந்தார்.



விவசாய அமைச்சராக பி.எஸ்.கே. இராஜபாளையம் வருகை -புரிந்தபோது நகரப் பிரமுகர்களுடன் பெருந்தகை தமது சகோதரரை வரவேற்று மகிழ்ந்தார்

இராஜபாளையத்தில் நவீன வசதிகள் கொண்ட குடியிருப்புகள் இல்லாத குறையை நீக்க வேண்டுமென எண்ணினார் பி.ஏ.சி.ஆர். தமது சகோதரர் பி.எஸ்.கே.யுடன் ஆலோசித்து, இராஜபாளையம் கூட்டுறவு வீடு கட்டும் சங்கம் ஒன்றை 1948 ஆம் ஆண்டு நிறுவி, சங்கத்தலைவராக பி.எஸ்.கே.யைப் பொறுப்பேற்கச் செய்தார் ராஜா. 35 ஏக்கர் நிலத்தை நகரின் கிழக்குப் பகுதியில் வாங்கி, 200 வீடுகளை உருவாக்கி அளித்தது கூட்டுறவு வீடு கட்டும் சங்கம். சங்கத்தின் தலைவராக 1950 ஆம் ஆண்டில் பி.ஏ.சி.ஆர். பொறுப்பேற்று, தமது சகோதரரைக் கௌரவப்படுத்தும் எண்ணத்தில், உருவாக்கம் பெற்ற வீடுகள் இருந்த பகுதிக்கு 'குமாரசாமி ராஜா நகர்' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார்.



பி.எஸ்.கே. நகர் அடிக்கல் நாட்டுவிழா
கவர்னர் பவநகர் மகாராஜாவுடன் பி.ஏ.சி.ஆர்

பாரதிநகர் தொழிலாளர் வீடு கட்டும் கூட்டுறவுச் சங்கத்தின் ஆயத்த கூட்டத்திற்குத் தலைமை ஏற்ற பி.ஏ.சி.ஆர். அதன் உருவாக்கத்திற்கும் உற்சாகமளித்து உதவினார்.

**ச**க்க ராஜா வழிவந்த தாயாதிகள் கூட்டுக் குடும்பமாகவே இருந்து வந்தனர். ஆனாலும் குடும்ப உறுப்பினர்கள் பெருகப் பெருக, தனிக்குடும்பங்களாகப் பிரிந்து, சுமூகமான சூழலில் வாழ்வது வளர்ச்சிக்கும், அமைதியான உணர்ச்சிக்கும் வழி வகுக்குமெனக் கருதி, 1925 ஆம் ஆண்டு 'பிரிவினை' செய்து கொண்டனர்.

பிரிவினை செய்து கொண்ட பங்காளிகள், தனித் தனிக் குடும்பங்களாக வாழ்வதற்கு, தங்களுக்கு உரிமையான காலி இடங்களில் புதிய வீடுகளை கட்டிக் கொண்டனர்.

இராமசாமி ராஜா, தென்காசிச் சாலையில் தமது வீட்டை நிர்மாணிக்கத் திட்டமிட்டார். கட்டுமானத் தொழிலாளர்களிடம், தமது இல்லத்தை எப்படி அமைக்க வேண்டுமென மனத்துள்




பி.எஸ்.கே. நகர் திறப்பு விழா
கவர்னர் ஸ்ரீ ஸ்ரீ பிரகாசாவுடன் பி.ஏ.சி.ஆர்

எண்ணியிருந்தாரோ, அதனை விளக்கினார். ஒவ்வொரு நாளும் வீட்டு நிர்மாணப் பணி நடக்கும் போது, உடனிருந்து வழிகாட்டி, இல்லத்தை உருவாக்கினார் அந்தக் காலத்தில் கட்டட உருவாக்கத்திற்கெனப் பட்டப்படிப்பில் தேர்ச்சி பெற்றவர் களோ, கட்டடத்தை உருவாக்கிக் கொடுக்கும் ஒப்பந்தக் காரர்களோ இருக்கவில்லை. வீடு கட்டுகிற ஒவ்வொரு வரும் தங்களுக்குத் தோன்றியவாறும், தங்கள் வசதிக்கு ஏற்றவாறும் கட்டடங்களை நிர்மாணித்துக் கொள்வதுதான் நடைமுறை வழக்கம்.

பி.ஏ.சி.ஆர். இல்லத்தை உருவாக்கும் எண்ணத்தில், பல நாட்கள் ஆழ்ந்து சிந்தித்து, எதிர்கால நிலைகளையெல்லாம் தீர்க்க

தரிசனமாக நினைந்து பார்த்து, தமது வீட்டின் அக வசதி, புறத் தோற்றம் ஆகியவைகளை உறுதி செய்து கொண்ட பின்னர்தான், கட்டுமானப் பணியாளர்களிடம் தம் கருத்தை வெளியிட்டார். ராஜாவின் கருத்துக்கேற்ப, கட்டிடக்கலைஞர்கள் கட்டிடத்தின் வடிவமைப்பை நாள் தோறும் சிரத்தையுடன் முன்னின்று உருவாக்கிக் கொண்டிருந்தனர். கட்டிடம் உருவாகிக் கொண்டிருக்கும் போதே, அதன் உருவாக்கத்தைக் கண்ட ஊர் மக்கள், பெரிதும் வியந்து போயினர். 'அந்தக் காலத்து அரண்மனை போல, இந்தக்காலத்தில் ராஜா இராஜபாளையத் தில் ஒரு மாளிகையைக் கட்டி வருகின்றார் ' எனப் பரவலாக மக்கள் பேசிக் கொண்டிருந்தனர்.

கட்டிடம் நிறைவு பெற்றுக் கம்பீரமான தோற்றப் பொலிவுடன் நின்றபோது, ஊருக்கு அது ஒரு முதல் மாதிரியாகவும், முன் மாதிரியாகவும் விளங்கியது. பல்வேறு சமூகங்களைச் சார்ந்த மக்கள், நாள்தோறும் வீட்டை வந்து பார்த்து வியந்து நின்றனர்! சமூகப் பெரியவர்கள் ராஜாவை நேரே சந்தித்துப் பாராட்டவும் செய்தனர்.

கம்பீரமான அந்தக் கவின்மிகு மாளிகைக்கு ஒரு பெயர் சூட்ட வேண்டுமெனக் கருதினார் அப் பெருமகனார்.

ராமேஸ்வரம் இராமநாத சுவாமியின் திருவருளால்தான் அவர் பிறந்ததாகப் பெற்றோர் சொல்லக் கேள்விப்பட்ட காரணத்தால், தமது பிறந்தநாள் தோறும் ராமேஸ்வரம் சென்று வழிபடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார் அப் பெருந்தகை.

ஞானச்செல்வர் விவேகானந்தரும், சேதுபதி மன்னர் பாஸ்கர சேதுபதியும் ராமேஸ்வரத்தில் ஒரு காலத்தில் சந்தித்து உரையாடி மகிழ்ந்த அருளகமாக விளங்கும் ராமமந்திரத்திற்கு, ராமேஸ்வரம் செல்லும்போதெல்லாம் பி.ஏ.சி.ஆர். செல்வதுண்டு. தமது இல்லத்திலும் அந்த ஞானச்செல்வர்கள் போன்ற பிரஜைகள் தோன்றிப்புகழ் சேர்க்க வேண்டுமென்ற வேட்கையாலும், விவேகானந்தர், பாஸ்கர சேதுபதி போன்ற அருளாளர்களும்,

புரவலர்களும் தமது மாளிகைக்கு வருகை தர வேண்டுமென்ற விருப்பத்தாலும் 'ராம மந்திரம்' என்ற திருப்பெயரைச் சூட்டிப் பெருமகிழ்ச்சி கொண்டார்.

அப் பெருமகனாரின் சிந்தையில் நின்ற விந்தைக்குரிய வீட்டின் வடிவம் (mental picture) கம்பீரமாய் வெளிப்பட்டு, 1928 ஆம் ஆண்டு 'ராம மந்திரம்' ஆகிக் காண்போரின் கருத்தைக் கவர்ந்தது! "இன்றும் அதன் எடுப்பான தோற்றத்தையும், எழிலார்ந்த அமைப்பையும் பார்க்கும்போதெல்லாம் என் தந்தையாரின் தெளிவான தீர்க்க தரிசனத்தின் அருமையை எண்ணிப் பார்த்துப் பெருமை கொள்வதும் உண்டு, பரவசமடைவதும் உண்டு" என மகிழ்ந்து கூறுகின்றார் - பி.ஏ.சி.ஆரின் பெரும் புகழ் காத்து வரும் ஒரே புதல்வரான பி.ஆர். ராம சுப்பிரமணிய ராஜா !

உண்மை தான்! 'ராம மந்திரம்' மாளிகையைக் கட்டி முடிக்கின்ற நேரத்தில் அப் பெருமகனார் - அவரே சொல்லிக் கொள்வதைப் போல - ஒரு சிறு வணிகர்தான் ! (தம்மைப்பற்றி அடக்க உணர்வுடன் அறிமுகம் செய்து கொள்கிறபோது - 'நான் என்ன ஒரு சின்ன வியாபாரி தான்! ' எனச் சொல்லிக் கொள்வது பி.ஏ.சி.ஆர். வழக்கம்). சிறு வணிகராக வாழ்ந்திருந்தபோதே, தாமும், தம் மரபினரும் இந்தியப் பொருளாதாரத்தை மேம்படுத்தக் கூடிய, பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்பளித்து அவர்களின் வாழ்க்கையில் நம்பிக்கை ஊட்டக்கூடிய வல்லமையும், வாழ்வுத் தகுதியும் கொண்டு வாழப் போகிறோமென எதிர்காலத்தை இதயத்துள் தரிசித்து, அந்தத் தகுதிக்கும், தன்மைக்கும் ஏற்ற வகையில் அன்றே ஏற்றமிகு எழில் மாளிகையை எழுப்பினார் என்றால், அப் பெருந்தைகயின் தெய்வானுகூலம் பெற்ற தீர்க்க தரிசனத்தை திகைப்பும், வியப்பும் கொள்ள, நினைந்து பார்க்கும் நெஞ்சம் பெருமிதம் கொள்வதும், பரவசமடைவதும் இயல்புதானே?



'குடும்பத்திற்கொரு இல்லம் - ராமமந்திரம்'

விவசாயக் குடும்பத்தின் தோன்றலாகப் பிறந்த இராமசாமி ராஜா விவசாயத் தொழிலில் அவ்வளவாக ஊக்கமும், உற்சாகமும் கொள்ளவில்லை. குடும்பப் பிரிவினைக்குப் பின், தமது பங்கில் வந்த நிலங்களை, விளைவிக்கும் பூமிகளாக வேலை ஆட்களைக் கொண்டு வெள்ளாண்மை செய்துவரினும், வணிகத்துறையில் தான் ராஜாவின் ஆர்வமும் விருப்பமும் உருவாகி மலர்ச்சி பெற்றன.

பலசரக்கு மளிகை, இரும்புக்கடை முதலிய வணிக நிறுவனங் களை ராஜா அமைத்தார். 1930 ஆம் ஆண்டில் தொடங்கிய பலசரக்கு நவதானிய வியாபார நிறுவனத்தில் டி.ஏ.கே. மணியழக ராஜா, எஸ். குப்புசாமி செட்டியார், எம். சங்கரலிங்கம் செட்டியார் ஆகியோர் பங்குதாரர்களாக இருந்தனர். இந்த நிறுவனம், இராஜபாளையத்திலும், போடி நாயக்கனூரிலும் இலவம் பஞ்சு வியாபாரத்தையும் மேற்கொண்டது. அதே ஆண்டிலேயே தொடங்கிய இரும்பு வணிகத்தில் ராஜாவுடன், எஸ்.எம். வெங்கட்ட ராஜா கூட்டாளியாக இருந்தார். மதுரை ஹார்வி மில் ஏஜென்ஸியில் எஸ். கந்தசாமி செட்டியாரின் சகலர்

சுந்தரம் செட்டியார் பங்காளியாக இருந்தார். இந்த ஏஜென்ஸி நிறுவனம் இராஜபாளையம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய இரண்டு ஊர்களிலும் இருந்தது. எஸ். கந்தசாமி செட்டியாரும், ஆர். மணி நாயுடுவும் ஏஜென்ஸி நிறுவனத்தில் பணியாற்றினர். ஹார்வி மில்லுக்குப் பஞ்சு விற்பனை செய்தும், ஆலையில் உற்பத்தியான நூலை கைத்தறியாளருக்கு விற்பதுமான வணிகத்தில் ஏஜென்ஸி செயற்பட்டது.

தமது சிறிய தந்தையார் பெத்தி ராஜாவின் புதல்வர் அழக ராஜாவுடன் இணைந்து, ஒரு டிரான்ஸ்போர்ட் பஸ் கம்பெனியை உருவாக்கினார் ராஜா. ஐந்து பஸ்களைக் கொண்ட அக்கம்பெனி 'ஜெயராம் மோட்டார் சர்வீஸ்' எனப்பெயர் பெற்றிருந்தது. அப்போதெல்லாம் இராஜபாளையம், 'ரயில்வே' தொடர்பைப் பெற்றிருக்கவில்லை. இராஜபாளையம்-தென்காசி, இராஜ பாளையம்-கோயில்பட்டி, இராஜபாளையம்-சாத்தூர் ஆகிய வழித்தடங்களில் ஜெயராம் மோட்டார் சர்வீஸ் ஐந்து பஸ்களும் ஓடிக்கொண்டிருந்தன. இராஜபாளையத்திற்கு 1927 ஆம் ஆண்டு ரயில்வே தொடர்பு ஏற்பட்டது. இனி பஸ் பயணம் குறைந்து விடுமெனக் கருதி, பின்னர் பஸ் கம்பெனியை ராஜா தொடர்ந்து நடத்தவில்லை.

அந்தக் காலத்தில் அச்சு இயந்திரங்களைக் கொண்ட அச்சகங்கள் அங்கொன்றும், இங்கொன்றுமாக இருந்தன. அவைகளும் குறித்த நேரத்தில் அச்சடித்து வழங்க இயலாத நிலை இருந்து வந்தது.

ஜெயராம் மோட்டார் சர்வீசுக்கு வேண்டிய டிக்கட்டுகளைத் தயார் செய்வதற்கு உண்டான சிரமம் கருதி, 'ஜெயராம் பிரஸ்' என்றோர் அச்சகத்தை தோற்றுவித்தார் ராஜா. அந்தப் பிரஸ் இப்போதும் இராஜபாளையத்தில் இயங்கி வருகிறது. பஸ் கம்பெனியின் பங்குதாரராக விளங்கிய அழக ராஜாவின் வழித்தோன்றல்கள் அதனை இப்போது நிர்வகித்து வருகின்றனர்.

சிமெண்ட் தயாரிப்புக்கு வேண்டிய மூலப்பொருள்களில் ஒன்றான 'ஜிப்சம்' திருச்சி மாவட்டம் அரியலூரில் கிடைத்தது. ஜிப்சம் கிடைக்கும் கனிமச் சுரங்கத்தை ஒரு சில காலம் பி.ஏ.சி.ஆர். நடத்தி வந்தார். இந்த அனுபவம் பின்னர் விருதுநகர் அருகே சிமெண்ட் பேராலையை நிறுவியபோது ஒருவாறு ராஜாவுக்கு பயன்பட்டது.

அயல்நாட்டிலிருந்து இயந்திரங்களை வரவழைத்து, கடைய நல்லூரில் ஸ்ரீ சுதர்சனம் டெக்ஸ்டைல்ஸை நிர்மாணம் செய்து, நூற்பாலைக்கு வேண்டிய பருத்தி நூல் நாடாவையும், கைத்தறி நெசவாளர்களுக்குக் காலண்டரிங் வேலைகளையும் ராஜா சிறிது காலம் நடத்தினார்.

மனித வாழ்க்கையில் சில தொடர்புகள் ஒளியூட்டி உயர்த்துகின்றன. சில தொடர்புகள் இருளில் அமிழ்த்தி விடுகின்றன. எல்லாத் தொடர்புகளுமே, நாடுவதால் மட்டுமே நமக்கு வாய்ப்பதில்லை, தேடுவதால் மட்டுமே நம்மிடம் வந்து அமைவதில்லை! குறிப்பாக ஒளியூட்டி உயர்த்தும் தொடர்பு "ஆகூழால் தோன்றும்" என்கிறார் திருவள்ளுவர். 'ஆகூழ்' என்றால் நல்வினை. நல்வினையால் வந்தமையும் நல்ல தொடர்பு, ஊக்கமூட்டி ஆக்கம் தருகின்றது. பெருந்தகை பி.ஏ.சி.ஆர். மதுரை ஹார்வி மில்லுடன் கொண்ட தொடர்பே 'ஆகூழ்' எனக்கூறப் படுகின்ற அரிய நல்வினையால் அமைந்ததென்றே கூற வேண்டும். ஏனெனில் அந்தத் தொடர்பே, பின்னர் 'ஆலைகளின் அரசர்' எனும் பேற்றைப் பெற்றுத் தரத்தக்க உற்றதொரு 'கரு'வை, அப் பெருமகனாரின் உள்ளத்துள் உருவாக்கம் செய்தது ! ஆலைத் தொழிலைத் தொடங்குவதற்குரிய அபிப் பிராயத்தை கிளைக்கச் செய்து, தழைக்கச் செய்தது !

'ரயில்வே' தொடர்பில்லாதிருந்த இராஜபாளையம் நகருக்கு, ரயில் வரப் போகிறதென்ற செய்தி, மக்களுக்கு இனிப்பு வழங்கி இன்பமூட்டுவதாய் இருந்தது. ஆனால் அது சம்பந்தமான 'சர்வே' நடந்த போது, கசப்பை உண்டது போல் மக்கள் முகம் சுழித்தனர், ஏக்கத்துடனும், ஏமாற்றத்துடனும் பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி.

இராமசாமி ராஜாவை, மக்கள் சந்தித்து "ரயில்வே லைன் ராஜபாளையத்திற்கே வரவில்லையாம்; சிலர் நிலங்கள் அளிக்காத காரணத்தால், சஞ்சீவி மலைக்குக் கீழ்ப்புறம் சென்று, கீழராஜகுலராமன் வழியாகப் போகப் போகிறதாம். அதற்குத் தகுந்தபடி இப்போது சர்வே நடந்து கொண்டிருக்கிறதாம் !" எனக் கூறினர். ஆங்கிலேயர் நடத்திய சௌத் இண்டியன் ரயில்வே மீது சினம் கொண்டு செப்பினர்.

அவசர அறிவிப்புக் கொடுத்துப் பஞ்சாயத்துப் போர்டைக் கூட்டி, ஒருமுகமாக, 'ராஜபாளையத்திற்கு ரயில் தொடர்பு அவசியம் வேண்டும்' என்றும் 'அதை அமைத்துத்தர அரசு உடனே தலையிட வேண்டும்' என்றும் தீர்மானம் நிறைவேறச் செய்த பி.ஏ.சி.ஆர். நகரிலுள்ள சமூகப் பெரியவர்கள் சிலரை அழைத்துக் கொண்டு மதுரையில் முகாமிட்டிருந்த ரயில் துறை கம்பெனி சார்ந்த பெரிய ஆங்கில அதிகாரியைச் சென்று சந்தித்தார்.

புகைவண்டிப் பாதைக்கான நிலங்களை உரியவர்களிடம் பெற்றுத் தருவதாக அதிகாரியிடம் உறுதி கூறி வந்தார் பி.ஏ.சி.ஆர். அப் பெருமகனாரின் செல்வாக்கும், சீரிய அணுகுமுறையும் உரிய நிலங்களை ரயில்வே துறைக்கு உரிமையாக்கின. 'சர்வே' ஆய்வு மாற்றி எடுக்கப் பெற்றது. இராஜபாளையத்திற்கு 'இருப்புப் பாதை' வந்து சேர்ந்தது. பெருந்தகையின் பெரு முயற்சி 1927 ஆம் ஆண்டில் ரயில் போக்குவரத்தை இராஜபாளையத்திற்குப் பெற்றுத்தந்தது.

பத்தொன்பதாம் வயதிலேயே தந்தை ஆனார் இராமசாமி ராஜா. அப் பெருமகனாருக்குத் தான் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போதே, பன்னிரண்டாம் வயதில் சின்னைய ராஜா செல்லக் கல்யாணம் சிறப்பாக நடத்தி விட்டாரே? திருமணமாகி ஏழாம் ஆண்டில், ராஜாவின் வாழ்க்கைத் துணைவியார் அம்மணி அம்மாள் பெண் குழந்தையைப் பெற்றெடுத்தார். குழந்தைக்கு லிங்கம்மாள் எனப் பெயரிட்டனர்.

'லிங்கம்மாள்' எனப் பெயரிட்டு அழைப்பதில் சின்னைய ராஜாவுக்கு ஆர்வமான ஆர்வம்! அத்தகைய ஆர்வம் பிறப்பதற்கு அடிப்படையாக ஒரு நிகழ்ச்சி காரணமானது ! அது ஓர் அற்புத நிகழ்ச்சி ! அதனைப் பின்னொரு அத்தியாயத்தில் அறிந்து கொள்வோம்.

அம்மணி அம்மாளுக்கு இரண்டாவதாகப் பையன் பிறந்தான். சின்னைய ராஜா எனப் பெயரிட்டனர். ஆனால் பையன் தங்கவில்லை. மூன்றாவதாகப் பிறந்த பாஞ்சாலியும் தங்காது போய்விட்டது. நான்காவதாக 1923 ஆம் ஆண்டு ஒரு பெண் குழந்தை பிறந்தது. குழந்தையைச் 'சேதுராமம்மாள்' எனப் பெயரிட்டு அழைத்தனர்.

ஊர் மதிக்க வாழ்ந்த ஓர் ஒப்பற்ற மனிதரின், சீர் பெற்ற மனைவியாய், தமது கணவரைச் சிரத்தையுடன் பேணிக்காக்கும் பேர் பெற்ற துணைவியாய்த் திகழ்ந்தார் அம்மணி அம்மாள், மனைவியின் மனமும் குணமும், மகிழ்விக்கும் பான்மையும், மேன்மையும், உணர்ந்து உவந்த இராமசாமி ராஜா, அம்மணி அம்மாளிடத்து மிகுந்த பிரியமும், பிரேமையும் கொண்டிருந்தார்.

உள்ளம் ஒன்றுபட்ட அந்த உத்தமத் தம்பதிகளின் இல்லற மாளிகையில் எதிர்பாராது 1929 ஆம் ஆண்டில் ஒரு துயர நிகழ்ச்சி நடந்துவிட்டது ! சிறிது காலம் தேக நலம் குன்றியிருந்த அம்மணி அம்மாள், திடீரென இறைவனடி சேர்ந்துவிட்டார். இரு பெண் குழந்தைகளுக்குத் தந்தையான இராமசாமி ராஜாவின் குடும்பத்தில் கலக்கம் சூழ்ந்தது, கவலை நிறைந்தது.

* * *

# 8

# கோயிலுக்கு ஒரு திருப்பணி குடும்பத்திற்கு ஒரு பெண்மணி

கிராம முன்சீப் சின்னைய ராஜா மாலை நேரங்களில், இரண்டொரு நண்பர்களுடன் தமது வீட்டுக்குத் தெற்கே, சாலை வழியாகக் காலாற நடந்து செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். கொஞ்ச தூரத்தில் சாலையில் ஒரு பாலம். அந்தப் பாலத்தில் நண்பர்கள் அமர்ந்து ஊர்க்கதை, உலக நடப்பு எல்லாவற்றையும் மனந்திறந்து, மனங்கலந்து மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருப்பார்கள். முன்னிரவு நேரத்தில் வீடு திரும்பி விடுவார்கள்.

ஒரு நாள் நண்பர்கள் உற்சாகமாக உரையாடிக் கொண்டிருந்த போது, வயதான ஒருவர், அவர்களுக்கு முன்னே வந்து நின்று "ஐயா! அதிசயமா இருக்கு ! அதோ அந்த மேடு இருக்குதே... அங்கே மேட்டுக்குள்ளே மணிச் சத்தம் கேட்குது! நீங்க வந்து கேட்கிறீங்களா?" என்றார்.

பாலத்திற்கு எதிரே, சாலைக்கு மேற்கே ஒரு பெரிய மேடு. மண்மேடுதான். குன்று போல் காட்சி தரும். அதற்குள் மணிச் சப்தம் கேட்கிறதென வயதான அந்தக் கிழவர் சொன்னவுடன், நண்பர்கள் அந்த மேட்டை நோக்கி ஓடினார்கள். கிழவர் சொல்லியவாறே மேட்டுக்குள் 'கண கண'வென மணியோசை ஒலிப்பதைச் சின்னைய ராஜாவும், நண்பர்களும் கேட்டு ஆச்சரியமடைந்தார்கள். 'இத்தனை நாள் வந்து, இந்தப் பாலத்தில் அமர்ந்திருக்கிறோம்; இந்த மேட்டுக்குள் இப்படியொரு அதிசய மணி ஒலிப்பதைக் கேட்டதில்லையே' என வியந்து, சரி, இரவில் ஒன்றும் செய்ய வேண்டாம்; நாளைக் காலை மேட்டை வெட்டிக் கரைத்து, உள்ளே இருக்கும் அதிசயத்தைப் பார்த்துக் கொள்ளலாமென நண்பர்கள் கலைந்து சென்றார்கள்.

வீட்டிற்கு வந்த சேர்ந்த சின்னைய ராஜாவிற்கு, ஒரு நல்ல செய்தி காத்திருந்தது! வேறொன்றுமில்லை! தமது மகன் இராமசாமி ராஜா தந்தையானார் ! மகனுக்கு மகள் பிறந்திருக்கிறாளென்ற மங்கலச் செய்திதான் அது !

கிராம முன்சீப் சின்னைய ராஜா, மறுநாள் காலைத் தமது தலையாரி மூலம் பத்துப் பதினைந்து வேலை ஆட்களைத் தயார் செய்து கொண்டு அதிசய மேட்டுக்கு வந்து விட்டார்.

வேலை ஆட்கள் வேகமாக மேட்டை வெட்டி எடுத்து, மண்ணைத் தூரக் கடத்திக் கொண்டிருந்தார்கள். இதற்குள் ஊருக்குள் அந்த அதிசயச் செய்தி பரவி விட்டது. ஊர் மக்கள் 'திமு திமு'வென வேடிக்கை பார்க்கக் கூடி விட்டனர்.

மேட்டை முழுவதுமாக வெட்டி எடுத்தபோது, உள்ளே ஒரு சிறு கோயில் மண்டபமும், அதனுள் ஒரு லிங்கமும், மண்டபத்தில் ஒரு மணியும் இருக்கக் கண்டு ஊரே அதிசயித்து நின்றது !

இராமசாமி ராஜாவின் மகளுக்கு நாமகரணம் சூட்டும் நன்னாளன்று, சின்னைய ராஜாவிற்குப் பழைய சம்பவம் நினைவுக்கு வந்தது. மேட்டிற்குள் லிங்கம் இருப்பதை மணிச் சப்தத்தின் மூலம் அறிந்து கொண்ட நாளன்றுதானே அந்தக் குழந்தை பிறந்தது? எனவே குழந்தைக்கு 'லிங்கம்மாள்' எனப் பெயர் சூட்டலாமென்றார். அதன்படி பி.ஏ.சி.ஆர். முதல் பெண் குழந்தை லிங்கம்மாள் என அழைக்கப் பெற்றது.

மணிச் சப்தம் கேட்டு, மண்மேடு அகற்றப் பெற்று, கோயில் மண்டப அமைப்பில் வீற்றிருந்த லிங்கத்திற்கு, சாஸ்திர வல்லுநர்களைக் கொண்டு அபிஷேக ஆராதனைகள் செய்விக்கப் பெற்றன. மக்கள் அதிசயமாகவும், அற்புதமாகவும் கருதப் பெற்ற பெருமானை, வழிபடும் கூட்டம் பெருகியது. பூசப்பாடி சின்னைய ராஜா, தமது குலம் செய்த புண்ணியத்தால் கிடைத்த தெய்வப் பொக்கிஷமாகக் கருதி, கோயிலைப் புனர் நிர்மாணம் செய்விக்க விரும்பினார்.

செல்வச் செழுமையும், செல்வாக்கு ஆளுமையும் பெற்றிருந்த சின்னைய ராஜாவின் எண்ணம், 'மள மள'வென மலர்ச்சி பெற்று, திருப்பணி வேலைகள் நிறைவு பெற்றன. ஒரு நல்ல நாளில் கும்பாபிஷேகமும் நடத்தி வைக்கப் பெற்றது. சொக்கலிங்கப் பெருமானும், மீனாட்சி அம்மையும் எழுந்தருளி, மக்களுக்கு அருள்பாலித்தனர். ஆலயத்தை மக்கள் 'சொக்கர் கோயில்' என அழைத்து மகிழ்ந்தனர்.

சொக்கர் கோயிலுக்குப் பெருந்தகை இராமசாமி ராஜாவும், அப் பெருமகனாரின் திருக்குமாரர் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவும் பெருந் திருப்பணிகளாற்றியும், அறக்கொடைகள் அளித்தும், சொக்கலிங்கப் பெருமானின் திருவருள் பெற்றனர். இப்போதும் ராஜா குடும்பத்திற்குப் பாத்தியப்பட்ட திருக்கோயிலாகவே சொக்கர் கோயில் பராமரிக்கப்பட்டு வருகின்றது.



இராஜபாளையம் அருள்மிகு சொக்கர் கோயில்

பரம்பரை பரம்பரையாக விவசாயக் குடும்பமாக விளங்கி வந்த குடும்பத்தில் பிறந்து வளரினும், அதென்னவோ பி.ஏ.சி. இராமசாமி ராஜாவிற்கு விவசாயப் பணிகளில் அவ்வளவாக

நாட்டமில்லை. அதற்காக விவசாயத்தை வெறுத்து ஒதுக்கிய வருமல்லர் அப் பெருமகனார். வணிகம், தொழில் ஆகியவற்றில் இருந்த விருப்பமும், வேட்கையும், குடும்பப் பிரிவினைக்குப் பின்னரும் விவசாயத்தில் ஏற்பட இல்லை. ஆனாலும் அப் பெருமகனார் வாழ்ந்த காலத்தில், மரபு வழி கிடைத்த நிலங்களுக்கு மேல், ஒரு கணிசமான நிலப்பகுதி அவருக்கு உரிமை ஆயிற்று!. விவசாயத்தில்தான் விருப்பப்படாது இருந்தாரே? அப்படி யிருக்கையில் மேலும் நிலங்களை வாங்குவானேன்?

நிலங்களை வாங்கும் விருப்பத்தில் நாடிச் செல்லவில்லை ! அது தேடி வந்தது ! “பொருந்துவன போ என்றால் போகா!” எனத் தெரியாமலா சொல்லி வைத்தார்கள்?

இராஜபாளையத்திற்குத் தெற்கே ஆறு மைல் தொலைவிலுள்ள ஊர் சேத்தூர். சேத்தூரைத் தலைமைப் பதியாகக் கொண்டு ஆட்சி புரிந்த குறுநில மன்னர் - ஜமீந்தார் - வடமலைத் திருவநாத சேவகப்பாண்டிய மகாராஜா, இசைத்துறையில் மேன்மைக்குரிய மேதையாகவும், தமிழ்த்துறையில் மாட்சிமைக்குரிய புரவலராக வும் திகழ்ந்தார். ஜமீந்தாரின் அவைக் களத்தில் தமிழ்ப் பெரும் புலவர்கள் அங்கம் வகித்தனர். “பூவகப் பாண்டியனே போலத் தமிழ் வளர்க்கும் சேவகப் பாண்டிய ராஜேந்திரன்” எனப் பாராட்டப் பெற்ற சேத்தூர் ஜமீந்தாரின் தமிழுணர்வையும், புரவலராய் அமைந்து தமிழ்ப்புலமை மிக்கார்க்கு உதவிய செயற்கரிய செயல்களையும், ‘நதி விலாசம்’ போன்ற பல சிற்றிலக்கியத் தமிழ் நூல்களால் அறிந்து நெகிழ்கிறோம், அனுபவித்து மகிழ்கிறோம். தமிழுக்கும், தமிழிசைக்கும் பெருந் தொண்டாற்றி, பெருந்தகை பி.ஏ.சி.ஆர். காலத்தில் வாழ்ந்த சேத்தூர் ஜமீந்தாரிடத்து ராஜா, பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருந்தார். வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் சேத்தூர் சென்று ஜமீந்தாருடன் அளவளாவி மகிழ்வதை வழக்கப்படுத்திக் கொண்டிருந்தார் ராஜா.

ஒரு முறை சேத்தூர் சென்று, ஜமீந்தாரிடம் மகிழ்ந்து உரையாடிக் கொண்டிருந்தபோது ராஜாவிடம் ஜமீந்தார், தமக்குச் சொந்தமான அறுபது ஏக்கர் நிலப்பரப்புக் கொண்ட எஸ்டேட்டை கொடுத்து விடுவதாகச் சொன்னார். இராமசாமி ராஜாவுக்கு எஸ்டேட்டை வாங்க இஷ்டமில்லைதான்; என்ன செய்வது? பெரிய மனிதர் சொல்கிறாரே? முதலில் இதமாகக் கூறி ஜமீந்தாரிடம் மறுத்துப் பார்த்தார். மறுப்பை ஏற்றுக் கொள்ளாது ஜமீந்தார் சற்று வலியுறுத்தவே, 'சரி முருகன் திருவருள்' என மனதிற்குள் நினைந்து எஸ்டேட்டை வாங்கிக் கொள்வதாகச் சொல்லி விட்டார் ராஜா. அப்படி வந்து சேர்ந்தது எஸ்டேட் !

அந்த எஸ்டேட்டிற்குப் பின்னொரு காலத்தில், 'மார்சேல்ஸ் எஸ்டேட்' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார் ராஜா. அதென்ன மார்சேல்ஸ்? அது ஒரு சுவையான நிகழ்ச்சி; 'மார்சேல்ஸ்' எனும் பெயருக்குள் மறைந்திருக்கும் நிகழ்ச்சி! மறைந்திருக்கும் நிகழ்ச்சிக்கு விரிந்த அளவில் விளக்கம் அளித்து, விவரித்திருப்பதைப் பின் பகுதியில் அறிந்து மகிழ்வோம்.

**வா**ழ்விக்கும் தன்மையே பெண்மை! பிறப்பித்துப் பிறந்தவை களைப் பேணிக்காத்து, பிறப்பிக்க இணைந்த கணவரைப் பேரன்பால் சிறப்பித்து, குலப் பெருமை விளங்கக் குடும்ப விளக்காய்த் திகழ்வது பெண்மை !

அதனால்தான் மகாகவி பாரதி

"உயிரைக் காக்கும், உயிரினைச் சேர்த்திடும்
உயிரினும் இந்தப் பெண்மை இனிதடா !"

என்று உரைத்தான்.

கண் இமைபோல், காக்கும் இயல்புடையது பெண்மை. கணவரைக் காப்பது ஒரு பக்கம் இருக்கட்டும்! பெற்ற

குழந்தையைப் பேணிக் காத்து, வளர்க்கும் பொறுப்பையும், வாழ்க்கைக்கு ஏற்றவாறு வடிவப்படுத்துகிற சிறப்பையும், கடமையாக ஏற்றுக் கொள்கிற இயற்கையான குணப் பண்பைக் கொண்டதல்லவா பெண்மை? பெண்மையின் அருமையை முழுமையாக உணர்ந்த திருவள்ளுவர், குடும்ப விளக்காய் ஒளிரும் பெண்மையை என்ன சொல்லி அழைத்தார் தெரியுமா? 'வாழ்க்கைத் துணை நலம்'! என வாயினிக்க அழைத்து மகிழ்ந்தார் வள்ளுவர். மனைவி - வாழ்க்கைத் துணை மட்டுமல்ல; 'துணை நலம்' என்றார். எத்தகைய பொருளார்ந்த சொற்கட்டு !

அத்தகைய 'துணை நலம்' இல்லாது, இரண்டு ஆண்டுகள் வாழ்ந்து வந்தார் இராமசாமி ராஜா. பொது வாழ்க்கையிலும், மக்களின் நல வாழ்க்கையிலும் பொழுதெல்லாம் நேரங்களைச் செலவிட்டு வந்த ராஜா, வீட்டுக்குள் இருக்கும் வேளைகளில், தமது பெண் குழந்தைகள் இருவரும் தாயன்பில் தழைத்துச் செழிக்க இயலாத தவிப்பைக் கண்ணுற்றுக் கலக்கமடைந்து வந்தார்.

"ராம மந்திரத்தில் விளக்கேற்ற ஒரு நல்ல பெண்மணியைப் பார்த்திட வேண்டியதுதான்! " என்றார்கள் உற்றார் உறவினர்கள்.

இராஜபாளையத்தில் எம்.எஸ். ராமசாமி ராஜா, அந்தக் காலத்தில் 'அளவை'த் துறையில் (Survey) பயிற்சி பெற்ற படிப்பாளராகத் திகழ்ந்தார். பந்துக்கள் அனைவரும் 'பண்பாளர்' என மதித்துப் போற்றும் மரியாதைக்குரியவர் ! அப் பெருமகனாரின் திருமகளார் சேதுராமம்மாள் **1931** ஆம் ஆண்டின் ஒரு நல்ல நாளில், இராமசாமி ராஜாவின் திருக்கரம் பற்றி, அழகின் உருவாய், அன்பின் பொருளாய், அன்னையாய் ராம மந்திரத்துள் குடும்ப விளக்காகக் குடியேறி மகிழ்ந்தார்.



பி.ஏ.சி.ஆரின் துணைவியார் சேதுராமம்மாள்

*   *   *

# 9

# பஞ்சாயத்துத் தலைவரும் நகரமைப்பின் நாயகரும்



பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி.ஆர்.

நகர் அமைப்புத் திட்டம் இராஜபாளையத்திற்கு அவசியத் தேவை என்ற கருத்து, பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் பேருள்ளத்தில் உதய மானது. அப்போது பி.ஏ.சி.ஆர். இராஜபாளையம் பஞ்சாயத்துத் தலைவராக வீற்றிருந்தார். தலைவர் பொறுப்பேற்று இரண்டு ஆண்டுகள் ஆகி இருந்தன.



பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி.ஆர்.
(அலுவலர்களுடன்)

1886 ஆம் ஆண்டிலேயே இராஜபாளையம் பஞ்சாயத்து உருவாக்கம் கொண்டிருப்பினும், வருமானம் நூற்றுக் கணக்கிலேயே பல்லாண்டுகள் இருந்து வந்ததால், பஞ்சாயத்து சார்பில் நகர் நல மேம்பாட்டுப் பணிகள் 1915 ஆம் ஆண்டு வரை மேற்கொள்ள இயலவில்லை. 1915 ஆம் ஆண்டுக்குப் பின்னர் பண்ணையார் ஆர்.வி. ராமசுந்தரம் பிள்ளை பஞ்சாயத்துத் தலைவராகப் பொறுப்பேற்றிருந்தபோது, பெத்தய்யா பிள்ளை மடத்திலிருந்து பெரிய கடை வீதி வழியாக முடங்கியார் சாலை வரை அமைக்கப் பெற்ற ரோடு, பஞ்சாயத்தின் சார்பில் போடப்பட்ட முதல் சாலை எனக் கூறப்படுகின்றது.

1922 ஆம் ஆண்டு பி.ஏ.சி.ஆர். தலைமைப் பொறுப்பை, நகர் மக்களின் நல் வாழ்த்துக்களுடன் ஏற்றுக் கொண்ட பின்னர், பஞ்சாயத்து போர்டின் இயக்கம் மாற்றம் பெற்று, ஒரு புதிய தோற்றத்திற்கான தொடக்கப்பணிகள் இயங்கத் தொடங்கின. ஊராட்சி என்பது உரிய பல நலங்களை மக்களுக்கு வழங்கத்

தோன்றிய உள்ளாட்சி அமைப்பு. எனவே சாலை அமைப்பு, சுகாதார வசதி, குடி தண்ணீர் அளிப்பு, தெரு விளக்குகள் ஆகியவற்றைப் பஞ்சாயத்து மக்களுக்கு அளிக்கும் பணிகளில் ஆர்வம் கொண்ட பி.ஏ.சி.ஆர். 1924 ஆம் ஆண்டு நகர் அமைப்புத் திட்டச் சட்டம் இராஜபளையம் பஞ்சாயத்திற்கு வர வேண்டுமெனப் பஞ்சாயத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றச் செய்தார். தீர்மானம் அரசாங்க ஒப்புதலுக்கு முறையாக அனுப்பி வைக்கப் பெற்றது.

இரண்டு ஆண்டுகளுக்குப்பின் 1926 இல் அரசாங்கம் பஞ்சாயத்துத் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டு, இராஜ பாளையத்தை நகர் அமைப்புத் திட்டச்சட்டத்திற்கு உட்படுத்தியது. பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி.ஆர். பெரிதும் மகிழ்ந்து, நகர அமைப்பை எவ்வாறு உருவாக்கலாமெனச் சிந்திக்கத் தொடங்கினார்.

நகரத்தில் வாழ்ந்து வந்த பல்வேறு சமூகங்களைச் சார்ந்த தலைவர்களை அழைத்து ஆலோசித்தார். அனைவரது கருத்துகளையும் அமைதியாகக் கவனத்துடன் கேட்டறிந்தார். தமக்கு உடன்பாடு இல்லாத கருத்துகளைச் சிலர் சொன்ன போதும் பி.ஏ.சி.ஆர். எவ்விதமான உணர்ச்சியையும் காட்டிக் கொள்ளாது ஊன்றிக் கவனம் செலுத்தினார். எத்தகைய கருத்தாயினும், எவர் எவரோ அதனை எடுத்துக் கூறினும், பொது நலத்திற்குப் பொருத்தமானவற்றையே கருதிப் பார்க்கும் மெய்ப்பொருளாக அப் பெருந்தகை இதயத்துள் இடமளித்தார்.

நகர அமைப்பை நடைமுறைப்படுத்த அரசின் அங்கீகாரம் கிடைத்தவுடனேயே, பி.ஏ.சி.ஆர். அமைப்புப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து, தம் மனதுள் ஒரு சித்திரத்தை உருவாக்கிக் கொண்டார். எப்படியெல்லாம் அதனை நடைமுறைப் படுத்தலாம்? நடை முறைப் படுத்துகிறபோது உருவாகும் சிக்கல்களை எத்தகைய அணுகு முறையில் எளிமையாக நீக்கிக் கொள்ளலாம்? வளரும் நகருக்கு எந்தக் காலத்திலும் வடிவ அமைப்பு இடையூறின்றி இருக்குமாறு எவ்வாறு தோற்றம் கொள்ளச் செய்யலாம்?

என்றெல்லாம் எண்ணிப் பார்த்து ஒரு முடிவு கொண்டிருப்பினும், மற்றவர் கருத்துக்கும் மதிப்பளிக்க வேண்டுமென்ற பெருந்தன்மையால், பஞ்சாயத்து உறுப்பினர்களிடமட்டுமின்றி, நகரப் பெருமக்கள் சிலரிடமும் கருத்தறியக் காது கொடுத்தார்!.

பி.ஏ.சி.ஆர்., நகர் அமைப்புத் திட்டத்தை நடைமுறைப்படுத்த பஞ்சாயத்தில் ஒரு சர்வேயர் பதவியை உருவாக்கினார். அனுபவம் மிக்கவர் அந்தப் பதவிக்கு உரியவராகச் செய்ய வேண்டுமெனக் கருதியவாறே, நேர்முகத் தேர்வில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து, 1926 ஆம் ஆண்டிலேயே ரூ. 50 மாத ஊதியம் அளித்தார். அந்தக் காலத்தில் ரூ. 50 என்பது பெரிய தொகை! என்றாலும், எந்த நிர்ப்பந்தத்திற்கும் சர்வேயர் அடி பணியக் கூடாதென்ற அடிப்படையில், ஊதியத் தொகையை உயர்த்திக் கொடுத்தார் அப் பெருந்தகை. பஞ்சாயத்து போர்டின் 1926 ஆம் ஆண்டு நிகழ்ச்சிப் பதிவேட்டின் (MINUTES BOOK) 249 ஆம் பக்கத்தில் சர்வேயர் நியமிப்பும், ஊதியத் தொகை நிர்ணயமும் அங்கீகரிக்கப் பெற்றுள்ளன.

நகர நிர்மாணத்தில் பொதுப் பூங்காக்கள் (PUBLIC PARK) நகர அவசியமெனக் கருதிய, பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி.ஆர். இராஜபாளையம் சம்மந்தபுரத்தில் 1926 ஆம் ஆண்டிலேயே ஒரு பூங்காவிற்கு அடிக்கல் நாட்டித் தொடங்கி வைத்தார். பூங்கா அமைந்த பூமியைப் பஞ்சாயத்திற்கு உரிமையாக்க அரசாங்கத்துடன் பல காலம் கடிதப் போக்குவரத்துச் செய்து, 1935 ஆம் ஆண்டில் மாவட்டக் கலெக்டராகப் பொறுப்பேற்றிருந்த கே. ராமுண்ணி மேனனைக் கொண்டு, பொது மக்கள் பயன்படுத்தத் திறக்கச் செய்து, மகிழ்வு கொண்டார் பி.ஏ.சி.ஆர். 'சுபாஷ் சந்திர போஸ் பார்க்' என அழைக்கப் பெற்றது அந்தப் பூங்கா.

இராஜபாளையம் நகர் அமைப்பின் மாதிரிப் படம், பஞ்சாயத்துச் சார்பாக அரசாங்கத்திற்கு அனுப்பப் பெற்று, அங்கீகாரம் வேண்டப் பெற்றது. தொடர்ந்து அங்கீகார அனுமதி வேண்டிப் பல கடிதங்களைப் பஞ்சாயத்து சார்பாக அரசுக்கு பி.ஏ.சி.ஆர்,



*சிவகாசி சப் - கலெக்டர் ராமுண்ணி மேனனுடன்,*
*பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி.ஆர்.*

அனுப்பிக் கொண்டே இருந்தார். அரசாங்கம் பன்முறை பல கேள்விகளைக் கேட்டுக் கடிதங்களைத் திருப்பி அனுப்பிக் கொண்டே இருந்தது. கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சரியான பதில்களை உடனுக்குடன் அனுப்பினார் தலைவர் பி.ஏ.சி.ஆர். ஆறு ஆண்டுகளுக்குப் பின், 1932 ஆம் ஆண்டில் ரயில்வே நிலையம் உள்ளிட்ட ஒரு பகுதிக்கு, 'நகர் அமைப்பு அனுமதி' அரசாங்கத்திடமிருந்து கிடைத்தது. தமிழ்நாட்டில் வேறு எந்த ஒரு பஞ்சாயத்தும் பெற்றிராத பெரு வெற்றி அது!.

**த**னிப் பெருமை பெற்ற இராஜபாளையம் பஞ்சாயத்தின் மகத்தான வெற்றியை, மாபெரும் விழாவெடுத்துக் கொண்டாடி மகிழத் திட்டமிட்டார் தலைவர் பி.ஏ.சி.ஆர். நகர் அமைப்புத் திட்டத்தைத் தொடங்கி வைக்கும் விழாவிற்கு, மாகாண நகர் அமைப்பு இயக்குநரை (PRESIDENCY TOWN PLANNING DIRECTOR) அழைத்தார். திட்டத்தைத் தொடங்கி வைத்த இயக்குநர் லார்டு டான் (Lord Dawn) "இது போன்றதொரு பஞ்சாயத்தை, என் அனுபவத்தில் நான் கண்டதில்லை! பஞ்சாயத்துத் தலைவர் விடாப்பிடியாக திட்டத்திற்கு அனுமதி பெற்றதும், திட்டத்தை நடைமுறைப்படுத்துகிறபோது கிடைத்துள்ள மக்களின் ஒத்துழைப்பும் என்னைப் பெரிதும் ஆச்சரியத்தில் அமிழ்த்து

கின்றன! உள்ளாட்சித் துறையில் இராஜபாளையம் பஞ்சாயத்து ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது ! எனது மனமுவந்த வாழ்த்தை மக்களுக்கும், பஞ்சாயத்து போர்டுக்கும் மகிழ்ச்சியுடன் தெரிவித்து, திட்டத்தைத் தொடங்கி வைக்கிறேன்." எனக் கூறினார்.

இராஜபாளையம் பஞ்சாயத்து போர்டு, நகர் அமைப்புத் திட்டத்தை நடைமுறைப்படுத்துவதில், மாகாணத்திற்கே வழி காட்டியாகத் திகழ்ந்த சிறப்பை, 1938 ஆம் ஆண்டு இராஜ பாளையத்திற்கு வருகை புரிந்த, மாகாண உள்ளாட்சிச் செயலர் ரெங்கனாதன் ஐ.சி.எஸ் மனந் திறந்து பாராட்டி மகிழ்ந்தார். தலைவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் செல்வாக்கையே இத்தகைய சிறப்பு எடுத்துக் காட்டுவதாகக் குறிப்பிட்டார். அவர் சொன்னார், "மாகாணத்திலேயே சில பஞ்சாயத்துக்களே நகர அமைப்புத் திட்டத்தை அமுல் படுத்தியுள்ளன. அந்தப் பஞ்சாயத்து களுக்கும் இராஜபாளையம் பஞ்சாயத்தே முன்னோடியாக நின்று வழி காட்டி உள்ளது ! நகர அமைப்பை உருவாக்கும் போது மக்களுக்கும் பஞ்சாயத்து போர்டுக்கும் இடையே ஒத்துழைப்பு அவ்வளவாக இருக்கவில்லையென்பதே சாதாரணமான அனுபவம். ஆனால் இராஜபாளையம் பஞ்சாயத்தில் மக்களின் ஒத்துழைப்புப் பாராட்டத்தக்க முறையில் இருப்பதைப் பார்க்கின்ற போது, மக்கள் அபரிமிதமான நம்பிக்கையை போர்டாரிடத்தும், அளவிடற்கரிய மதிப்பை பஞ்சாயத்துத் தலைவரிடமும் கொண்டிருப்பதை அறிந்து வியப்படைகிறேன்".

பெருந் தலைவர் காமராஜ், தமிழ்நாட்டின் முதல்வராகப் பொறுப்பேற்றிருந்த காலம். தமிழ் நாட்டிலுள்ள நகரங்களை சீரமைக்க, ஓர் உயர்மட்டக் குழு அமைக்கப் பெற்றது. உயர் அதிகாரிகளைக் கொண்ட அந்தக் குழு நகர் அமைப்புகளைச் சீர்ப்படுத்த, நியூயார்க் பெரு நகர அமைப்பை நேராகக் கண்டு வரலாமெனத் தீர்மானித்தது. பயணத்திற்குரிய அனைத்து நடைமுறைகளையும் செய்துகொண்ட பின்னர், மரியாதை

நிமித்தம் முதன் மந்திரியைக் கண்டு, சொல்லிக் கொள்வதற்காக, அதிகாரிகள் காமராஜரை சந்திக்கச் சென்றனர்.

"ஆமாம் ! எங்கே போறீங்கண்ணேன்? அமெரிக்காவுக்கா?" என வியப்புத் தோன்ற அதிகாரிகளை வினவினார் முதல்வர் காமராஜ்.

"ஆமாம் நியூயார்க் நகர அமைப்பைப் பார்த்து வரலாமென்று...." என ஓர் அதிகாரி சொல்லத் தொடங்கியவுடன், இடையே குறுக்கிட்டு, "என்ன? நியூயார்க்கைப் பார்த்தா, இங்கே நகரங்களை அமைக்கப் போறீங்கண்ணேன்? நல்லா இருக்குப் போங்க! நம்ம நாட்டு நகரங்களைச் சரிப்படுத்த அமெரிக் காவுக்கும் போக வேண்டாம்... நியூயார்க்கும் போக வேண்டா மிண்ணேன்! மதுரைக்குப் போங்க, அப்படியே வந்து புதுக்கோட்டையைப் பாருங்க ! அது போதுமிண்ணேன் ! அந்த ரெண்டு நகரத்தைப் போல, மத்த நகரங்களை அமைக்கப் பாருங்க! அது போதுமிண்ணேன்" எனச் சற்றே கோபத்துடன் கூறினார் முதல்வர் காமராஜ்.

அதிகாரிகள், ஏற்கனவே திட்டமிட்டவாறு நியூயார்க் பயணத்தை மேற்கொள்ள இயலாமல் போனது !

மக்கள் தலைவர் காமராஜரின் மனத்துள் 'நகர அமைப்பு' என்றதும் மதுரையும், புதுக்கோட்டையும் இடம் பெற்றது போலவே, இராஜபாளையமும் இடம் பெற்றிருக்கலாம்! பெருந்தகை பி.ஏ.சி.ஆர். திட்டமிட்டு வகுத்திருந்த வடிவம் போல, இராஜபாளையம் நகர் அமைக்கப் பெற்றிருக்குமேயானால் நிச்சயமாக காமராஜரின் நினைவில் இராஜபாளையம் இடம் பெற்றிருக்கும். அதிகாரிகளை இராஜபாளையத்தையும் பார்த்து வரப்பணித்திருப்பார். ஆனால் தலைவர் பி.ஏ.சி.ஆர், ஆழ்ந்து சிந்தித்து அமைத்த நகர அமைப்பு, முழுமையாக இராஜபாளையத்தில் நடைமுறைப் படுத்தப் பெற இல்லை, நடைமுறைப்படுத்த இயலாது போயிற்று. என்றாலும், இன்றைய




இராஜபாளையம் நகர அமைப்புத் தொடக்க விழாவில்
பஞ்சாயத்துப் போர்டு தலைவர் ராஜா

இராஜபாளையத்தின் தோற்றம், பி.ஏ.சி.ஆர், இருபதாம் நூற்றாண்டின் இருபதுகளில் வடிவப்படுத்திய அமைப்பை ஒரு பகுதியே என்பது குறிப்பிடத்தக்கது!.

மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகும் பல சிற்றாறுகள் தடுக்கப்பட்டு, கண்மாய்களாகவும், ஏரிகளாகவும் அமைக்கப் பெற்று, இராஜபாளையம் நகரைச் சுற்றிலும் விவசாயத்திற்கென நீர்ப்பாசன வசதி இயல்பாக அமைந்திருப்பினும், நகரில் குடியிருப்புக் கொண்டுள்ள மக்கள், ஊற்று நீரையே தமது உண்ணும் நீராகக் கொள்ள வேண்டிய நிலை இருந்து வந்தது. கிணறுகளில் ஊறிப்பெருகும் நீரை நம்பியே வாழ வேண்டிய கட்டாயத்தில் மக்கள் வாழ்ந்து வந்தனர்.

இராஜபாளையம் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த நகர் அல்லவா? பருவ மழை அடிக்கடி இராமநாதபுர மாவட்டத்திற்குக் கருணை காட்டுவதில்லை! எனவே வறட்சியின் பிடியில் மாவட்டம் முழுமையும் அகப்பட்டுவாடும்! விவசாயத்திற்கு வேண்டிய நீர் மட்டுமல்லாது, மக்கள் குடி நீருக்கே மிகுந்த

சிரமத்தை அனுபவிக்கும் நிலை வந்து சேரும். நிலத்தடி நீர் குன்றிப்போய், கிணறுகள் வற்றி வறண்டு விடும். நகரத்தில் வாழ்கின்ற மக்கள், குடிநீருக்காக நாளும் பரிதவிக்கும் இன்னல்கள், பி.ஏ.சி.ஆர். உள்ளத்தைப் பெரிதும் பாதிக்கச் செய்தன.

பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் திட்டம் (PROTECTED WATER SUPPLY SCHEME) இராஜபாளையம் நகருக்கு அவசியத் தேவையெனக் கருதினார் பஞ்சாயத்துத் தலைவராக வீற்றிருந்த பி.ஏ.சி. இராமசாமி ராஜா. மூன்று லட்ச ரூபாய் திட்டம் ஒன்றை, 1926 ஆம் ஆண்டிலேயே வகுத்து, பஞ்சாயத்து சார்பில் அத்திட்டம் மேற்கொள்ளப்பட வேண்டுமென உரிய தீர்மானம் நிறைவேற்றி, அரசாங்க அனுமதிக்காக அனுப்பி வைக்கப் பெற்றது. ராஜாவின் தீவிரமான முயற்சியும், தொடர்ந்து அயற்சி இல்லாத வேண்டுகோளும், மாகாண உள்ளாட்சி நிர்வாக அதிகாரிகளின் நேர் காணலும், பொறியியல் துறைப் பரிசீலனையும், பஞ்சாயத்தின் நினைவூட்டுத் தீர்மானங்களும் இணைந்து இராஜபாளையம் பஞ்சாயத்திற்குக் குடிநீர்த் திட்டத்திற்குரிய அரசாங்க அனுமதியைப் பெற்றுத் தந்தன.

இந்த அனுமதி பெறுவதற்குப் பி.ஏ.சி.ஆர். மேற்கொண்ட அயராத செயல் திறத்தைப் பஞ்சாயத்து நிகழ்ச்சிப் பதிவேட்டில் காண்கின்றபோது, “எண்ணிய எண்ணியாங்கு எய்துப” என்னும் திருவள்ளுவரின் திருவாக்கு மெய்ப்பிக்கப்பட்டிருக்கும் மேன்மையை முழுமையாக அறிகின்றோம். என்றாலும் பஞ்சாயத்தில் மேற்கொள்ளப்பெற்ற பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர்த் திட்டம் அரசாங்கத்தின் அனுமதி பெறுவதற்குப் பத்து ஆண்டுகள் காலத் தாழ்வு நிகழ்ந்துள்ளது! 1926 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற திட்டம், 1936 ஆம் ஆண்டில் தான் அரசாங்க அனுமதியைப் பெற்றுள்ளது! பத்து ஆண்டுகள் சென்றாலும், பஞ்சாயத்து விரும்பிய திட்டத் தொகையைப் பரிசீலனைக்குப் பின், மூன்று மடங்குக்கும் மேற்பட்டு இந்திய அரசாங்கம் அனுமதியும், அங்கீகாரமும் அளித்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

ஆம் 12.5.1936 இல் இராஜபாளையம் பஞ்சாயத்துப் பாதுகாக்கப் பட்ட குடி தண்ணீர் திட்டத்திற்கென பத்து லட்சம் ரூபாயை, அரசாங்கம் அனுமதி வழங்கியுள்ளது.

அனுமதி கிடைத்ததும் பெரிதும் அக மகிழ்ந்த ராஜா, திட்டத்தை முனைப்புடன் நிறைவேற்ற எண்ணியிருந்த தருணத்தில் இரண்டாவது உலக மகாயுத்தம் குறுக்கிட்டது. எனவே திட்டத்தை நடைமுறையில் உடனடியாக நிறைவேற்றிட இயலவில்லை. பி.ஏ.சி.ஆர். மிகவும் வேதனைப்பட்டார், வருந்தினார். எனினும் அப் பெருமகனார் கடமை உணர்வோடும், கருணை உள்ளத் தோடும் உருவாக்கிய பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் திட்டம், பின்னர் 'நகராட்சி'யாக இராஜபாளையம் தகுதி பெற்றபோது நிறைவேறி, நகரின் குடி நீர் சிக்கலை ஒருவாறு நீக்கியது.

**கோ**டை காலங்களில் மக்கள் குடி தண்ணீருக்காக அலைந்து பரிதவித்து அவதிப்படுவதைப் பார்க்கின்றபோதெல்லாம், பி.ஏ.சி.ஆர், மனம் வருந்துவார். தற்காலிக நிலையிலாயினும் தண்ணீர்த் தட்டுப்பாட்டைப் போக்கியாக வேண்டுமென அப் பெருமகனாரது உள்ளம் உறுதி பூண்டது. நகரில் நன்மனச் செல்வராய் வாழ்ந்திருந்த சடையாண்டிச் செட்டியார், மனமுவந்து அளித்த ரூபாய் ஐயாயிரத்து ஐநூறை, பொதுத் தண்ணீர்த் தொட்டி அமைத்துப் பொது மக்களின் துயரத்தை ஓரளவு நீக்க முனைந்தார்.

ரயில் நிலையத்திற்கு அருகே, மில் ரோடில் ஆழ் கிணறு (DEEP BORE-WELL) அமைத்து, நீரை உயர் மட்டத்தில் தேக்கிப் பொது மக்களுக்குப் பயனளிக்கும் வகையில் தண்ணீர்த் தொட்டிகள் அமைக்கப் பெற்றன. சடையாண்டிச் செட்டியார் நீர்த் தொட்டி பொது மக்களின் சங்கடத்தை ஓரளவு குறைக்கப் பயன்பட்டது. என்றாலும், இராஜபாளைம் நகரில், மக்கள் குடி தண்ணீருக்காக அனுபவிக்கும் சிரமங்களை வாரம் தவறாது, உள்ளாட்சித் துறைக்கு உருக்கமாக உணர்த்திக் கொண்டே இருந்தார் தலைவர் பி.ஏ.சி.ஆர். அரசாங்கத்திற்கு அப் பெருந்தகை எழுதிய கடிதங்கள்,

நகரில் வறட்சியால் கோர தாண்டவமாடிய குடிதண்ணீர்ப் பிரச்சினையை வர்ணித்த வார்த்தைச் சித்திரங்கள்! பின்னர் நகரவை, பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர்த் திட்டத்தை நிறைவேற்ற, வழி காட்டிய திசை காட்டிகள்!.

இராஜபாளையம் நகருக்குள் மின்சாரம் நுழைவதற்குத் 'தோரணவாயில்' அமைத்தவரும் தலைவர் பி.ஏ.சி.ஆர். தான்! அப் பெருமகனாரின் இடையறாத தொடர் முயற்சியின் விளை வாகவும், இராஜபாளையம் மில்ஸ் துவக்கப் பட்டதற்காகவும் **1937** ஆம் ஆண்டில் இராஜபாளையம் மின்சார வசதியைப் பெற்றது. புதிய சக்தியால் (POWER) நகரின் தோற்றம் பூரிப்படைந்தது! இராஜபாளையம் பஞ்சாயத்திற்கும், மேற்கு இராமநாதபுரம் மின்சார விநியோக நிறுவனத்திற்கும் (WEST RAMNAD ELECTRICITY DISTRIBUTION COMPANY) இடையே ஏற்பட்ட உடன் படிக்கையால், தெரு விளக்குகள் அங்கங்கே கண் திறந்தன! இரவில் இராஜபாளையம் தெருக்கள் புதுப்பொலிவோடு விளங்கத் தொடங்கின !.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு" என்ற நிலையில் "பெருமை உடையவர் ஆற்றுவார் அருமை உடைய செயல்" என்பது ஆன்றோர் கண்ட அனுபவம் ஆயிற்றே? பஞ்சாயத்துத் தலைவராகப் பதினைந்து ஆண்டுகள் பொறுப்பேற்றிருந்த பெருமைக்குரிய பி.ஏ.சி.ஆர், நகர அமைப்பின் நாயகராகவும், நகர்மன்றத் தலைமையில் முன்னவராகவும், நகர் நலத்திற்குரிய அடிப்படையான பணிகளைத் தொடங்கி வைத்த மூலவராகவும் விளங்கி, செயற்கரிய செயல்களால், இராஜபாளையம் நகரவை வரலாற்றில் தனிப்புகழ் கொண்ட தலைவராய்த் திகழ்ந்தார்! அப் பெருமகனாரது அயர்வறியா அரிய பணிகளால், உரிய நலன்களை மக்கள் இன்றும் பெற்று வருகிற பேற்றை, நகரின் சரித்திரம் அறிந்தோர் நன்றிப் பெருக்குடன் நினைந்து என்றும் போற்றுவார்கள்.

* * *

# 10

## பெருந்தகையின் சொல்வாக்கும் பெருமைமிகு செல்வாக்கும்

சுவாமி விவேகானந்தர் மேற் சட்டை எதுவுமின்றி, வெறும் சால்வையைப் போர்த்திக் கொண்டு, கைத்தடியுடன் நியூயார்க் நகர வீதியில் வெற்றுக் காலுடன் நடந்து போய்க் கொண்டிருந்தார்!

எதிரே வந்த வெள்ளை மாது, அவரைப் பார்த்து "ஸ்வாமிஜி ! இது என்ன கோலம்?" என நகைத்துக் கேலியாகக் கேட்டார்.

விவேகானந்தர் புன்சிரிப்புடன், "அம்மணி ! எங்கள் நாட்டில் மனித மதிப்போ, நாகரீகமோ ஆடை அணிகளில் அடங்கியிருக்க இல்லை, நன்னடத்தையில் தான் அடங்கியிருக்கிறது" எனக் கூறிவிட்டுச் சென்றார்.

இராமனின் உயர்ந்த குணப் பண்புகளைச் சித்தரிக்க, கவிச்சக்கரவர்த்தி கம்பன் இராமாயணத்தில் "நடையில் நின்றுயர் நாயகன்" என வர்ணித்தான்.

'நடை', 'நடத்தை' ஆகியவை இந்திய நாட்டில் மனித மதிப்பீட்டைக் கணிக்கும் எடைக் கற்களாக பயன்பட்டு வருவதை அறிவோம். ஆமாம், நடை என்றால் என்ன? நடத்தை என்றால் என்ன?

குறிப்பாகச் சொல்வதானால் - எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும், மனம், மொழி, மெய் ஆகிய மூவகையானும் அல்லவை நீக்கி, நல்லவையே நாடி இயங்கும் வாழ்க்கையை 'உயர் நடை' என்றும், 'உன்னத நடத்தை' என்றும் கொள்வது நமது மரபு. நோக்கும், போக்கும் மனித வாழ்க்கைக்கு ஆக்கம் அளிப்பதாய், ஊக்கம் ஊட்டுவதாய் அமைத்துக் கொள்கின்ற

ஆன்றோரின் வாழ்க்கை அத்தகைய சிறப்பைப் பெற்று, மனித சமுதாயத்திற்கு மகத்தான நன்மைகளை வழங்கச் செய்கிறது. சமுதாய நன்மைகளைக் கருத்தில் கொண்டு வாழ்கின்ற பெருமக்களை, நன்னடத்தை கொண்ட உன்னத மனிதர்களாக ஊரும், உலகமும் போற்றி மதிக்கிறது. அவர்கள் வெளிப்படுத்தும் சொற்களை வேத வாக்குகளாகச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளவும் செய்கிறது!.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், ஊர் சிறக்க மனம் கொண்டார்; ஊரில் இணக்கம் பிறக்கச் சொற் கொண்டார்; ஊரின் நலம் பெருக்க செயற் கொண்டார்! எனவே நடையில் நின்றுயர் நாயகராய் நகரில் புகழ்க் கைக்கொண்டார்! அவர் வெளிப்படுத்திய சொல்வாக்கு, செல்வாக்குப் பெற்றது. அனைத்து சமூகங்களும் அப்பெருமகனாரின் சொல்லை, அன்புக் கட்டளையாக ஏற்றுக் கொண்டன.

1922 முதல் 1928 வரை ஆறு ஆண்டுகளும், 1932 முதல் 1941 வரை ஒன்பது ஆண்டுகளும் பி.ஏ.சி.ஆர், இராஜபாளையம் பஞ்சாயத்துத் தலைவராகப் பொறுப் பேற்றிருந்தார். இடையே நான்கு ஆண்டுகள் பி.எஸ்.கே. தலைவராக வீற்றிருந்தார்!.

பஞ்சாயத்துத் தலைவராக வீற்றிருந்தபோது, பி.ஏ.சி.ஆர், மக்களிடத்துக் காட்டிய பரிவும், அன்பும் அப் பெரு மகனாரை நகரில் வாழ்ந்த அனைத்து சமூகங்களும், நம்பிக்கைக்குரிய பெரியாராக மதிக்கவும், மரியாதைக்குரிய நாயகராக நினைக்கவும் வைத்தன. சமூகங்கள் மட்டுமின்றி, சமயம் கடந்த முஸ்லீம் அன்பர்களும் இந்தமதத் தத்துவங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த இராமசாமி ராஜாவை, தங்கள் அன்பிற்குரிய மூத்த சகோதரராகவே எண்ணி மதித்தனர். அவர் சொல்லை ஏற்றுப்போற்றினர்! சமூகத்திற்குள் உருவாகும் சிக்கல்களும், சமூகங்களுக்கு இடையே ஏற்படும் பிரச்சினைகளும் பி.ஏ.சி.ஆரின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டு, அப் பெருமகனாரின் செப்பம் உடைய சிந்தையாலும், மெய்ப்பொருள்

காணும் மேன்மையாலும் இணக்கமாகத் தீர்வு கண்ட நிகழ்ச்சிகள் வழக்கமாக நடைமுறையாகப் பேணப் பெற்றன.

பி.ஏ.சி.ஆர். வாழ்ந்த 'ராம மந்திரம்' மாளிகையின் திண்ணை, நீதி மன்றமாகவும், பஞ்சாயத்துத் தேர்தல் காலங்களில் உறுப்பினர் களை உருவாக்கும் தேர்வுக் களமாகவும் திகழ்ந்திருக்கிறது !

சிக்கல்களைச் சுமூகமாகத் தீர்த்து வைக்கும், பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் திறம் மிகுந்த முடிவுகள், சண்டைச் சேவல்களாக வருகை தந்தவர்களை, சமாதானப் புறாக்களாக அனுப்பி வைத்துள்ளன! நல்லிணக்கமும், நல்லுணர்வும் உருவாகுமாறு, வழக்கைக் கொண்டு வரும் இரு சாராரிடமும் தனித்தனியாக அறிவுறுத்தி, குறைகளையும், குற்றங்களையும் பரிவோடு கேட்டு, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வேண்டுமென வலியுறுத்தி, தமது முடிவைத் தெரிவிக்கும் நேரத்தில் சம்பந்தப்பட்டவர் அனைவரும் 'சரிதான்' என உடன்படும் மனோ நிலையை அடைந்த பின்னரே தமது தீர்ப்பை வெளியிடுவார் பி.ஏ.சி.ஆர் ! இரு பிரிவினரும் ஒரு முகமாக உடன்படும் முடிவுகளையே பெரும்பான்மையான பஞ்சாயத்துகளில் அப் பெருமகனார் தமது தீர்ப்பாக வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பஞ்சாயத்து போர்டுக்குத் தேர்தல் வருங்காலங்களிலெல்லாம், பி.ஏ.சி.ஆர், தலைவராக வீற்றிருந்தபோது, ஒரு முறை கூட மக்களை வாக்குச் சாவடிக்கு அனுப்பும் நிலை வந்ததில்லை! இராஜபாளையம் நகரில் வாழ்ந்து வருகின்ற சமூகங்கள் அனைத்தையும் சார்ந்த சமூகத் தலைவர்கள், பி.ஏ.சி.ஆரின். அழைப்பை ஏற்று, 'ராம மந்திரம்' மாளிகைக்கு வந்து அமர்ந்திருப்பார்கள். ஒவ்வொரு வார்டுக்கும் பிரதிநிதியாக யாரைத் தேர்ந்தெடுக்கலாமென வருகை தந்திருப்போரை மிகுந்த உரிமையோடும், உள்ளன்போடும் வினவுவார் பி.ஏ.சி.ஆர்.

"வழக்கம்போல நீங்களே சொல்லிவிடுங்கள்" என அனைவரும் ஒரு முகமாகக் கூறுவார்கள்.

ஏற்கனவே பலரையும் தனித்தனியாகக் கேட்டறிந்திருப்பார் அப் பெருமனார். எவரைச் சொன்னால் எல்லோரும் உடன்பட்டு உவந்து வரவேற்பார்களென்பதையும் தெளிவாக அறிந்திருப்பார். எனவே அப் பெருந்தகை, ஒவ்வொரு வார்டாகக் கூறி, 'இவர் இருக்கட்டும்' எனக்கூறுவார். கூடியிருப்போர் அனைவரும் மிகுந்த குதூகலத்தோடு பி.ஏ.சி.ஆர், வரிசையாகக் கூறும் பெருமக்களை வரவேற்று மகிழ்வார்கள். பின்னர், பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் வார்த்தைகளில் வெளிப்பட்ட பெருமக்கள் அனைவரும் பஞ்சாயத்து உறுப்பினர்களாக ஒருமுகமாகத் தேர்ந் தெடுக்கப்படுவார்கள்!.

பழையபாளையத்தில் வாழ்ந்து வந்த ஒரு விவசாயி அம்பைய ராஜா. இராமசாமி ராஜாவை விட நாலைந்து வயது இளையவர். பண்பாலும், அன்பாலும் பி.ஏ.சி.ஆரின் உள்ளத்துள் ஓர் இடம் கொண்டவர். இருவரும் நெஞ்சார்ந்து பழகுவார்கள். உள்ளத்தால் நெருங்கி, உணர்வால் மலர்ந்த நட்பு அது!.

ராம மந்திரத்திற்கு நாள்தோறும் வருவார் அம்பைய ராஜா. இராமசாமி ராஜாவுடன் மனங்கலந்து நெடு நேரம் பேசிக்



எஸ்.எஸ். அம்பைய ராஜா

கொண்டிருப்பார். ஒருவரை ஒருவர் காண்பதிலேயே களிப்பும், கலந்துரையாடுவதில் நிறைவும் கொள்வார்கள் இருவரும். பஞ்சாயத்து போர்டு குறித்தும், தேர்தல்கள் வருகிறபோது தேர்வுகள் பற்றியும் அம்பைய ராஜாவுடன் கருத்துப் பரிமாற்றங்கள் செய்து கொள்வதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தார் பி.ஏ.சி.ஆர். பொது இயக்கங்கள் பொதுப் பஞ்சாயத்துகள், பொது நல நடவடிக்கைகள் ஆகியவை குறித்து மனந்திறந்து அம்பைய ராஜாவுடன் உரையாடுவார் இராமசாமி ராஜா.

இராஜபாளையம் பஞ்சாயத்து போர்டில் மேலாளராகப் பொறுப்பேற்றிருந்த சீனிவாச அய்யங்கார், தலைவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் குணமறிந்து பணியாற்றும் அலுவலராக வெகு காலம் தொண்டாற்றினார். ராஜாவிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்த இளைஞர் எஸ். அர்ச்சுன ராஜாவை பஞ்சாயத்து அலுவலகத்தின் ஓர் ஊழியராக ராஜா நியமித்தார். பின்னர் இவர் 'ராம்கோ'வில் இணைந்தார். 'ராம்கோ' இயக்குநராக இருந்து வருகின்றார்.

* * *

# 11

## நகர்நலப் பணிகளின் மூலவர்
## நகர்மன்றத் தலைமையின் முன்னவர்

நாளுக்கு நாள் நகரம் விரிந்து பரந்து சென்று கொண்டே இருந்தது. வணிக வாய்ப்புகளும், தொழில் தொடக்கங்களும் பெருக்கமுற, மக்கள் தொகை வளர்ந்தது. குடியிறுப்பு வீடுகள் புதிதாகத் தோன்றிக் கொண்டே இருந்தன. இருபதாம் நூற்றாண்டின் இருபதுகளிலிருந்த ஜனத்தொகை முப்பதுகளின் தொடக் கத்திலேயே இரு மடங்காக பெருகிவிட்டது!.

மக்கள் நலப் பணிகளில் பஞ்சாயத்துக்கென சில எல்லைகள் உண்டு. சில வரையறைகள் இருந்தன. அவைகளைக் கொண்டு நாள்தோறும் வளர்ந்து வரும் இராஜபாளையம் நகருக்கு பணிகளாற்ற இயலாத நிலை ஏற்பட்டு வந்ததை அறிந்த பி.ஏ.சி.ஆர், பஞ்சாயத்து ஆட்சி, நகர ஆட்சியாக மாற்றப்பட வேண்டுமென எண்ணி, அந்த வகையில் கவனம் கொள்ளத் தொடங்கினார். முதலில் பஞ்சாயத்து போர்டில் தீர்மானம் நிறைவேற்றி, அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்தார். நினைவூட்டுக் கடிதங்கள் எழுதிக் கொண்டே இருந்தார். ஒரு முறை சென்னை சென்று, உள்ளாட்சித்துறைச் செயலாளரைக் கண்டு பேசி வந்தார்.

எந்தச் செயலானாலும், ஒரு முடிவுக்கு வந்து விட்டால், ஈடுபாட்டுடன் அதிகம் கவனம் கொண்டு, எந்த நேரமும் அந்தச் சிந்தனையிலேயே ஒன்றியிருக்கும் இயல்புடையவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜா. தளர்ந்து விடுவதோ, அயர்ந்து விடுவதோ, சோர்வு அடைந்து விடுவதோ அப் பெருமகனாரது இயக்கத்தில் எந்த நேரமும் நிகழ்ந்ததுமில்லை, நிகழ விடுவதுமில்லை. முயற்சி அவருக்கு முன்னே கை கட்டி நின்று, 'அடுத்து என்ன செய்ய'

என வேண்டிக் கொண்டே இருக்கும். உரிய வெற்றி கிட்டும்வரை ஓய்ந்து விடாத உள்ளப்பாங்கை இயல்பாக அப் பெருந்தகை பெற்றிருந்தார். எனவே அப் பெருமகனார் மேற்கொண்ட இடையறாத முனைப்புடன் கூடிய முயற்சி, 1940 ஆம் ஆண்டில் இராஜபாளையத்தை நகராட்சித் (MUNICIPAL TOWN) தகுதிக்கு உயர்த்தியது.

நகராட்சித் தகுதி இராஜபாளையத்திற்கு கிடைத்தவுடன், பஞ்சாயத்து போர்டு கலைக்கப்பட்டது. 'சிறப்பு அலுவலர்' (SPECIAL OFFICER) நகர்ப் பொறுப்பை ஏற்றார். 1941 ஆம் ஆண்டு நகராட்சித் தேர்தலை அரசாங்கம் அறிவித்தது.

வழக்கம் போல 'ராம மந்திரம்' மாளிகையை நோக்கி, நகர்ப் பிரமுகர்கள் வருகை தந்து அமர்ந்தனர். இராஜபாளையத்தை முனிசிபல் நகரமாகத் திகழ வைத்த இராமசாமி ராஜாவின் அயராத பெரு முயற்சியை, அன்போடும் மரியாதையோடும் அனைத்துச் சமூகப்பெருமக்களும் ஒரு முகமாகப் பாராட்டிப் போற்றி மகிழ்ந்தனர்.

இராஜபாளையம் நகர், இருபது வார்டுகளாக (WARDS) பகுக்கப்பட்டு, தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்க வேண்டிய நகரவை உறுப்பினர் எண்ணிக்கையையும் (MUNICIPAL COUNCILLORS) அறுதியிட்டு அரசாங்கம் அறிவித்திருந்தது. இருபது உறுப்பினர் கள் பொதுத் தொகுதியிலும், தனித் தொகுதிகளில் இரண்டு தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர்களும், முஸ்லீம் ஒருவரும், மகளிர் ஒருவரும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர் களின் பட்டியலில் இடம் பெற்றிருந்தனர்.

தெய்வீகத் தேஜஸ் மிளிரும் திருமுகத்தில் புன்னகை பூக்க, வழக்கம்போல், கூடியிருந்த பெரு மக்களைப் பார்த்து, "என்ன செய்யலாம்? சொல்லுங்கள்!" என்றார் பி.ஏ.சி.ஆர்.

கூட்டத்திலிருந்த அம்பைய ராஜா, வந்திருந்த ஒவ்வொரு வரையும் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தார்.

அமர்ந்திருந்த ஒருவர் எழுந்து நின்று, "ராஜா! இதென்ன கேள்வி? வழக்கம் போல நீங்க சொல்லனும், நாங்க கேட்டுக்கோனும்.. அவ்வளவுதானே? ஆனாலும், நாங்க முதன் முதல்லே இன்றைக்கு எங்க விருப்பம் ஒன்றைச் சொல்லிடலாம்னு எல்லோருமே நினைக்கிறோம்" என்றார்.

பி.ஏ.சி.ஆர். வியப்புடன் கூடியிருந்த பெருமக்களை ஏறிட்டுப் பார்த்தார். நின்றவர், "வேறொன்னுமில்லை ராஜா! நம்ப இராஜபாளையம் நகரவையா ஆகியிருக்கின்னா... முழுக்க முழுக்க உங்களொட முயற்சியாலே தான்! நீங்கதான் இராஜபாளையம் நகரவையின் முதல் தலைவரா இருந்து எங்களுக்கெல்லாம் வழி காட்டனும்.... அதுதான் எங்க எல்லாரோட விருப்பமும்..." எனக் கூறியவாறே கை கூப்பினார்.

கூடியிருந்தவர் அனைவரும் கைகொட்டித் தங்கள் ஒருமித்த விருப்பத்தைத் தெரிவித்தனர்.

பி.ஏ.சி.ஆர், இருகரம் கூப்பி, மிகுந்த நன்றிப் பெருக்குடன் கூடியிருந்த பெருமக்கள் அனைவரையும் பார்த்துப் புன்னகைத்தார்.

பின்னர், நகரவையின் ஒவ்வொரு வார்டுக்கும் பி.ஏ.சி.ஆர். தெரிவித்த உறுப்பினர்களைக் கூடியிருந்தோர் அனைவரும் ஒருமித்து ஆமோதித்தனர். பெண் உறுப்பினரையும், முஸ்லீம் உறுப்பினரையும் கூட ராஜாவையே கூறுமாறு வலியுறுத்தினர். ராம மந்திரத்தில் ராஜா கூறிய அனைவரும், முறையாகப் போட்டியின்றி இராஜபாளையம் நகரவை உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இராஜபாளையம் நகரவையின் முதல் தலைவராக (CHAIRMAN) பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா தேர்ந்தெடுக்கப் பெற்றார். அப் பெருமகனாரது அன்பிற்குரிய எஸ்.எஸ். அம்பைய ராஜா முதல் உப தலைவர் (VICE CHAIRMAN) ஆனார்.

நகரவைத் தலைவராக 30.6.1941 இல் தேர்ந்தெடுக்கப் பெற்ற பி.ஏ.சி.ஆர், அடுத்த நாளே அதாவது 1.7.1941 ஆம் நாள் கூடிய நகரவைக் கூட்டத்தில் முதன் முதலாக, பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் தேவை பற்றிய தீர்மானத்தை நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பினார். ஜுலை கடைசி வாரத்திலும், ஆகஸ்ட் முதல் வாரத்திலும் குடி தண்ணீர்த் தீர்மானம் பற்றிய நினைவூட்டுக் கடிதங்களை அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்துள்ளார்.

இராஜபாளையம் நகரவையைக் குடிதண்ணீர்த் திட்டம் பற்றிய புதிய மதிப்பீட்டை (REVISED PROPOSALS) அனுப்பி வைக்குமாறு 19.8.1941 தேதியிட்ட அரசாங்கக் கடிதம் கிடைக்கப் பெற்ற, மறு வாரமே திட்ட மதிப்பீட்டை உருவாக்கி, நகரவையில் தீர்மானம் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்துள்ள தகவலை அறிகின்றபோது, பி.ஏ.சி.ஆர், இராஜபாளையம் குடிதண்ணீர்ப் பிரச்சனையில் எந்த அளவு அக்கறை கொண்டிருந்தார்? எந்த அளவுக்கு வேகமும், விவேகமும் காட்டினார்? என்கின்ற விபரங்களெல்லாம் தெளிவாகி, அப் பெருமகனாரின் பேருள்ளத்தில் தோன்றிய பொது நல வேட்கையின் பரிமாணத்தை உணர்ந்து வியப்படைகின்றோம் !

நகரவையில் புழுதியில்லாத சாலை அமைப்பு (DUSTLESS ROADS) சம்பந்தமாக அரசாங்கம் ஒரு சுற்றறிக்கையை, தமிழ்நாட்டின் நகரவை அனைத்திற்கும் அனுப்பி வைத்தது. சாலை அமைப்பின் மொத்தச் செலவில் முக்கால் பங்கை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும். கால் பங்கை அளித்துச் சாலை அமைப்பை ஏற்படுத்திக் கொள்ளும் நகரவைகள் உடனடியாகத் தங்கள் மதீப்பீட்டையும், விருப் பத்தையும் தெரிவித்து அரசாங்க அனுமதி கோரலாம். சுற்றறிக்கை 19.8.1941 தேதியிட்டு எல்லா நகரவைகளுக்கும் அனுப்பி வைக்கப் பெற்றது.

இராஜபாளையம் நகரவைத் தலைவர் பி.ஏ.சி.ஆர். விட்டு விடுவாரா இத்தகைய வாய்ப்பை? சுற்றறிக்கை கிடைத்த மறு வாரமே, நகரவையின் அவசரக் கூட்டத்தைக் கூட்டினார்.

நகரத்தின் சாலைகளில் முன்னுரிமை கொடுக்கப்பட வேண்டியவை எவையென உறுப்பினர்களின் கருத்தறிந்து, அந்தச் சாலைகளை அமைப்பதற்குரிய மதிப்பீட்டைத் தயாரித்து, தீர்மானத்துடன் மதிப்பீட்டறிக்கையை அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்தார்.

இராஜபாளையம் நகரத்தில் புழுதியற்ற சாலை அமைக்க, அரசாங்கம் 7.11.1941 தேதியிட்ட அனுமதி உத்தரவில் ரூ.15,000 வழங்கியது. நகரவையின் சார்பில் ரூ. 5,000 அளித்து, முதன் முதலாக இராஜபாளையத்தில் புழுதியில்லாத சாலையைத் (தார்ரோடு) தாம் பதவியேற்ற ஆறே மாதத்திற்குள் அமைத்து மக்களின் பாராட்டுதலைப் பெற்றார் பி.ஏ.சி.ஆர்!.

தெருக்களையும், சாலைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்வதில் தனிக் கவனம் செலுத்திய நகரவைத் தலைவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜா, வாரத்தின் சில நாள்களை, தெருக்களை நேராகச் சென்று பார்க்கும் முறையை வழக்கப்படுத்திக் கொண்டார். மக்களின் விருப்பங்களையும், எண்ணங்களையும் அறிந்து கொள்வதற்காகத் தெருக்களில் நின்றுவிசாரிப்பார். குறைகளைக் கேட்டு, குறிப்பாக மனங்கோணாமல், முகம் சுழிக்காமல் செவிமடுத்து, உரிய வகையில் இயன்றளவு வேகமாகக் கேட்ட குறைகளைப் போக்கிவிட்டு, குறை சொன்னவர்களை அழைத்துக் கூறிவிடவும் செய்வார் அப் பெருமகனார்.

அந்தக் காலத்தில் காலரா, அம்மை ஆகியவை அடிக்கடி நகரங்களில் புகுந்து, மக்களுக்கு மரணத்தை விளைவிக்கும் அபாயம் இருந்து வந்தது. இராஜபாளையத்தில் காலரா ஊசி, அம்மை ஊசி முறையாகப் போடுவதற்கான ஏற்பாட்டை முனைந்து செயலாற்றக் கருத்தூன்றி ஆவன செய்தார் தலைவர் ராஜா.

இரவில் சில தெருக்களுக்குச் சென்று, விளக்குகள் வெளிச்சம் தருகின்றனவா எனப் பார்க்கும் பழக்கத்தையும் ஏற்படுத்திக் கொண்டிருந்தார் தலைவர் பி.ஏ.சி.ஆர்.

நகரில் பிரசவ விடுதியொன்று அமைக்கப்பட வேண்டும். அது நகரத்திற்கு இன்றியமையாத் தேவை என்பதை உணர்ந்தார் பி.ஏ.சி.ஆர். நகரவையின் சார்பில் பிரசவ விடுதியை அமைக்க முயன்றபோது, அப்போதைய நிலையில் நகரவையின் நிதி நிலை போதுமானதாக இல்லை. என்றாலும் பி.ஏ.சி.ஆர். தாமே எண்ணித் துணிந்த முயற்சியை இடையே விட்டுவிட மனமில்லாது, தாமே முன் வந்து, தமது சொந்தப் பொறுப்பில், அந்தக் காலத்திலேயே ரூபாய் பதினைந்தாயிரம் செலவிட்டு மருத்துவ விடுதியொன்றைக் கட்டி முடித்தார். இந்த பிரசவ மருத்துவ விடுதி இராமசாமி ராஜாவின் அன்னையார் பெயரில் "சிட்டம்மாள் பெண்கள் மருத்துவமனை" என அழைக்கப் பெற்றது. பொது மக்களுக்கு பயனளிக்கும் வகையில் நகரின் மத்தியில் அமைக்கப்பெற்ற மருத்துவ மனை 7.5.1942 இல் திறந்து வைக்கப் பெற்று நகரவைக்கு வழங்கப்பட்டது. இன்றும் இந்த மருத்துவ மனை ஏழை எளிய மக்களுக்கு மிகுந்த பயனளித்து வருகின்றது. கருணை நிறைந்த அப் பெருமகனாரின்



பி.ஏ.சி. சிட்டம்மாள் மருத்துவ மனை

வள்ளன்மையால் உருக்கொண்ட இப்பிரசவ விடுதி, பேறு காலத்தில் எளியவர்களைக் கண் கலங்காது காத்து வருகின்ற தாய் வீடாக விளங்கி வருகின்றது!.

நகரவையின் பல்வேறு தெருக்களில் கழிப்பறைகள் கட்டப் பட்டன. அவைகள் சுத்தமாகப் பேணப்படுகின்றனவா என்பதைச் சில வேளைகளில் நேராகச் சென்று சோதித் திருக்கிறார் தலைவர் பி.ஏ.சி.ஆர். நகர எல்லைக்குள் கலப்படப் பொருள்கள் விற்பனை செய்வதைக் கண்காணித்து வருமாறு நகரவையின் உரிய அலுவலர்களுக்கு உத்தரவு பிறப்பித்துள்ளார் தலைவர். 1942-43 ஆம் ஆண்டில் நகரவை அலுவலர்களால் முப்பத்து ஒன்பது கலப்படக் குற்றங்கள் கண்டு பிடிக்கப்பட்டுத் தண்டிக்கப் பெற்றுள்ளன.

பிறந்த குழந்தையைப் பேணிக் காப்பது போல், தம்மால், தம் முயற்சியால் பிறந்த இராஜபாளையம் நகரவையை, ஓர் அன்னையைப் போல் அரவணைத்து ஆறு ஆண்டுகள் பேணிக் காத்துப் பெருமை அடைந்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். அந்நிய அரசாங்கத்தின் பிடியில் நாடும், நகரமும் அவலங்களை அனுபவித்துக் கொண்டிருந்த நிலையிலும், இயன்ற அளவு நகரவையின் வாயிலாக நகர மக்களுக்கு ஓர் ஈடுபாட்டுடன் நலம் பெருக நற்பணிகளைச் செய்வதில் ஆர்வம் காட்டி, அரிய தொண்டாற்றிய தலைவர் பி.ஏ.சி.ஆர். செய்த சேவைகளின் அருமை, அப் பெருமகனார் பெற்ற தனிப்பெருமை!.

சென்னை மாகாணக் கவர்னரின் ஆலோசகராக (ADVISOR) பொறுப்பு வகித்த டி. ஆஸ்டின், 1945 ஆம் ஆண்டு இராஜபாளையம் வருகை தந்தார். அவரை வரவேற்றுத் தமது தொழில் நிறுவனங்களுக்கெல்லாம் அழைத்துச் சென்று காண்பித்தார் பி.ஏ.சி.ஆர். வறண்ட இராமநாதபுரம் மாவட்டத்தின் தோற்றத்தைத் தமது தொழில் ஆக்கங்களால் ஒரு புதிய மாற்றத்திற்கு வழிப்படுத்திக் கொண்டிருக்கும் ராஜாவின் முயற்சிகளைக் கண்டு, வியப்புக் கொண்டு, ஆலோசகர்

ஆஸ்டின் ராஜாவைப் பெரிதும் பாராட்டினார். பின்னர் ஆலோசகரை ரயிலில் அனுப்பி வைக்கச் சென்ற ராஜாவிடம் தனியாக, கவர்னர், ஒரு மகிழ்ச்சியான செய்தியைத் தெரிவிக்கச் சொன்னதாக ஆலோசகர் கூறினார்.

அந்த மகிழ்ச்சியான செய்தியை அறிந்த போது, பி.ஏ.சி.ஆர். அதனை மனம் ஒப்பி ஏற்றுக் கொள்ளவில்லை ! கவர்னரின் விருப்பத்தை ஏற்றுக் கொள்ள இயலாமல் இருப்பதற்கு வருத்தம் தெரிவித்ததோடு, கவர்னரைப் பொறுத்தக் கொள்ளுமாறு வேண்டுவதாகவும் ஆலோசகர் ஆஸ்டினிடம் பணிவாகத் தெரிவித்தார்.

ஆலோசகர் ஆச்சரியப்பட்டார்! பலர் தமக்குக் கிடைக்க வில்லையே என ஏங்கிக் கொண்டிருப்பதையும், சிலர் அதற்காக, அதனைப் பெறுவதற்காக முயற்சித்துக் கொண்டிருப்பதையும் தெளிவாக அறிவார் ஆஸ்டின். கவர்னரே விரும்பி அளிப் பதாகக் கூறுகின்ற நிலையில், ராஜா அதை மறுத்து வேண்டா மெனக் கூறுவதைக் கண்ணுற்றுப் பிரமித்துப் போய்விட்டார் ஆஸ்டின்!.

மறுத்தது என்ன? மகிழ்ச்சியான அந்தச் செய்திதான் என்ன?

வேறொன்றுமல்ல! ராஜாவுக்கு 'ராவ்பகதூர்' பட்டம் அளிக்க விரும்புவதாகக் கவர்னர் கருதுவதாகத் தெரிவித்தார் ஆலோசகர்.

தேசாபிமானியான ராஜா, ஆங்கிலேயர் அளிக்கும் பட்டத்தைப் பெற்றுக் கொள்ள உடன்பட இல்லை.

நாடு விடுதலை பெற்ற நிலையில், **1947** ஆம் ஆண்டு நகரவைத் தேர்தல்கள், அரசியல் கட்சிகளின் சார்பில் நிகழத் தொடங்கின. இராஜபாளையம் நகரில் காங்கிரஸ் கட்சி, பி.எஸ்.கே.யின் தலைமையில் மிகுந்த வலிவோடும் பொலிவோடும் விளங்கியது. காங்கிரஸ் கட்சியின் சார்பில் நகரவைத் தேர்தலுக்கு நிற்பவர்கள், உறுதியாக வெற்றி வெறும் வாய்ப்பு இருந்தது.

கட்சி சார்பில் தேர்தல்கள் நிகழவுள்ளதை அறிந்ததுமே, பி.ஏ.சி.ஆர். தேர்தல்களில் பங்கேற்கக் கூடாதென்ற உறுதி பூண்டார். காங்கிரஸ் கட்சியின் சார்பில் தேர்தலில் நிற்குமாறும், வெற்றி பெறுவது எளிமையானதென்றும் பி.எஸ்.கே. உட்பட பல காங்கிரஸ்காரர்கள் பி.ஏ.சி.ஆரிடம் வலியுறுத்தி வேண்டினர். காங்கிரஸ் கட்சியை நேசிப்பவர்தான் பி.ஏ.சி.ஆர், தமது சகோதரர் பி.எஸ்.கே. காங்கிரஸ் பேரியக்கத்தில் ஈடுபாடு கொண்டு இயங்கி வருகின்றபோது, அதற்குத் துணை நின்றவர் தான்; **1938** ஆம் ஆண்டு இராஜபாளையத்தில் நடந்த இந்திய தேசீயக் காங்கிரசின் நாற்பதாவது சென்னை மாகாண அரசியல் மாநாட்டின் வரவேற்புக் குழுவில் பொருளாளராகப் பி.ஏ.சி.ஆர். பணியாற்றியவர்தான், விடுதலைப் போராட்ட வீரர்களுக்குத் தம்மாலான நிதி உதவியை அவ்வப்போது அளித்தவர்தான், காங்கிரஸ் கட்சியின் சார்பில் நகரில் நடக்கும் விழாக்களுக்கு நன்கொடை வழங்கியவர்தான், இராஜபாளையத்திற்கு காந்தி மகாத்மாவையும், நேரு பெருமகனாரையும் வரவேற்றுப் பேணியவர்தான்! என்றாலும் ஒரு கட்சியின் சார்பில் தேர்தலில் நின்று, நகரவைத் தலைவராகப் பதவி வகிப்பதை அப் பெருமகனார் விரும்பவில்லை.

பதினைந்து ஆண்டுகள் பஞ்சாயத்துத் தலைவராகவும், ஆறு ஆண்டுகள் நகரவைத் தலைவராகவும் மக்களின் ஏகோபித்த வேண்டுகோளை ஏற்றுப் பொறுப்பு வகித்துவிட்டு, காங்கிரஸ் கட்சியேயாயினும், ஒரு கட்சியின் சார்பில் பதவி வகிப்பதை பி.ஏ.சி.ஆரின் பேருள்ளம் ஏற்க மறுத்தது! உடன்படாது உறுதியாக நின்றது!. மக்களின் பிரதிநிதியாகித் தொண்டாற்றிய அப் பெருமகனார், கட்சியின் பிரதிநிதியாக இருக்கக் கருதினாரில்லை!

எம். ராமசாமி மூப்பனார் இராஜபாளையம் நகரவைத் தலைவராக வீற்றிருந்தபோது, நகர மன்றத்திற்கு புதிய கட்டிடம் ஒன்றை உருவாக்கத் தீர்மானிக்கப் பெற்றது. பஞ்சாயத்து போர்டு

காலத்திலிருந்து நகரத் தந்தையாக மதித்துப் போற்றப் பெற்ற பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தமது ஆகி வந்த திருக்கரத்தால் கட்டிடம் உருவாக 1953 ஆம் ஆண்டில் 'வாஸ்து' செய்து வாழ்த்தினார்.



நகரவை கட்டிட அடிக்கல் நாட்டு விழாவில்
பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தியாகசீலர் பி.எஸ்.கே.

* * *

# 12

# ஐரோப்பியப் பயணமும் ஆக்கமளித்த அனுபவமும்

இலண்டனில் தங்கி, ஐ.சி.எஸ். தேர்வுக்காகப் பயின்று கொண்டிருக்கும் தமது மூத்த மாப்பிள்ளை என்.கே. ராமராஜு, இராஜபாளையத்தை விட்டு 1931 ஆம் ஆண்டு சென்று நான்கு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டதை எண்ணிப் பார்த்த பி.ஏ.சி.ஆர். அவரை அழைத்துவர இலண்டன் செல்ல வேண்டுமெனத் திட்டமிட்டார். பி.ஏ.சி.ஆர். 1935 ஆம் ஆண்டு ஜுன் மாதத்து நல்ல நாளொன்றில் அயல்நாட்டுப் பயணத்தை மேற்கொள்ள மனம் கொண்டார்.

மதுரை ஹார்வி மில்லின் முகவராக (AGENT) இருந்து, மில்லிருந்து உற்பத்தியாகி வரும் நூலைக் கைத்தறியாளருக்கு விற்பனை செய்து வந்த வணிகத்தைப் பல்லாண்டுகளாக மேற்கொண்டு வந்த பி.ஏ.சி.ஆரின் உள்ளத்துள், இராஜபாளையம் பகுதியில் ஒரு பஞ்சாலை நிறுவும் கருத்துக் கருக்கொண்டு, சில காலமாக வளரத் தொடங்கியிருந்தது.

ஆலைத் தொழிலுக்கு மூலப் பொருளான பருத்தி விளைகின்ற பகுதியாகவும், வேலை வாய்ப்பற்ற வறண்ட பிரதேசமாகவும் இருந்து வருகின்ற சூழல், பஞ்சாலை நிறுவுதற்கு ஏற்றதாக அமையுமெனக் கருதினார் இராமசாமி ராஜா. இராஜபாளையம் நகரில் மட்டுமல்லாது, சுற்று வட்டாரங்களிலும் வாழ்ந்து வருகின்ற மக்களின் வறுமையும், ஏழ்மையும் நீக்கப்பட வேண்டிய அவசியத்தைப் பி.ஏ.சி.ஆர். தெளிவாக உணர்ந்திருந்தார். அந் நாளில் பஞ்சாலைத் தொழிலில் முன்னணியில் நின்ற இடம், பிரிட்டனின் லங்காஷயர் பகுதியாகும். தமது உள்ளத்துள் கருக்கொண்டுள்ள தொழில் உருக்கொண்டு அமைய வேண்டு



பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் முதல் மருமகனார் என்.கே. ராமராஜு

மென்றால், அதன் நெளிவு, சுழிவுகளை நேராகப் பார்த்துத் தீர்மானிப்பது நல்லதென அப் பெருமகனார் நம்பினார். எனவே தமது இலண்டன் பயணத்தை, பஞ்சாலைத் தொழிலின்

நுட்பத்தையும், திட்பத்தையும் அறிந்து கொள்ள நல்லதொரு வாய்ப்பாக அமைத்துக் கொண்டார்.

பி.ஏ.சி.ஆர், தமது அயல்நாட்டுப் பயணத்தில் இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ஜெர்மனி ஆகிய ஐரோப்பிய நாடுகளைப் பார்த்து வரத் திட்டமிட்டார். முதலில் இலண்டனுக்குச் சென்று, மாப்பிள்ளை ராமராஜுவை அழைத்துக் கொண்டு வருவதற்காகவே பயணத்தை மேற்கொள்ள நினைத்திருந்தார் ராஜா. பெருந் தொழில் தொடங்கும் எண்ணம், அப் பெருமகனாரின் பேருள்ளத்தில் உறுதியான நிலைக்கு உருவாக்கம் கொண்டதனால், பயணத்தை விரிவாக்கம் செய்து கொண்டார்.

தங்கள் அன்பிற்கும், மரியாதைக்கும் உரிய பஞ்சாயத்துத் தலைவர் அயல்நாடு செல்வதை அறிந்த மக்கள், தனித் தனியாக மாலைகளுடன் ராம மந்திரத்திற்கு வந்து, தங்கள் மனமுவந்த வாழ்த்தையும், வணக்கத்தையும் தெரிவித்து மகிழ்ந்தனர்.

அந்தக் காலத்தில், ராஜுக்கள் சமூகத்தைச் சார்ந்த ஆண்கள், பெரும்பான்மையும் தலையில் 'கிராப்' செய்து கொள்வதில்லை! பெண்களைப் போலவே சிகையை வளர்த்துக் கொண்டை போட்டுக் கொள்வார்கள்! இராமசாமி ராஜாவும் சிகை வளர்த்துக் கொண்டை போட்டுக் கொள்ளும் பழக்கத்தைக் கொண்டிருந்தார்! அயல்நாட்டுக்குப் பயணம் மேற்கொண்டு புறப்பட்ட போதும், ராஜா தலையில் நீண்ட சிகையுடன் தான் புறப்பட்டார்.

இலண்டன் செல்லும் வழியில் ராஜா இலங்கையை அடைந்து, சில நாள்கள் அங்கு தங்கினார். இராஜபாளையத்திலிருந்து புறப்படும்போது ராஜாவுடன் எஸ்.ஆர்.நாராயண ராஜா, எஸ்.எஸ்.அம்பைய ராஜா, கந்தசாமி செட்டியார் ஆகியோர் உடன் புறப்பட்டுச் சென்றனர்.

இலங்கையில் தங்கியிருந்தபோது பி.ஏ.சி.ஆர். சிகையை நீக்கிக் 'கிராப்' செய்து கொண்டார். ராஜாவை இலண்டனுக்குக்

கப்பலில் அனுப்பிவிட்டு உடன் சென்ற மூவரும் இராஜபாளையம் திரும்பினர்.



ஐரோப்பியப் பயணத்தின்போது இலங்கையில்
பி.ஏ.சி.ஆருடன் எஸ்.எஸ். அம்பைய ராஜா, எஸ்.ஆர். நாராயண ராஜா,
எஸ். கந்தசாமி செட்டியார்

இலண்டனில், தமது அன்பிற்கும் மரியாதைக்குமுரிய மாப்பிள்ளையுடன் தங்கிய பி.ஏ.சி.ஆர். நாள்தோறும் பஞ்சாலைகளுக்கு மாப்பிள்ளை ராமராஜுவுடன் சென்று பார்வையிட்டு, அங்கு பணி ஆற்றும் அலுவலர்களிடமும் மிகுந்த ஆர்வத்துடன்



இலண்டனில் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். முதல் மருமகனார்
என்.கே. ராமராஜுவுடன்

ஆலைகளில் இயக்கம் குறித்துக் கேட்டுச் செவி மடுப்பார். நுணுக்கமான சில சந்தேகங்களை வல்லுநர்களிடம் எழுப்பி, நுட்பங்களை அறிந்து கொள்வதில் கருத்தூன்றுவார். தமக்கு ஏற்படும் சின்னச் சின்ன ஐயங்களைக்கூட வினவி, விடை பெறுவதில் பி.ஏ.சி.ஆர், ஒரு சிறிதும் வெட்கப்படுவதில்லை. பூரணமாகத் தெளிவு பெற்றால்தான் அந்த இடத்தை விட்டுப் புறப்படுவார்!.

ஐரோப்பிய நாடுகளின் நகரங்களில், வணிகம் செய்வோர் ஒன்றாகச் சேர்ந்து, ஓர் அமைப்பை உருவாக்கி, தங்கள் நலன்களைப் பேணிக்கொள்வதோடு, நகர மக்களின் தேவை யறிந்து செயற்படும் முறையைப் பின்பற்றி வருகின்ற இயக்க நெறியைப் பார்த்து வியப்படைந்தார் பி.ஏ.சி.ஆர். நகரங்களில் தோன்றியுள்ள இத்தகைய அமைப்பு CHAMBER OF COMMERCE என அழைக்கப் பெற்றது. வணிகர்களின் சங்கமமாக, வியாபாரிகள் ஒன்று கூடிச் செயலாற்றும் சங்கமாக உருவாக்கம் பெற்றிருந்த அந்த அமைப்புகளின் பயனளிக்கும் இயக்கம், பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் மனத்தைப் பெரிதும் ஈர்த்தது. அத்தகைய அமைப்பு களின் இயக்கம் பற்றியும், செயற்பாடுகள் குறித்தும் தெளிவாக அறிந்து கொள்வதில், பி.ஏ.சி.ஆர், மிகுந்த ஆர்வம் காட்டினார். 'CHAMBER OF COMMERCE' அமைப்பில் பொறுப்பு வகித்த சிலரை நேராகக் கண்டு, அமைப்பு முறை, இயக்க நெறி ஆகியவற்றைப் பற்றிய விளக்கங்களைக் கேட்டறிந்தார். இத்தகைய அமைப்பு இராஜபாளையம் போன்ற இந்திய நகரங்களில் உருவாக்கப் பட்டால், அரசாங்கத்துடனும், பொது மக்களுடனும், சக வர்த்தகர்களுடனும் இணக்கமான தொடர்பு கள், அமைப்பின் மூலம் தோன்றி, வாணிப வளர்ச்சிக்கு நல்லதொரு வாய்ப்பாக அமையுமெனக் கருதினார் பி.ஏ.சி.ஆர்.

உலக சரித்திரத்தில் பதினெட்டாவது நூற்றாண்டும், பத்தொன்பதாவது நூற்றாண்டும், மனித வாழ்க்கையில் சில மாறுதலான போக்கை, மனிதச் சிந்தனையில், ஒரு புதிய புரட்சிகரமான மாற்றத்தை உருவாக்கின. பிரிட்டனின் தொழில்

புரட்சியால் ஏற்பட்ட இயந்திர மாறுதல்களால் பெருக்கெடுத்த உற்பத்தியும், பிரான்சில் ஏற்பட்ட மக்கள் புரட்சியால் உருவான அடிமைப்பட்டோரின் விடுதலை வேட்கையும் மானுடத்தின் வாழ்விலும், சிந்தனையிலும் மகத்தான மாற்றத்தைத் தோற்றம் செய்திருந்தன. இயந்திர மயமான பஞ்சாலைத் தொழிலில் முன்னணியில் நின்ற பிரிட்டனுக்கு, மூலப் பொருளான பருத்தி அமெரிக்கா, எகிப்து, இந்தியா முதலிய தேசங்களிலிருந்துதான் வந்து கொண்டிருந்தது. இந்தியா, பிரிட்டிஷாரின் காலனியாக ஆகி விட்ட பின்னர், ஒரு கால கட்டத்தில் பிரிட்டனின் பருத்தித் தேவையை முழுக்க முழுக்க இந்தியாவே நிறைவு செய்தது.

ஒரு தொழிலுக்கு 'மூலப் பொருள்' என்பது 'மூச்சுக்காற்று'ப் போல! மூலப் பொருளையே வேறு நாடுகளிலிருந்து வரவழைத்து குறிப்பாகப் பஞ்சாலைத் தொழில் வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க பெருமை பெற்றுத் திகழும் பிரிட்டனின் துணிவை, பி.ஏ.சி.ஆர். பெரிதும் வியப்புடன் எண்ணிப்பார்த்தார். பருத்தி விளையும், தாம் பிறந்த இராஜபாளையம் பகுதி, பஞ்சாலை நிறுவப் பொருத்தமான இடமெனக் கருத்துக் கொண்டார். வானம் பார்த்த வறண்ட பகுதியில் வாழ்ந்திருக்கும் மக்களுக்குப் பஞ்சாலைத் தொழில், கவலையற்ற வாழ்க்கையை அளிக்கும் ஒரு புதிய உதயத்தைத் தோற்றுவிக்குமென அப் பெருமகனாரின் பேருள்ளம் நம்பிக்கை கொண்டது.

பஞ்சாலை ஒன்றை இராஜபாளையத்தில் நிறுவிவிட வேண்டுமென இங்கிலாந்தில் தங்கியிருந்தபோதே இராமசாமி ராஜா உறுதி கொண்டு விட்டார். அந்த உறுதி கிளைத்த பின்னர், 'மான்செஸ்டர்' பகுதிக்குச் சென்று, ஒவ்வொரு ஆலையாகக் காணும்போதெல்லாம். 'இது இராஜபாளையத்திற்கு ஒத்து வருமா?' 'இதை இராஜபாளையத்தில் நடைமுறைப்படுத்த முடியுமா?' எனத் தமது மனத்திற்குள் சில எடைக்கற்களைக் கொண்டு, நிறுத்துப் பார்க்கவும், நிதானித்துப் பார்க்கவும் தொடங்கி விட்டார் !

இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்சு முதலிய ஐரோப்பிய நாடுகளின் தொழில் முனைப்பு, மக்களின் வாழ்க்கை அமைப்பு,

ஆன்மீகச் சிறப்பு ஆகியவற்றைக் கண்டறிவதில் கரை கடந்த ஆர்வம் கொண்ட பி.ஏ.சி.ஆர், திரும்பிய போது பாரீசிலிருந்து மார்சேல்ஸ் துறைமுகத்திற்கு ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்தார்.

பிரான்சு நாட்டின் மார்சேல்ஸ் - இந்திய நாட்டின் விடுதலைப் போராட்ட வரலாற்றில் மறக்க முடியாத வீர நிகழ்ச்சி யொன்றைப் பெற்றது போலவே, இராமசாமி ராஜாவின் வாழ்க்கையில் என்றென்றும் இதயத்தில் இடம் பெற்ற இனிய நிகழ்ச்சியொன்றுக்கு ஆதாரமாக அமைந்தது !

ஆங்கில மொழிப் புலவராகவும், மராட்டிய மொழிக் கவிஞராகவும், தேச பக்தராகவும், தியாக சீலராகவும், இந்து சாம்ராஜ்யத்தை உருவாக்க ஆர்வம் கொண்டிருந்த வீர சாவர்கர் இலண்டன் சென்று, இந்தியர்களிடையே தேசாபிமானத்தையும், புரட்சி உணர்வையும் கிளர்ந்தெழச் செய்து கொண்டிருந்தார். 'இந்தியாவின் சுதந்திரப் போர்'(INDIAN WAR OF INDEPENDENCE) எனும் அத் தேசபக்தரின் ஆங்கில நூல், உலகமெங்குமுள்ள விடுதலை வீரர்களுக்கு அனுப்பி வைக்கப்பெற்றதை அறிந்த பிரிட்டிஷ் அரசாங்கம், அவரைக் கண்காணிக்கத் தொடங்கியது. இலண்டனில் 'கர்ஜான் வில்லி' என்ற ஆங்கிலேயரைச் சுட்டுக் கொன்ற வழக்கில் வீர சாவர்கர் கைது செய்யப்பட்டு, இந்தியாவிற்குக் கப்பலில் அழைத்துச் செல்லப்பட்டார். கப்பல் மார்சேல்ஸ் துறைமுகம் வந்து சேர்ந்த போது, ஏற்கனவே திட்டமிட்டபடி, கரையில் வீர சாவர்கரை எதிர்பார்த்து வீர விளக்கு வ.வே.சு. ஐயர் காத்து நின்றார் !

கப்பலில் இருந்த கழிப்பறைக்குச் சென்ற வீர சாவர்கர், கழிப்பறைத் துவாரத்தின் வழியே கடலில் குதித்து, இரண்டு மைல் தூரம் நிர்வாணமாகக் கடலில் நீந்தி, கரையில் நின்ற வ.வே.சு.ஐயரைக் கட்டித் தழுவினார் ! என்றாலும் தொடர்ந்து படகில் வந்த பிரிட்டிஷ் காவலரும், பிரஞ்சுக் காவலரும் சேர்ந்து, சாவர்கரைக் கைது செய்து, கப்பலுக்குக் கொண்டு சென்று,

சித்திரவதை செய்து, செத்த பிணம் போல் ஆக்கிப் பலமான காவல் வைத்தனர்.

மார்சேல்ஸ் துறைமுகம், இந்நிகழ்ச்சிக்குப் பின்னர், தேசாபிமானமிக்க இந்தியர்களின் மனத்தில் மறக்க முடியாத தாயிற்று! ஆனால் இராமசாமி ராஜாவின் மனத்திலோ, மார்சேல்ஸ், மறக்க இயலாத இனிய நிகழ்ச்சியொன்றை இடம் பெற வைத்தது!.

ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர். எதிரே கிறித்தவப் பாதிரியார் ஒருவர் அமர்ந்திருப்பதைப் பார்த்தவுடன், வணக்கம் தெரிவித்தார்.

"கர்த்தர் உங்களைக் காப்பார்" என்றார் பாதிரியார்.

"கர்த்தரால் தான் என் கவலையைப் போக்க முடியும்! " என்றார் ராஜா.

"கவலையா?" என வியந்து வினவினார் பாதிரியார்.

'ஆமாம்' எனத் தலையசைத்தார்.

"சொல்ல முடியுமென்றால், சொல்லக் கூடியதென்றால் சொல்லுங்களேன்! " என்றார் புன்னகைத்தவாறே, கிறித்தவப் பாதிரியார்.

இந்தியாவிலிருக்கும் தமது துணைவியார் கருவுற்று இருப்ப தாகவும், நிறை மாதமாக இருப்பதால் அதைப் பற்றியே நினைவில் கவலை கொண்டிருப்பதாகவும் பணிவுணர்வோடு பாதிரியாரிடம் தெரிவித்தார் ராஜா.

"அப்படியா?" எனக் கேட்ட பாதிரியார், "உங்களுக்கு இது முதல் குழந்தையா?" என வினவினார்.

"இல்லை, இல்லை! ஏற்கனவே இரண்டு பெண் குழந்தைகள் இருக்கின்றார்கள்! " என்றார் பி.ஏ.சி.ஆர்.

“அப்படியானால், இப்போது பிறக்கும் குழந்தை, ஆண் குழந்தையாக அமையும், கர்த்தர் கருணை புரிவார்” எனக் கூறிய கிறித்தவப் பாதிரியார், தமது பயணப் பையிலிருந்து ஓர் அழகிய சிறு பொம்மையை எடுத்து, சற்றே கண்மூடிப் பிரார்த்தித்து, ராஜாவிடம் கொடுத்தார். எழுந்து, இரு கரங்களாலும் பெற்றுக் கொண்ட அந்த அழகிய ஆண் பொம்மையக் கண்களில் ஒற்றிக் கொண்ட பின்னர், பயணப் பெட்டிக்குள் வைத்துப் பத்திரப் படுத்தினார் ராஜா.

ஒரு வாரத்திற்குள் பாதிரியாரின் பிரார்த்தனைப்படியே நடந்தது! ஆம், மதுரையிலிருந்து பி.எஸ். குமாரசாமி ராஜா தந்தி அனுப்பி இருந்தார். ‘ஆண் குழந்தை பிறந்திருக்கிறது; சுகப் பிரசவம்; தாயும், சேயும் நலமாக இருக்கின்றனர்’ எனும் தந்தி வாசகத்தைக் கண்ணுற்ற பி.ஏ.சி.ஆர். பெற்றறியாத பெரு மகிழ்ச்சி கொண்டார்! தமது மரபு தழைக்க, ஆறாவதாக திருச்செந்தூர் ஆறுமுகச் செவ்வேளின் திருவருளால் மகன் பிறந்திருப்பதாக மன நெகிழ்ச்சி அடைந்தார்! ‘முருகா’ எனச் சற்றே கண்மூடிப் பிரார்த்தித்தார்.

தொழில் தொடங்க ஊக்கமும், மரபு தழைக்க ஆக்கமும் அளித்த ஐரேப்பியப் பயணமும், **1935** ஆம் ஆண்டும், இராமசாமி ராஜாவின் வாழ்க்கையில், என்றென்றும் நினைவில் தோன்றி நெகிழ்ச்சியும், மகிழ்ச்சியும் அளிப்பவையாயின!.

மாப்பிள்ளை ராமராஜுவை அழைத்துக் கொண்டு மனக் களிப்புடன் தாயகம் திரும்பிய பி.ஏ.சி.ஆர். தமது துணைவியார் சேதுராமம்மாளையும், மகனையும் பேரானந்தத்துடன் முதலில் கண்டபோதே, மார்சேல்ஸ் பயணத்தில் பாதிரியாரைப் பார்த்ததையும், அவர் பிரார்த்தித்து வாக்களித்ததையும், அழகிய சிறு ஆண் பொம்மை ஒன்றை வழங்கியதையும் மனைவியிடம் கூறினார். பத்திரப்படுத்தி வைத்திருந்த பொம்மையை, துணைவியாரிடம் கொடுத்தார். சேதுராமம்மாள், புனிதப் பொருளாகப் பொம்மையைப் போற்றிக் கண்களில் ஒற்றிக்

கொண்ட பின், குழந்தையை எடுத்து, அதன் இடுப்புக் கயிற்றில் பொம்மையை இணைத்துக் கட்டி மகிழ்ந்தார். ஐந்து வயது ஆகும் வரை, ஒரு புனித ஆன்மாவின் பிரார்த்தனைப் பொருளான அந்தச், சிறு பொம்மை, குழந்தையின் எழிலார்ந்த இடுப்பில் இணைந்து இருந்ததாம்!.

தமக்கு ஆறாவதாக, மரபு தழைக்கப் பிறந்த ஆண் குழந்தைக்குப் பெயர் சூட்டி மகிழ நினைத்த பி.ஏ.சி.ஆர். அந்தக் காலத்தில் அதிகம் பழக்கமில்லாத 'ராம சுப்பிரமணியம்' எனும் பெயரைக் குழந்தைக்கு இட்டு மகிழ்ந்தார். தமது ஜனனத்துக்குத் திருவருள் புரிந்த இராமேஸ்வரம் பெருமானையும், தமது மனத்தில் வீற்றிருந்து தம்மை வழி நடத்திக் கொண்டிருக்கும் திருச்செந்தூர் முருகப் பெருமானையும் நினைவில் கொண்டு, நெகிழ்ந்தும், மகிழ்ந்தும் குழந்தைக்குச் சூட்டிய பெயரே ராம சுப்பிரமணியம்.

தமது முதல் வெளிநாட்டுப் பயணத்தில் மறக்க இயலாத மகிழ்ச்சியூட்டிய 'மார்சேல்ஸ்' பி.ஏ.சி.ஆர், பெற்ற மனச் சொத்தல்லவா? தாம் பெற்றிருந்த 'புறச் சொத்து' ஒன்றுக்கு 'மார்சேல்ஸ்' எனப் பெயர் சூட்டி மகிழ நினைத்தார் அப் பெருமகனார்.

'வேண்டாம்' என்ற போதும் விடாப்பிடியாக சேத்தூர் ஜமீந்தார் தமக்குக் கொடுத்த எஸ்டேட், பி.ஏ.சி.ஆரின் நினைவுக்கு வந்தது. திருவருளால் தம்மைத் தேடி வந்த அந்த எஸ்டேட்டுக்கு, 'மார்சேல்ஸ் எஸ்டேட்' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார் அப் பெருந்தகை!.

* * *

# 13

# நிழல் தரும் கற்பகமும் நிலைத்த புகழ் நிறுவனமும்

ஆக்கத்திலே, தொழில் ஊக்கத்திலே, இராஜபாளையம் பகுதியை உயர்த்தும் நோக்கத்திலே மனதில் உறுதி கொண்டு, வெளிநாட்டுப் பயணத்திலிருந்து திரும்பிய பஞ்சாயத்துத் தலைவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவை, இராஜபாளையம் நகர மக்கள் மிகுந்த மகிழ்ச்சியோடும், மரியாதையோடும் வரவேற்றனர். சமூகத் தலைவர்களும், நாட்டாண்மை சிலரும் ராம மந்திரத்திற்கு வருகை புரிந்து, பயண விபரங்களைக் கேட்டு மகிழ்ந்தனர். உற்றாரும், உறவினரும் பயண நிகழ்ச்சிகளை கேட்டு ஆனந்தித்ததோடு, மகன் பிறந்திருப்பதை மகிழ்வோடு குறிப்பிட்டு வாழ்த்தினர்.

நம்பிக்கைக்குரிய சில உறவினர்களையும், தம்மேல் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ள நகரப் பெருமக்கள் சிலரையும் அழைத்து, பஞ்சாலை ஒன்றை, இராஜபாளையம் பகுதியில் நிறுவத் தாம் கொண்டுள்ள கருத்தை, பி.ஏ.சி.ஆர். வெளியிட்டார். மிகுந்த பரவசத்துடன் ஒருவர் சொன்னார்: "இராஜபாளை யத்திற்கு யோகம் பிறக்கப் போகிறது!"

அங்கிருந்த பி.ஏ.சி.ஆரின் அன்பிற்குரிய எஸ்.எஸ். அம்பைய ராஜா, "என்றைக்கு ராஜா பிறந்தார்களோ, அன்றைக்கே இராஜபாளையத்திற்கு யோகம் பிறந்துவிட்டது!" எனக் கூறிப் புன்னகைத்தார். 'ஆமாம்', 'ஆமாம்' எனக் கூடியிருந்தோர் அனைவரும் ஆமோதித்துக் குதூகலித்தனர்.

'தெரிந்து தெளிதல்' எனும் குணப்பண்பை இளமையிலிருந்தே இயல்பாகப் பெற்றிருந்த ராஜா, எந்த முடிவையும் சுலபமாகக்

கொண்டுவிட மாட்டார். காலம் அறிந்து, இடம் அறிந்து, பிறர் கருத்துக்களையெல்லாம் அறிந்து, அல்லவை, நல்லவை அறிந்து, தமது வல்லமையும் உணர்ந்து ஒரு முடிவுக்கு வந்து விட்டால், அந்த முடிவை வேகத்துடனும், விவேகத்துடனும் நிலை நாட்டுவதில், இரவு பகல் எந்நேரமும் நினைவில் கொண்டு, செயலாற்ற முனைந்து நிற்பார்.

1936 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்திலேயே 'பப்ளிக் லிமிடெட் கம்பெனி'யின் மூலம் பஞ்சாலையைத் தொடங்கத் தீர்மானித்து, முறையாகப் பங்குத் தொகையைத் திரட்டத் தொடங்கி விட்டார் ராஜா. விவசாயத்தைத் தவிர, வேறு தொழில் எதுவும் அறிந்திராத இராஜபாளையம் பகுதி மக்களிடம், தொழிலுக்கு முதலீடு செய்வதென்பது புரிந்து கொள்ள முடியாத புதுமை. 12,300 கதிர்கள் கொண்ட பஞ்சாலையைத் தொடங்கத் திட்டமிட்ட இராமசாமி ராஜா, அன்றைய நிலையில் அதற்கு ரூ. 5 லட்சம் முதலீடு தேவையென்பதை அறிந்திருந்தார். தொழில்களுக்குத் தேவையான நிதி திரட்ட, தற்காலத்தில் உள்ள நவீன உத்திகளும், வசதிகளும் இல்லாத அக்காலத்தில் 'தொழில் முதலீடு', பொது நிறுவனத்திற்குப் 'பங்குத்தொகை', ஆகியவற்றையெல்லாம் தெரிந்திராத பகுதியில் வாழும் மக்களிடம், ஐந்து லட்சம் திரட்டுவதென்பது எளிமையான செயலல்ல என்பதையும் தெளிவாக அறிந்திருந்தார் ராஜா. என்றாலும் தெய்வானுகூலத்தைப் பெற்றிருந்த அப் பெருமகனார் தமது நம்பிக்கைக்கும், அன்பிற்கும் உரிய பெரு மக்களிடம் தொழில் முதலீட்டுப் பங்குத்தொகையைத் திரட்டி விடலாமென்றும், திருச்செந்தூர் முருகப் பெருமானின் திருவருளால் திட்டமிட்ட வாறு தொழிலைத் தொடங்கி விடலாமென்றும் பரிபூரணமாக நம்பினார். எனவே பலவழிகளிலும் பங்குத் தொகை திரட்டுவதில் மனத்திட்பம் கொண்டு, முயற்சிதன் மெய் வருந்த முனைந்து செயற்பட்டார்.

அப்போது தியாக சீலர் பி.எஸ். குமாரசாமி ராஜா, சென்னை சட்டசபை காங்கிரஸ் கட்சி உறுப்பினராக இருந்தார்.

வெளிநாட்டுப் பயணத்தில் தாம் பெற்று வந்த அனுபவங்களையும், தொழில் தொடங்குதற்காக அயல் நாடுகளில் தாம் பார்த்து வந்த நிறுவனங்களையும் சகோதரர் பி.எஸ்.கே.யிடம் விளக்கமாகக் கூறிய பி.ஏ.சி.ஆர். பஞ்சாலைத் தொழிலை இராஜபாளையம் பகுதியில் நிறுவுவதற்குத் தீர்மானித்து, எண்ணம் கொண்டிருப்பதைச் சொன்னபோது, பி.எஸ்.கே. பெரிதும் மகிழ்ந்து வரவேற்று, "ஆவன முயன்று முடிப்போம்" என்றார். 'பப்ளிக் லிமிடெட் கம்பெனி'யாகத் தொழிலை உருவாக்கும் முயற்சிக்கு, பி.ஏ.சி.ஆருடன் உறுதுணையாகவும், உரிய இணையாகவும் அமைந்து, பி.எஸ்.கே. அளித்த ஒத்துழைப்பும், உதவியும் மகத்தானவை.

இராஜபாளையத்தில் மட்டுமல்லாது, சுற்று வட்டாரங்களிலும், திருநெல்வேலி மாவட்டத்திலும் பங்குத்தொகை திரட்ட பி.ஏ.சி.ஆர் பயணித்த நேரங்களில் பி.எஸ்.கே, உடன் சென்றிருக்கிறார். எஸ்.எஸ். அம்பைய ராஜாவும் உடன் செல்வது வழக்கம். பி.எஸ்.கே. சில வேளைகளில், இந்த முயற்சியில் ஈடுபட்ட போது தமது அரசியல் நண்பர் ரா. கிருஷ்ணசாமி நாயுடுவை அழைத்துச் செல்வதுண்டு.

உறவினர்களும், ஊர்ப்பெருமக்களும் ராஜாவின் முயற்சிக்கு உற்சாகமாக ஆதரவு கொடுத்துப் பங்குதாரராகப் பதிவு செய்து கொண்டனர். சமயப் பாகுபாடோ, சாதி வேறுபாடோ இன்றி பங்குதாரர்கள் சேர்க்கப் பெற்றனர். திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த பெருமக்கள் பலர், பி.ஏ.சி.ஆரின் இணக்கமிக்க அணுகுமுறையால் பங்கு முதலீடு அளித்து ராஜாவின் முயற்சிக்கு ஒத்துழைப்பு நல்கினர். தருமபுரம் மகாசந்நிதானம் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவிடம் பேரன்பு கொண்டவர்கள். தமது அன்பின் வெளிப்பாடாக, ராஜாவின் முயற்சிக்கு அருளாசி வழங்கியதோடு, பங்கு முதலீடும் அளித்து உதவினார்கள். ராஜுக்கள் சமூகத்தின் பொது மகிமை நிதியிலிருந்து பங்கு முதலீடு செய்ததும் குறிப்பிடத் தகுந்ததாகும்.



தர்மபுரம் மகாசந்நிதானம் ஆலைக்கு வருகைதந்து
ஆசி அருளல்



சிருங்கேரி மகா ஸ்ரீ சுவாமிகள் ஆலைக்கு
வருகைதந்து ஆசி அருளல்

பெருந்தொழில் தொடங்கியோரில் பெரும்பான்மையினர், நகரங்களை நோக்கியே சென்று, தங்கள் தொழில் நிறுவனங் களைத் தழைக்கச் செய்யும் பழக்கம் கொண்டிருந்த காலத்தில், பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தாம் பிறந்த ஊரிலேயே தொழிலைத் தோன்றச் செய்ய வேண்டும், தம்முடன் வாழ்ந்து வரும் மக்களுக்கு தலைமுறை தலைமுறையாக அத்தொழில் வாழ்வும், வளமும் அளிக்க வேண்டும் எனக் கருதிய 'செய்தொழில் வேற்றுமை', என்றென்றும் நினைக்கத் தக்கது; நன்றி உணர்வு கொண்ட நெஞ்சங்களில் நிலைக்கத்தக்கது.

பொது மக்களின் பங்கு முதலீட்டை உருவாக்கும் நிறுவனத்தின் பொறுப்பை ஏற்கும் எவரும், முதலீடு அளிக்கும் பங்குதாரர்களைத் தனித்தனியாகச் சந்தித்து, வேண்டிய விளக்கங்களை அளித்து, பங்குத் தொகை பெறுகின்ற வழக்கம் இருந்ததில்லை. ஆனால் ராஜாவிடம் பங்குத்தொகை அளித்த அனைவரையும் அப் பெருமகனார் நன்றாக அறிவார்.! ஒவ்வொருவரின் கேள்வி களுக்கெல்லாம் நிதானமாகவும், நிறைவாகவும் பதில்கள் அளித்தும், தமது நம்பிக்கைக்கும், நல்லன்புக்கும் உரிய அன்பர்கள் வாழ்ந்த கிராமங்கள், நகரங்களைத் தேடிச் சென்று அவர்களையும் தம் தொழிலின் பங்குதாரர்களாக இடம்பெற வைத்தும், மேற்கொண்ட வித்தியாசமான மூலதன உருவாக்கம் அபூர்வமாக ஆற்றிய அரிய பணியாகும்.! இத்தகைய மூலதனம் திரட்டுவதில் அவ்வப்போது தமக்குத் துணையாக நின்ற மூக்கையா ராஜா என்ற கிருஷ்ணம ராஜா, திருநெல்வேலி சேஷாத்திரி அய்யங்கார், ஏ.எஸ். செட்டியார் ஆகியோரை தொழில் வளர்ச்சியின் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், பி.ஏ.சி.ஆர். மிகுந்த நன்றிப் பெருக்கோடு நினைவு கூர்வார்.

உருவாக்கிய மூலதனப் பங்குத் தொகையின் 'தர்மகர்த்தாவாக', 'அறங்காவலராக' தம்மை வரித்துக்கொண்டு, தொழில் தொடங்கிய முதல் தொழில் அதிபராகவே அப் பெருமகனாரைக் குறிப்பிட்டுப் போற்றவும் செய்யலாம்; புகழவும் செய்யலாம்.! ஏனெனில் பி.ஏ.சி.ஆரின், பேருள்ளத்தில் தோன்றிய உணர்வு

களின் வெளிப்பாடாக அப்பெருந்தகையின் வாழ்க்கையில் நடந்த சில நிகழ்ச்சிகள், தர்மகர்த்தா குணப் பண்பை எடுத்தியம்புகின்றன.

ஒருமுறை திருநெல்வேலியில் சிலரைப் பார்த்துப் பங்குத் தொகை பெறுவதற்காக, பி.ஏ.சி.ஆர், அம்பையா ராஜாவுடன் நெல்லை சென்றிருந்தார். பகலில் சிலரைச் சந்தித்து விட்டு, இரவு தங்குவதற்காக மேடை தளவாய் குமாரசாமி முதலியார் வீட்டுக்குச் சென்றார். ராஜாவின் ஃபோர்டு கார் வாசலில் வந்து நின்றதுமே, வந்திருப்பது யாரென அறிந்து கொண்ட முதலியாரின் குடும்பத்தைச் சேர்ந்த அனைவருமே, வாசலுக்கு வந்து, ராஜாவை வாஞ்சையுடன் வரவேற்று அழைத்துச் சென்றனர்.

மேடை தளவாய் குமாரசாமி முதலியார் குடும்பமும், ராஜாவின் குடும்பமும் ஒன்றிப் பழகி நெருங்கிய உறவு கொண்டவை. திருநெல்வேலிக்கு வருகை தரும்போதெல்லாம் முதலியார் வீட்டுக்கு, வருகை தந்து கலந்துரையாடி மகிழ்ந்து செல்லும் பழக்கத்தை ராஜா வழக்கமாக வைத்துக் கொண்டிருந்தார். திருச்செந்தூருக்குச் சென்று திரும்புகிற சமயங்களில், குடும்பத்துடனும் பி.ஏ.சி.ஆர், முதலியார் வீட்டுக்கு செல்வது வழக்கம். முதலியார் குற்றாலத்திற்குக் குடும்பத்துடன் வருகின்ற ஆண்டுகளிலெல்லாம், இராஜபாளையம் ராம மந்திரத்திற்கு வருகை தருவதைக் கட்டாயமாக்கிக் கெண்டிருந்தார். அப்படி அவர்களுக்குள் ஒரு நேய உறவு வளர்ந்திருந்தது.

இரவு உணவுக்குப் பின்னர், பி.ஏ.சி.ஆரும், அம்பைய ராஜாவும் 'மேடை' எனக் கூறக்கூடிய மாடியில் ஓய்வும், உறக்கமும் கொள்ளச் சென்றபோது முதலியாரும் அவர்களுடன் மாடிக்கு வந்து படுத்துக் கொண்டார். மூவரும் விளக்கை அணைத்து விட்டு வெகுநேரம், படுக்கைகளில் படுத்தவாறே உரையாடி மகிழ்ந்தனர். அம்பைய ராஜா முதலில் உறங்கி விட்டார். முதலியார் அயர்ந்து, சற்று உறங்கிய பின் விழித்தபோது, ராஜா படுக்கையில் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் திரும்பித் திரும்பி உறக்கமில்லாது புரண்டு கொண்டிருந்தார்!.

"என்ன ராஜா? கொசு கடிக்கிறதோ?" எனக் கேட்டார் முதலியார்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. . . நீங்க தூங்குங்க. . ." என்றார் ராஜா.

ராஜா கூறியவாறே முதலியார் தூங்கிப் போய்விட்டார். மீண்டும் முதலியார் விழித்துப் பார்த்தபோது ராஜா தூக்க மில்லாது புரண்டு கொண்டிருப்பதை அப்போதும் பார்த்து, சற்றே வியப்புடன் "ராஜா. . . நீங்க இன்னும் தூங்கலை போலிருக்கே?" என வினவினார்.

"ஆமா, ஆமா. . . எனக்குத் தூக்கம் வரலை!. . நீங்க சும்மா தூங்குங்க முதலியார். . . " எனக்கூறவே, படக்கென எழுந்து விளக்கைப் போட்டார் முதலியார்.

கடிகாரம் ஒரு மணி காட்டிற்று! படுக்கையில் எழுந்து உட்கார்ந்த ராஜாவின் கண்கள் சிவந்து பளபளத்தன!

"ராஜா! என்ன இது? ஏதாவது தேகத்தில் தொந்திரவா? இப்படித் தூங்காது..." என முதலியார் கேட்டு முடிப்பதற்குள், "முதலியார்! தேகத்தில் கோளாறு ஒண்ணுமில்லை.. மனத்தில்தான் கோளாறு! " எனச் சிரித்தார் ராஜா.

"என்ன சொல்றீங்க ராஜா? மனத்திலே கோளாறா?" என முதலியார் வினவிக் கொண்டிருந்தபோது உறக்கம் கலைந்து படுக்கையில் எழுந்து உட்கார்ந்த அம்பைய ராஜா, இருவரும் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்து வியப்படைந்தார்.

"மனத்தில் கவலை குடியேறினால், தேகத்தில் தூக்கம் குடியேறாது போலிருக்கு" எனப் புன்னகைத்தார் ராஜா.

"ராஜா! உங்களுக்குக் கவலையா? அப்படி என்ன கவலை?" ஆச்சரியப்பட்டார் முதலியார்.

"கவலைதான் முதலியார்! பெருங் கவலை! என்னை நம்பி... எத்தனை பேர் பங்குத் தொகையைக் கொடுத்திருக்காங்க?

இப்போ நாலு லட்சத்தை தாண்டியாச்சு... என்னை நம்பி இத்தனை பெரிய தொகையைக் கொடுத்தவங்களோட நம்பிக்கையை எல்லாம் எப்படிக் காப்பாத்தப் போறேன்? அவங்க எதிர்பார்ப்பு களையெல்லாம் எப்படி நிறைவேத்தப் போறேன்? அந்தக் கவலைதான் முதலியார் மனசிலே! அதனாலேதான் தூக்கம் வரலை! " என்றார் ராஜா.

அம்பைய ராஜாவும், மேடை தளவாய் குமாரசாமி முதலியாரும், இப்போதுதான் முதன் முதலாக ராஜாவைப் பார்ப்பதுபோல், பி.ஏ.சி.ஆரை வியந்து நோக்கினர்!.

"பொதுப்பணத்தைக் காப்பாத்தோணுங்கிற கவலையிலே, தூக்கமில்லாமே இருந்த ஒருத்தரை, என் வாழ்க்கையிலே முதன் முதல்லே இப்போத்தான் பார்க்கிறேன் ராஜா! " என்றார் முதலியார்.

"ராஜாவோட நேச்சரே அப்படித்தான்! " என்றார் அம்பைய ராஜா.

"அதுசரி, நான் இப்போ ஒரு முடிவுக்கு வந்தூட்டேன்" என்றார் முதலியார்.

"முடிவா?" என முதலியாரை ஏறிட்டுப் பார்த்தார் ராஜா.

"வேறொன்னுமில்லே! விடிஞ்சதும் ஒண்ணு செய்யப் போறேன். இப்போ நான் வாங்கியிருக்கிற பங்கைப்போல, பத்து மடங்கு பங்குத் தொகையை உங்க கையிலே தரப்போறேன்.! என்னுடைய பணம் பாதுகாப்பாவும், பயனளிக்கக் கூடிய வகையிலும் இருக்க ஒரே இடம் நீங்கதான்! இதைவிட ஒரு இடம் உலகத்திலே இருக்க முடியாது ராஜா! " என்றார் முதலியார்.

பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் அயர்வறியா முயற்சியும், பி.எஸ். குமாரசாமி ராஜாவின் உள்ளார்ந்த ஒத்துழைப்பும், ராஜாவின் அன்பிற்கும் நம்பிக்கைக்கும் உரிய பெரு மக்களின் ஆதரவும், ரூபாய் 5,38,100-ஐ மூலதனமாகக் கொண்ட 562 பங்குதாரர்களை

உருவாக்கி வழங்கின. நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்கான சேவையை, தமது பகுதி மக்களுக்கு வேலை வாய்ப்பை அளித்து, வறுமையற்ற வாழ்க்கை நிலைக்கு உயர்த்தும் தொண்டை, ஆற்றுவதற்குச் சந்தர்ப்பம் கொடுத்த ஆண்டவனை உவந்தும் உருகியும் வந்தித்து வழிபட்டார் பி.ஏ.சி.ஆர்.

அந்நாளில் பஞ்சாலைத் தொழிலில் முன்னணியில் நின்ற இங்கிலாந்து நாட்டில் பயின்று, பல காலம் தங்கி, அனுபவம் பெற்றிருந்த ராஜாவின் முதல் மருமகன் என்.கே. ராமராஜு, ஆலை நிறுவப்படும் முயற்சியில் பெரும் பங்குப்பணியாற்றி உறுதுணையாக நின்ற செயலாக்க முனைப்பு சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

தாம் பிறந்த ஊர் பெரிதும் பெருமை பெற வேண்டுமென்ற கருத்தில் "இராஜபாளையம் மில்ஸ் லிமிடெட்" எனப்பெயரிட்டு, ஒரு 'பப்ளிக் லிமிடெட்' கம்பெனியை 24.12.1936 இல் நிறுவி, தாம் வாழ்ந்திருந்த பகுதி மக்களின் வளமான வாழ்வுக்கு வித்திட்டார் வித்தகப் பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா. நலம் கொழிக்கும் பெருந்தொழில் வளம் பெருக்க உதயமாகியது.! வறுமை என்னும் வெப்பம் வாட்டிக் கொண்டிருந்த வறண்ட பகுதியில், நிழல் தரும் கற்பகமாய் ஆலை ஒன்று ஆணி வேரை ஊன்றத் தொடங்கியது!

ஆலையை நிர்மாணிக்கத் தமது அறிவார்ந்த அணுகுமுறையால், இராஜபாளையம் சமுசிகாபுரம் சாலையில், இருபத்து மூன்று ஏக்கர் நிலப்பரப்பைக் குறைந்த விலையில் ராஜா வாங்கினார். 18,000 கதிர்கள் கொண்ட ஆலைக் கட்டிடத்தைத் தமது நேரடிப்பார்வையில் விசாலமாகக் கட்டி முடித்தார் ராஜா. சிறந்த முறையில் உருவாக்கமான கட்டிடம் சிக்கனத்தை அடிநாதமாகக் கொண்டு அமைக்கப் பெற்றது.

பன்னிரண்டாயிரம் கதிர்களுக்கு 'டுவீடில்ஸ் அண்ட் ஸ்மாலீஸ்' (TWEEDLES & SMALLEYS) நிறுவனத்திற்கு ஆர்டர் கொடுக்கப் பட்டதில், முதல் தவணையில் வந்து சேர்ந்த ஆறாயிரம் கதிர்களை

மின்சார சாதன இணைப்புகளுடன் (M/s. BROWN & BOWERY யிலிருந்து வரவழைக்கப்பட்டவை) பம்பாயிலிருந்து வரவழைக்கப்பட்ட பஞ்சாலைக் கருவிகள் பொருத்துவதில் வல்லுநர் ஹெச். பவுல் (H. POWELL) முன்னின்று அமைத்தார்.

உற்பத்திப் பெருக்கத்தையும், உயர் தகுதி கொண்ட உற்பத்தியையும் அடிப்படையாகக் கொண்டு, அப்போதைய மிக மிக நவீனமான பஞ்சாலை இயந்திரங்கள் வெளிநாட்டிலிருந்து வரவழைக்கப் பெற்றுப் பொருத்தப் பெற்றன. பஞ்சாலைத் தொழிலில் மிகுந்த அனுபவமுடையவரும், இயந்திரங்களின் நுட்பங்களைத் தெளிவாக அறிந்தவரும், ஸ்பானிஷ் தேசத்தைச்




இராஜபாளையம் ஆலையின் தோற்றம்

சேர்ந்தவரும், அப்போது பம்பாயில் பிரபலமாக வாழ்ந்தவருமாகிய F. பெர்மான்யர் (F.PERMANYER) ஆலோசனை களை ஆதாரமாகக் கொண்டே அனைத்து இயந்திரங்களும் வரவழைக்கப் பெற்றன.



ஸ்பானிஷ் தேசத்தைச் சேர்ந்த பெர்மான்யருடன் பி.ஏ.சி.ஆர்



ஆலையின் ஆயுதபூஜை விழாவில் பங்கேற்றோர். அம்பைய ராஜாவின் அரவணைப்பில் ராமசுப்பிரமணிய ராஜா

* * *

# 14

# திருவாளர் அமைத்த உருவாக்கமும் திறப்பாடு கொண்ட நூற்பாலையும்

இராஜபாளையம் மில்ஸ் லிமிடெட் என்னும் நூற்பாலை உருவாக்கம் கொள்ள, உரிய மூலதனம் வழங்கிய அனைத்துப் பங்குதாரர்களின் கூட்டத்தை, 21.6.1937 இல் பி.ஏ.சி.ஆர். அழைப்பு அனுப்பிக் கூட்டினார். மிகுந்த உற்சாகத்துடன் பங்குதாரர்கள் கூட்டத்திற்கு வருகை தந்தனர்.

நூற்பாலையை இராஜபாளையத்தில் நிறுவுதற்கான நோக்கத்தை, பங்குத்தொகை திரட்டுகின்றபோதே, தனித் தனியாக விளக்கி யிருப்பினும், மீண்டும் ஒரு முறை பி.ஏ.சி.ஆர், கூட்டத்தில் விவரித்தார். தமது முயற்சிக்கு முழுமையான ஆதரவளித்த பங்குதாரர்களையும், ஒத்துழைப்பும், உதவியும் வழங்கிய தமது அன்பிற்குரியவர்களையும், வெகுவாகப் பாராட்டினார். பங்குத் தொகையான பொது முதலீட்டை, தகுந்த பாதுகாப்புடனும், மிகுந்த அச்சத்துடனும், நிறைந்த பயனளிக்கும் வகையில் தாம் பயன்படுத்த இருப்பதை ராஜா விரிவாகவும், விபரமாகவும் எடுத்துரைத்தார்.

செல்வம் சென்று சேர்கின்ற மனிதரைப் பொறுத்துத்தான், அதன் சீரிய பயன் அமையுமென்கிறார் திருவள்ளுவர். பேரறிவாளரிடம் செல்வம் சேருமேயானால், அதன் பயன் ஊருணி நீரைப் போல உலகத்திற்குப் பயன்தரும்; நல்ல குணப்பண்பு கொண்ட நயனுடையாரிடம் செல்வம் திரண்டிருக்குமேயானால், அது ஊரின் நடுவே ஊர் மக்களுக்கு உரிமையாகப் பழுத்திருக்கும் கனிமரம் போல அனைவருக்கும் பயனளிக்கும், பேருள்ளம் படைத்த பெருந்தகையாளரிடம் செல்வம் பெருகினால், அச் செல்வம் இலை, கிளை, மரம், வேர் அனைத்தும் பயன்படும்

மருந்து மரமாக மனிதகுலத்திற்குப் பயன் நல்கும்! செல்வச் செழுமை, சேர்ந்திருக்கும் இடத்தால் விளையும், சிறப்பான பயன்களென வரிசைப்படுத்துகிறார். பேரறிவாளராகவும், நற்குணப் பண்புடைய நயனுடையாராகவும், பேருள்ளம் கொண்ட பெருந்தகை யாள்ராகவும் பி.ஏ.சி.ஆர், திகழ்ந்ததால், அப் பெருமகனார் திரட்டி யிருந்த மூலதனச் செல்வம், சிறப்பான பயன்களைப் பெற்றுத் தருமென அனைத்துப் பங்குதாரர்களும் பூரணமாக நம்பினர்.

முதலாவது இயக்குநர் குழுவில் பி.எஸ். குமாரசாமி ராஜா, பி.ஏ.சி.ஆர், வி.டி.எஸ். சேவுக பாண்டியத்தேவர், மேடை தளவாய் குமாரசாமி முதலியார், பி.டி. சீனிவாச அய்யங்கார், ஏ.பி.டி. சங்குரெட்டியார், ஏ.கே.டி. தர்ம ராஜா, எஸ். என். ராமசாமி ராஜா, கே. கைலாச சுந்தர முதலியார், எஸ்.எஸ். அம்பைய ராஜா, ஏ. சடையாண்டி செட்டியார், டி.ஏ.கே. மணி அழக ராஜா, என்.பி.எஸ்.என். ராமைய நாடார், என்.கே. ராமராஜு, அழகை எம். பொன்னுசாமி, ராசி பி. ராஜு நாயக்கர், ஏ.வி.ஆர்.எம். வேலாயுத முதலியார், பி.ஆர்.ஆர். கந்தசாமி செட்டியார், எஸ். குப்புசாமி செட்டியார் ஆகிய பத்தொன்பது இயக்குநர்கள் இடம் பெற்றனர்.

மூலதனம் திரட்டுகின்றபோதே, ஆலையை அமைப்பதற்கான நிலத்தை விவசாயிகள் பலரிடம் நோக்கத்தை இதமாக எடுத்துக்கூறி, பி.ஏ.சி.ஆர், சீக்கிரமே விலைக்கு வாங்கி விட்டார். விலையோ வெகு குறைவு ! 23 ஏக்கரை ரூ. 4650க்குத்தான் வாங்கினார்!.

பஞ்சாலைக்கு அப்போது 'காசா பிளாங்கா' முறை (CASABLANKA HIGH DRAFT SYSTEM) இயந்திரங்கள் நவீனமாகக் கருதப் பெற்றது. அதன் பயன் உற்பத்திப் பெருக்கமும், உற்பத்தித் தரமும் எனக் கேள்விப்பட்ட ராஜா, உற்பத்திப் பெருக்கத்தை விரும்பிடினும், தரமான உற்பத்தியில் கவனம் வைத்த அப்பெருமகனார் அந்த இயந்திரங்கள் அவசியத் தேவை எனக்கருதினார். எனவே

இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்து, இந்திய நாட்டிலேயே அந்த இயந்திரங்களை முதன் முதலில் இராஜபாளையம் ஆலையில் நிறுவ ராஜா ஏற்பாடு செய்தார். பஞ்சாலைத் தொழிலில் பல காலம் அனுபவமுடையோர் சிலர், ராஜாவின் இந்த ஏற்பாட்டை 'ஒரு துணிச்சலான முயற்சி' எனப் பாராட்டினர்.

இந்திய நாட்டில் தங்கள் புதிய இயந்திரங்களை இறக்குமதி செய்து பொருத்திய இராஜபாளையம் ஆலை நிறுவனர் இராமசாமி ராஜாவை மிகுந்த மரியாதையுடன் போற்றிப் பாராட்டிய 'காசா பிளாங்கா' கம்பெனியின் ஸ்பானிய நாட்டு உரிமையாளர்கள், தங்கள் பாராட்டின் வெளிப்பாடாக, இராஜபாளையம் மில்ஸ் பங்கு மூலதனத்தில் முதலீடு செய்தனர்! இன்றும் அந்தப் பங்குகள் அவர்களிடமே தொடர்ந்து இருந்து வருவது குறிப்பிடத் தக்கது.

பதினெட்டாயிரம் கதிர்கள் இயங்குவதற்காக உருவாக்கப் பட்ட கட்டிடம் ரூ. 92 ஆயிரம் செலவிட்டுக் கட்டி முடிக்கப் பெற்றது. ஏறத்தாழ மூன்று லட்சத்திற்கு இயந்திரங்கள் அனைத்தும் வரவழைத்துப் பொருத்தப் பெற்றன.

1938 ஆம் ஆண்டு இராஜபாளையம் வரலாற்றில், என்றென்றும் நினைவில் கொள்ளத்தக்க பொன்னான ஆண்டாகும்!. மக்களின் வாழ்க்கையில் ஒரு மறுமலர்ச்சிக்கான திருப்பணிகள், பெருந்தொழில் மூலம் வேகமாக செய்யப் பெற்று, புதிய ஒளி உதயமாகும் புலரும் பொழுதாக அந்தப் பொன்னான ஆண்டு அமைந்தது! பெருந்தகை பி.ஏ.சி.ஆர். வாழ்க்கைச் சரித்திரத்தில், அப் பெருமகனாரைத் தமிழ் நாட்டின் பிரபலத் தொழில் அதிபராகவும், பெரும் புகழ்கொண்ட மகத்தான மனிதராகவும் அடையாளம் காட்ட அடிகோலிய ஆண்டாகவும் 1938 ஆம் ஆண்டு அமைந்து திகழ்கிறது!.

இயந்திரங்கள் வரவழைக்கப்பட்டவுடன், அவைகளை நிர்மாணிக்கப் பஞ்சாலை தொழிலில் பல காலம் தொடர்பு கொண்டு, அனுபவ அறிவும், அறிவார்ந்த திறமும் பெற்றிருந்த

கொண்டல்சாமி நாயுடு 'ஸ்பின்னிங் மாஸ்டர்' பொறுப்பில் நியமிக்கப்பட்டார். ராஜாவின் வேகத்திற்கும், விவேகத்திற்கும் ஈடுகொடுத்து, தொடக்க காலம் முதலாகப் பத்தாண்டுகள் சீரிய பணியாற்றிய கொண்டல்சாமி நாயுடுவின் சிறந்த சேவைகள் பி.ஏ.சி.ஆரைப் பெரிதும் கவர்ந்தன.

ஆலைக்கு அவசியத் தேவையான மின்சக்தியைப் பெற, நீராவி இயந்திரங்கள் பொருத்த தீர்மானிக்கப்பட்ட நிலையில், மின் சாரத்தைப் பயன்படுத்திக் கொள்ள ஒரு வாய்ப்பு வந்து சேர்ந்தது. மேற்கு இராமநாதபுர மின்சார விநியோக நிறுவனம், ஆலைக்கு மின் தொடர்பு தருவதாக வேண்டினர். பஞ்சாயத்துத் தலைவராக வீற்றிருந்த பி.ஏ.சி.ஆர். தமது தொழில் நிறுவனத்திற்கு மின்சார இணைப்பு ஏற்படுத்துவதின் மூலம், இராஜபாளையம் நகருக்கும் மின்சார இணைப்பை அமைக்க எடுத்துக் கொண்ட முயற்சிக்கு வெற்றி கிடைக்குமென எண்ணி மகிழ்ந்தார். மின்சாரத் தொடர்பை ஆலை ஏற்படுத்திக் கொள்ள ஏற்கும் மூலதனச் செலவிற்கென, மின் விநியோகக் கம்பெனியார் ரூ. 25,000ஐ முன் பணமாக வழங்கினர். எனவே, இராஜபாளையம் மில்ஸ் ஏற்க இருந்த நீராவி இயந்திர நிர்மாணம் கைவிடப்பட்டது. பைகாரா மின் உற்பத்தியிலிருந்து, மேற்கு இராமநாதபுர மின்சார விநியோகக் கம்பெனியின் வழியாக மின்சாரம் அளிக்க, சென்னை மாகாண மின்சாரத்துறை உயர் அதிகாரி (CHIEF ENGINEER) அனுமதி வழங்கினார். ஆலைக்குள் ஜூலை மாதம் 1938 ஆம் ஆண்டில், மின்சாரம் வந்து சேர்ந்தது. இராஜபாளையம் நகர மக்களுக்கும் அதே மாதத்தில் வீட்டு உபயோகத்திற்கு மின்சாரத் தொடர்பு கிடைத்தது குறிப்பிடத்தக்கது.

இராஜபாளையம் மில்ஸ் - இயந்திரங்கள் அனைத்தும் பொருத்தப்பட்டவுடன், இராசியான கரங்களைக் கொண்டு தொடங்கி வைக்கத் திட்டமிட்டார் ராஜா. பிரபலமாயிருந்த பெருந் தொழில் அதிபரும், கோவைப் 'பயனீர்' குரூப் நிறுவனரும் மேதையுமான கோயம்புத்தூர் பி.எஸ்.ஜி. ரெங்கசாமி நாயுடு, இராஜபாளையத்திற்கு அழைக்கப்பட்டு ராஜாவின் வேண்டு

கோளுக்கிணங்க, புளோரூம் இயந்திரத்தில் முதன் முதலாக பஞ்சை இட்டு, ஆலையைத் தொடங்கி வைத்தார்.

'இராஜபாளையம் மில்ஸ் லிமிடெட்' இயங்கத் தொடங்குவதை மகிழ்ச்சியான மாபெரும் விழாவாகப் பொது மக்கள் கலந்து கொள்ளும் பொது விழாவாக (PUBLIC FUNCTION) அமைத்துக் கொண்டாட விரும்பினார் பி.ஏ.சி.ஆர். அப்போது சென்னையில் வீற்றிருந்த காங்கிரஸ் அரசாங்கத்தில், தொழில், தொழிலாளர் நல அமைச்சராகப் பொறுப்பேற்றிருந்த வி.வி. கிரியை, தொடங்கி வைக்க, விழா நாயகராய் அழைக்க ராஜா விரும்பினார்.

சென்னை சென்று, பி.எஸ்.கே.யுடன் அமைச்சரைப் பார்த்து, விழாவிற்கு வருகை தருமாறு ராஜா அழைத்த போது, மகிழ்ச்சியுடன் இசைவளித்தார் வி.வி. கிரி.

இராஜபாளையத்தில் 5.9.1938 இல் ஆலைத் தொடக்க விழாவை அமைத்தார் ராஜா. பங்குதாரர்களும், பகுதி மக்களும் மிகுந்த உற்சாகத்துடன் விழாவில் கலந்து கொண்டனர்.



ஆலைத் தொடக்க விழாவில் பங்கேற்ற பெருமக்கள்

ஆலையை முறையாகத் தொடங்கி வைக்க வருகை தந்த அமைச்சர் வி.வி. கிரியை அன்போடும், மரியாதையோடும் வரவேற்றுப் பேசிய பி.ஏ.சி.ஆர், ஆலை பற்றிய அமைப்பு அறிக்கையை அச்சிட்டு வழங்கி, அடக்க உணர்வுடன் அதனை வாசித்து விவரித்தார்.

அமைச்சர் வி.வி.கிரி கூறியிருந்த ஒரு வாசகத்தை எடுத்துக் கூறி, அந்த வாசகத்தின் அடி நாதத்தை, ஆலையின் நிர்வாக முகவர் (MANAGING AGENT) என்ற முறையில் பின்பற்ற இருப்பதாகச் சொன்னார் ராஜா. "மன நிறைவான தொழிலாளியே, உரிய வேலையை மனம் ஒன்றிச் செய்ய முடியும். வேலையை ஒன்றிச் செய்கின்ற நிலையில் தான் அதிக இலாபத்தை ஈட்ட முடியும்" என்பதே அந்த வாசகம்.

ஆலையின் தொடக்க நாளில் 'பின்பற்ற' இருப்பதாகக் கூறிய பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் திருவாக்கு, அப் பெருமகனார் வாழ்ந்திருந்தபோதும், பின்னர் அன்னாரின் புதல்வர் பி.ஆர்.ராமசுப்பிரமணிய ராஜா நிர்வாக மேலாண்மையை நிர்வகித்து வருகின்ற இன்று வரையிலும், உள்ளார்ந்து நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்ற காரணத்தால்தான், நீண்ட நெடிய காலம் தொழிலாளர் இயக்கத்தில் தோய்ந்திருக்கும் தலைவர் ஜி. இராமானுஜம், "தொழில் உறவில் இராஜபாளையம் ஆலை வித்தியாசமானது!" என்றார்.

'வித்தியாசம்' என்ற சொல்லுக்கு ஜி.ஆர். அளித்த விளக்கம்: "சாதாரணமா, தொழிற்சாலைகளில், தொழிலாளி - முதலாளி மோதல்தான் இருக்கும். இங்கே தொழிலாளிக்குத் தொழில் நல்லா இருக்கனும்கிற அக்கறை, முதலாளிக்கு தொழிலாளி குடும்பம் நல்லா இருக்கனும்கிற அக்கறை!"

தொடக்க நாள் பெருவிழாவில், பி.ஏ.சி.ஆர். வாசித்த அறிக்கையில் ஆலையை இராஜபாளையத்தில் அமைத்ததற்கு மூன்று காரணங்கள் உண்டென்று குறிப்பிட்டிருந்தார்.

இந்திய நாட்டுப் பொருளாதாரத்தை மேமபடுத்தி, இறக்கு மதியைக் குறைப்பதற்கான முயற்சியில், வேலை வாய்ப்புக்கும் இடமளிக்கும் என்ற காரணத்தாலும்,

அண்மைக் காலத்தில் அரசு வீற்றிருக்கும் காங்கிரஸ் சுய நிர்ணய அரசாங்கம் முயற்சிக்கு முழுமையான ஆதரவு அளித்த அடிப்படையிலும்.

இராஜபாளையத்தைச் சுற்றியுள்ள பகுதியில் விளையும் பருத்தி, இங்கேயே கொட்டை நீக்கப்பட்டு 'ஜின்னிங்' நிறுவனங் களிலிருந்து பெருவாரியாக அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி யாவதைத் தடுக்கவும், இங்கேயே விளைபொருளாக உள்ள மூலப்பொருள் கொண்டு உற்பத்தியாகும் நூலை, இங்கேயே கைத்தறிகளுக்கு விநியோகிக்க வாய்ப்பு இருப்பதாலும்,

ஆலையை இராஜபாளையத்தில் நிர்மாணித்ததாகக் கூறிய நிறுவனர் பி.ஏ.சி.ஆர், தொழிலாளர் நல அமைச்சர் வி.வி. கிரியை, ஆலையைத் திறந்து வைத்து, இயந்திரங்களை முறையாக இயக்கி வைக்குமாறு வேண்டினார்.

தாம் பிறந்த ஊரைப் பெருந்தொழில் கொண்டு வளப்படுத்த எண்ணி ஆலையைத் தொடங்கியிருக்கும் இராமசாமி ராஜாவை உளமாரப் பாராட்டிய அமைச்சர் வி.வி.கிரி, "ராஜா, இராஜ பாளையத்தில் தொழிலை அமைத்ததற்கு மூன்று வகையான காரணங்களை அறிக்கையில் படித்தார். தேச சேவையை அடிப்படையாகக் கொண்ட அந்தக் காரணங்கள் என்னைப் பெரிதும் கவர்ந்தன. பொருளாதாரத் துறையில் நாடு முன்னேற இது போன்ற பெருந்தொழில்கள் தொடங்கியாக வேண்டும். குறிப்பாக இராமநாதபுரம் மாவட்டம் போன்ற வறட்சியும், வறுமையும் சூழ்ந்த தாழ்வுற்ற பகுதியில் தொழில் தொடங்கும் முயற்சி துணிச்சலானது, அதே நேரத்தில் தொழத்தக்க தொண்டாகக் கருதத் தக்கது. துணிந்து, இந்தப் பகுதியின் வளர்ச்சிக்கும், செழுமைக்கும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டுள்ள ராஜாவையும், அவர்தம் முயற்சிக்கு ஒத்துழைப்பு

நல்கியுள்ள பி.எஸ்.கே.யையும், உற்சாகமாக உதவியுள்ள பங்குதாரர்களையும் பாராட்டுகிறேன். தொழிலாளி - முதலாளி உறவுபற்றிக் குறிப்பிட்டுள்ள என் கருத்தை அறிக்கையின் ஒரு பகுதியாகக் கொண்டு, என் கருத்தைப் பின்பற்றுவதாகவும் குறிப்பிட்டுள்ள ராஜாவுக்கு எனது நன்றி. பெருமைக்குரிய இந்த விழாவிற்கு என்னை அழைத்து வந்து பங்கேற்கச் செய்த நகரத்தின் மரியாதைக்குரிய இரண்டு ராஜாக்களுக்கும் எனது வணக்கத்தையும், நன்றியையும் தெரிவித்து, ஆலையை மகிழ்ச்சியோடு திறந்து வைக்கிறேன்" என்றார்.



ஆலையைத் தொடங்கி வைத்துச் சிறப்புரையாற்றுகிறார்
வி.வி. கிரி

பி.ஏ.சி.ஆர், **1951** ஆம் ஆண்டு ஜப்பான் நாட்டிற்குச் சென்று, அந்த நாட்டில் நடைமுறையிலிருந்த தொழில் நுட்பங்களையும், தொழில் துறை மேம்பாட்டையும் நேராகப் பார்த்து, அறிந்து வந்தார். உற்பத்திப் பெருக்கத்திற்குப் பஞ்சாலைகளில் 'O.K.K.' என்ற வகை நூற்பு இயந்திரங்கள் பயன்பட்டு வருவதைக் கண்ணுற்று, அதே இயந்திர வகையை ஜப்பானிலிருந்து வரவழைத்து இராஜபாளையம் மில்லில் **1953** ஆம் ஆண்டில் நிர்மாணித்தார். அப்போது ஆலையின் மொத்தக் கதிர்கள் 25,000 மாக உயர்த்தப்பட்டன.

ஆலையை மேலும் விரிவுபடுத்துகிற எண்ணமும், சன்னரக (FINE COUNTS) நூல் தயாரிப்புத் திட்டமும் 1957 ஆம் ஆண்டு

ஏற்பட்டபோது, ஆலையின் கிழக்குப் பகுதியில் நவீனமான கட்டிடம் அமைக்கப் பெற்று, சீதோஷ்ண நிலையைக் கட்டுப்படுத்தும் 'ஹியுமிடிபிகேஷன்' என்னும் புதிய வகை புகுத்தப்பட்டது. பின்னர் இந்த ஏற்பாடு அனைத்துப் பிரிவுகளிலும் செய்யப்பெற்றது.

ஆலையில் கூடுதலாகக் கதிர்களைப் பொருத்துவதற்குப் பதிலாக, பழைய இயந்திரங்களை அகற்றி விட்டு, அதிவேக நவீன இயந்திரங்களை நிர்மாணித்து, உற்பத்தியைப் பெருக்கி, நூலின் தரத்தை உயர்த்திச் செய்யும் பான்மை, ஆலையின் இலாப ஈட்டலுக்கு மேன்மையாக அமையுமென்ற புதிய திட்டத்திற்கு, 1959 ஆம் ஆண்டு ஆலையின் அமைப்பு முறையில் புதியதொரு திருப்பம் புகுத்தப்பட்டது. அதிவேக நவீன இயந்திரங்கள் அனைத்துப் பிரிவுகளிலும் பொருத்தப் பெற்றன. அதனால் ஏறத்தாழ நாற்பதினாயிரம் கதிர்களும், 624 O.E. ரோட்டர்களும் இயங்கத் தொடங்கின.

பஞ்சாலைத் துறையில் உலகம் கண்ட நவீன இயந்திர அமைப்புகளை, உடனுக்குடன் துணிந்து வரவழைத்துப் பொருத்தும் ஊக்கமும், தரத்தை உயர்த்தக் கூடிய ஆக்கமும் கொண்டு திருவாளர் பி.ஏ.சி.ஆர். அமைத்த ஆலையின் உருவாக்க அமைப்பு திறப்பாடு கொண்ட நூற்பாலையாக இராஜபாளையம் மில் தனித்தன்மை பெற்றுத் திகழ்கின்றது.

* * *

# 15

## நிர்வாக அமைப்பின் பலமும் பங்குதாரர் பெற்ற நலமும்

'வருகின்ற மனிதரின் மனத்தில், உருவாகி நிற்கின்ற கருத்தைத் தெளிவாக அறிந்துவிடும் மனிதரைத் தெய்வமாகவே நினைத்துப் போற்றலாம்' என்கிறார் திருவள்ளுவர்.

"ஐயப்படாது அகத்தது உணர் வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்"

கண்ணைப் பார்த்த உடனேயே அவர் கொண்டிருக்கும் எண்ணம் என்னவென்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளக் கூடிய திறம் பெற்றிருந்த பி.ஏ.சி.ஆர், நிர்வாகிகளையும், அலுவலர்களையும் தேர்ந்தெடுக்கும் அருமை, அப் பெருமகனார் பெற்றிருந்த தனித் திறமை! கண்களில், முக பாவத்தில், வார்த்தைகளில் மனிதர்களின் இயல்பான குணப் பண்பை, இனம் கண்டு விடுகின்ற அரிய கணிப்பு, ராஜா பெற்றிருந்த வியத்தகு வித்தகமாய் விளங்கியது! என்ன நினைத்து, என்ன சொல்கிறாரென எளிமையாகக் கண்டு கொள்வார் ! ஒரு பார்வையிலேயே அல்லது ஒரு வார்த்தையிலேயே மனிதர்களை எடை போட்டு விடுகின்ற ஆற்றல் ராஜாவுக்கு இயல்பாக அமைந்திருந்தது.

இராஜபாளையத்தில் பஞ்சாலையைத் தொடங்கத் திட்டமிட்ட போதே, இன்ன இன்ன பணிகளுக்கு இவர் இவரைக் கொண்டு செயலாற்றச் செய்ய வேண்டுமெனத் தீர்மானித்துக் கொண்ட அப் பெருமகனாரின் எண்ணத்தை, பின்னர் தேர்வு செய்த நிர்வாகிகளையும், அலுவலர்களையும் வைத்தே கணிக்க முடிகிறது.

மனிதர்களின் ஒழுக்கத்திற்கும், 'விஸ்வாசம்' என்று சொல்லக் கூடிய நன்றியுணர்வுக்கும் பெரு மதிப்பளித்து, தனியன்பு கொண்டு, தகுதிக்குரிய பணிகளை தாராளமாக வழங்கி உயர்வுக் குரியபொறுப்புகளை உவந்து அளிக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தார் அப் பெருமகனார். உயர்ந்த படிப்பைக் காட்டினும் ஒழுக்கமே (VIRTUE) சிறந்ததெனக் கொண்டவர், வித்தக அறிவைக் காட்டிலும் விஸ்வாசமே (LOYALTY) மேலானதெனக் கண்டார் ராஜா!

பஞ்சாயத்துப் போர்டுப் பணிகளுக்கு தமது அன்பிற்கும் நம்பிக்கைக்குமுரிய எஸ்.எஸ். அம்பைய ராஜாவை பயன் படுத்திய பி.ஏ.சி.ஆர். தொழிலுக்குரிய பங்குத்தொகையைத் திரட்ட, பெரும்பான்மையான நேரங்களில் அவரையே துணையாகக் கொண்டார்.

பஞ்சாயத்து போர்டில் ஓர் ஊழியராக தாம் நியமித்த எஸ். அர்ச்சுன ராஜாவை பஞ்சாலையில் பணியாற்றுமாறு செய்வித்தார் பி.ஏ.சி.ஆர். அவர் படிப்படியாக பதவி உயர்வு பெற்றுத் தற்போது மெட்ராஸ் சிமிண்ட்ஸ் எக்ஸிகூடிவ் டைரக்டராக திகழ்ந்து வருகிறார்.

தமது நூல் வணிகத்தில் நிர்வாகியாயிருந்த எஸ். கந்தசாமி செட்டியாரை, ராஜா ஆலையின் மேலாளராக (MANAGER) நியமித்தார். பி.ஏ.சி.ஆரின் இயல்பறிந்து இணக்கமாகச் செயலாற்றிய செட்டியார், மிகுந்த விசுவாசத்துடன் முப்பது ஆண்டுகளுக்கு மேல், நிர்வாகப் பொறுப்புகள் அனைத்தையும் ஏற்று ராஜாவின் எதிர்பார்ப்புகளுக்கு முழுமையாக ஈடுகொடுத்துப் பணியாற்றினார். ஆலையின் வரலாற்றில், 'செட்டியார்', 'செட்டியார்' என மரியாதையுடன் அனைவராலும் குறிப்பிடப் பெற்ற எஸ். கந்தசாமி செட்டியாரின் சேவை, பெருமைக்குரிய தனி அத்தியாயம்!

ஒழுக்கச் சிறப்பும், உணர்வில் விஸ்வாசக் குணப் பண்பும் கொண்ட எம்.ஆர்.எஸ். இராதாகிருஷ்ண ராஜா போன்ற

உறவினர்கள் சிலரையும், தெளிந்து தெரிந்த அன்பர்கள் சிலரையும், ஆலையின் இயக்கத்திற்குரிய அலுவலர்களாகத் தேர்வு செய்து, பல்வேறு பணிகளில் ராஜா நியமித்தார். ராஜா நியமித்த அலுவலர்கள் அனைவருமே தங்கள் பணிக்காலத்தில், கருவியாலும், கருத்தாலும் செயல் நலம் கொண்டு சிறந்த சேவை செய்தனர். பணிக்குரிய காலம் முழுவதும், இடைவெளியின்றி, இடை நிறுத்தமின்றி, பழுதற்ற பாங்கில், திறமையுடனும், பொறுப்புடனும் எல்லாவற்றிற்கும் மேலாக நன்றியுணர்வுடனும் அனைவரும் அலுவல் பார்த்தனர்.

'ஜி.எம்.' என மரியாதையோடு அனைவராலும் குறிப்பிடப் பெறும், இன்றைய இராஜபாளையம் மில்ஸ் பொது மேலாளர் (GENERAL MANAGER) எஸ்.ஆர். ராஜகோபாலன் பொன்விழாக் கண்ட நிறுவனத்தில் (1988) பணியால் பொன்விழா ஆண்டைக் (1993) கடந்து சேவை செய்து வருபவர். ஆம் 1943 ஆம் ஆண்டிலேயே பி.ஏ.சி.ஆர். ராஜகோபாலனை ஆலையின் அலுவலராகத் தேர்வு செய்து விட்டார்!

வேலைக்குத் தகுந்த மனிதர்களைத் தேர்வு செய்வதில் மட்டுமல்ல, வேலைத் திறமைக்குரிய உயர்வு அளிப்பதிலும் வல்லவராகத் திகழ்ந்தார் ராஜா. விவேகமான அறிவாற்றலும், விசுவாசமான குணப் பண்பும் கொண்டிருந்த எஸ்.ஆர். ராஜகோபாலனின் பணித்தகுதியைப் படிப்படியாக உயர்த்தி, நிர்வாகப் பொறுப்புக்குத் தமது புதல்வர் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா வந்தபோது, அவருக்குக் குறிப்பறிந்து செயற்படும் துணை யாகவும் கூட்டுவித்தார் பி.ஏ.சி.ஆர்.

அரசாங்கம், ஒவ்வொரு ஆலையிலும், தொழிலாளர் நல அதிகாரி ஒருவரை நியமிக்க வேண்டுமென சுற்றறிக்கை அனுப்பி இருந்தது. அந்தப் பொறுப்புக்( உரியவரை தேடிக் கொண்டிருந்தார் பி.ஏ.சி.ஆர்.

1954ம் ஆண்டில் ஒரு முறை இராஜபாளையத்திலிருந்து மதுரைக்கு ரயிலில் செல்வதற்காக ஸ்டேஷனில் நின்று கொண்டிருந்தார்

ராஜா. ஒரிரு மாதங்களுக்கு முன் தமது பள்ளியில் ஆசிரியராகப் பொறுப்பேற்றிருந்த ஒருவர், சற்று தூரத்தில் நிற்பதைக் கண்ட ராஜா, அவரைக் கையழைத்து அருகே வருமாறு பணித்தார். வந்த ஆசிரியர் வணக்கம் செலுத்திப் பணிவுடன் நின்றார். "எங்கே? மதுரைக்கா?" எனக் கேட்ட ராஜாவிடம், 'ஆமாம்' எனத் தலையசைத்தார் ஆசிரியர். "சரி என்னுடன் வாரும்! பேசிக் கொண்டே போகலாம்" என்றார் ராஜா.

ரயில் பயணத்திலேயே ஆசிரியருடன் பேச்சுக் கொடுத்து அவரது ஆற்றலைப் புரிந்து கொண்ட ராஜா. அந்த ஆசிரியரையே ஆலையின் தொழிலாளர் நல அதிகாரியாக நியமிக்கத் தீர்மானித்தார்.

40 ஆண்டுகளுக்கு முன்பு ஆலையின் தொழிலாளர் நல அதிகாரியாக நியமிக்கப்பட்ட அந்த ஆசிரியர் 'எஸ். என். எஸ்.' என அன்பாகக் குறிப்பிடப் பெறும், இராஜபாளையம் ஆலையின் பெர்சனல் மானேஜராகத் தற்போது பணியாற்றி வருகின்ற எஸ்.என். சுப்பிரமணியன்தான்! ராஜாவின் அருகிலிருந்து தனி அலுவலராகவும், பயண அலுவலராகவும் பணியாற்றக்கூடிய நல் வாய்ப்பை எஸ்.என்.எஸ். பெற்றிருந்தார்.

பி.ஏ.சி.ஆர், நேராகத் தேர்வு செய்த எந்த அலுவலரும், ஆலையின் நீடித்த உறுப்புகளாகி, முப்பது ஆண்டுகளுக்குக் குறைவாகப் பணியாற்றியதே இல்லை என்ற செய்தி நினைக்கத் தக்கது. சொல்லப்போனால் சிலர் 45, 50 ஆண்டுகளுக்கு மேலும் பணியாற்றி உள்ளார்கள்! நிர்வாக அமைப்பில், நிறுவனத்தின் இயல்பும், இயக்கமும் தெளிவாக அறிந்தோர், இடையறாது தொடர்ந்து நெடு நாள்கள் பணியாற்றுவது, நிறுவன வளர்ச்சிக்கு உறுதுணையாகவும், உரிய பலமாகவும் அமையும் அல்லவா? பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் தேர்ந்தெடுக்கும் திறமை, இராஜபாளையம் ஆலைக்கு நிர்வாகத்தில் நிலையான நீர்மை கொண்ட வலிமையைப் பெற்றுத் தந்தது.

இராஜபாளையம் ஆலைக்கு மூலதனமாக, பங்குதாரர் களிடமிருந்து பெற்ற ரூ. 5,38,100 க்கும் தம்மைத் தர்மகர்த்தாவாக பி.ஏ.சி.ஆர். எண்ணிக் கொண்டதால், முதலீடு செய்த பங்குதாரர்களின் நலனைக் காப்பதில் மிகுந்த ஆர்வமும், அக்கறையும் காட்டினார். 'முதலாளி' எனப் பலரும் அன்புடன் ராஜாவை அழைப்பினும், பங்கு தாரர்களையே அப் பெருமகனார் 'முதலாளிகள்' என உள்ளார்ந்து எண்ணிப் போற்றினார். அதன் காரணமாகவே, பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் அளிக்கப்படும் வரையில், ஆலை நிறுவனத்திலிருந்து சட்டப்படி சேர வேண்டிய மேனேஜிங் ஏஜெண்ட் கமிஷனைப் பெற்றுக் கொள்ளாமல், நிறுவனத்துக்கு விட்டுக்கொடுத்தார். அத்துடன் ஆலையை நிறுவத் தேவைப்பட்டக் கூடுதலான மூலதனத்தை வங்கிகள் மற்றும் இதர நிதி நிறுவனங்களிலிருந்து கடனாகப் பெறாமல், தேவைப்படும் போதெல்லாம் ராஜா, தமது சொந்தப் பணத்தையே அளித்து வந்தார்!

ஆலை உற்பத்தித் தொடங்கும் வரை, பங்குதாரர்களுக்கு இரண்டு சதவிகித டிவிடெண்ட் வழங்கித் தமது முயற்சிக்கு முதலீடு செய்தவர்களுக்கு மனத்திருப்தி ஏற்படுமாறு பார்த்துக் கொண்டார் ராஜா. முதலாவது ஆண்டிற்கு ஐந்து சதவிகிதம் டிவிடெண்ட் வழங்கப்பட்டது. இடையறாது தொடர்ந்து இலாபம் ஈட்டி வந்த ஆலை, தொய்வின்றி ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக பங்குதாரர்களுக்கு, ஆண்டுக்கு ஆண்டு கூடுதலான டிவிடெண்ட் கொடுத்து வந்துள்ளது. இத்தகைய டிவிடெண்ட் வழங்குமுறை அதாவது ஆண்டு தோறும் இடையீடின்றி 50 ஆண்டுகளுக்கும் மேலாக டிவிடெண்ட் வழங்கும் நியதி, நடைமுறைப்படுத்தப்பட்ட ஆலைகள் இந்திய நாட்டில் மிக மிகக்குறைவு. தொடக்க காலம் முதலாக, ஏறுமுகமாகவே இலாபம் ஈட்டி வரும் ஆலைகளும் நாட்டில் மிகக் குறைவுதான். ராஜாவைப் போல அறங்காவலராக இயங்கும் தொழில் அதிபர்களைப் பார்ப்பதும் அரிதுதான்! பணப்புழக்கத்தைப் பொறுப்புடனும், எச்சரிக்கையுடனும் கையாளும் மனப் பழக்கம் கொண்ட நிர்வாக

அமைப்பும், நிர்வாகத் தலைமையும் - ராம்கோ குரூப்பின் அன்னை நிறுவனமாக அமைந்த இராஜபாளையம் ஆலையை பங்குதாரர்களின் நலத்தைப் பேணி வரும் அரிய நிறுவனமாக உயர்த்தி, பெரிய புகழைப் பெற்றுத் தந்துள்ளன.

ஆலையின் 'மேனேஜிங் ஏஜென்ட்' என்ற முறையில் இராஜபாளையம் மில்ஸ், பி.ஏ.சி.ஆரால் நிர்வகிக்கப் பெற்று வந்த நியதி, 1943 ஆம் ஆண்டு மாற்றம் பெற்றது. தம்முடன் தமது சகோதரர் பி.எஸ். குமாரசாமி ராஜாவையும் மற்றும் சில உறவினர்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொண்டு 'ராம்கோ ஏஜென்ஸீஸ்' என்றோர் அமைப்பைத் தொடங்கி, அதன் வழியாக ஆலையை நிர்வகித்து வந்தார் ராஜா.

'கொள்முதல்', 'விற்பனை' ஆகிய இரு முனைகளும் கூர்மையாகத் திகழ வேண்டுமென்பதில் மிகுந்த அக்கறை கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர். அந்த இரு துறைகளின் செயற்பாட்டில் தனிக் கவனம் செலுத்தினார். பொருத்தமான அலுவலர்களை, நியமிக்கும் தொடக்க காலத்திலேயே எச்சரிக்கையுடன் தேர்வு செய்தார். எவ்விதத் தலையீடும் இல்லாத முழுமையான பொறுப்புகள் அலுவலர்களுக்கு வழங்கப் பெற்றிருப்பினும், நாள்தோறும் அந்த இரு முனைகளின் ஏற்ற, இறக்கங்களை அறிந்து கொள்வதைப் பழக்கமாகிக் கொண்டிருந்தார் ராஜா. ராம மந்திரத்தின் முன் வாயிலில், அமைக்கப்பட்டிருந்த பலகைக் கட்டிலில் படுத்துக் கொண்டு, முன்னிரவு நேரங்களில், அலுவலர்கள் கூறும் தகவல்களைக் கேட்டுக் கொண்டே இருப்பார். "ஆமப்பா.. என்னை நம்பி, லட்சக்கணக்கில் பணத்தைக் கொடுத்திருக் காங்கப்பா.... ரொம்பக் கவனமா இருக்கோணும்" என இடை இடையே கூறுவார். எந்த நேரத்திலும் பங்குதாரர்களின் நலத்தில் மனம் கொண்டு, சொல்லவும் செயலாற்றவும் செய்து வந்த ஒரு வித்தியாசமான தொழில் அதிபராக விளங்கினார் பி.ஏ.சி.ஆர்.

விற்பனையைப் பெருக்கும் நோக்கம் கொண்டு, 1941 ஆம் ஆண்டு ராஜா இரண்டாவது முறையாக அயல் நாட்டுப் பயணமேற்று, இரங்கூன் சென்று வந்தார்.

ஆலையிலிருந்து கிடைக்கும் இலாபத் தொகைய்யை, எடுத்து விடுவதோ, வேறு நிறுவனங்களுக்கு கொடுத்து விடுவதோ செய்யாது, ஆலையை நவீனப்படுத்தவும், விரிவுப்படுத்தவும் ஆகிய வளர்ச்சிப் பணிகளுக்கே பயன்படுத்தும் வழக்கத்தை ராஜா, தொடக்க காலத்திலிருந்தே ஓர் அரிய 'டெக்னிக்'காக மேற் கொண்டு வந்தார். ஒரு கால கட்டத்தில், 1947 - 48 ஆம் ஆண்டில் ரிசர்வ் நிதி கணிசமாகக் கூடியிருப்பதைக் கண்ணுற்ற பி.ஏ.சி.ஆர், பங்குதாரர்களுக்கு போனஸ் பங்குகள் (BONUS SHARES) அளிக்க வேண்டுமெனக் கருதினார். அப் பெருமகனாரின் விருப்பத்திற்கிணங்க பங்குதாரர்களுக்கு ஒவ்வொரு பங்கிற்கும் இரண்டு போனஸ் பங்குகள் வீதம் முதன் முதலாக இராஜபாளையம் மில்ஸ் போனஸ் பங்குகளை வழங்கியது. பெருந்தகை பி.ஏ.சி.ஆர். 1948 ஆம் ஆண்டில் தொடங்கி வைத்த 'போனஸ் பங்கு வழங்கு முறை' பங்குதாரர்களுக்குப் பல ஆண்டுகள் நடை முறைப்படுத்தப்பட்டு, இன்றைய நிலையில், இராஜபாளையம் மில்ஸ் பங்குதாரர்களுக்கு 24 போனஸ் பங்குகள் வழங்கப் பெற்றுள்ளன! நிர்வாக அமைப்பின் பலம், பங்குதாரர்களுக்கு அபரிமிதமான நலத்தை, அள்ளிக் கொடுத் திருப்பதாகவே கருதலாம்.

பங்கு மார்க்கெட்டில் இராஜபாளையம் ஆலையின் பங்குகள் எத்தகைய ஏறுமுகம் கொண்டுள்ளனவோ, அத்தகைய அளவிற்கு அவைகளின் மதிப்பும் உயர்ந்துள்ளன. ! விற்பனைக்குக் கிடைக்காததாகவும் அவைகளின் மரியாதை பெருகி உள்ளன !

உற்பத்தியாகும் நூல்களின் தரத்தால் விலையும், வேண்டலும் நாளும் வளர்ந்து வருகின்றன !

இவையெல்லாம் பங்குதாரர்கள் பெற்றுள்ள மங்காப் பெருநலம் ஆயிற்றே ?

* * *

# 16

# வியாபாரச் சங்கமும் விடுதலை இயக்க மாநாடும்

"பி.ஏ.சி. இராமசாமி ராஜா மிகுந்த தைரியசாலிண்ணே! நல்ல காரியம் செய்றதுக்கு தைரியம் வேணுண்ணே! " என்றார் தலைவர் காமராஜ். காமராஜ் முதலமைச்சராக வீற்றிருந்தபோது, இராஜபாளையம் வியாபாரச் சங்கத்தின் வெள்ளி விழாவில் பங்கேற்று, உரையாற்றுகின்ற போது மேற்கண்டவாறு பி.ஏ.சி.ஆர். பற்றிக் குறிப்பிட்டுப் பெரிதும் போற்றிப் புகழ்ந்தார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர். இராஜபாளையம் நகருக்கு எண்ணற்ற பல நல்ல காரியங்களைத் தைரியத்தோடும், தன் முனைப்போடும் ஆற்றியிருக்கின்றார். அதில் ஒன்று இராஜபாளையத்தில் வியாபாரச் சங்கத்தை நிறுவியது. முதலமைச்சர் காமராஜ் குறிப்பிட்டதுபோல, பி.ஏ.சி.ஆர். முன்னின்று முயன்று நல்ல காரியங்களை மிகுந்த தைரியத்துடன் செய்யும் இயல்புடையவர் தான்.

தமது ஐரோப்பியப் பயணத்தில், சில நாடுகளின் பல நகரங்களில் வணிகர்களின் சங்கமமாக அமைந்த வியாபாரச் சங்கங்கள் (CHAMBER OF COMMERCE) இயங்கும் பயனுள்ள நடைமுறையைப் பார்த்து, அத்தகைய ஆக்கமும் நோக்கமும் தாம் பிறந்த இராஜபாளையத்திலும் ஊக்கம் பெற வேண்டுமென ராஜா கருதினார்; உள்ளார்ந்து விரும்பினார். சில வணிகர்களை அழைத்து, வியாபாரச் சங்கம் பற்றி விளக்கமாக எடுத்துரைத்து, தமது கருத்தையும் விருப்பத்தையும் ராஜா வெளியிட்டார்.

அம்பைய ராஜாவிடமிருந்து சில தகவல்களைத் தாங்கள் ஏற்கனவே தெரிந்து கொண்டதாகவும், அத்தகைய அமைப்பு

இராஜ பாளையத்திற்கு அவசியத் தேவையென்றும், வருகை தந்த வியாபாரிகள் அனைவரும் உடன்பட்டனர். ராஜா முன்னின்று சங்க அமைப்பை உருவாக்கித் தர வேண்டுமென வேண்டவும் செய்தனர்.

ஒரு நல்ல நாளில் வியாபாரச் சங்கத்தை இராஜபாளையத்தில் தொடங்குவதற்காக ஆயத்தப்பணிகள், ராஜாவின் வழி காட்டலில் தொடக்கமாயின.

இருபத்தேழு உறுப்பினர்களைக் கொண்டு, ஒரு தலைவர், துணைத் தலைவர் ஒருவர், செயலாளர்கள் இருவர், பதினொரு செயற்குழு உறுப்பினர்கள் அமைந்த நிர்வாகப் பேரவை உருவாக்கமாகி, 28.3.1938 இல் இராஜபாளையம் வியாபாரச் சங்கம் உதயமானது. சங்கத்தின் முதல் தலைவராக ராஜா ஒருமனதாகத் தேர்வு செய்யப் பெற்றார். முதல் தலைவரான பி.ஏ.சி.ஆர். வாழ்வு முற்றும் சங்கத்தில் தலைவராகவே பொறுப்பேற்றிருந்து, வரலாற்றுச் சிறப்புமிக்க பணிகளை வியபாரச் சங்கத்தின் மூலம் செய்வித்து, நகரின் வணிக நாயகமாய்த் திகழ்ந்தார்.

சங்கத்திற்கென 'அலுவல் கட்டிடம்' ஒன்றின் இன்றியமை யாமையைத் தெளிவாக உணர்ந்த பி.ஏ.சி.ஆர். கட்டிட உருவாக் கத்தில் கருத்தூன்றி, ரூ. 50,000 மதிப்புள்ள கட்டிடத்தை எழுப்பத் திட்டமிட்டு, 24.2.1950 இல் சென்னை மாநில கவர்னராயிருந்த பவநகர் மகாராஜாவைக் கொண்டு 'கால்கோள்' செய்வித்துக் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டச் செய்தார்.

கட்டிட உருவாக்கத்தில் நேரடிக் கவனம் வைத்த ராஜாவின் தீவிரமான முயற்சியால், இராஜபாளையம் வியாபாரச் சங்கக் கட்டிடம் ஒரே ஆண்டில் நிறைவு பெற்றது. தியாகசீலர் பி.எஸ். குமாரசாமி ராஜா அப்போது சென்னை மாநிலத்தின் முதலைமைச்சராக வீற்றிருந்தார். தமது சகோதரர் பி.எஸ்.கே.யின் புகழ்மிகு திருக்கரங்காளல் 1.2.1951 இல் சங்கக் கட்டிடத்தைத் திறந்து வைக்குமாறு செய்வித்து, பி.ஏ.சி.ஆர். பெரிதும் மகிழ்ந்தார்.



வியாபாரச் சங்கக் கட்டிட அடிக்கல் நாட்டு விழா.
கவர்னர் பவநகர் மகாராஜா அடிக்கல் நாட்டினார்.




வியாபாரச் சங்கத்தின் தலைவர் பி.ஏ.சி.ஆரும்,
பொறுப்பாளர்களும்

'வியாபாரச் சங்கம்' என்றால் ஏதோ வியாபாரிகளுக்கு மட்டும் பயனளிக்கும் ஓர் அமைப்பு எனக் கருதி விடாது, மக்கள் நலனையும் சங்கம் நோக்கமாகக் கொண்டதெனத் தெளிவு படுத்தவும், வியாபாரிகளுக்கும் பொது மக்களுக்கும் சங்கம் அரியதொரு பாலமாக அமையுமென்பதை வெளிப்படுத்தவும், பி.ஏ.சி.ஆர். மேற்கொண்ட சங்கப் பணிகள் நினைக்கத் தக்கவை; நெஞ்சார்ந்து போற்றத் தக்கவை!

வியாபாரச் சங்கம் 1938 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற தல்லவா? தொடங்கிச் சில ஆண்டுகளிலேயே இரண்டாவது உலக யுத்தம் மூண்டு விட்டது. அதையடுத்து நமது நாட்டில் உணவுப் பற்றாக்குறை, உடைத் தட்டுப்பாடு ஆகியவை ஏற்பட்டு, ஏழை எளிய மக்கள் எண்ணற்ற இன்னல்களை எதிர்கொள்ள நேர்ந்தது. உணவுக்கும், உடைக்கும் பஞ்சமென்றால், வாழ்வின் அடித்தளத்தில் உள்ள எளியவர்களுக்குத்தானே பற்றாக்குறையும், பரிதவிப்பும் வந்து சேரும்! இராஜபாளையத்தில் வாழ்ந்த ஏழை எளிய மக்களின் துயரங்களைக் கண்ணுற்ற, ராஜாவின் கருணை நிறைந்த பேருள்ளம், வியாபாரச் சங்கத்தின் வழியாக எளிய மக்களின் துயரங்களை ஒருவாறு நீக்க எண்ணம் கொண்டது. சங்கத் தலைவரின் கருத்துக்குச் சகப் பொறுப்பாளர்கள் அனைவரும் 'சரி' என உடன்பட்டனர்.

பொது மக்கள் தொடர்புடைய பொதுக்குழு ஒன்றைச் சங்கம் உருவாக்கியது. 'சென்ட்ரல் டெப்போ' என ஒரு உணவு தானியக் கிடங்கும். 'ஸ்டாண்ட்டர்டு கிளாத் டெப்போ' என ஒரு மலிவு ரகத் துணிக் கடையையும் ஏற்படுத்தி, வழங்கு முறையை பொது மக்களும், வணிகர்களும் இணைந்த பொதுக்குழுவின் கருத்துக்கு விட்டு, சங்கம் தன்னாலான நிவாரணமளித்த செயற்கரிய செயல் குறிப்பிடத்தக்கது. 1942 ஆம் ஆண்டில் நிகழ்ந்த இச் செயலாக்கத்தை உருவாக்கியும், ஊக்குவித்தும் ஒருவாறு மன அமைதி பெற்றார் சங்கத் தலைவர் பி.ஏ.சி.ஆர்.

சங்கத்தலைவர் ராஜா, நகர் மன்றத் தலைவராகவும் திகழ்ந்ததால், நகரின் வளர்ச்சி கருதி தொலைபேசித் தொடர்பகம், இம்பீரியல்

பாங்க் ஆப் இந்தியா, தீ அணைக்கும் படை, விற்பனை வரி அலுவலகம், தாசில்தார் அலுவலகம் ஆகியவைகளை மக்கள் நலத்திற்கும், வணிகர் நலத்திற்கும் வாய்ப்பளிக்கும் வகையில் தீவிரமாக முயன்று, நகரில் இடம் பெறச் செய்தார்.

கலப்படங்கள் ஒரு சிலரால் செய்யப் பெற்று, மக்களுக்கு ஊறு விளைவிப்பதோடு, வியாபாரிகளின் பெயரையும் கெடுக்கிறது. இவ்வகையில் இராஜபாளையம் வியாபாரச் சங்கம், கலப்படம் செய்பவர்களைச் சமூக விரோதிகளாக கருதித் தீர்மானங்கள் உருவாக்கி, நடைமுறையில் அத்தீமை புகுந்து விடாதவாறு எச்சரிக்கை செய்தது. ரயில்வே ஸ்டேஷனில் சரக்குப் போக்குவரத்திற்கும், பயணிகள் செல்வதற்கும் வசதிகளைப் பெற்றுத் தந்த வியாபாரச் சங்கம், ரயில்வே லயனுக்குக் கிழக்கே தொழிற்சாலைகளும், மக்கள் குடியிருப்பும் பெருகி வருவதால், ரயில்வே லயனைக் கடந்து செல்வதற்கு 'லெவல் கிராசிங்' அவசியத் தேவையென, இந்திய ரயில்வே அமைச்சரின் கவனத்தைக் கவர்ந்து, ஆவன செய்யப் பெற்றது. அரசாங்கம் பேருந்துகள் சிலவற்றை அரசுடைமையாக்கி, துரிதப்




இராஜபாளையம் வியாபாரச் சங்கம்

பேருந்துகளை நடத்தத் தொடங்கிய காலத்தில், அத் துரிதப் பேருந்துகள் இராஜபாளையம் வழியாகச் செல்ல வேண்டுமெனக் கோரிக்கைகளை அனுப்பி சங்கம் வெற்றி கண்டது. ஆக, இராஜபாளையம் வியாபாரச் சங்கம், வணிகர்களின் வணிக வளர்ச்சிக்குத் துணையாக நின்றதோடு, தலைவர் ராஜா காட்டிய வழியில், மக்களின் வாழ்க்கை நலத்திற்கும் உதவுவதாக அமைந்து பெருமை பெற்றது, இன்றும் புகழ் பெற்றுத் திகழ்கிறது!

தமிழ் மாகாண 40 வது அரசியல் மாநாடு இராஜபாளையத்தில், 30.12.1938, 31.12.1938 ஆகிய இருநாள்கள் நிகழ இருந்தன. இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த காங்கிரஸ் தலைவர்கள், வரவேற்புக் கழகத்தின் நிர்வாக சபையைத் தேர்ந்தெடுக்க, தியாகசீலர் பி.எஸ்.கே. தலைமையில் இராஜபாளையத்தில் 25.11.38 இல் கூடினர்.

வரவேற்புக் கழக நிர்வாக சபையாரை, கூடியிருந்தோர் ஒருமுகமாகத் தேர்வு செய்தனர். தலைவர்: பி.எஸ். குமாரசாமி ராஜா; உபதலைவர்கள் : இராமநாதபுரம் இராஜகுமாரர், எஸ் ஜெயராம் ரெட்டியார், எஸ். இராமசாமி நாயுடு, எம். கோவிந்தன்; பொக்கிஷதார்: பி.ஏ.சி. இராமசாமி ராஜா; காரியதரிசிகள் : கே. காமராஜ், ரா. கிருஷ்ணசாமி நாயுடு.

அகில இந்திய காங்கிரஸ் ராஷ்ட்டிரபதி சுபாஸ் சந்திர போஸ், மாநாட்டிற்கு அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தியில், "பூரண ஸ்வராஜ்யம் அடைய நாம் நம்முடைய போராட்டத்தை எப்படி நடத்த முடியுமென்பதில் மாநாட்டினர் முழுக்கவனம் கொள்வ ரென நம்புகிறேன்" எனக் குறிப்பிட்டிருந்தார்.

விடுதலை இயக்கத்திற்கு வீரியம் ஊட்டத்தான், 'அகில இந்திய மாநாடு' என்றும் 'மாகாண மாநாடு' என்றும் அக்கால கட்டத்தில் காங்கிரஸ் கட்சி மாநாடுகளை நடத்திக் கொண்டிருந்தது. அந்த நோக்கில் தான் இராஜபாளையத்தில் மாகாண மாநாடு கூடியது.



40-வது தமிழ் மாகாண அரசியல் மாநாட்டு வரவேற்புக் குழு

பல்லாயிரக்கணக்கானோர் கூடுகின்ற மாநாட்டை இரண்டு நாள்கள் நடத்த ஒரு மாதத்திற்கு முன்னர்தான் வரவேற்புக் குழு நிர்வாக சபை உருவாக்கப் பெற்றது. அத்துடன் மாவட்டம் முழுவதும் மழை இன்மையால் வறட்சி தாண்டவமாடிக் கொண்டிருந்தது. இந்நிலையில் மாபெரும் மாநாட்டிற்குரிய நிதி சேகரிப்புப் பொறுப்பை நம்பிக்கையுடன் ராஜாவிடம் அளித்தனர். நம்பிக்கையை நிறைவேற்றுகின்ற இயல்பு ராஜாவின் பிறவிக்குணம் ஆயிற்றே?



மாபெரும் நம்பிக்கையை நிறைவேற்றிய
மாநாட்டுப் பொருளாளர் பி.ஏ.சி.ஆர்.

ராஜாஜி, டி. பிரகாசம், ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் முதலிய பல தலைவர்களும், பன்னூறு பிரதிநிதிகளும் பல்லாயிரக் கணக்கான பொதுமக்களும் மாநாட்டில் கலந்து கொண்டனர்.

இராஜபாளையத்தில் மட்டுமின்றி, மாநாட்டு நன்கொடை ஸ்ரீவில்லிபுத்தூர் தாலுகா, சாத்தூர் தாலூகா, பரமக்குடி தாலூகா, முதுகுளத்தூர் தாலூகா, அருப்புக்கோட்டை தாலூகா மற்றும் மதுரை, நெல்லை மாவட்டங்களிலும் ரூ. 6000 வரை

திரட்டப்பட்டு, இதர வரவுகளாக ரூ. 15,000 சேர்க்கப் பெற்று, பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு மூன்று நாள்கள் உணவளித்து, பிரம்மாண்டமான பந்தல்கள், அலங்காரங்கள் செய்வித்து, 'பொக்கிஷதார்' என்ற முறையில் பி.ஏ.சி.ஆர். ரூ. 652 ஐ 'வரவு-செலவு' கணக்கில் மீத்து, இருப்பாக்கி வழங்கினார்.

வரவுக்குமேல் செவாகியிருக்குமென பொறுப்பாளர்கள் எண்ணியி ருந்த வேளையில், 'இருப்பு' அளித்த ராஜாவின் திறமை எல்லோராலும் பாராட்டப் பெற்றது. அயராது அலைந்து பயணித்து நன்கொடை சேர்ப்பில் காட்டிய அப்பெருமகனாரின் உழைப்பும், சிந்தித்துச் சிந்தித்துச் செலவுகளை ஏற்ற உறுதியும் தலைவர்களால் பெரிதும் புகழப் பெற்றன.

* * *



# 17

# ராமராஜு, ஜெயராம், சுதர்சனம் ஆலைகளின் தோற்றமும் வளர்ச்சியும்

சிருங்கேரி மகா சந்நிதானம் ஜகத்குரு ஸ்ரீ அபினவ வித்தியா தீர்த்த மகா சுவாமிகள் 1957 ஆம் ஆண்டு இராஜபாளையத்திற்கு வருகை புரிந்தார்கள். ராமராஜு சர்ஜிகல் காட்டன் மில்ஸ் வளாகத்திற்கு மகா சுவாமிகளை அழைத்துச் சென்று, அங்கே நிகழும் பணிகளை, உற்பத்தியாகும் பொருள்களைப் பற்றியெல்லாம் மிகுந்த பணிவோடும், பக்தியோடும் எடுத்துரைத்தார் பி.ஏ.சி.ஆர். மிக மகிழ்ந்த சுவாமிகள், அகம் நெகிழ ஆலையின் வளர்ச்சிக்கு நல்லாசி வழங்கினார்கள்.



ராமராஜு சர்ஜுகல் காட்டன் மில்ஸ்
ஸ்ரீ ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி மகாசந்நிதானம் வருகையும் நல்லாசியும்

திருவாடுதுறை மகா சந்நிதானம் 1951 ஆம் ஆண்டிலேயே, ராமராஜு சர்ஜிகல் காட்டன் மில்ஸ் வளாகத்திற்கு வருகை தந்து,

உற்பத்திப் பொருள்களின் பயனை அறிந்து, "எதற்கும் உபயோகப்படாத கழிவுப் பஞ்சைக் கொண்டு, மிக உபயோக கரமானதும், மக்கள் உடல் ஊறுகளின் கழிவுகளை வெளியேற்று வதுமான நல்ல சாதனமாக்குவது கண்டு மகிழ்ந்தோம். இந்தியா விலும், இலண்டன் முதலிய வெளிநாடுகளிலும், தயாராவதை விட உயர்ந்த ரகமாக இங்கு தயாரிக்கப்படுவது தமிழ்நாட்டுக்கே ஓர் தனிப்பெருஞ் சிறப்பாகும்" எனப் போற்றியுரைத்து வாழ்த்தி மகிழ்ந்தார்கள்.

ஆசிரியர் 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி 1947 ஆம் ஆண்டு ஆலைக்கு வந்த போது, "ஆகா! தமிழ்நாட்டில் இப்படியொரு ஆலை இருப் பதை இப்போதுதான் அறிகிறேன். இதன் பணி, பெருமிதத்தைத் தருகின்றது; இதன் வெற்றிச் சாதனையை புரிந்து கொள்கிறபோது, நானே வெற்றி அடைந்தது போல் உணர்கிறேன். நிகரில்லாத இந்நிறுவனத்தின் வெற்றி என்றென்றும் தொடரட்டும்" என்றார்.

அப்போதைய சென்னை மாகாணக் கவர்னரின் ஆலோசகர் டி. ஆஸ்டின், 1945 ஆம் ஆண்டில் சர்ஜிகல் ஆலையைக் கண்ணுற்று, "இதுபோன்றதொரு தொழிலின் முன்னோடியாக விளங்கும் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் தொழில் முயற்சி மிக மிக உயர்ந்த பாராட்டுக்கு உரியது" எனக் குறிப்பிட்டார்.

தலைவர் காமராஜ், டாக்டர் சர் சி.பி. இராமசாமி ஐயர், அமைச்சர் களாக பொறுப்பு வகித்த என். சஞ்சீவி ரெட்டி, எம். பக்தவத்சலம், சி. சுப்பிரமணியம், ஆர். வெங்கட்ராமன், கல்வியாளர் டாக்டர் அழகப்ப செட்டியார் முதலிய சான்றோர் பலர், ராமராஜு சர்ஜிகல் காட்டன் ஆலையைக் கண்டு, அதன் உற்பத்திப் பொருளின் தரம், பயன் ஆகியவற்றை வெகுவாக வியந்து போற்றிப் பாராட்டினர்.

அருளாளர்களும், அறிஞர்களும், அரசியல் தலைவர்களும், வாழ்வின் பல்வேறு துறைகளைச் சார்ந்த பெருமக்கள் பலரும் பாராட்டக்கூடிய தனிச்சிறப்பொன்றை இராஜபாளையம்



*சர்ஜிகல் காட்டன் மில்ஸ் ஆர்.வி. வருகை தந்தார்*



*சர்ஜிகல் காட்டன் மில்ஸ்*
*டாக்டர் சர்.சி.பி. ராமசாமி ஐயர் வருகை தந்தார்*

சர்ஜிகல் காட்டன் மில்ஸ் பெற்றுத் திகழ்ந்தது. ஆம்.! மருத்துவப்பஞ்சு, பேண்டேஜ் ஆகியவற்றை 1941 ஆம் ஆண்டு உற்பத்தி செய்த இந்த ஆலையே, தென்னிந்திய அளவில் முதன் முதலாக நிறுவப்பட்ட தொழிற்சாலையாகும்.! இத்தகைய தனிச் சிறப்புக் கொண்ட தொழில் முயற்சியை (UNIQUE ENTERPRISE) அடிகோலியவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் மூத்த மருமகனார் என்.கே. ராமராஜு ஆவார்.

தேனி நகரில் புகழார்ந்த வணிகராய் விளங்கிய கொண்டு ராஜாவின் மூத்த புதல்வராய்ப் பிறந்த என்.கே. ராமராஜு, சென்னை லயோலாக் கல்லூரியில் பி.ஏ. பட்டம் பெற்ற பின்னர், இலண்டன் சென்று ஐ.சி.எஸ். பட்டம் பெற படித்து வந்தார். பி.ஏ.சி.ஆர். 1935 ஆம் ஆண்டு மேல்நாடுகளில் பயணம் மேற்கொண்ட போது, ராமராஜுவைச் சந்தித்து, தாய்நாட்டில் தொழில் தொடங்கலாமென ஆலோசனை கூறி, இராஜபாளை யத்திற்கு அழைத்து வந்தார்.

இராஜபாளையம் நூற்பு ஆலையை 1938 ஆம் ஆண்டில் தொடங்கிய பி.ஏ.சி. இராமசாமி ராஜா, அதன் உற்பத்தியில் ஏற்படும் கழிவுப் பஞ்சையும், இராஜபாளையம் பகுதியில் கிடைக்கும் குட்டை இழைப் பஞ்சையும் பயன்படுத்தி, ஒரு புதிய தொழில் தொடங்கலாமென எண்ணினார். தமது எண்ணத்தை பி.ஏ.சி.ஆர். வெளியிட்ட போது, 'சரியான ஆலோசனை' என வரவேற்று உடன்பட்ட ராமராஜு, தொழிலைத் தொடங்கு வதற்கான ஆயத்தப் பணிகளில் ஓர் ஆர்வத்துடன் ஈடுபடலானார்.

தொழில் முயற்சி பற்றி, தியாகசீலர் பி.எஸ். குமாரசாமி ராஜாவிடம் ராமராஜு கூறியபோது, மிக மகிழ்ந்து வரவேற்றதோடு, பி.எஸ்.கே. தமக்குச் சொந்தமான நிலத்தை ஆலையை அமைப்பதற்காக வழங்கி, ராமராஜுவை உற்சாகப் படுத்தினார். அத்துடன் அன்றைய சென்னை அரசாங்கம், இந் நிறுவனத்தின் பங்கு மூலதனத்தில் பங்கு எடுத்துக் கொள்ள ஆவன செய்தார். ரூ. 7500 பங்கு மூலதனமாக முதலீடு செய்து, அரசாங்கம் இந்நிறுவனத்திற்கு ஆக்கமளித்தது.

உற்பத்தி வகையால் புதுமையாகவும், உரிய பயனால் புகழ்மையாகவும் கொண்ட ஒரு வித்தியாசமான தொழிலை, மருத்துவத் துறைக்குத் தேவைப்படும் பஞ்சு தயாரிக்கும் உற்பத்தியை, இராஜபாளையத்தில் தொடங்க என்.கே. ராமராஜு முனைந்து செயற்பட்டார். மருத்துவப் பஞ்சு உற்பத்தி செய்யும்

தொழிலில் சிறந்த அனுபவம் பெற்றிருந்த கே.சி. தாஸ் என்பவரை, கல்கத்தாவிலிருந்து வரவழைத்து, ஆலையின் உற்பத்திப் பொறுப்பாளராக நியமித்தார். அவர் ஆலையில் ஏறத்தாழ 29 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றினார்.



ராமராஜு சர்ஜிகல் காட்டன் மில்ஸ்

எதிர்பாராத பேரிழப்பாக நிறுவனர் என்.கே. ராமராஜு 1942 ஆம் ஆண்டு அமரத்துவம் அடைந்தார். எனவே ஆலையின் நிர்வாகப் பொறுப்பை பி.ஏ.சி. இராமசாமி ராஜா ஏற்று, மறைந்த நிறுவனரின் நினைவைப் போற்றும் வகையில் ஆலையின் பெயரை 'தி ராமராஜு சர்ஜிகல் காட்டன் மில்ஸ் லிமிடெட்' என அமைத்தார். இந்த ஆல்லயின் பொருளாதார வளர்ச்சியினைக் கருத்தில் கொண்டு 1958 ஆம் ஆண்டு, ஒரு நூற்பாலையை இதன் கிளையாக பி.ஏ.சி.ஆர். நிறுவினார். நூற்பாலைக்கு என்.கே. ராமராஜுவின் ஒரே புதல்வியும், தமது ஒரே புதல்வரான பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவின் வாழ்க்கைத் துணைவியாருமான சுதர்சனம் அம்மையாரின் பெயரைச் சூட்டினார். சுதர்சனம்

நூற்பாலையையும், ராமராஜு சர்ஜிகல் ஆலையையும் பி.ஏ.சி.ஆரின் மறைவுக்குப் பின்னர், நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா, படிப்படியாக விரிவாக்கி, நவீன இயந்திரங்களை நிர்மாணித்து, ஏறத்தாழ 15 கோடி அளவிற்கு ஆஸ்தி மதிப்பை உயர்த்தியுள்ளார். ஆண்டு விற்பனை ரூ. 29 கோடி அளவிற்குப் பெருகி உள்ளது.



சுதர்சனம் ஸ்பின்னிங் மில்ஸ்

கடந்த பதினேழு ஆண்டுகளாய் இந்த ஆலைகள் அவ்வப்போது நவீன மயமாக்கப்பட்டு, கணிசமான அளவு உற்பத்திப் பெருக்கத்தை யும், பயன்படுத்துபவரின் கவனத்தை ஈர்க்கும் அளவு உற்பத்தித் தரத்தையும் மேலோங்கச் செய்து வருவதால், ஒவ்வொரு ஆண்டும் லாபத்தொகை ஏறுமுகமாகவே திகழ்ந்து வருகின்றது. 1967 ஆம் ஆண்டு பெருமாள்பட்டியில் புதிய சர்ஜிகல் ஆலை நிறுவப்பட்டு, உற்பத்திப் பெருக்கத்திற்கும்,

விற்பனை உயர்வுக்கும் விரிவாக்கம் செய்யப் பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்கது.

பங்குதாரர்களுக்குக் கணிசமான அளவில் 'டிவிடெண்ட்' ஆண்டுதோறும் அளிக்கப் பெற்று வருவதுடன், 1980, 1991 ஆகிய இரண்டு ஆண்டுகளில் போனஸ் பங்குகள் வழங்கப் பெற்றுள்ளன.

'ஜெயராம் மில்ஸ் லிமிடெட்' எனும் புதிய ஆலை ஒன்றை பி.ஏ.சி.ஆர். 1944 ஆம் ஆண்டு தொடங்கினார். மதுரை ஹார்வி மில்லின் நிர்வாகத் தலைமை ஏற்றிருந்த சர் ஜேம்ஸ் டோக், பி.ஏ.சி.ஆரின் பிரியத்திற்குரிய மரியாதைக்குரியவர். அவருடன் உள்ளார்ந்து பழகும் வழக்கத்தைக் கொண்டிருந்தார் ராஜா. அவருடன் மட்டுமல்லாது, நல்ல உள்ளம் கொண்ட அந்த வெள்ளையரின் குடும்பத்தோடும், ராஜா நல்லன்புகொண்டு உறவு கொண்டிருந்தார். பி.ஏ.சி.ஆரின் அன்பைப் பெரிதும் மதித்துப் போற்றிய சர் ஜேம்ஸ் டோக், அப் பெருமகனாரின் அழைப்பை ஏற்று, இராஜபாளையத்திற்குக் குடும்பத்துடன் வருகை புரிந்து, ஜெயராம் மில்ஸை பெரு மகிழ்ச்சியுடன் தொடங்கி வைத்தார். மூன்று லட்ச ரூபாய் முதலீட்டில் ஆலையைத் தொடங்கும்போது, நூற்பாலையாகத்தான் ஜெயராம் மில்ஸ் வடிவமைக்கப் பெற்றது. ஜெயராம் மில்ஸ் பின்னர், நெசவாலையாக மாற்றம் செய்யப் பெற்று, காடா, மல், லாங்க்லாத் மற்றும் வேஷ்டிகள் உற்பத்தி செய்யப் பெற்றன. உற்பத்தியில் உயர்ந்த தரம் பேணப் பெற்ற, ஜெயராம் மில்ஸ் 'சங்கு மார்க்' உற்பத்தித் துணிகள் தென்னிந்தியா முழுமையும் மக்களால் வெகுவாக விரும்பி வாங்கப் பெற்றதுடன், மகாராஷ்டிரா, கோவா முதலிய மாநிலங்களில் விற்பனை ஆண்டுக்கு ஆண்டு உயர்ந்து கொண்டே இருந்தது.

நாற்பதுகளில் ராம்கோ நிறுவனங்களின் ஓர் உறுப்பாக, பி.ஏ.சி. இராமசாமி ராஜாவால் உருவாக்கம் செய்யப் பெற்ற ஜெயராம் மில்ஸ், அப் பெருமகனாரின் எதிர் பார்ப்புக்கு ஒரு சிறிதும்

குறைவின்றி ஏறுமுகமாகவே விற்பனையிலும், ஈட்டிய இலாபத்திலும் விளங்கியதால், பங்குதாரர்களுக்கு எவ்விதத் தங்கு தடையுமின்றி எல்லா ஆண்டுகளிலும் டிவிடண்ட் அளிக்கக் கூடிய வல்லமை பெற்றுத் திகழ்ந்தது. பின்னர் பி.ஆர்.ராமசுப்பிரமணிய ராஜாவின் நிர்வாக ஆளுமைக்கு வந்த பிறகும், நடையிலும் நடைமுறையிலும் ஜெயராம் மில்ஸ், பெருமைக்குரிய அத்தியாயங்களையே பெற்று வருகின்றது.




ஜெயராம் மில்ஸ் திறப்பு விழாவில்
சர் ஜேம்ஸ் டோக்

* * *

# 18

# இராஜபாளையம் கமர்ஷியல் வங்கியும் இராமகிருஷ்ணா சேவா சங்கமும்

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், 1935 ஆம் ஆண்டில் அயல் நாட்டுப் பயணத்திலிருந்து திரும்பியதும், இராஜபாளையத்தில் ஒரு வங்கியை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணம் கொண்டிருந்தார். ஏற்கனவே கூட்டுறவுத் துறையில் பூபதி ராஜு கூட்டுறவு வங்கி செயற்பட்டுக்கொண்டிருப்பினும், நகரில் ஒரு தனியார் வங்கியை உருவாக்குவது மேலும் நன்மைதருமென நம்பினார்.

திருவாங்கூர் நேஷனல் பாங்கில் பணியாற்றிய தனது சகலர் எஸ்.ஆர். நாராயண ராஜா இராஜபாளையம் வந்தபோது, அவரிடம் வங்கி உருவாக்கம் பற்றி பி.ஏ.சி.ஆர், கலந்துரையாடி ஒரு முடிவுக்கு வந்தார்.

பி.ஏ.சி.இராமசாமி ராஜாவும், அப்பெருமகனாரின் சகலர் எஸ்.ஆர். நாராயணராஜாவின் தந்தையார் எஸ்.என். இராமசாமி ராஜாவும் இயக்குநர்களாகப் பொறுப்பேற்று, 1936 ஆம் ஆண்டு, 'இராஜபாளையம் கமர்ஷியல் பாங்க் பிரைவேட் லிமிடெட்' என்றொரு தனியார் வங்கி உருவாக்கம் கொண்டது. எஸ்.ஆர். நாராயண ராஜா அதன் செயலாளராகப் பொறுப்பேற்றார்.

மரியாதைக்குரிய இருவர் வங்கியின் இயக்குநர்களாக வீற்றிருப்பதை அறிந்த மக்கள், டெபாசிட் செய்வதில் நம்பிக்கையும், ஆர்வமும் கொண்டனர். வணிகர்கள் பலர், வங்கித் தொடர்பை விரும்பியதால், நாளும் புதிய கணக்குகள் வளர்ந்தவாறு இருந்தன. டெபாசிட் பெருகப் பெருக வங்கியின் பணிகள் சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கின. அந்தக் காலத்திலேயே அதாவது முப்பதுகளிலேயே ஒராண்டு டெபாசிட்டுக்கு ஐந்து சதவிகித

வட்டியை இராஜபாளையம் கமர்ஷியல் பாங்க் வழங்க முன் வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

கமர்ஷியல் பாங்கின் டெபாசிட் பெருகிய நிலையில், அதன் கிளைகளாக சங்கரன்கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய ஊர்களில் வங்கிகள் இயங்கத் தொடங்கின. இராஜபாளையத்தைத் தலைமையகமாகக் கொண்டு கமர்ஷியல் பாங்க், எல்லாவிதமான வங்கி அலுவல்களையும் ஏற்று நடத்தியது. தங்க நகைகள் ஈட்டின் பேரிலும், இதர சரக்குகளின் பேரிலும் சகாயமான வ்ட்டிக்கு கடன்கள் வழங்கப்பெற்றன. தவணை டெபாசிட்டுகளையும் வங்கி ஏற்றுக் கொண்டது.

ஐம்பதுகளில் பி.ஏ.சி. இராமசாமி ராஜா, எஸ்.என். ராமசாமி ராஜா, எஸ்.ஆர். நாராயண ராஜா, பி.ஆர். ராம சுப்பிரமணிய ராஜா ஆகிய நால்வரும் இயக்குநர்களாக வங்கியில் பொறுப் பேற்றிருந்தார்கள்.

நகரின் அனைத்துச் சமூகங்களுக்கும், அன்றாடத் தேவைக்குப் பயன்படும் 'முதல்' சிறப்பைப் பெற்ற இராஜபாளையம் கமர்ஷியல் பாங்க், சாதாரண நடுத்தர குடி மக்களுக்கு ஒரு பிடிப்பும். பற்றும் ஏற்படும் வகையில் செயலாற்றியது. தொழில் துறையில் வளர்ந்து வந்த இராஜபாளையம் நகரில், சிறு சிறு தொழில்கள் பெருகுவதற்கும், நடுத்தர மக்கள் தொழிற்துறையில் ஈடுபடுவதற்கும் கமர்ஷியல் பாங்க் உரிய உதவிகள் வழங்கி, வழிகாட்டிப் புகழ் சேர்த்தது, வீட்டுத் தேவைகளுக்கு, உடன் கடன் உதவிபெற வங்கி பெரிதும் துணையாக அமைந்தது. வர்த்தக சமூகத்தினருக்கு வங்கி நாற்றங்காலாகப் பயன்பட்டுப் போற்றுதலுக்குரிய பணி களாற்றியது.

இராஜபாளையத்தில் இம்பீரியல் வங்கியாகத் தோன்றிப் பின்னர் 'ஸ்டேட் பாங்க் ஆப் இண்டியா' எனத் தழைத்த வங்கியும், 'சென்ட்ரல் பாங்க் ஆப் இண்டியா', 'இந்தியன் வங்கி', 'சௌத் இந்தியா பாங்க்' முதலிய பலவங்கிகள் அறுபதுகளில்இடம்பெற்று, வங்கி அலுவல்களை வளரும் நகரில் மிகுந்த முயற்சியுடன்

செயலாற்றத் தொடங்கி இருந்தன. எனவே இராஜபாளையம் கமர்ஷியல் வங்கி தஞ்சாவூர் பாங்குடன் பின்னர் இணைக்கப் பெற்றது.

மேற்கு இராமநாதபுர மின்சார விநியோக நிறுவனம் பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவால் நிறுவப் பெற்றுப் பின்னர், அந்நிறுவனத்தை டி.கே. ராஜு மேற்கொண்டார்.

பாரத நாட்டின் பெருமையைப் பாட வந்த மகாகவி பாரதி,

"மாரத வீரர் மலிந்த நன்னாடு
மாமுனிவோர்பலர் வாழ்ந்தபொன்னாடு" எனப் பெருமிதமாகப் பேசினார்.

ஆம், பாரத புண்ணிய பூமியில் தோன்றிய மாமுனிவர்கள் வழங்கிய அருள் அமுதச் சிறப்பால், நாடு ஆன்மீகத்தில் திளைத்து, அரிய நலம் பெற்றுள்ளது. இத்தகைய ஆன்மீக நலத்தை அருளிய மகான்களுள் பத்தொன்பதாம் நூற்றாண்டில், கல்கத்தாவிற்கருகே கங்கைக் கரையில் வாழ்ந்த பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் தலை சிறந்தவர்; இந்திய நாட்டைத் தலை நிமிர வைத்த தவசீலர் ஆவர்!

மேல்நாட்டுச் சரித்திரப் பேராசிரியர் ஏ. டாய்ன்பீ ஒரு முறை பகவான் இராமகிருஷ்ணரைச் சந்தித்துத் தரிசித்த பின்னர், "இந்த அணுயுகத்தில் சாதி, மதம், இனம், மொழி, நாடு எனும் குறுகிய வேறுபாடுகளைப் போக்கி, ஒருமைப்பாட்டைக் காட்ட வல்லது இந்திய ஆன்மீகத்துறையே. இதில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பங்கு மகத்தானது. காரணம் எளிமையின் வடிவாகத் திகழும் அவரது உபதேசங்கள் ஆன்மீக தரிசனத்தின் அடிப்படையில் எழுந்தவை" எனக் கூறினார்.

இத்தகைய உபதேசங்கள் உலகெங்கும் பரவ வேண்டுமென்ற நோக்கத்தில் பகவான் இராமகிருஷ்ணரின் பிரதம சீடர் சுவாமி விவேகானந்தர் இராமகிருஷ்ணா சேவா சங்கம், இராமகிருஷ்ணா

திருமடம் ஆகிய இரு அமைப்புகளை உலகமெங்கும் அமைக்க உறுதி பூண்டு செயலாற்றினார். ஏறத்தாழ 150க்கும் மேற்பட்ட அமைப்புகள் உலகெங்கும் உருவாக்கம் கொண்டன.

தேசீய விடுதலை இயக்கத்தில் முன்னின்ற இராஜபாளையம், ஆன்மீக நம்பிக்கையிலும், தொண்டிலும் ஆர்வம் கொண்டு 1938 ஆம் ஆண்டில், ஸ்ரீ இராமகிருஷ்ணா சேவா சங்க அமைப்பை புண்ணியச் செல்வமாக இராஜபாளையம் பூமியில் தழைக்கச் செய்து கொண்டது.



ஸ்ரீ இராமகிருஷ்ணா சேவா சங்கம்

பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சரின் உபதேசங்களில் உள்ளார்ந்த ஆர்வமும், உருகித் திளைக்கும் உயரனுபவமும் பெற்றிருந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர், இராமகிருஷ்ணா திருமடங்களை நிர்வகிக்கும் அருளாளர்களிடம் நெஞ்சார்ந்த அன்பும், தொடர்பும் கொண்டிருந்தார். இராஜபாளையத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணா சேவா சங்கம் தோன்றுவதை மகிழ்ந்து வரவேற்று, அதன் வளர்ச்சிக்குத் துணையானார். சங்கத்திற்குத் தியாகசீலர் பி.எஸ்.கே. ரயில்வே லயனின் கீழ்புறம் தனது நிலத்தை நன்கொடையாக அளித்த போது, பெருந்தகை பி.ஏ.சி.ஆர். அதில்

உரிய கட்டிடங்களை அமைத்து உள்ளன்புடன் சங்கத்திற்கு வழங்கினார்.

சென்னை இராமகிருஷ்ணா மாணவர் இல்லத்தில் பயின்ற எஸ். அர்ஜுன ராஜா, ஆன்மீக நெறியில் ஈடுபாடு கொண்ட ஏ.சிவப்பிரகாசம், எஸ். குமாரசாமி ராஜா ஆகிய பெருமக்கள் மூவரும், மிகுந்த ஆர்வத்துடன் உருவாக்கிய இராஜபாளையம் ஸ்ரீ ராமகிருஷ்ணா சேவா சங்கத்தின் தலைவராக, பி.ஏ.சி.ஆர். 1944 ஆம் ஆண்டில் பொறுப்பேற்றார். ஆயுட் காலம் முழுவதும் சங்கத் தலைவராக வீற்றிருந்து அப் பெருமகனார் அரிய பணிகளாற்றிப் பெருமை பெற்றார்.

எம்.ஆர்.எஸ். ராதாகிருஷ்ண ராஜா, ஏ.கே.டி. ரெங்கசாமி ராஜா, ஏ.கே.டி. அழகராஜா, எஸ். அர்ஜுன ராஜா, எஸ். நல்லகண்ணு செட்டியார் எம்.கே.எஸ். கருப்பையா நாடார், ஏ.சிவப்பிரகாசம் ஆகிய பெருமக்கள் இராமகிருஷ்ணா சேவாஸ்ரமத்தின் பணிகளுக்கு மாதந்தோறும் நன்கொடை வழங்கி வந்தனர்.

ஞாயிறு தோறும் காலை 9 மணிக்குப் பாகவத வகுப்பும், மாலை 6 மணிக்குச் சமயப்பயிற்சி வகுப்பும், முறையாக சேவாஸ்ரமத்தில்



ஸ்ரீ இராமகிருஷ்ணா சேவா சங்கத்தில் நடந்த கீதாயக்ஞம்

நிகழ்ந்து வந்தன. சுவாமி அத்வயானந்த சரஸ்வதி 1946 ஆம் ஆண்டில் பகவத் கீதை சொற்பொழிவை ஒவ்வொரு மாதமும் கடைசி வாரம் வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி, ஏராளமான ஆண்களும், பெண்களும் கீதையில் நல்ல ஞானமும், பக்தியும் பெறுமாறு செய்வித்தார். 1951 ஆம் ஆண்டின் ஆகஸ்ட் மாதம் மூன்று நாள்கள் சுவாமி அத்வயானந்தா, வேதாகம முறைப்படி கீதா யக்ஞத்தை நடத்தினார். கீதா யக்ஞம் மிகச் சிறப்பாக நிகழ்வுற சங்கத் தலைவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவும், ஏ.கே.டி. ரெங்கசாமி ராஜாவும் முன்னின்று பணிகளாற்றினர். பின்னர் சுவாமிகள் தலைமையில் திருக்குறள் வகுப்புத் தொடங்கப் பெற்று, அறத்துப்பால் நிறைவு பெற்றது.

மார்கழி மாதந்தோறும் திருப்பாவை, திருவெம்பாவைப் பாராயணமும், வழிபாடும் நடைபெற்று, திருப்பாவை திருவெம்பாவை மாநாடு கூட்டி, அறிஞர் பலர் பங்கேற்றுச் சொற்பொழிவாற்றி அருட்சுகம் வழங்கினர். பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், அன்னை சாரதா தேவியார் ஆகியோர் ஜெயந்திகளை மிகச் சிறப்பாகச் சங்கம் கொண்டாடி மகிழ்ந்தது.

1962 ஆம் ஆண்டில் பி.ஏ.சி.ஆர். திருக்குமாரர் பி.ஆர்.ராமசுப்பிரமணிய ராஜா சேவாஸ்ரமத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

சுவாமி விவேகானந்தரின் நூற்றாண்டு நினைவாக, 'விவேகானந்தா வித்யாலயா' ஆஸ்ரம வளாகத்திலேயே 1964 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றது. 35 மாணவர்களுடன் தொடங்கப் பெற்ற வித்யாலயா, ஏறத்தாழ ஐநூறு மாணவர் கள்ளயும், பத்து ஆசிரியர்களையும் கொண்டு மிகுந்த முன்னேற்றத்துடன் திகழ்கின்றது. ஸ்ரீ இராமகிருஷ்ணா சேவாஸ்ரமத்தின் தலைமைப் பொறுப்பில் தொடர்ந்து பதினெட்டு ஆண்டுகள் வீற்றிருந்த தமது தந்தையார் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் நினைவாக, சங்கத் தலைவர் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா ரூ. 7 லட்சம் செலவில்

12 அறைகளுடன் கூடிய எழிலார்ந்த கட்டிடத்தை பள்ளிக்காக அமைத்து, நன்கொடையாக வழங்கி உள்ளார்.

ஸ்ரீ இராமகிருஷ்ணா சேவா சங்கப் பொன் விழாவையும், விவேகானந்த வித்தியாலய வெள்ளி விழாவையும் 1990 ஆம் ஆண்டு நடத்திய போது, பி.ஏ.சி. இராமசாமி ராஜா நினைவாலயத்தையும், அப் பெருமகனாரின் திருவுருவப் படத்தையும் திறந்து வைத்து, பி.ஏ.சி.ஆர், சங்கத்தின் பணியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட அரிய செயலை, இராமகிருஷ்ணா திருமடத்தைச் சார்ந்த அருளாளர்கள் போற்றிப் பாராட்டி நினைவு கூர்ந்து சிறப்பித்தனர்.

"ஸ்ரீ ராமகிருஷ்ணா மிஷனைத் தவிர்த்து, பகவான் குருதேவர் திருப்பெயரால் ஆன்மீகத் தொண்டாற்றும் தனியார் அமைத்த சேவா நிறுவனங்கள் தமிழ்நாட்டில் பல உள்ளன. அவைகளில் காலத்தால் முற்பட்டது இராஜபாளையம் இராமகிருஷ்ணா சேவா சங்கமாகும். சங்கத் தலைவராகக் காலத்தால் நீண்ட நெடிய 18 ஆண்டுகள் தலைவராக வீற்றிருந்தவர் பி.ஏ.சி. இராமசாமி ராஜா ஆவார். காலத்தால் மூத்த அமைப்பில், பணியால் மூத்த பெரியாரின் திருவுருவப் படத்தை திறந்து வைக்கும் வாய்ப்பு - அடியேனுக்குக் கிடைத்த அரிய பாக்கியம்" என மகிழ்ந்து கூறினார், ராமகிருஷ்ணா மிஷனைச் சார்ந்த சுவாமி ஆத்மகனாநந்த மகராஜ்.

* * *

# 19

## உருவாக்கிய நெறியும் திருவாக்கிய முறையும்

'மரபு தழைக்க வேண்டும்; மகன் பிறக்க வேண்டும்' எனத் துணைவியாருடன் இராமேஸ்வரம் சென்று, விரதமிருந்து, தீர்த்தமாடி, வழிபட்ட பி.ஏ.சி.ஆருக்கு ஆறாவதாக ஆண் குழந்தை, மதுரை மருத்துவ மனையில் பிறந்த செய்தியை, அயல் நாட்டிலிருந்த அப் பெருமகனாருக்கு, பி.எஸ். குமாரசாமி ராஜா தந்தி அனுப்பித் தெரிவித்திருந்தாரல்லவா?

தாய்நாடு திரும்பிய பி.ஏ.சி.ஆர், தமது குழந்தையைப் பார்த்து மகிழ்ந்தபோதே, பக்திக்கு இரங்கி அருள் புரிந்த இராமேஸ்வரம் பெருமானை ஒரு கணம் நினைந்து நெகிழ்ந்து சிந்தித்தார். இராஜபாளையம் பகுதியில் அதிகம் பழக்கமில்லாத 'ராம சுப்பிரமணியம்' எனும் பெயர் சூட்டி மகிழ்ந்தார். ராம சுப்பிரமணியத்திற்கு ஐந்து வயது ஆனபோது, தகுந்த குருவைக் கொண்டு 'வித்யாரம்பம்' செய்யப்பெற்றது.

இராமசுப்பிரமணிய ராஜா, எஸ்.எஸ். இராமச்சந்திர ராஜா, எஸ்.என். ராமராஜு ஆகிய மூவருக்கும் தொடக்கக் கல்வியை, ஓர் ஆசிரியரைக் கொண்டு, ராம மந்திரத்திலேயே பயிற்று விக்குமாறு ஏற்பாடு செய்தார் ராஜா.

தமது புதல்வன் இராமசுப்பிரமணிய ராஜா, பால்ய வயதில் ஆரோக்கியமாக வளர வேண்டுமெனக் கருதிய பி.ஏ.சி.ஆர், ஊட்டச் சத்துக் கொண்ட மருந்து மாத்திரைகளை நேரம் தவறாது கொடுப்பதில் கவனம் செலுத்தியதோடு, உடற்பயிற்சிகள் செய்யப் பயிற்றுவித்தும், நாள் தோறும் 'சூரிய நமஸ்காரம்' செய்வதைப் பழக்கப்படுத்தியும் வந்தார். இரவில் படுக்கும்போது,

தமது படுக்கைக்கு அருகிலேயே பையனை உறங்கச் செய்து, ஒரே கொசு வலைக்குள், தந்தையும் மகனும் நித்திரை கொள்வர். உயர்நிலைப் பள்ளியில் இராமசுப்பிரமணிய ராஜா படித்துக் கொண்டிருந்த வேளையிலும், தந்தையாருடன் உடன் உறங்கும் வழக்கம் நீடித்தது!

தொடக்கக் கல்வியை வீட்டிலேயே படித்து முடித்த தமது புதல்வனை இராஜபாளையத்திலிருந்த ஜில்லா போர்டு பள்ளியிலேயே (DT. BOARD SCHOOL) சேர்த்துவிட நினைத்தார் பி.ஏ.சி.ஆர். அன்றைய நிலையில் செல்வந்தர்களெல்லாம் தங்கள் குழந்தைகளை ஆங்கிலப் படிப்புமுறை (ENGLISH MEDIUM) கொண்ட பள்ளிகளில் - கொடைக்கானல், ஊட்டி, டேராடூன் போன்ற இடங்களிலிருந்த பள்ளிகளில் சேர்த்து விடுவதில் ஆர்வம் கொண்டு, பணச் செலவைக் கருதாது குழந்தைகளை அனுப்பிக் கொண்டிருந்தனர். அப்படி அனுப்புவதுதான் தங்கள் செல்வத் தகுதிக்கு உகந்ததென நினைக்கவும் செய்தனர். அத்தகைய பள்ளிகளில் படிப்பதுதான் தங்கள் பிள்ளைகளுக்கு ஒளியூட்டும் எதிர் காலத்திற்கு உதவுமெனக் கருதவும் செய்தனர்.

மரபு வழியாக மரியாதைக்குரிய குடும்பத்தைச் சார்ந்தவர் தான் பி.ஏ.சி.ஆர், செழுமையான செல்வத்தகுதியும் பெற்றவர்தான் அப் பெருமகனார். எனினும் தமது ஒரே புதல்வனை, பிரார்த்தனையால் பெற்ற செல்ல மகனை கோடை வாசஸ்தலங் களிலிருந்த ஆங்கில படிப்புமுறை பள்ளிகளுக்கு அனுப்ப ராஜா நினைத்தாரில்லை. பிள்ளையைப் பிரிந்திருக்க வேண்டுமே என்ற எணணத்தால் அல்ல. இராஜபாளையத்திலுள்ள ஆயிரக் கணக்கான பிள்ளைகளுக்கு, எத்தகைய கல்வியறிவு ஊட்டப் படுகிறதோ, அத்தகைய கல்வி தமது புதல்வனுக்கும் கிடைத்தால் போதுமானதென அப் பெருந்தகை கருதினார். 'ஊரோடு ஒத்து வாழ வேண்டும்' என்ற உள்ளப் பான்மையும், எளிமையும் இயல்பான வாழ்வும் கொண்ட உணர்வு மேன்மையும் பெற்றிருந்த காரணத்தால் அப் பெருந்தகை இராமசுப்பிரமணிய ராஜாவை உள்ளூர்ப்பள்ளிக்கே கல்வி பெற அனுப்பி வைத்தார்.

அந்தக் காலத்துப் பள்ளிப் படிப்புமுறையில், ஆறாம் வகுப்பில் விருப்பப் பாடமாக சமஸ்கிருதம் அல்லது தமிழ் படித்தாக வேண்டும். ஆறாம் வகுப்பில் இராமசுப்பிரமணிய ராஜாவைச் சேர்த்தபோது, விருப்பப் பாடமாகச் சமஸ்கிருத மொழியைக் கற்றுக் கொள்ளச் செய்தார் பி.ஏ.சி.ஆர். பத்தாம் வகுப்புவரை தொடர்ந்து சமஸ்கிருத மொழியை இராமசுப்பிரமணிய ராஜா கற்றுத் தேர்ந்தார்.

இராஜபாளையம் ஜில்லா போர்டு பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணியாற்றிய கே.எஸ். சுப்பிரமணிய ஐயர் கல்வித்துறையில் நிறைந்த அனுபவமும், மிகுந்த அறிவாற்றலும் கொண்டு, திறமிக்க நல்லாசிரியராகத் திகழ்ந்தார். ஆசிரியர் எனும் தகுதிக்கு முழுமை வடிவமாக விளங்கிய அந்த மூதறிஞரின் உள்ளப் பாங்கையும், ஒழுக்க சீலத்தையும் தெளிவாக அறிந்திருந்த பி.ஏ.சி.ஆர், அவரைக் கொண்டே தமது புதல்வனுக்கு 'தனிப்பயிற்சி' சொல்லிக் கொடுக்க வேண்டுமென விரும்பினார். பள்ளித் தலைமை ஆசிரியர் பையன்களுக்கு தனிப்பயிற்சி சொல்லிக் கொடுக்கக் கூடாதென்ற விதி அப்போது நடைமுறையில் இருந்தது. எனவே மாவட்டக் கழகத்தில் சிறப்பு அனுமதியை முறையாகப் பெற்று, தலைமை ஆசிரியர் கே.எஸ். சுப்பிரமணிய ஐயரை இராமசுப்பிரமணிய ராஜாவுக்குத் தனி ஆசிரியராகக் கொண்டு பி.ஏ.சி.ஆர் தனிப் பயிற்சி எடுக்க ஏற்பாடு செய்தார்.

பின்னர் தலைமை ஆசிரியர் மாவட்டக் கழகப் பள்ளியிலிருந்து ஒய்வு பெற்ற போது, ஐம்பதுகளில் தாம் தொடங்கிய பி.ஏ.சி.எம். உயர்நிலைப்பள்ளியில் அவரைத் தலைமை ஆசிரியராக ராஜா நியமித்தார்.

அதிகாலையில் இராமசுப்பிரமணிய ராஜாவிற்கு குதிரை ஏற்றம் கற்றுக் கொடுக்க ராஜா ஏற்பாடு செய்திருந்தார். பெண்களின் முன்னேற்றத்தைப் பெரிதும் விரும்பிய பி.ஏ.சி.ஆர். தமது புதல்வியும், இராமசுப்பிரமணிய ராஜாவின் தங்கையுமாகிய சிட்டம்மாளுக்கும், சில வேளைகளில் குதிரைச் சவாரி கற்றுக்

கொடுத்ததுண்டாம். குதிரை ஏற்றத்தை அறிந்து கொண்ட பின்னர், இராமசுப்பிரமணிய ராஜா, தமது தந்தையாரின் விருப்பத்திற்கிணங்க, அருகில் உள்ள சேத்தூர், தேவதானம் வரை குதிரைச் சவாரி செய்து வருவதுண்டு.

தமது செல்வப்புதல்வன் பலசாலியாகவும், வீரனாகவும் விளங்க வேண்டுமென்பதற்காக 'சிலம்பம்' கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தார் ராஜா. மகனுக்கு இசையில் ஈடுபாடு வர பி.ஏ.சி.ஆர். தமது புதல்வனுக்கு மிருதங்கமும், கஞ்சிராவும் கற்றுக் கொடுக்க ஆவன செய்தார். பள்ளியில் படித்த காலத்தில் இராமசுப்பிரமணிய ராஜா, மிருதங்கமும், கஞ்சிராவும் வாசிக்கும் திறன் பெற்றிருந்திருக்கிறார். நீச்சல், சைக்கிள் பழகவும், தட்டச்சுப் (TYPE WRITTING) பழகவும் ஏற்பாடு செய்திருக்கிறார் ராஜா.

வாழ்விற்கு இன்றியமையாத் தேவையான எல்லா அம்சங்களிலும் தமது புதல்வன் திறம் பெற வேண்டுமென நினைத்துப் பயிற்றுவித்த பி.ஏ.சி.ஆர். ஒன்றே ஒன்றை மட்டும் காட்டவும் இல்லை! கற்றுக் கொடுக்கவும் இல்லை!. அது வேறொன்று மல்ல; 'ஆடம்பரம்' தான்!.

பால்ய வயதிலேயே தமது புதல்வன் ஆரவாரத்தையோ, ஆடம்பரத்தையோ சுவைத்துவிடக் கூடாதென்பதில் பி.ஏ.சி.ஆர், மிகுந்த கவனம் கொண்டிருந்திருக்கிறார்; கண்டிப்புடன் வளர்த்திருக்கிறார்.

ஒருமுறை இராமசுப்பிரமணிய ராஜா, பள்ளி சென்று வருவதற்கு ஒரு சைக்கிள் வாங்கித் தருமாறு தந்தையாரிடம் வேண்டி யிருக்கிறார்.

"சைக்கிளா? சைக்கிள் எதற்கு? மற்ற பிள்ளைகளெல்லாம் ஸ்கூலுக்குச் சைக்கிள்ளயா போறாங்க? நடந்துதானே போறாங்க! சும்மா நடந்து போய் வர்ரதுதான் நல்லது! " எனச் சைக்கிள் வாங்கிக் கொடுக்க மறுத்திருக்கிறார் பி.ஏ.சி.ஆர்.

சைக்கிளென்ன? நினைத்தால் தமது ஒரே புதல்வனுக்கு செல்வ மகனுக்குக் காரே வாங்கிக் கொடுத்திருக்கலாம் அப் பெருந்தகை! ஆனால் அப்பெருமகனார், தமது புதல்வனின் இளைய பருவத்திலேயே எளிமையாக இருக்கும் அருமையை உணர்த்தியாக வேண்டும்; ஆடம்பரமற்ற போக்கை ஆணி வேராக ஊடுருவச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் கவனமும், கண்டிப்பும் கொண்டிருந்தார்.

கண்டிப்பு என்றால் கரடு, முரடாகவும் அல்ல; கடுமையாகவும் அல்ல! கோடை காலங்களில் சில நாள்கள் தமது புதல்வன் இராமசுப்பிரமணிய ராஜாவையும், புதல்வி சிட்டம்மாளையும் பள்ளிக்கு குதிரை டோங்கா வண்டியில் ராஜா அனுப்புவதுண்டு. சிட்டம்மாள், பள்ளியில் இராமசுப்பிரமணிய ராஜாவை விட ஒரு வகுப்புக் குறைவாகப் படித்துக் கொண்டிருந்தார்.

அருளாளர் இராஜபாளையம் சாந்தானந்த சுவாமிகள் ராம மந்திரத்திற்கு அடிக்கடி வருகை தருவார். அத்வைதம் பற்றியும், ஆன்மீகம் பற்றியும் வெகு நேரம் ராஜாவுடன் கலந்துரையாடிக் கொண்டிருப்பார். அத்தகைய நேரங்களின் சிலபோது இராமசுப்பிரமணிய ராஜாவையும், சிட்டம்மாளையும் அருகில் அமர்த்தி வைத்துக் கொள்வார் பி.ஏ.சி.ஆர். புரிந்தாலும், புரியாவிடினும், அறிந்தாலும், அறியாவிடினும், குழந்தைகளின் உள்ளங்களில் புனிதமான கருத்துகளைப் புகச்செய்ய வேண்டுமென்பதில் ராஜா மிகுந்த ஆர்வம் காட்டுவார். "முதலில் அந்தப் பேச்சுகள் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல்தான் இருந்தன. அருகில் அமர்ந்திருக்கச் சொல்லி விட்டார்கள் என்பதற்காகவே விழி, விழியென்று விழித்துக் கொண்டு உட்கார்ந்திருப்போம். ஆனால் கேட்கக் கேட்க எங்களுக்கும் சில உண்மைகள் விளங்கத் தொடங்கின!" எனக் கூறுகின்றார் சிட்டம்மாள் அம்மையார்.

தமது புதல்வன் ஒழுங்கிலும், ஒழுக்கத்திலும் உயர்ந்த மதிப்பெண்கள் பெறவேண்டுமென்ற நோக்கத்தில் மிகுந்த கண்டிப்புடன் விளங்கினார். எவ்விதமான ஆடம்பர வாழ்வும்

அமைந்து விடாமல், எளிமையாகவும், எல்லோரையும் போலவும் எண்ணக்கூடிய உள்ளப்பாங்குடன் தமது புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவைக் கட்டுப்பாடாக உருவாக்கி வளர்ப்பதில், பி.ஏ.சி.ஆர். பெரிதும் கவனம் செலுத்தி வந்ததைப் பல நிகழ்வுகளால் தெளிவாக அறிய முடிகிறது.

இராமசுப்பிரமணிய ராஜா 1950 ஆம் ஆண்டு, இராஜபாளையம் உயர்நிலைப்பள்ளியில் எஸ்.எஸ்.எல்.சி. தேர்வில் வெற்றி பெற்றார். சென்னை லயோலா கல்லூரியில் மேற்படிப்பிற்காகத் தமது பையனைச் சேர்த்துவிட்ட பி.ஏ.சி.ஆர். சென்னையிலேயே கல்லூரி விடுதியில் தங்கிப் படிக்குமாறு ஏற்பாடு செய்தார். சென்னை லயோலாக் கல்லூரியில் பணியாற்றிய பேராசிரியர் எஸ்.ஆர். கோவிந்தராஜனைத் தமது மகனின் கல்வி பயிலும் போக்கைக் கருதிப் பார்த்துக் கவனித்து வருமாறு ஏற்பாடு செய்திருந்தார் ராஜா. அப்போது முதல் அமைச்சராக இருந்த பி.எஸ்.கே.யின் வழியாக கல்லூரி முதல்வர் ஃபாதர் டிசௌசாவைப் (Fr. DISOWSA) பார்த்து, இராமசுப்பிரமணிய ராஜாவின் கற்றுக் கொள்ளும் பாங்கைச் சற்றே கவனித்து வருமாறு வேண்டினார் பி.ஏ.சி.ஆர்.

இராஜபாளையத்திலிருந்து வாரம் தவறாமல், சென்னையில் வாழும் தமது மகனுக்குக் கடிதம் எழுதுவதை வழக்கப்படுத்திக் கொண்டிருந்த ராஜா, படிப்பு சம்பந்தமாக வினவுவதோடு, பாங்கான வாழ்க்கையை அமைத்துக் கொள்வதற்கான அறிவுரைகளையும் தவறாமல் குறிப்பிட்டு எழுதுவார். தந்தையாரின் கடிதம் கிடைத்தவுடனேயே தக்க பதில் அளிப்பதைப் பழக்கமாக்கிக் கொண்டிருந்த இராமசுப்பிரமணிய ராஜா, பி.ஏ.சி.ஆர், குறிப்பிட்டு எழுதியுள்ள அறிவுரைகளின் உள்ளார்ந்த நோக்கத்தை உணர்ந்து கொண்ட பான்மையை கடிதத்தில் வெளிப்படுத்துவார்.

அடிக்கடி சென்னைக்கு வருகை தந்து, தமது புதல்வனின் கல்லூரிப் படிப்புப்பற்றிய விபரங்களை அறிந்து கொள்வதோடு உடல் ஆரோக்கியம் குறித்தும் பி.ஏ.சி.ஆர். கவனம் கொள்வார்.

கல்லூரி விடுமுறை நாள்களில் இராஜபாளையம் வந்துவிடும் இராமசுப்பிரமணிய ராஜாவை, தம்முடன் பி.ஏ.சி.ஆர், இராஜபாளையம் நூற்பாலைக்கு அழைத்துச் செல்வார். அங்கு உரியவர்களைக் கொண்டு, ஆலையின் அமைப்பு, இயந்திரங் களைப் பற்றிய நுட்பங்கள், நிர்வகிக்கும் நெறிமுறைகள் ஆகியவற்றை இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு அறிவுறுத்தச் செய்வார் பி.ஏ.சி.ஆர். சில வேளைகளில் தாமே ஆலைக்குள் மகனை அழைத்துச் சென்று, உரியவைகளை அறிந்து கொள்ளுமாறு உரைப்பார். அப்போதெல்லாம் இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு 16,17 வயது தான் இருக்கும். என்றாலும் தமது தந்தையாரிடம் கொண்டிருந்த பயபக்தியால், 'நம்முடைய நன்மைக்காகத்தான் இங்கு அழைத்து வருகின்றார்கள்; இவ்வளவும் எடுத்துச் சொல்கிறார்கள்' என எண்ணி, மிகுந்த கவனத்துடனும், கருத்துடனும் இராமசுப்பிரமணிய ராஜா சிந்தை கொள்வார்; சிறிதும் கவனம் சிதையாது ஊன்றிக் கவனிப்பார்.

சின்னக் குழந்தைப் பருவம் முதலாகவே, இராமசுப்பிரமணிய ராஜாவை, பி.ஏ.சி.ஆர், 'செல்லம்' கொடுத்து வளர்த்ததில்லை; செல்லமாகவும், செல்வமாகவும் நினைப்பதெல்லாம் உள்ளத்திற்குள்தான்! வெளிப்படையாக ஒரு கட்டுப் பாட்டுடன்தான் மகனைப் பேணி வளர்த்து வந்தார். பால்ய வயதில் ஒரு நாள் பள்ளிக்குச் செல்ல மாட்டேனென முரண்டு பிடித்தபோது, இராமசுப்பிரமணிய ராஜாவை இடைவாரைக் கழற்றி அடித்துப் பயமுறுத்தவும் செய்திருக்கிறார்! இத்தகைய கட்டுப்பாடான வளர்ப்பு முறையால், கல்லூரியில் படித்த காலத்திலே கூட, தந்தையாருக்கு அருகே சென்று படீரென அமர்ந்து விட மாட்டார் இராமசுப்பிரமணிய ராஜா! தந்தையார் 'உட்கார்' என புன்னகைத்த பின்னரே அமர்வார்! இது வெறும் பயத்தால் அமைந்த பான்மையன்று ; தந்தையாரிடம் கொண்டிருந்த பக்தியாலும், மரியாதையாலும் அமைந்திருந்த பண்பாடு!.

பி.ஏ.சி.ஆர். தமது புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவை குற்றாலம், கொடைக்கானல் எனக் கூட்டிச் செல்வதுண்டு. சிற்சில வேளைகளில் கோயம்புத்தூருக்கும் அழைத்துச் செல்வார். கோவையில் சில செல்வந்தர்களின் வீட்டுப் பிள்ளைகள் அயல்நாடு சென்று படித்து வந்ததையும், அயல்நாடுகளில் படித்துக் கொண்டிருப்பதையும் அறிந்த இராமசுப்பிரமணிய ராஜா, தாமும் அத்தகைய வழியில் இங்கிலாந்து சென்று படித்து வர வேண்டுமென மனத்துள் எண்ணம் கொண்டார். கல்லூரியில் பயின்று கொண்டிருந்த போது அந்த எண்ணம் முளைத்துக் கிளைத்துத் தழைத்துக் கொண்டிருந்தது.

விடுமுறையில் சென்னையிலிருந்து இராஜபாளையம் வரும் இராமசுப்பிரமணிய ராஜாவை, தொழில் சம்பந்தமாகவும், பொதுநன்மைகள் பற்றியும் ராம மந்திரம் மாளிகையில் பி.ஏ.சி.ஆர், சிலரிடம் பேசுகின்ற போதும், கலந்துரை யாடுகின்ற வாய்ப்புகளிலும் உடன் அமர்ந்திருக்குமாறு செய்து கொள்வார். உரையாடிச் செல்பவர்களைப் பற்றி, தமது புதல்வரிடம் இதமாக எடுத்துக் கூறி இனம் காட்டுகின்ற வழக்கத்தை பி.ஏ.சி.ஆர், எப்போதும் பழக்கமாகவே கையாண்டு வந்தார். தமக்கும் அவர்களுக்குமுள்ள தொடர்பு, அவர்களின் குணப்பண்பு ஆகியவற்றை மகனிடம் எடுத்துக்கூறி, மனத்துள் பதிவு செய்து உணர்த்திவிடுகின்ற பி.ஏ.சி.ஆரின் பான்மையால், இராமசுப்பிரமணிய ராஜா, தமது தந்தையாருடன் தொடர்பு கொண்டிருந்த பல்வேறு மனிதர்களின் நடைமுறை இயல்பு களையும், நன்னடத்தைகளையும் அந்த இளம் பருவத்திலேயே தெளிவாக அறிந்து கொள்ள முடிந்தது.

சென்னையில் பி.எஸ்ஸி. படித்து முடித்த இராமசுப்பிரமணிய ராஜா , மேற்படிப்பை அயல்நாட்டில் பெற வேண்டுமென்ற ஆர்வத்திலிருப்பதை அறிந்து கொண்ட ராஜா, மகனிடம் உருவாகிவிட்ட அந்த ஆர்வத்தை மெல்ல மெல்லக் களைந்துவிட வேண்டுமென மனம் கொண்டார். அயல்நாட்டுப் படிப்பு ஆடம்பரமான வாழ்வுக்கு, அடிகோலிவிடுமென எண்ணிய

தோடு, இயல்பான, எளிமையான, இதமான வாழ்க்கைப் போக்கிற்கு அது ஒரு தடையாக ஆகிவிடுமென ராஜா நம்பவும் செய்தார். தாம் தொடங்கியுள்ள தொழில் துறைகளைத் தோள் கொடுத்துத் தொடர்ந்து நடத்தும் செயல் வன்மையை, மன வலிமையை மகனிடம் உருவாக்கவும், அதற்குரிய வழிமுறை களைப் பயிற்றுவிக்கவும், ராஜா தீர்க்க தரிசனத்துடன் திட்டமிட்டார்.

1954 ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஒரு நாள் பி.ஏ.சி.ஆர், மகனை அருகில் அழைத்து அமர்த்தி வைத்துக் கொண்டு, சில அரிய அறிவுரைகளைக் கூறினார். கவனத்தோடும், கருத்தோடும் தமது தந்தையாரின் பொருள் பொதிந்த வாசகங்களைக் கேட்டுக் கொண்ட இராமசுப்பிரமணிய ராஜா, அன்றே தமது டைரியில் அவைகளை ஆங்கிலத்தில் எழுதிப்பதிவு செய்தார். பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் பேருள்ளத்தின் இயல்பையும், பெருங்குணப் பண்பையும் பிரதிபலிப்பதாக அமைந்திருந்த அந்த டைரியின் ஆங்கில வாசகங்களை இங்கே தமிழில் தந்துள்ளேன். அடுத்த தலைமுறையை ஆளாக்குவதில் அப்பெருமகனார் எத்தகைய ஆர்வம் கொண்டிருந்தார்? எத்தகைய கருத்துகளை இதமாக ஊட்டினார்? எத்தகைய மனப் பக்குவத்தை அப் பெருந்தகை எதிர்பார்த்தார்? என்பவையெல்லாம் நண்பகல் ஒளிபோல் நமக்கு உணர்த்தி விடுவதை டைரியில் எழுதப்பெற்ற வாசகங்களை நாம் படிக்கின்றபோது அறிந்து கொள்ள முடிகிறது.

18.6.54

இன்று காலை, சிற்றுண்டிக்குப்பின்னர் என் தந்தையார் எனது எதிர் கால நல்வாழ்வு குறித்து மனந்திறந்து பேசினார்கள்.

மரபு வழியாகப் பெருமை பெற்று வருகின்ற நமது குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றுவதோடு, பெற்றிருக்கும்

தகுதியை ஓரளவு உயர்த்துவதற்கும் எனது எதிர்காலம் உதவுமாறு திட்டமிட்டுச் செயற்பட வேண்டுமெனச் சொன்னார்கள். ஒரு சில வார்த்தைகளால் இத்தகைய நோக்கத்தைக் கூறிவிடினும், அதனை நடைமுறைப் படுத்துவதென்பது அவ்வளவு எளிமையானதல்ல வென்றும், வாழ்க்கைச் சிக்கல்களை எதிர்கொள்ளக் கூடிய மன வலிமையே, நோக்கத்தை நிறைவு செய்ய உதவு மென்றும் அவர்கள் நினைவுபடுத்தினார்கள்.

நோக்கத்தை நிறைவேற்ற அவர்கள் சில ஆக்க பூர்வமான கருத்துகளை வழங்கினார்கள்.

அசைக்க முடியாத தகுதியில் நிலைக்க வேண்டு மேயானால், வாழ்க்கையைப் பற்றிய முழுமையான தெளிவை முதலில் நாம் பெற்றுக் கொள்ள வேண்டும். இத்தகைய முழுமையான தெளிவை எவரும் நம் முன் கொண்டு வந்து காட்சிப்படுத்தி விடமாட்டார்கள். தெளிவு பெறுவதற்கு நாம்தான் முனைந்து முயல வேண்டும். வாழ்க்கையின் பல்வேறு விதமான அம்சங்களைப் பற்றிப் புரிந்து கொள்வதற்கும், அறிந்து கொள்வதற்கும், புரிந்தவர்களான சான்றோர்களிடமும், அறிந்தவர்களான ஆசிரியர்களிடமும் நம்முள் எழுகின்ற சந்தேகங்களை யெல்லாம் வினாக்களாக்கி, வேண்டி வினவி, அவர்கள் அளிக்கும் விடைகளால் தெளிவு பெறுகிறபோது மகிழ்ச்சி நம்மிடம் வந்து சேரும். தாழ்ந்த மனிதர்களிடம் கூட வாழ்விக்கும் செய்திகளை அறிய வாய்ப்புண்டு. எனவே தாழ்ந்த மனிதரென எவரையும் தள்ளிவிடவும் கூடாது.

குருவாகத் திகழும் பெருமக்களிடம் தெளிவு பெறுகிறவரை, மீண்டும் மீண்டும் கேட்டு, சந்தேகங்களை நீக்கிக் கொள்ளும்வரை, சற்றும் சளைத்துவிடக் கூடாது.

நல்ல புத்தகங்கள் நன்னடத்தைக்கு வழிகாட்டும் திசை காட்டிகள், புத்தகங்களில் படிக்கும் கருத்துக்கள் பற்றி,

அவை சம்பந்தமாக அநேக நூல்களைப் படித்தறிந்த அறிவாளிக ளிடம் கலந்துரையாடினால், தவறான எண்ணங்களை நீக்குவதற்கும், தகுதியான நினைவுகளை ஊக்குவதற்கும் அது மிகுந்த பயனளிக்கும்.

எதனிடத்தும், எவரிடத்தும் தவறான அபிப்பிராயம் கொள்வதை எப்போதும் தவிர்த்தாக வேண்டும். உண்மையை உள்ளவாறு அறியாத உள்ளத்தில் தோன்றுகிற தப்பெண்ணமே, தவறான அபிப்பிராயத்தை உருவாக்கி விடுகின்றது. தவறான அபிப்பிராயம் என்பது கண் பார்வையில் உருவாவதல்ல; அது மனப்பார்வையால் உண்டாகிவிடும் ஒரு நோய். ஒரு பக்கத்தை மட்டும் காண்பது கூடாது; மனம் இரு பக்கங்களையும் கண்டு தெளிய வேண்டும்; அப்போதுதான் உண்மையைத் தரிசிக்க முடியும். ஆதாரமில்லாத, அறிவற்ற எதிரிகளிடம் முடிந்தவரை இரக்கம் காட்ட முயற்சிக்க வேண்டும்.

வாழ்வில் எதிர்கொள்கிற எதனையும் அமைதியோடு, அசைவற்று ஏற்றுக்கொள்வது அவசியமாகும். மனத்தில் அமைதி இல்லையெனில் மனிதர்களைப் புரிந்து கொள்ள முடியாது. மனிதர்களைப் புரிந்து கொள்வதற்கு முன்னர், அவர்களிடம் எவ்விதமான உறுதிப்பாட்டையும் வழங்கி விடுவது நல்லதல்ல. தாராளமாக விவாதிக்கும் போது மனிதர்களிடமிருந்து அறிந்து கொள்ளக்கூடிய அரிய தன்மைகளைப் புரிந்து கொள்ளலாம்.

நமக்கென்ற பணியை, நமது தனிப்பட்ட செயலை, நாமே முன்னின்று நடத்திக் கொள்வதுதான் நலமாக அமையும். பிறரை நம்பி, நம் பணிகளை ஒப்படைப்பது நல்லதல்ல; நடைமுறைக்கு உகந்ததுமல்ல. ஏனெனில் பிறருடைய வேலைகளைச் செய்வதில் மனிதன் ஆர்வம் கொள்ளா திருப்பது இயற்கையான ஒன்று. சில நேரங்களில், சமூக உறவையோ, பொருளாதார உதவியையோ கொண்டு, சில

பணிகளைச் சிலரிடம் ஒப்படைப்போம். அப்போதெல்லாம் நாம் ஒப்படைத்த பணி ஒழுங்காக நடக்கிறதா என்பதை உற்று நோக்கிக் கவனம் செலுத்த வேண்டியது இன்றியமையாத தாகும்.

சாதனைகளை நிகழ்த்துகிறபோது மகிழ்ச்சி கொள்ள வேண்டியதுதான். அது ஓர் ஆனந்தக் களிப்பு. என்றாலும் மற்றவர்களை அந்த நேரத்தில் கீழாக மதித்துவிடும் மனப்பான்மையை, வேருடன் கிள்ளி எறிய வேண்டும். சுற்றுச்சூழலில் உள்ள மற்றவர்கள் சுகம் கண்டு, மகிழ்ந்திருக்கும் போதுதான், மகிழ்ச்சியை நாமும் முழுமையாகச் சுவைக்க முடியும். பிறர் மகிழ்ச்சியைக் கண்டு மகிழ்வதே பேரின்பமாகும்.

நண்பர்களைப் பெற்றுக் கொள்ள வேண்டியது நல்லதுதான்; அதனை வேண்டாததெனக் கூற முடியாது தான். ஆனால் நண்பர்களுடன் அதி தீவிர நெருக்கம் கொள்வது, அவர்களுடைய நல்லது, கெட்டது அத்தனைக்கும் நாம் ஆளாக வேண்டியது வந்து சேரும். மனித வாழ்க்கை மிக மிகக்குறுகியது. இதில் மகிழ்ச்சியை விதைத்துக் கொள்வது இன்றியமையாததாகும். மற்றவரது துயரத்தை முழுக்க, முழுக்கப் போக்கி விடலாமென எண்ணுவது; மனித முயற்சியில் அடைய முடியாத ஒன்றென்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

மறுநாள் 19.6.54 இரவு நெடுநேரம் பி.ஏ.சி.ஆர், தமது புதல்வருடன் ஆன்மீகம் பற்றியும், இந்துமத தத்துவங்கள் பற்றியும் பேசிக் கொண்டிருந்திருக்கிறார். இராமசுப்பிரமணிய ராஜாவின் பல சந்தேகங்களுக்கு விளக்கமளித்ததோடு, ஐந்து தமிழ்ப் பாடல்களை - குறிப்பாக இந்து மதத் தத்துவங்களை வெளிப்படுத்தும் பாசுரங்களை கற்றுக் கொடுத்துள்ளார். அப்போது பி.ஏ.சி.ஆருக்கு வயது அறுபது; அப்பெருமகனாரின் புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜா இருபது வயதை நெருங்கிக்

கொண்டிருக்கிறார். ராஜாவின் இந்துமத தத்துவங்கள் பற்றிய கருத்துகளைக் கேட்ட இராமசுப்பிரமணிய ராஜா, தமது தந்தையாரின் ஆன்மீகம் பற்றிய ஆழ்ந்த சிந்தனையை அதிசயத்தோடு எண்ணிப் பார்த்து தந்தையாரிடத்து மிகுந்த பக்தி கொண்டிருக்கிறார். நெஞ்சார்ந்த நேயம் கொண்டு, "உலகியலைவிட ஆன்மீக இயலில் எனது தந்தையார் மிக நெருங்கியிருப்பதை, அவர்களது பேச்சுக்களிலிருந்து அறிய முடிகிறது" என டைரியில் இராமசுப்பிரமணிய ராஜா எழுதியுள்ளார். பேரறிவு படைத்த தமது தந்தையாரின் உள்ளக் கிடக்கையை ஒருவாறு உணர்ந்து கொண்ட இராமசுப்பிரமணிய ராஜா, "உண்மையான சத்திய வாழ்க்கையின் உட்பொருளை உணர்ந்துள்ள என் தந்தையாரை நான் மிக மிக நேசிக்கிறேன்" என நெகிழ்ச்சியுடன் டைரியில் குறிப்பிட்டிருப்பது நினைக்கத் தக்கது. உருவாக்கிய நெறியால், பி.ஏ.சி.ஆர், தமது புதல்வரை திருவாக்கிய முறைமை மேற்கண்ட வாசகத்தால் தெளிவாகிற தல்லவா?

* * *

# 20

## களப்பயிற்சிச் சிறப்பும் தொழில் முயற்சிப் பொறுப்பும்

இங்கிலாந்து சென்று தமது மேற்படிப்பைத் தொடர வேண்டுமென்பதில், இராமசுப்பிரமணிய ராஜா மிகுந்த விருப்பமும், வேகமும் கொண்டிருப்பதைத் தெளிவாக அறிந்திருந்த பி.ஏ.சி.ஆர், ஒரு நாள் சென்னை மெரினா கடற்கரைக்குத் தமது புதல்வரை அழைத்துச் சென்றார். பொதுவான சில செய்திகளைப் பற்றிக் கடற்கரையில் தமது புதல்வருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார் ராஜா. பின்னர் திரும்பி விட்டனர். மறுநாள் மாலையிலும் மெரினா கடற்கரைக்குத் தந்தையாரும், புதல்வரும் சென்றனர். முதல் நாளைப் போலவே சிறிது நேரம் உரையாடிய பின் இருவரும் திரும்பி விட்டனர். மூன்றாம் நாள் மெல்ல, தமது புதல்வரின் எதிர்காலம் பற்றி ராஜா, பேசியபோது, தமது விருப்பத்தை இராமசுப்பிரமணிய ராஜா வெளியிட்டார்.

"இங்கிலாந்துக்கு நாளைக்கே கூடப் புறப்பட்டுச் செல்லலாம்; படிக்க வேண்டியதுதான்; ஆனால் நான் விசாரிச்ச வரைக்கும், அந்த நாட்டு படிப்புமுறை, நம்ம நாட்டுக் கண்டிசனுக்கு அவ்வளவா பொருந்தி வர்ரது இல்லைன்னு சொல்றாங்க. நீயும், நல்லா விசாரிச்சுக்கோ, மதுரையிலே இருக்காரே ஜேம்ஸ் டோக். . . வெள்ளைக்காரர். . . நமக்கு வேண்டியவர். . . அவரைக்கூட விசாரிச்சேன். அவர்கூட அப்படித்தான் சொல்றாரு. அவர்கூட உன்னோட பேசறேன்னார். தெளிவா விசாரிச்சுக்கோ. . . போறதைப் பற்றி ஆட்சேபணை ஒண்ணுமில்லே. . . போய் அங்கே படிக்கவும் செய்யலாம். . . படிக்கிறதுனாலே பயன் இருக்கோணுமில்ல?" எனப் பி.ஏ.சி.ஆர். தம் மைந்தரிடம், தமது கருத்தை இதமாகவும் எண்ணிப் பார்க்குமாறும் தெரிவித்தார். இராமசுப்பிரமணிய ராஜா

இங்கிலாந்து சென்று படிப்பதில், தமக்கு அவ்வளவாக உடன்பாடு இல்லை என்பதை பி.ஏ.சி.ஆர், இன்சொல் கொண்டு கடற்கரையில் எடுத்துரைத்தார். எனினும் மேல்நாடு சென்று மேற்படிப்பைத் தொடரவேண்டுமென்ற ஆர்வம், இராமசுப்பிரமணிய ராஜாவிடமிருந்து விடைபெற இல்லை!

மதுரை ஹார்வி மில் நிர்வாக இயக்குனர் சர் ஜேம்ஸ் டோக், பின்னர் இது சம்பந்தமாக இராமசுப்பிரமணிய ராஜாவிடம் பேசினார். பி.ஏ.சி.ஆர், எதனையும் மேலோட்டமாகச் சிந்திக்கும் பழக்கமுடையவர் இல்லை என்பதையும், ஆழ்ந்து யோசித்த பின்னர்தான் எந்த முடிவுக்கும் வருவாரென்பதையும், இராமசுப்பிரமணிய ராஜாவிடம் எடுத்துரைத்த ஜேம்ஸ் டோக், "தம்முடைய ஒரே பையனை இங்கிலாந்துக்கு அனுப்பி படிக்க வைப்பதில் அவருக்கு மட்டும் ஆசை இருக்காதா? என்னைப் போன்ற சிலரிடம் ராஜா ஆலோசித்த பின்னர்தான், இங்கிலாந்துக்குத் தன் மகனை அனுப்பி வைப்பதில் எவ்விதப் பயனுமில்லை என்ற முடிவுக்கு வந்திருக்கிறார். உன்னுடைய எதிர்கால வாழ்வை தெளிவாக எண்ணிப் பார்த்துத்தான் ராஜா இந்த முடிவுக்கு வந்திருக்கிறார். இந்திய நாட்டிலுள்ள தொழில் துறைகளை நிர்வகிக்க இங்கிலாந்துப் படிப்பு உபயோகமாக இருக்காது" என்றார்.

தமது தந்தையார், "நம்முடைய நன்மைக்காகத்தான் சொல்கிறார்கள்; நம்முடைய நல் வாழ்வுக்காகத்தான் செய்கிறார்கள்' என்ற எண்ணம் பால்ய வயது முதலாகவே இராமசுப்பிரமணிய ராஜாவின் உள்ளத்துள் கல்வெட்டுப் போல பதிந்திருந்தது. சில நேரங்களில் எதிர்கொள்ளும் கருத்துகள் சற்று கசப்பாக இருப்பினும், அவைகளின் நோக்கம் நன்மை ஒன்றுக்கே என அமைதியுறும் உள்ளப்பாங்கை வளர்த்துக் கொண்டிருந்ததோடு, தமது தந்தையாரிடம் அன்பிற்கும் மேலான பக்தி செலுத்தி வந்ததால், இராமசுப்பிரமணிய ராஜா ஒருவாறு தமது விருப்பத்தை மாற்றிக் கொள்ள நேர்ந்தது.

பி.ஏ.சி.ஆர், தம் புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவை, தமது தொழில் முயற்சிகளில் பொறுப்பு வகிக்கச் செய்ய வேண்டு மெனக் கருதினார். தொழில் துறையில், பெரும் பான்மையும் தொழிலாளிகளை நிர்வகிக்க வேண்டிய கடமையும், பொறுப்பும் இருந்து வருவதால், ஏதாவதொரு தொழில் நிறுவனத்தில் தொழிலாளிகளுடன் பணியாற்றிப் பயிற்சி பெற இராமசுப்பிரமணிய ராஜாவை அனுப்பி வைத்தால், அது நிறைவான, பயனைத் தருமென நம்பினார் ராஜா. அப்போது சென்னையில் பிரபலமான தொழில் நிறுவனமாக, பி அண்ட் சி மில் ஆங்கிலேயர்களால் நிர்வகிக்கப் பெற்று வந்தது. அந்த நிறுவனத்திற்குப் பயிற்சிக்காகத் தமது புதல்வரை அனுப்பி வைக்கலாமென ராஜா எண்ணம் கொண்டார்.

இது சம்பந்தமாக இராமசுப்பிரமணிய ராஜாவிடம் தமது எண்ணத்தை வெளியிட்ட போது பி.ஏ.சி.ஆர், சொன்னார்: "தொழிலாளிங்க மனோநிலையைத் தெளிவா தெரிந்து கொள்ள வேணுமின்னா, நீயும் தொழிலாளிகளுக்கு இடையே ஒரு தொழிலாளியா இருந்தால்தான் முடியும். அதனாலதான் உன்னை பின்னி மில்லுக்கு அனுப்பலாமின்னு நினைக்கிறேன். கொஞ்ச நாள் அங்கே பயிற்சியிலே இருப்பது நல்ல பயன்தருமின்னு நம்பறேன்".

'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' எனும் உள்ளப் பாங்கினைப் பெற்றிருந்த இராமசுப்பிரமணிய ராஜா, பி.ஏ.சி.ஆரின் கருத்துக்கு உடன்பட்டார். 'தொழில் அதிபரின் மகனாயிற்றே? வேறொரு மில்லில் தொழிலாளியாகப் போய் பயிற்சி பெறச் சொல்கிறார் களே? நம்முடைய தகுதி என்ன? தரம் என்ன?' என்றெல்லாம் ஒரு சிறிதும் எண்ணிப்பார்க்க இல்லை! 'தந்தையார் சொன்னால் அது நம்முடைய நன்மைக்காகத்தான் இருக்கும்' என நினைந்து 'சரி' எனச்சம்மதம் தெரிவித்தபோது இராமசுப்பிரமணிய ராஜா ஒரு வேண்டுகோளையும் தந்தையாரிடம் தெரிவித்தார். அதென்ன வேண்டுகோள்?

வேறொன்றுமல்ல; உயர்நிலைப் பள்ளியில் படித்தபோது சைக்கிளில் போக ஆசைப்பட்டார். 'எல்லாப் பிள்ளைகளும் சைக்கிளிலா பள்ளிக்குப் போகிறார்கள்? எனக்கேட்டு பி.ஏ.சி.ஆர், சைக்கிள் வாங்கிக் கொடுக்க இல்லை.

சென்னையில் கல்லூரியில் படித்தபோது, இராமசுப்பிரமணிய ராஜா அவ்வப்போது சைக்கிளில் போய் வருவார். இனி பின்னி நிறுவனத்திற்குப் போய்வருவதெனில் அதிகாலை 5 மணிக்கே எழுந்து, சரியாக 6 மணிக்கு நிறுவனத்தில் இருந்தாக வேண்டும். எனவே ஒரு கார் இருந்தால் போக்குவரத்துக்கு சௌகரிய மாயிருக்கும். கார் வாங்கித் தருமாறு தந்தையாரிடம் வேண்டினார் இராமசுப்பிரமணிய ராஜா. ராஜாவும் வாங்கித் தருவதாக சம்மதம் தெரிவித்து விட்டார்.

பின்னி நிறுவனத்திற்குப் பயிற்சியாளராகத் தமது புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவை அனுப்ப பி.ஏ.சி.ஆர், முயன்றபோது, நிர்வாகப் பொறுப்பிலிருந்த ஆங்கிலேயர் சிலர் சம்மதம் தெரிவிக்கவில்லை. ஓர் ஆலை அதிபரின் மகன் பயிற்சிக்கு வருவதெனில், அது நடைமுறை சாத்தியமில்லாத தென்றும், நிறுவனத்தின் நெறிமுறைகளைப் பின்பற்ற இயலாதென்றும், அதுவும் தொழிலாளிக்கிடையே பணியாற்று வதென்பது நடக்கக் கூடிய காரியமல்லவென்றும் கூறி இசை வளிக்கவில்லை. பின்னி நிறுவனத்தோடு அதிகத் தொடர்பு கொண்டிருந்த டாக்டர். அழகப்ப செட்டியாரை, பி.ஏ.சி.ஆர், போய்ப் பார்த்து விபரத்தை எடுத்துரைத்தார். டாக்டர் அழகப்ப செட்டியாரின் பரிந்துரைக்கு மதிப்பளித்த பின்னி நிறுவனம், பின்னர் இராமசுப்பிரமணிய ராஜாவைப் பயிற்சி ஊதியம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்ற நிபந்தனையுடன் பயிற்சி யாளராக ஏற்றுக்கொண்டது.

ஒரு மாதமல்ல; இரண்டு மாதமல்ல! 18 மாதங்கள் பின்னி நிறுவனத்தில் இராமசுப்பிரமணிய ராஜா, தொழிலாளிக் கிடையே ஒரு தொழிலாளியாய்ப் பயிற்சி பெற்றார். அதிகாலை

6 மணிக்கு நிறுவனத்தில் இருந்தாக வேண்டும். மாலை 5 மணிக்கு மேல்தான் ஆலையிலிருந்து திரும்ப இயலும்.

பின்னி ஆலையில் பயிற்சிக்காகத் தமது புதல்வரை அனுப்பிய போதே, பூந்தமல்லி பெருஞ்சாலைக்கு அருகேயுள்ள அழகப்பா காலனியில் ஒரு வீடமர்த்தி சாப்பாடு முதலிய வசதிகளைச் செய்து கொடுக்க பீமராஜா என்றொரு ஊழியரை ஏற்பாடு செய்த ராஜா, நாள்தோறும் அங்கிருந்து ஆலைக்கு இராமசுப்பிரமணிய ராஜாவைச் சென்று வருமாறு ஆவன செய்தார். சென்னைக்கு வரும்போதெல்லாம் பி.ஏ.சி.ஆர். மகனுடன்தான் தங்குவார். பயிற்சி பெறும் விபரங்களை யெல்லாம் ஒன்று விடாமல் கேட்டறிவார்.

ஒருமுறை சென்னை வந்திருந்த பி.ஏ.சி.ஆர், தமது புதல்வர் மாலை நேரங்களில் சற்று விளையாடினால், உடல் நலத்திற்கு உகந்ததாக அமையுமெனக் கருதி, விளையாட்டுத் துறையில் புகழ் பெற்ற டென்னிஸ் கிருஷ்ணனின் தந்தையார் இராமனாதனைப் பார்த்து, தமது பையனுக்கும் டென்னிஸ் பயிற்சி அளிக்குமாறு கேட்டுக் கொண்டார். முதலில் இராமனாதன் இசைவு அளிக்கவில்லை. பின்னர் அவர், ராஜாவின் வேண்டுதலுக்கு உடன்பட்டு, இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு டென்னிஸ் விளையாட்டில் சிறிது காலம் பயிற்சி அளித்தார்.

பிரபல தொழிலதிபர் ஏ.சி. முத்தையா, இராமனாதன் கிருஷ்ணன், இராமசுப்பிரமணிய ராஜா முதலிய இளைஞர்கள், மாலை நேரங்களில், டென்னிஸ் விளையாடுவதை வழக்கப்படுத்திக் கொண்டிருந்தனர். பின்னி ஆலையிலிருந்து வீடு வந்ததும், டென்னிஸ் பேட்டை எடுத்துக் கொண்டு காரில் சென்று, இராமனாதன் கிருஷ்ணனுடன் விளையாடுவதை இராமசுப்பிரமணிய ராஜா சில காலம் மாலை நேரப் பழக்கமாக மேற்கொண்டிருந்தார்.

1955 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் 1956 ஆம் ஆண்டு ஜுன் மாதம் வரை சென்னை பின்னி ஆலையில் தொழிலாளி

களுக்கிடையே ஒரு தொழிலாளியாய் மாதம் ரூ. 75 பயிற்சி ஊதியத்தில் இராமசுப்பிரமணிய ராஜா, ஆலை நிர்வாகிகளான ஆங்கிலேயர்கள் பாராட்டுகிற அளவில் பயிற்சியை நிறைவு செய்தார். அதிகாலை நாள்தோறும் 6 மணிக்குச் சென்று சேர்வதில் ஒரு நாள் கூட தாமதமானதில்லை! தாம் ஒரு தொழிலதிபர் மகனென்று, ஒரு சிறிதும் எண்ணாமல், சகப் பணியாளர்களிடம் சகஜமாகப் பழகி, நல்லுறவோடும், நன்னடத்தையோடும் நடந்துகொண்ட அருமையைப் போற்றும் வகையில், இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு பின்னி நிர்வாகம், பயிற்சியை நிறைவு செய்தபோது, பயிற்சி ஊதியம் தவிர, 'போனஸ்' என்றொரு தொகையை அளித்துக் கௌரவித்தது. அத்துடன் நிர்வாகத்தின் சார்பில், இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு பாராட்டு விருந்தொன்றும் அளித்துச் சிறப்பித்தது.

'நமது நன்மைக்காகத்தான் பின்னி நிறுவனத்திற்கு, தமது தந்தையார் பயிற்சிக்கு அனுப்பி வைக்கின்றார்கள்' என எண்ணித்தான் இராமசுப்பிரமணிய ராஜா பயிற்சியில் சேர்ந்து, நாள்தோறும் ஆலைக்குச் சென்று வந்தார். பணியாற்றுகின்ற களத்தில் உருவாகும் சிக்கல்கள், தொழிலாளர் மத்தியில் ஏற்படுகின்ற மன இயல்புகள், நிர்வாகத்திற்கும், தொழிலாளர் களுக்கும் இடையே தோன்றும் சார்புத் தன்மைகள் ஆகியவற்றை யெல்லாம் நேராகக் காணக்கூடிய வாய்ப்பை பயிற்சியால் கிடைத்த பயன்தரும் நன்மையாகக் கருதினார் இராமசுப்பிரமணிய ராஜா. படிப்பறிவைக் காட்டினும் பட்டறிவு அதாவது 'நேர் காணல்' மூலம் கிடைக்கும் அனுபவம் வாழ்க்கைக்கு அரிய துணையாகுமென்பதை இராமசுப்பிரமணிய ராஜா உரிய பயிற்சியால் உணர்ந்து மகிழ்ந்தார்.

சென்னை பின்னி ஆலையில், தொழிலாளர்களுக்கிடையே ஒரு தொழிலாளியாய் ஒன்றரை ஆண்டுகள் பணியாற்றிப் பயிற்சியை நிறைவு செய்த தம் புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவை, நிர்வாகத்துறையிலும் பயிற்றுவிக்க வேண்டுமெனப் பி.ஏ.சி.ஆர். கருதினார்.

அந்தக் காலத்தில் ஆங்கிலேயர்களால் நடத்தப்பட்ட மதுரை ஹார்வி மில்ஸின் நிர்வாக அமைப்பு முறையை, நேராகக் காணும் வாய்ப்புப் பெற்றவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். மதுரை ஹார்வி மில்லின் முகவராக இருந்து, நீண்ட காலமாக அந்த ஆலையின் நிர்வாகத்தோடு தொடர்பு கொண்டவரல்லவா அப் பெருமகனார்? நிர்வாக அமைப்பிலும், நிர்வாக இயக்கத்திலும் ஆங்கிலேயர்களின் இயல்பான நடைமுறைச் சிறப்புகளை உள்ளார்ந்து நேசிக்கும் பி.ஏ.சி.ஆர், தமது புதல்வருக்கு மதுரை ஹார்வி ஆலையில் நிர்வாகப் பயிற்சி (OFFICER TRAINING) அளிக்க விரும்பினார்.

நிர்வாக இயக்குநராகப் பணியாற்றிக் கொண்டிருந்த சர் ஜேம்ஸ் டோக், ராஜாவின் நெருங்கிய நண்பராகப் பழக்கம் கொண்டவர். எனினும், 'மெஜுரா கோட்ஸ்' என அழைக்கப்படுகின்ற அந்த ஆலையில், வெளியார் ஒருவருக்கு நிர்வாகத் துறையில் பயிற்சி அளித்ததில்லையென்பதைத் தெளிவாக அறிந்திருந்த ராஜா, தம் நண்பர் ஜேம்ஸ் டோக்கிடம் தமது எண்ணத்தை வெளியிட்டார். "உண்மைதான்! எங்கள் நிறுவனத்தில் இதுவரை ஆலை சம்பந்தமில்லாத வெளியார் எவருக்கும் பயிற்சி அளித்த தில்லைதான்! என்றாலும் ராஜாவின் அருமைப் புதல்வரை, வெளியாராக நான் நினைக்கமுடியாதல்லவா?" என்றார் ஜேம்ஸ் டோக்.

பிறகென்ன?

இராமசுப்பிரமணிய ராஜா 'மெஜுரா கோட்ஸ்' நிறுவனத்தில் 1956 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் 1957 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் வரை தொடர்ந்து 15 மாதங்கள் நிர்வாகத் துறையில் பயிற்சி பெற்றார்.

இராமசுப்பிரமணிய ராஜா மதுரை ஹார்வியில் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தபோது, சென்னை சென்றிருந்த பி.ஏ.சி.ஆர், இராமசுப்பிரமணிய ராஜாவை ஒரு நாள் லீவு எடுத்துக்கொண்டு சென்னை வருமாறு கூறினார்.

சென்னையில் ஒரு ஆவணத்தில் கையொப்பம் இட்டுவிட்டுத் திரும்ப வேண்டிய அவசியம் இருந்ததால், இராமசுப்பிரமணிய ராஜாவை சென்னைக்கு அழைத்தார் பி.ஏ.சி.ஆர்.

பயிற்சியாளர்தான் எனினும் இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு ஹார்வி ஆலையில் லீவு கொடுப்பது அவ்வளவு சுலபமான நடைமுறையாக இல்லை. மிகுந்த வேண்டுதலுக்குப் பின்னே ஒரு நாள் லீவு கொடுத்தார்கள். அதுவும் லீவு நாள் முடிந்து, அடுத்த நாள் காலை 9 மணிக்குப் பயிற்சிக்கு ஆஜராகிவிட வேண்டுமென்ற நிபந்தனையில்!

சென்னை சென்ற இராமசுப்பிரமணிய ராஜா, வேலை முடிந்ததும் அன்றே மதுரைக்குத் திரும்ப சென்னை எக்மோர் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து விட்டார். புதல்வரை அனுப்பி வைக்க ராஜாவும் ஸ்டேஷனுக்கு உடன் வந்திருந்தார். முதல் வகுப்பில் இடமில்லை, இரண்டாம் வகுப்பிலும் பதிவு டிக்கட் கிடைக்க இல்லை.

"சரி நாளை புறப்பட்டுப் போகலாம்" என்றார் பி.ஏ.சி.ஆர்.

"நாளைக் காலை 9 மணிக்கு ஆலையில் இருந்தாக வேண்டும். அவர்கள் அந்தக் கண்டிஷனில்தான் எனக்கு லீவு கொடுத்தார் கள். நான் எப்படியும் இந்த ரயிலில் புறப்பட்டாக வேண்டும்" என்றார் இராமசுப்பிரமணிய ராஜா.

"எப்படிப் போறது? டிக்கட் கிடைக்கலியே?" என்றார் ராஜா.

"ரிசர்வேஷன் இல்லாமல் மூன்றாம் வகுப்பு டிக்கட் வாங்கிக் கொண்டாவது செல்ல வேண்டியதுதான். வேறு வழியில்லை" என்றார் இராமசுப்பிரமணிய ராஜா.

"ரொம்பக் கஷ்டமாச்சே அது !" என ராஜா யோசித்த போது,

"கஷ்டத்தைப் பார்த்தால் முடியுமா? அவர்களிடம் சொல்லி வந்த வார்த்தையைக் காப்பாற்ற வேண்டாமா?" எனக் கேட்ட புதல்வரின் வினாவிற்கு, வேறு பதில் சொல்ல விரும்பவில்லை ராஜா.

இராமசுப்பிரமணிய ராஜா, மூன்றாம் வகுப்பில் ரயிலில் மிகுந்த கஷ்டத்துடன் பிரயாணம் செய்து, சொல்லியவாறே, மறுநாள் காலை சரியாக 9 மணிக்கு மதுரை ஹார்வி மில்லுக்குச் சென்று பணியில் சேர்ந்தார்!

'சொல்லிய வண்ணம் செயல்' என்பதில், பயிற்சியாளராக இருந்தபோதே, இளைஞர் இராமசுப்பிரமணிய ராஜா வெகு தீவிரம் காட்டினார்!

சென்னை பின்னி நிறுவனத்திலும், மதுரை ஹார்வி ஆலையிலும் முறையே தொழில்துறை, நிர்வாகம் ஆகியவற்றில் தாம் எண்ணியவாறே பயிற்சியை நிறைவு செய்த இராமசுப்பிரமணிய ராஜாவை, பி.ஏ.சி.ஆர், முதன் முதலாக அப் பெருமகனாரால் உருவாக்கம் செய்யப் பெற்ற இராஜபாளையம் மில்ஸில், பொறுப்பு வகிக்கச் செய்ய வேண்டுமெனக் கருதினார். அப்போது பெருந்தகை ராஜா, கனரகத் தொழிலாகக் கருதப் பெற்ற சிமிண்ட் ஆலையை விருதுநகருக்கு அருகே துலுக்கப் பட்டியில் நிறுவுவதற்கான ஆயத்தப் பணிகளில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார். தமது புதல்வரை இராஜபாளையம் ஆலையின் நிர்வாகப் பொறுப்பில் வீற்றிருக்கச் செய்துவிடில், தமது முழு கவனத்தையும் சிமிண்ட் ஆலையை நிர்மாணிக்கும் பணியில் செலுத்தலாமென மனம் கொண்டார்.

1958 ஆம் ஆண்டின் ஒரு நல்ல நாளில், இராமசுப்பிரமணிய ராஜாவை, இராஜபாளையம் மில்ஸ்க்கு அழைத்துச்சென்று, தமது தொழில் முயற்சிக்குப் பொறுப்பு வகிக்கச் செய்த பி.ஏ.சி.ஆர், முதன் முதலாக ஆலையின் மூலப் பொருளான பஞ்சுத் துறையில் (COTTON DEPARTMENT) புதல்வரைப் பணியாற்றிடச் செய்தார்.

இராமசுப்பிரமணிய ராஜா தமது தந்தையாரின் தொழில் முயற்சிக்கு தோள் கொடுத்த ஆண்டும் 1958 தான்! தமது வாழ்க்கைத் துணைக்கு மனம் கொடுத்த ஆண்டும் 1958 தான்! ஆம்; அந்த ஆண்டில்தான் இராமசுப்பிரமணிய ராஜா, சுதர்சனம் அம்மையாரை இல்லறத் துணையாக ஏற்று இதயம் மகிழ்ந்தார்.

* * *

## 21

# விழுச்செல்வம் அளிக்கும் அறக்கட்டளையும் விழுதூன்றிச் செழிக்கும் கற்பகங்களும்

நாடு விடுதலை பெற்று, மூன்றாண்டுகள் ஆன பின்னரும், இராஜபாளையத்தில் ஒரே ஒரு உயர்நிலைப் பள்ளிதான் இருந்தது. மாவட்டக் கழகம் (DISTRICT BOARD) நடத்திய அந்தப் பள்ளி, வளர்ந்து வரும் நகரத்தில், கல்வியறிவு பெறக் கருதும் அனைத்து மாணாக்கர்களுக்கும் கல்வி கற்க போதுமானதாக வசதிகள் அமையவில்லை.

உலகத்தில் மனிதர் பெற வேண்டிய உயர்ந்த, சிறந்த செல்வம் ஒன்றே ஒன்றுண்டு. அது 'கல்வி' எனப் பேசுகிறார் திருவள்ளுவர். கல்வி, சிறந்த செல்வம் மட்டுமல்ல; முழுக்க முழுக்க நலமளிப்பது; ஒரு சிறிதும் கேடு இல்லாதது; தீமையற்றது என்பார் அப் பெருநாவலர். "கேடில் விழுச் செல்வம் கல்வி" என்பது திருவள்ளுவரின் திருவாக்கு. அதுமட்டுமல்ல! வேறு எவையாயினும் ஒருவற்கு அவை 'செல்வம்' எனக் கருதிவிட முடியாதென அறுதியிட்டும் கூறி விடுகிறார் அப் பேரறிவாளர்.

இதனையே, "சிறந்த மெய்யான நீலக்கல் ஒன்றே போதும். மினு மினுக்கும் கூழாங்கற்கள் ஒரு குவை இருந்தென்ன பயன்?" என வேறு வகையில் வினவுகிறார் ஞானி வேமனா.

ஆக, இத்தகைய சிறந்த செல்வமான கல்வியறிவைப் பெறுதற்கு, வணிகத்தாலும், தொழில் துறையாலும் நாளும் வளர்ந்து வரும் நகரம், உரிய களம் அமைத்துக் கொடுக்கவில்லை என்பதை உணர்ந்தார் பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா. சமுதாய உணர்வும், பொது நன்மைகளில் நாட்டமும் கொண்டிருந்த அப்பெருமகனார், தமது நகருக்கும், நகரைச் சார்ந்த பகுதிகளுக்கும்

கல்வியறிவில் ஊட்டம் அளிப்பது உயர்ந்த அறமாக அமையுமெனக் கருதினார். அன்றையத் தேவையை மட்டும் நிறைவு செய்யாது, என்றென்றைக்கும் பயனளிக்கும் நிலைத்த அறமாக அது அமைய வேண்டுமெனவும் சிந்தித்து, அரியதொரு பணிக்குத் தமது செல்வம் ஆதாரமாக இருக்கும் வகையில் அப்பெருமகனார் செயலாற்ற மனம் கொண்டார். உயர்ந்த நெறிகள், வளர்ந்து வரும் குழந்தைகளின் உள்ளங்களில், கல்வி நிலையங்களின் வழியாக, விதைக்கப்பட்டால்தான், உரிய விளைச்சலைக் காணலாமெனத் தெளிவாக உணர்ந்திருந்தார் அப் பெருந்தகை.

எனவே தர்ம ஸ்தாபனமாக, அறக் கட்டளையாக நிறுவி, அதன் வழி கல்விப் பணிகள் ஆற்ற பி.ஏ.சி.ஆர், பேருள்ளம் கொண்டு, தாமும், தமது சகோதரர் தியாகசீலர் பி.எஸ். குமாரசாமி ராஜாவும், அரசாங்கப் பிரதிநிதியாக மாவட்ட ஆட்சித்தலைவரும் அடங்கிய கல்விப்பணி அறக்கட்டளை ஒன்றை, 1950 ஆம் ஆண்டு உருவாக்கினார். அறக்கட்டளையை உருவாக்குகின்ற நேரத் திலேயே, அதன் எதிர்காலத் தொண்டிற்குரிய நிதி வசதியை ஏற்படுத்துவதில் பி.ஏ.சி.ஆர், பெரிதும் கவனம் செலுத்தினார்.

தொடக்கத்தில் ரூ. 50,000 நன்கொடை வழங்கியும், நிலங்களை அளித்தும் பல்வேறு நன்கொடைகளை கொடுத்தும், தமது தொழில் துறை நிறுவனங்களிலிருந்து கணிசமான நன்கொடை களை வழங்கச் செய்தும் அறக்கட்டளையை ராஜா வலிமையுறச் செய்தார். அறக்கட்டளையை சமய, சமூக வேறுபாடின்றி அனைத்து மக்களுக்கும் பயனளிக்கும் வகையில் பொது அமைப்பாகவும், பொதுமைப் பூங்காவாகவும் மிளிரச் செய்து, அதன் மலர்ச்சியும், மணமும் அனைவரையும் சென்று சேர வேண்டுமெனக் கருதி ஆற்றிய பி.ஏ.சி.ஆரின் செயற்கரிய செயல் என்றென்றும் நினைக்கத்தக்கது; நெஞ்சார்ந்து போற்றத் தக்கது. அத்தகைய சீரிய செயற்பாட்டின் வெளிப்பாடாக, மாவட்ட ஆட்சியாளரை நிரந்தர உறுப்பினராக அறக்கட்டளை யின் கோட்பாட்டில் குறிப்பிட்டிருப்பது, பெருந்தகை பி.ஏ.சி.ஆரின்

*மனத்துள் திகழ்ந்த பொதுமைக் குணப்பண்பைக் கமழ்ந்து மணக்கச் செய்கிறது!*

*தொழிற்சாலைகள் பல உருவாக்கம் கொண்டுள்ள இராஜபாளையம் நகரின் கிழக்குப் பகுதியில், பயில்வதற்குரிய பள்ளிக்கூடங்கள் இடம் பெறாதிருந்த நிலையை எண்ணிப் பார்த்த பி.ஏ.சி.ஆர், அப் பகுதியில் அப் பெருமகனாரின் தந்தையார் நினைவைப் போற்றும் வகையில் ஓர் உயர்நிலைப் பள்ளியை 1950 ஆம் ஆண்டிலேயே நிறுவினார். பள்ளிக்குப் போதுமான நிலங்களை தனது மைத்துனர் டி.ஏ.கே. மணியழக ராஜா மூலம், பி.ஏ.சி.ஆர். வாங்கினார். இயற்கையின் எழில் கொஞ்சும் சுற்றுச் சூழலில், 120 ஏக்கரில் அகன்று, பரந்த அழகிய பெருவெளியில், கம்பீரமான தோற்றப் பொலிவுடன் எழுந்து நின்ற பி.ஏ.சின்னைய ராஜா ஞாபகார்த்த உயர்நிலைப்பள்ளி, நகருக்குப் புதிய பொலிவூட்டியது. பள்ளிக்கு வருகை தந்த ரசிகமணி டி.கே.சி, "ஆகாஸ இப்படியல்லவா பள்ளிக் கூடங்களை அமைக்க வேண்டும்? படிப்பதற்கு ஏற்ற இயற்கையின் ரம்மியம், மனத்தைப் பற்றி இழுப்பதாக உள்ளதே?" என மிக மகிழ்ந்து கூறினாராம்.*



*பி.ஏ. சின்னைய ராஜா ஞாபகார்த்த மேனிலைப் பள்ளி*

*படிப்பிப்பதற்கு அவசியமான அனைத்து உபகரணங்களையும் அமைத்துக் கொடுத்ததோடு, பி.ஏ.சி.ஆர், அதிகக் கவனம் செலுத்தித் திறமை வாய்ந்த ஆசிரியர்களையும் நியமித்தார்.*

தொடங்கியபோது பி.ஏ.சி.எம். உயர்நிலைப்பள்ளி 6 முதல் 9 வகுப்புகளைப் பெற்றிருந்தது. அரசாங்கத்தின் நிரந்தர அங்கீகாரம் பள்ளிக்கு அப்போதே கிடைத்தது. சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக வீற்றிருந்த பி.எஸ். குமாரசாமி ராஜாவைப் பள்ளியைத் தொடங்கி வைக்கச் செய்து பி.ஏ.சி.ஆர், பெருமகிழ்ச்சி கொண்டார். இப்பள்ளிக்கு நிரந்தர வருமானம் கிடைக்குமாறு ரூ. 50,000 அப்போதைய மதிப்புக் கொண்ட நன்செய் நிலத்தை, பி.ஏ.சி.ஆர், அறக் கொடையாகப் பள்ளிக்கு உவந்து வழங்கியுள்ள உயரிய அறச் செயல் மகிழ்ந்து குறிப்பிடத்தக்கது.

தொடக்க நிலையில் 200 மாணவர்களைக் கொண்டு தொடங்கிய பி.ஏ.சின்னைய ராஜா ஞாபகார்த்த உயர்நிலைப்பள்ளி, இன்று மேனிலைப்பள்ளியாக உயர்வு பெற்று, இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட மாணவர்கள் பயிலும் பெருமைக்குரிய கல்வி நிலையமாக வளர்ந்தோங்கி உள்ளது. கல்வித் தரத்தால் சிறந்தும், அரசாங்கத் தேர்வுத்திறத்தால், உயர்ந்தும் பி.ஏ.சி.எம். மேல்நிலைப் பள்ளி விளங்கி வருகின்ற வித்தகம் புகழுக்குரியது; போற்றுதற் குரியது.

உயர்நிலைக் கல்வி சீராக அமைய வேண்டுமென்ற நோக்கத்தில், அப்போதே பி.ஏ.சி.ஆர், தொடக்கக் கல்விக்குரிய ஓர்




டி.ஏ.கே.எம். ராமம்மாள் ஆரம்பப் பள்ளி

ஆரம்பப்பள்ளியையும் நிறுவினார். தமது தங்கை பெயரில் தொடங்கப் பெற்ற அப்பள்ளி டி.ஏ.கே.எம். ராமம்மாள் ஆரம்பப்பள்ளி என அழைக்கப் பெற்றது. அந்தப் பள்ளியில் மாணவ, மாணவியரான இளைய பிள்ளைகள் இப்போது ஐநூறுக்கும் மேற்பட்டுப் பயின்று வருகின்றனர்.

பி.ஏ.சி.எம். மேனிலைப் பள்ளி விஞ்ஞானக்கூடம், கலைக்கூடம், பொறியியல் கூடம், நெசவியல் கூடம் ஆகியவைகளுடன் பிரமிக்கத் தக்க பெரிய கட்டிட அமைப்புடன், பரந்த விளை யாட்டு மைதானத்தையும் பெற்று விளங்குகின்றது. இறை யுணர்வில் ஈடுபாடு கொண்ட பி.ஏ.சி.ஆர். மாணவர் களிடம் வெறும் கல்வியறிவு மட்டும் வளர்வதால் பயனில்லை; கற்பதில் பயன் கடவுள் உண்மையை அறிந்து, கடவுளிடம் பக்தி செலுத்த வேண்டும் எனக்கருதியதால், பள்ளிக்கு அடிக்கடி அருளாளர் களையும், அறிஞர்களையும் அழைத்து வந்து அறிவுரை ஆற்றச் செய்வார். சுவாமி சின்மயானந்தா, சுவாமி சித்பவானந்தா போன்ற அருளாளர்களும், டாக்டர் சி.பி.இராமசாமி ஐயர், டி.எம். நாராயணசாமி பிள்ளை, டாக்டர் அழகப்ப செட்டியார், பி.ஜி.கெர், பிரான் கிருஷ்ண பரிஜா ஆகிய அறிஞர்களும், தலைவர் காமராஜ், டாக்டர் பி. சுப்பராயன் போன்ற தலைவர் களும் பள்ளிக்கு வருகை புரிந்து, மாணவர்களுக்கு அறவுரையும் அறிவுரையும் வழங்கினர்.

பள்ளி மாணவர்களுக்கு உடல் ஆரோக்கியமாக இருக்க வேண்டு மெனக் கருதிய பி.ஏ.சி.ஆர், தமது குடும்ப டாக்டர் பத்மநாபய்யரைக் கொண்டு, மாதம் ஒரு முறை எல்லா மாணவர் களின் உடல்நலம் பற்றிப் பரிசோதனை செய்ய ஏற்பாடு செய்து, உரிய மருத்துவ உதவிகள் வழங்கி வந்தார்.

'தொழிற் கல்வியே மனித வாழ்க்கையை வளப்படுத்தி மலர்ச்சி பெறச் செய்யும்' என்ற கருத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தமது பகுதி மக்களுக்கு அத்தகைய தொழிற் கல்வியை அளிக்க வேண்டுமென்ற வேட்கையால், மதுரை செல்கின்றபோது சில நேரங்களில்,

மதுரையிலிருந்த அரசாங்கத் தொழிற்கல்விக் கூடமான 'தமிழ்நாடு பாலிடெக்னிக்' நிறுவனத்திற்குச் சென்று, அப் பெருமகனார் அங்கு நடைமுறைப்படுத்தப் பெற்றுள்ள தொழிற்படிப்பு, பயில்விக்கும் முறை ஆகியவற்றையெல்லாம் அறிந்து கொள்வதில் அளப்பரிய ஆர்வம் காட்டி வந்தார். இராஜபாளையத்தில் தொழிற்கல்வி புகட்டும் 'பாலிடெக்னிக்' கல்விக் கூடத்தை அமைக்க வேண்டுமென்ற பேரவாக் கொண்டிருந்தார் அப் பெருந்தகை.

1962 ஆம் ஆண்டு, எதிர்பாரா நிலையில், பி.ஏ.சி.ஆர். இறைவனது திருவடிப்பேற்றை அடைந்துவிட்ட நிகழ்ச்சி நிகழ்ந்து விட்ட பின்னர், அப் பெருந்தகையின் புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜா, பி.ஏ.சி.ஆர், உருவாக்கிய கல்வி அறக்கட்டளையின் நிர்வாகப் பொறுப்பை ஏற்குமாறு நேர்ந்து விட்டது. தமது தந்தையார், தொழிற்கல்வி சம்பந்தமாகக் கொண்டிருந்த கருத்தையும், அதனை இராஜபாளையத்தில் நிறுவ வேண்டுமெனக் கருதி இருந்ததையும், மிகுந்த கனிவோடும், கடப்பாட்டோடும் எண்ணிப் பார்த்து, தமது தந்தையார் அமரரான பின்னர் அறக்கட்டளையின் முதல் உருவாக்கம் 'பாலிடெக்னிக்' கல்விக் கூடமாகவே அமைய வேண்டுமென மனம் கொண்டார். 1962 ஆம் ஆண்டிலேயே பாலிடெக்னிக் உருவாக்க ஆயத்தப் பணிகளில் வேகமாகவும், விவேகமாகவும் ஈடுபடத் தொடங்கி விட்டார் இராமசுப்பிரமணிய ராஜா.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், 'பாலிடெக்னிக்' தொழிற் கல்விக் கூடத்தைத் தொடங்க விருப்பம் கொண்டிருந்ததை முதல்வராக வீற்றிருந்த தலைவர் காமராஜ் நன்கு அறிவார். எனவே பல போட்டிகளுக்கிடையே பாலிடெக்னிக் தொடங்குவதற்கு, இராமசுப்பிரமணிய ராஜாவுக்கே அனுமதி வழங்கினார்.

பாலிடெக்னிக் கல்விக்கூடம், தேவையான கருவிகளைக் கொண்ட பட்டறைக் கட்டிடங்கள், மாணவர்கள் தங்கிப் பயிலத் தங்கும் விடுதிகள், எனப் பல லட்சங்களை கல்வி அறக்கட்டளையின் சார்பில் செலவிட்டு, போதுமானதாகவும்,

பொருத்தமானதாகவும் பாலிடெக்னிக் தேவைகளனைத்தையும் உருவாக்கிய இராமசுப்பிரமணிய ராஜா, தமது தந்தையாரின் நினைவைப் போற்றும் வகையில் 'பி.ஏ.சி. இராமசாமி ராஜா பாலிடெக்னிக்' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார். பி.ஏ.சி.ஆர். எண்ணியவாறு இராஜபாளையம் பகுதி மக்களுக்குப் பெரும்பயனை என்றென்றும் அளிக்கத் தக்க தொழிற் கல்விக்கூடத்தைத் தலைவர் காமராஜ், மேதகு ஆர். வெங்கட்ராமன் முன்னிலையில், மேதகு எம். பக்தவத்சலம் தொடங்கி வைத்தார்.



பி.ஏ.சி. இராமசாமி ராஜா பாலிடெக்னிக்

ஆறுவகைத் தொழிற் கல்வி புகட்டும் இராஜபாளையம் பி.ஏ.சி.இராமசாமி ராஜா பாலிடெக்னிக், பெருமைக் குரிய தொழிற் கல்விக் கூடமாகத் தமிழ்நாட்டில் பெரும் பெயர் பெற்றுள்ளது. மாணவர்களைச் சேர்க்கும்போது, அவர்கள் பெற்றிருக்கும் மதிப்பெண்களுக்கு மட்டுமே மதிப்பளிக்கும் பாலிடெக்னிக் கல்விக் கூடங்கள் தமிழ்நாட்டில் ஒரு சிலவே உள்ளன. அவைகளில் பி.ஏ.சி.ஆர், பாலிடெக்னிக் தலையாயது; தலை சிறந்தது! பயில்விக்கும் முறையாலும், பயிற்றுவிக்கும் பாங்காலும், மாணவர்களின் படிப்புத் திறம், அரசாங்கத் தேர்வில் ஆண்டுதோறும் வரலாறு படைத்து வருவதை,

தமிழ்நாட்டுத் தொழிற்கல்வி உலகம் தெளிவாக அறிந்திருக்கிறது. அதனால்தான் பி.ஏ.சி.இராமசாமி ராஜா பாலிடெக்னிக்கில் படித்துத் தேர்வு பெற்ற மாணவர்களுக்கு, உத்தியோக வாய்ப்பு உறுதி படைத்ததாய் அமைந்துள்ளது. இந்திய நாடெங்கும், சொல்லப்போனால் அயல் நாடுகளிலும், இராஜபாளையம் பி.ஏ.சி.ஆர். பாலிடெக்னிக்கில் பயின்ற மாணவர்கள், அப்பெருமகனார் கருதியது போலவே, வாழ்வில் வளம் பெற்றுப் புகழ் சேர்த்து வாழ்ந்து வருகின்றனர்.

பெண்கள் முன்னேற்றத்தில் பெரிதும் ஆர்வமுடையவராய் விளங்கினார் பி.ஏ.சி.ஆர். ராஜுக்கள் சமூகத்தில் பெண்களை வெளியூருக்கு அனுப்பிப் படிக்கச் செய்யும் பழக்கம் சாதாரண மாக அப்போது இருந்ததில்லை. ஆனால் ராஜா, தமது புதல்வி சிட்டம்மாளை மதுரையில் தங்கியிருந்து, ஃபாத்திமா கல் ரியிலும், லேடி டோக் கல் ரியிலும் கல்வி கற்க ஏற்பாடு செய்தார். தமது பேத்தி சுதர்சனம் அம்மையாரை மதுரை செயிண்ட்மேரி கான்வென்ட் பள்ளியில் கற்கச் செய்தார். தமது புதல்விகள் லிங்கம்மாள், சிட்டம்மாள் இருவரும் மதுரையில் தங்கியிருந்தபோது, அவர்களிடம் பெண்கள் முன்னுக்கு வர வேண்டியது அவசியமென்றும், எதையும் தாங்கும் மனத்திட்பமும், எதனையும் எதிர்கொள்ளும் மனத்திண்மையும் பெண்களுக்கு இன்றியமையாத் தன்மைகளென எடுத்துச் சொல்வார். தமது பெண்ணுக்கு ஆங்கில அறிவு வளர்வதுடன், ஆங்கிலப் பேச்சு நயமாக அமைய வேண்டுமென்பதற்காக, ஆங்கிலோ இந்திய ஆசிரியரைக் கொண்டு ஆங்கிலப் பேச்சு மொழியைப் (SPOKEN LANGUAGE) கற்றுக் கொடுக்கச் செய்தார். ராஜாவின் இத்தகைய முயற்சியால் ராஜுக்கள் சமூகத்திலேயே சிட்டம்மாள் பெண்களில் முதல் பட்டதாரியாகும் பேறு பெற்றார். சமூக, ஆன்மீகத் துறைகளில் புகழ்பெற்ற பெண்மணிகளைப் பற்றி எடுத்துக் கூறுவார். பெண்களாகச் சேர்ந்து, ஒரு நிறுவனத்தை நிர்வாகம் செய்தால், அந்த நிறுவனம் பேரும், புகழும் பெறுமெனப் பல நேரங்களில் பி.ஏ.சி.ஆர், தமது கருத்தை வெளிப்படுத்தி அத்தகைய நிர்வாக அமைப்புகள் நாட்டில்

உருவாக வேண்டுமெனில் பெண்கள் அனைவரும் கல்வியறிவு பெற்றாக வேண்டும் எனக் கூறுவார்.

1958 ஆம் ஆண்டில் தமது மாப்பிள்ளையும், சிட்டம்மாளின் கணவருமான எஸ்.எஸ்.ராமச்சந்திர ராஜா, செக்கோஸ்லோ வேகியாவில் சிமிண்ட் ஆலை சம்பந்தமாக அறிவியல் நுட்பங்களை கற்றுக் கொண்டிருந்தபோது, தனியாக அந்த நாட்டுக்குத் தமது புதல்வி சிட்டம்மாளை அனுப்பி, ராமச்சந்திர ராஜாவை விமான நிலையத்திற்கு வந்து, அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார் ராஜா. அப்போது 'பெண்ணைத் தனியாக அனுப்புகின்றீர்களே?" எனச் சில பெண்கள் பி.ஏ.சி.ஆரை வினவியபோது, அப் பெருமகனார், "பெண் என்ன? ஆண் என்ன? கல்வியறிவு பெற்ற பெண்ணுக்கு தைரியம், தானே மனசுக்குள் குடியேறிவிடும். சிட்டம்மாள் படித்தவள்! " எனக் கூறினாராம்.

ஆக படித்தால் தான் பெண் தைரியசாலி ஆக முடியுமென்றும், எல்லாப் பெண்களுக்கும் கல்வியறிவு புகட்டப்பட வேண்டியது சமுதாயக் கடமையென்றும் கருத்துக் கொண்டிருந்தார் பி.ஏ.சி.ஆர். வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைக்கும் 'கோஷா' முறையை அப் பெருந்தகை ஆதரிக்கவில்லை.

தமது தந்தையார் பெண்கள் முன்னேற்றம் பற்றிக் கொண்டிருந்த கருத்தையும், பெண்களுக்குக் கல்வியறிவு ஊட்டப்பட வேண்டுமெனக் கருதியிருந்த ஆர்வத்தையும் மனதில் கொண்டு, நகரில் ஒரே ஒரு பெண்கள் உயர்நிலைப்பள்ளி மட்டும் இருந்ததால் நகரின் கிழக்குப் பகுதியிலுள்ள மாணவிகள் பயிலுவதற்குப் பள்ளியில்லாத குறையையும் எண்ணிப்பார்த்து, இராமசுப்பிரமணிய ராஜா, கல்வி அறக்கட்டளையின் சார்பில் பெண்கள் உயர்நிலைப்பள்ளியொன்றைத் தொடங்க முடிவு கொண்டார்.

பெருந்தகை ராஜாவின் முதல் மனைவியாரும், தமது பெரிய தாயாருமாகிய அம்மணி அம்மாளின் நினைவைப் போற்றும்

வகையில் இராமசுப்பிரமணிய ராஜா 1974 ஆம் ஆண்டு, பி.ஏ.சி.எம். ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கருகே, 'பி.ஏ.சி.ஆர்.



சிட்டம்மாள் அம்மையார் செக்கோஸ்லோவேகியா நாட்டிற்குச் சென்றபோது அன்புத் தந்தையார் பெருந்தகை வழியனுப்புகிறார்

அம்மணி அம்மாள் உயர்நிலைப் பள்ளி'யை உருவாக்கம் செய்தார்.



பி.ஏ.சி.ஆர். அம்மணி அம்மாள் மகளிர் மேனிலைப் பள்ளி

1956 ஆம் ஆண்டிலேயே பெருந்தகை பி.ஏ.சி.ஆர், அம்மணி அம்மாளின் திருப்பெயரால் ஓர் ஆரம்பப் பள்ளியை தொடங்கியிருந்தார். என்றாலும் பெண்கள் உயர்நிலைப்பள்ளி, தமது பெரிய அன்னையார் பெயரிலேயே விளக்கமுற வேண்டுமெனக் கருதிய இராமசுப்பிரமணிய ராஜா, அந்த அம்மையார் பெயரையே உயர்நிலைப் பள்ளிக்கு உள்ளார்ந்து சூட்டி உவந்தார்.

பரந்த நிலப்பரப்பில், பி.ஏ.சி.இராமசாமி ராஜா கல்விப்பணி அறக்கட்டளையால், பள்ளிக்குரிய அனைத்து வசதிகளையும் கொண்டு பல லட்சங்கள் செலவிட்டு நிர்மாணிக்கப் பெற்ற பிரம்மாண்டமான அழகிய பி.ஏ.சி.ஆர். அம்மணி அம்மாள் உயர்நிலைப் பள்ளி, மேனிலைப் பள்ளியாக உயர்வு பெற்று, பெண்கள் முன்னேற்றம் பற்றிய பெருந்தகை ராஜாவின் எண்ணத்திற்குப் பெருமிதம் அளிக்கும் பேரரணாகத் திகழ்ந்து வருகிறது.

அறக்கட்டளையின் சார்பில் 1962 ஆம் ஆண்டு இராமசாமி ராஜா நகரில் சிமிண்ட் தொழிற்சாலை வளாகத்தில் ஓர் ஆரம்பப் பள்ளி தொடங்கப் பெற்றது. அது 'ஸ்ரீராம் தொடக்கப்பள்ளி' என அழைக்கப்பெற்றது.




ஸ்ரீ ராம் தொடக்கப்பள்ளி - ராமசாமி ராஜா நகர்

ஆக, பி.ஏ.சி. இராமசாமி ராஜா கல்விப்பணி அறக்கட்டளை. அப் பெருமகனார் வாழ்ந்தபோது பி.ஏ.சின்னைய ராஜா




பி.ஏ.சி.ஆர். சேதுராமம்மாள் தொடக்கப்பள்ளி

ஞாபகார்த்த உயர்நிலைப்பள்ளி, டி.ஏ.கே.எம். ராமம்மாள் தொடக்கப்பள்ளி, பி.ஏ.சி.ஆர். அம்மணி அம்மாள் தொடக்கப் பள்ளி, ஸ்ரீராம் தொடக்கப்பள்ளி ஆகிய கல்வி நிலையங்களையும், பின்னர் இராமசுப்பிரமணிய ராஜா அறக்கட்டளை நிர்வாகப் பொறுப்பை ஏற்று, பி.ஏ.சி.ஆர். சேதுராமம்மாள் தொடக்கப் பள்ளி, பி.ஏ.சி. இராமசாமி ராஜா பாலிடெக்னிக், பி.ஏ.சி.ஆர். அம்மணி அம்மாள் உயர்நிலைப்பள்ளி ஆகிய கற்பகங்களையும் உருவாக்கம் செய்தது.

இராஜபாளையம் நகரில் ஆங்கிலமொழிப் போதனைக்குரிய பள்ளிகள் இல்லாத குறையை, நீக்குதற்கு 'சின்மயா வித்யாலயா' என்ற ஒரு நர்சரிப் பள்ளி 1970 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றது. அந்தப் பள்ளிக்கு கட்டிடம் அமைத்துக் கொடுத்தும், உரிய வசதிகள் செய்து கொடுத்தும் அறக்கட்டளை ரூ. 2 லட்சம் செலவிட்டது. தொடர்ந்து சின்மயா வித்யாலயா ஒரு தொடக்கப் பள்ளியையும் தன்னகத்தே கொண்டது.



*சின்மயா வித்யாலயா தொடக்கப்பள்ளி*

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், குருதேவ் சுவாமிஜி சின்மயானந்தாவிடம் ஐம்பதுகளிலிருந்து பல்லாண்டுகளாக மிகுந்த பக்தி கொண்டிருந்தார். சொல்லப்போனால் சுவாமிஜியை தமிழ்நாட்டிற்கு அறிமுகப்படுத்தும் பேறு பெற்றவர் பி.ஏ.சி.ஆர், ஆவார். தமிழ்நாட்டில் முதன் முதலாக மதுரையில் 1954 ஆம் ஆண்டு நாற்பது நாள்கள் தொடர்ந்து நடந்த 'கீதா ஞான யக்ஞம்' நிகழ்ச்சியின் வரவேற்புக் குழுத் தலைவராக பி.ஏ.சி.ஆர். வீற்றிருந்து, நாள் தோறும் சுவாமிஜியின் ஞான உரையைத் தமிழ்மக்கள் செவிமடுத்துப் பேறு பெறும் அரிய பாக்கியத்தை அளித்தார். இந்நிகழ்ச்சியால் சுவாமி சின்மயானந்தா, தமிழ் நாட்டில் பல சீடர்களைப் பெற்றார்கள். ஆன்மீகப் பேருள்ளம் கொண்ட தமிழ்நாட்டுப் பெருமக்கள் சுவாமிஜியை வழிகாட்டும் பேரொளியாய்க் கண்டு வழிபட்டனர். பி.ஏ.சி.ஆர். சுவாமிஜியிடம் கொண்டிருந்த எல்லையற்ற பக்தியாலும், சுவாமிஜி ராஜாவிடம் வைத்திருந்த அளவிடற்கரிய பேரன்பாலும் அடிக்கடி இராஜபாளையத்திற்கு சுவாமிஜி வருகை புரிந்தார்கள். பி.ஏ.சி.ஆர், மட்டுமின்றி, அப் பெருமகனாரின் குடும்பத்தினர் அனைவரும் சுவாமிஜியிடம் பக்தியும், அன்பும் கொண்டனர். இராமசுப்பிரமணிய ராஜா இளமைக் காலம் முதலாகவே சுவாமிஜியின் அருளார்ந்த தொடர்பை, தெய்வம் அளித்த திருவருட் சொத்தாகவே மதித்துப் போற்றினார்.

சின்மயா வித்யாலயா தொடக்கப் பள்ளியில் பயின்ற மாணவர்கள், மேற்கொண்டு படிப்பைத் தொடர, நகரில் ஆங்கில போதனாமொழி உயர்நிலைப்பள்ளி இல்லாத குறையை நீக்க இராமசுப்பிரமணிய ராஜா, சின்மயா வித்யாலயாவை உயர் நிலைப்பள்ளியாக உயர்த்தினார்.

பி.ஏ.சி. இராமசாமி ராஜா கல்விப்பணி அறக்கட்டளை, சின்மயா மிஷனுடன் இணைந்து உருவாக்கும் கல்வித் தொண்டு, உலகளாவிய சின்மயா மிஷனின் சேவையில், ஒருவாறு உறவு

கொள்ளும் பேறு, அறக்கட்டளைக்குக் கிடைப்பதை அரிய பாக்கியமாக எண்ணி மகிழ்ந்தார் இராமசுப்பிரமணிய ராஜா.

பரபரப்பும், சப்தங்களும் நிறைந்த நகருக்கு அப்பால், மேற்குத் தொடர்ச்சிமலையை ஒட்டி, பசுமையான உயர்ந்த மரங்கள் சூழ்ந்த, எழில் கொஞ்சும் நாற்பது ஏக்கர் நிலப்பரப்பில் 'சின்மயா வித்யாலயா - பி.ஏ.சி. இராமசாமி ராஜா மேல்நிலைக் குடிமைப் பள்ளி' உருவாக்கம் கொள்ள, இராமசுப்பிரமணிய ராஜாவின் பணிவும், கனிவுமிக்க வேண்டுதலை ஏற்று, 1979 ஆம் ஆண்டு, குருதேவ் சுவாமிஜி சின்மயானந்த மகராஜ் அடிக்கல் நாட்டி ஆசி வழங்கினார்கள்.

அறக்கட்டளையின் சார்பில் பல லட்சங்கள் செலவிட்டு, உருவாக்கப் பெற்ற பள்ளியின் கட்டிடம், குயில் கூவும் பூம்பொழில் சூழ்ந்த சோலையில் எழுந்து நின்று, 'சாந்திநிகேதன்' போன்ற தோற்றப் பொலிவில் கம்பீரமாகக் காட்சி தருகின்றது. ஞானச் செல்வரும், கீதாபோதகரும் அருளாளருமாகிய



*சின்மயா வித்யாலயா - பி.ஏ.சி. ராமசாமி ராஜா*
*மேனிலைக் குடிமைப்பள்ளி*

சுவாமிஜியின் திருவடிகளைத் தீண்டும் பேறுபெற்ற, சின்மயா வித்யாலயா பி.ஏ.சி. இராமசாமி ராஜா மேனிலைக் குடிமைப்பள்ளி (MATRICULATION SCHOOL) உயர்ந்த நோக்கத்துடன் பயில்விக்கும் புனிதப்பணியை கால காலங்கட்கும் ஆற்றக்கூடிய நிலைத்த தன்மையை, பெருந்தகை பி.ஏ.சி.ஆர். நிறுவிய கல்வி அறக்கட்டளை வழங்கி உள்ளது.

கல்விப் பணியுடன், பொது மக்களுக்குரிய சிற்சில வசதிகளையும், மருத்துவத் தேவைகளையும் நிறைவு செய்ய அறக்கட்டளைப் பயன்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இராஜபாளையம் மாயூரநாத சுவாமி திருக்கோயிலை ஒட்டி, அனைத்து வசதிகளுடன் கூடிய திருமண மண்டபத்தை அமைத்துக் கொடுத்த இராமசுப்பிரமணிய ராஜா, தமது அன்னையாரைப் போற்றும் வகையில், அந்த மண்டபத்திற்கு 'பி.ஏ.சி.ஆர். சேதுராமம்மாள் கல்யாண மண்டபம்' எனப் பெயர் சூட்டி மகிழ்ந்தார்.




பி.ஏ.சி.ஆர். சேதுராமம்மாள் கல்யாண மண்டபம்

பல்வேறு மருத்துவ வசதிகளுடைய நூறு படுக்கைகள் கொண்ட பெரியதொரு மருத்துவமனையை அரசாங்கம் அமைத்துத்தர, அறக்கட்டளை, ஏழு லட்ச ரூபாயை நன்கொடையாக வழங்கியது.

'பி.ஏ.சி. இராமசாமி ராஜா மருத்துவமனை' என்றழைக்கப்பெறும் அம் மருத்துவமனை முதல்வராக வீற்றிருந்த கலைஞர் கருணாநிதியால் 1973-ல் அடிக்கல் நாட்டப்பெற்று, 1977 ஆம் ஆண்டு அப்போதைய முதல்வர் எம்.ஜி.ஆரால் திறந்து வைக்கப் பெற்றது.




பி.ஏ.சி. இராமசாமி ராஜா மருத்துவ மனை

இசைத்துறையில், கற்றுக்கொள்ளும் மாணாக்கர்களுக்கு ஊக்கமூட்டவும், உற்சாகப்படுத்தவும், பி.ஏ.சி. இராமசாமி ராஜா இசைப்பள்ளிக்கு ஆண்டுதோறும் அறக்கட்டளை நிதி உதவி அளித்து வருகிறது. இராஜபாளையம் ராஜுக்கள் கல் ரி, மாணவர் தங்கும் விடுதி உருவாக்க கணிசமான தொகையை வழங்கியுள்ளது. +2 தேர்வில் முதன்மை மதிப்பெண் பெறும் மாணவர்களுக்கு பரிசளித்து வருகின்ற அறக்கட்டளை, காவலர்களின் (POLICE) குழந்தைகளுக்கெனத் தனியாக ஒரு பரிசையும் ஆண்டுதோறும் வழங்கி வருகின்றது.

பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் நூற்றாண்டைப் போற்றும் வகையில், 'ஐ டி ஐ' எனக்கூறப்படுகின்ற தொழிற் பயிற்சிக்கூடத்தை (RAMCO INDUSTRIAL TRAINING INSTITUTE) 1993 ஆம் ஆண்டு, ஒரு கோடி ரூபாய் செலவிட்டு அமைத்திருக்கும் அரிய செயல் பாராட்டத்தக்கது.



ராம்கோ தொழிற் பயிற்சிக் கூடம் (ஐ.டி.ஐ)

இக் கல்விக்கூடத்தில் தொழிலாளர்களின் குழந்தைகள் தொழிற் கல்வி பெற்று, வளமான எதிர்கால வாழ்வைப் பெற வேண்டுமெனும் நோக்கம் செயற்படுத்தப்பட்டு வருகின்றது.

கருணையும், கனிவும், கடவுட் தன்மையும் கொண்ட பி.ஏ.சி.ஆரின் அருள் உள்ளத்தில் அரும்பிய கல்விப்பணி அறக்கட்டளை, கற்பகங்களாக கிளைத்துத் தழைத்து விழுதூன்றி சமூக மேன்மைக்கு நிழல் தந்துதவும் நீர்மை, நெகிழ்ந்து நினைக்கத் தக்கதும், மகிழ்ந்து போற்றத்தக்கதுமாகும்.

* * *

# 22

## ஜப்பான் பயணமும் கௌரி ஹவுஸ் நிறுவனமும்

தியாகசீலர் பி.எஸ்.குமாரசாமி ராஜா 1949 ஆம் ஆண்டு, சென்னை மாகாண முதல்வராகப் பதவி ஏற்றார்.

சென்னை செல்கின்றபோதெல்லாம் பி.ஏ.சி.ஆர், தமது சகோதரர் பி.எஸ்.கே.யைச் சென்று பார்த்து வருவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தார். சென்னையில் 'காஸ்மா பாலிடன்', 'வுட்லண்ட்ஸ்', 'எவரெஸ்ட் ஹோட்டல்' ஆகியவற்றில், ஏதாவது ஒன்றில் தங்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார் பி.ஏ.சி.ஆர். தமது சகோதரர் பி.எஸ்.கே.யின் பங்களாவிலேயே சென்று தங்கலாம். ஆனால் அரசாங்கத்தை நடத்திச் செல்லும் தலைமைப் பொறுப்பில் வீற்றிருப்பவர் தமது சகோதரர் ஆயினும், அவருடன் போய் தாம் தங்கியிருத்தல் முறையானதல்ல என பி.ஏ.சி.ஆர். கருதினார்.

ஒருமுறை பி.எஸ்.கே, "ஏன் மெட்ராஸ் வந்தா அங்கே, இங்கே போய் ஒட்டல்லே தங்கறீங்க? நேரா இங்கே வந்திற வேண்டியதுதானே? ஒட்டல்லே தங்கறது நல்லதுல்லே!" எனச் சற்றே கடிந்து கொண்டார். அதன் பின்னர் சிறிது காலம் பி.ஏ.சி.ஆர், சென்னை வருகின்றபோது பி.எஸ்.கே.யுடன் தங்கினார். எனினும் அப்படித் தங்கும் பழக்கத்தைச் சென்னை வருகின்றபோதெல்லாம் வழக்கப்படுத்திக் கொள்ளவில்லை. ஆனால் சென்னை வந்தால் பி.எஸ்.கே.யைப் பார்க்காமல் ஊர் திரும்ப மாட்டார். பங்களாவிலும் பார்ப்பார்; அரசாங்கத் தலைமைச் செயலகத்திலும் சென்று பார்த்து வருவார்.

அரசாங்கத் தலைமைச் செயலகத்திற்குச் சென்றால், பி.எஸ்.கே.யுடன் சற்று நேரம் உரையாடிய பின்னர் பி.ஏ.சி.ஆர்,

தமது அன்பிற்கும், மரியாதைக்கும் உரிய சில அமைச்சர்களையும் சந்தித்து அளவளாவி வருவார். 1951 ஆம் ஆண்டின் இறுதியில், ஒரு முறை சென்னை அரசாங்கத் தலைமைச் செயலகத்திற்குச் சென்ற பி.ஏ.சி.ஆர், தமது சகோதரரைச் சந்தித்த பின்னர், அப்போதைய தொழில் அமைச்சர் பெருமாள்சாமி ரெட்டியாரை, சென்று பார்த்தார், பி.ஏ.சி.ஆரிடம் பெரிதும் மதிப்புக் கொண்டிருந்த பெருமாள்சாமி ரெட்டியார் மிகுந்த அன்போடு உரையாடிக் கொண்டிருந்தபோது ஒரு தகவலைச் சொன்னார். "நம் நாட்டுக்குத் தேவையான ஸ்குரூ ஆணிகள் பெரும் பான்மையும் வெளிநாட்டிலிருந்துதான் இறக்குமதி ஆகின்றன. இந்த வகையில் ஆணிகள் உற்பத்தி செய்யும் நிறுவனங்கள், நம் மாகாணத்தில் இல்லவே இல்லை. இப்போதுதான் ஒரு நிறுவனம் இந்த முயற்சியிலே இறங்கியிருக்கிறது. அவர்களும் உற்பத்தி செய்வதற்குரிய இயந்திரங்களை ஸ்வீடன் கம்பெனிகளிலிருந்து இறக்குமதி செய்ய முனைந்திருப்பதால், அந்த இயந்திரங்கள் வந்து சேருவதற்கே ஒரு வருஷம், ரெண்டு வருஷம் ஆகும்போல் இருக்கிறது!" என்றார் அமைச்சர் பெருமாள்சாமி ரெட்டியார்.

"அப்போ வேறு நாடுகளிலும் இந்த இயந்திரங்களை உருவாக்கி உள்ளார்களா?" என வினவினார் பி.ஏ.சி.ஆர்.

"ஆமாம்... ஆமாம்! ஜப்பானிலும் இந்த வகை இயந்திரங்களைச் செய்கின்றார்கள். அவர்களிடம் ஆர்டர் கொடுத்தால் இரண்டு, மூன்று மாதங்களுக்குள் இயந்திரங்கள் வந்து சேர்ந்து விடுமாம்!" என்றார் அமைச்சர்.

"அப்படியா?" என்றார், ஆச்சரியத்துடன் பி.ஏ.சி.ஆர்.

அமைச்சர் பெருமாள்சாமி ரெட்டியார், "இந்த வகையில் நீங்ககூட முயற்சிக்கலாமே? அரசாங்கமும் உங்களுக்கு ஆவன உதவுமாறு செய்யலாம்" என்றார்.

**செ**ன்னையிலிருந்த ஜப்பான் நாட்டு வாணிகக் கமிஷனரிட மிருந்து, ஜப்பானில் ஸ்குரு, ஆணி தயாரிப்பு இயந்திர நிறுவனங்களின் முகவரிகளைப் பெற்று வந்த பி.ஏ.சி.ஆர்,

நிறுவனங்களோடு கடிதத் தொடர்பு கொண்டார். நேராக ஜப்பானுக்கே சென்று, இயந்திரங்களைப் பார்த்து, நிறுவனங்களோடு பேசி வருவது நல்லதென்ற முடிவுக்கு வந்தார் ராஜா. ஜப்பானுக்குத் தம்முடன் இயந்திர நுட்பங்கள் அறிந்த ஒருவரையும் அழைத்துச் செல்வது பயனளிக்கும் என்றும் ராஜா கருதினார்.

அப்போது இராஜபாளையம் மில்ஸ் தேவைக்காக, ஒரு பொறியியல் பட்டறை (WORK SHOP) ஆலையில் இயங்கி வந்தது. அதன் பொறுப்பாளராக பொறியியல் வல்லுநர் ஜெகன்னாதாச்சாரி பணியாற்றி வந்தார். அவரையும் ஜப்பானுக்கு உடன் அழைத்துச் சென்றால் உரிய பயனளிக்குமெனக் கருதிய ராஜா, உடனடியாக இருவருக்கும் பாஸ்போர்ட் பெறும் முயற்சியில் இறங்கினார்.

அந்தக் கால கட்டத்தில் ஜப்பானுக்குச் செல்வது சுலபமானதல்ல. அமெரிக்க ஆளுகைக்குட்பட்டிருந்த ஜப்பானில், சுப்ரீம் கமாண்டராக வீற்றிருந்த ஜென்ரல் மக் ஆர்தர் அனுமதித்தால்தான், இந்திய அரசாங்கம் ஜப்பானுக்கு இந்தியப் பிரஜையை அனுப்பி வைக்க முடியும்.

எடுத்த காரியம் யாவினும் வெற்றிச் சாதனையே விளங்குமாறு தெய்வானுகூலம் பெற்றவரல்லவா ராஜா? பி.ஏ.சி.ஆர், ஜெகன்னாதாச்சாரி இருவருக்குமே எதிர்பாராது ஒரே நாளில் ஜப்பானுக்குச் செல்ல அனுமதி கிடைத்து விட்டது! கல்கத்தாவிலிருந்து ஜப்பானுக்கு விமானப் பயணம் செய்தாக வேண்டும். என்.ஆர். கிருஷ்ணம ராஜாவும், எம்.ஆர்.எஸ். இராதாகிருஷ்ண ராஜாவும் கல்கத்தாவரை பி.ஏ.சி.ஆருடன் வந்தனர். ஜப்பானுக்கு பி.ஏ.சி.ஆர், ஜகன்னாதாச்சாரி ஆகிய இருவரையும் விமானத்தில் வழி அனுப்பி வைத்தனர்.

டோக்கியோவை அடைந்து, இருவரும் ஒரு ஒட்டலில் தங்கிய ஒரு மணி நேரத்திலேயே அந்த நாட்டுப் பத்திரிக்கை நிருபர்கள், அவர்களைச் சந்தித்து, 'எந்த நாட்டிலிருந்து வந்துள்ளீர்கள்?' 'எதற்காக வந்துள்ளீர்கள்?' எனக்கேட்டு, விளக்கங்கள் பெற்றுச்



கல்கத்தாவில் பி.ஏ.சி.ஆருடன், எம்.ஆர்.எஸ். இராதாகிருஷ்ணராஜா
ஜெகன்னாதாச்சாரி, என்.ஆர். கிருஷ்ணம ராஜா



கல்கத்தா விமான நிலையத்தில் ஜெகன்னாதாச்சாரியும் ராஜாவும்

சென்றனர். மறுநாள் பத்திரிக்கைகளில் விளக்கங்கள் செய்திகளாக வெளிவந்தன. எனவே ஏற்கனவே கடிதத்தொடர்பு கொண்டிருந்த நிறுவனங்களும், பல புதிய நிறுவனங்களும் ராஜாவை வந்து பார்த்து தங்கள் நிறுவனங்களுக்கு அழைத்தனர்.

பத்துக்கும் மேற்பட்ட ஸ்குரூ, ஆணி இயந்திரத் தயாரிப்பாளர் நிறுவனங்களுக்குச் சென்று, பி.ஏ.சி.ஆரும், ஜெகன்னாதாச் சாரியும், அவைகளின் நுட்பங்களையும், இயக்கங்களையும் தெளிவாக அறிந்த பின்னர், ஜப்பானில் தாங்கள் தீர்மானித்த நிறுவனம் ஒன்றிலிருந்து இயந்திரங்களைப் பெற்றுக் கொள்ள, உரிய வகையில் ஒப்பந்தம் செய்து, இயந்திரங்களை இறக்குமதி செய்து கொள்ள ஆவன மேற்கொண்டு, ஜப்பான் பயண நோக்கத்தை நிறைவு செய்து கொண்டனர்.

ஸ்குரூ ஆணி இயந்திரத் தயாரிப்பாளர் நிறுவனங்களுக்குச் சென்றதோடு, நூற்பாலை சம்பந்தப்பட்ட இயந்திரத் தயாரிப்பாளர் தொழிற்சாலைக்கும், கை ஊசி, இயந்திர ஊசி, கம்பியில் தயாராகும் வலைகள் ஆகியவை உற்பத்தி செய்யும் நிறுவனங்களுக்கும் சென்றதோடு, சில விவசாயப் பண்ணை

களையும் சுற்றிப் பார்த்தனர். ஏறத்தாழ 2500 பெண்கள் மட்டுமே பணியாற்றும் நூற்பும், நெசவும் மேற்கொள்ளப் பெற்ற ஓர் ஆலையைப் பார்த்து, ராஜா மிகவும் வியந்து போனார்.

ஊசிகள் தயாரிப்புத் தொழிற்சாலை ஒன்றை நிறுவலாமென, பி.ஏ.சி.ஆர், உற்சாகம் காட்டி, அது சம்பந்தமாக சில நிறுவனங் களோடு தொடர்பு கொண்டார். ஜப்பானில் தயாராகும் ஊசிகளுக்கு, இந்தியா ஒரு வணிகச்சந்தையாக இருந்து வருவதால், ஊசிகளை இந்தியாவில் விற்பனை செய்வதற்கு ஒரு விற்பனை யாளராக ஒப்பந்தம் செய்து கொள்ளலாமே தவிர, தயாரிப்பு இயந்திரங்களை இந்திய நாட்டுக்கு அனுப்பி வைக்க, இயந்திரத் தயாரிப்பு நிறுவனங்கள் இசைவு தெரிவிக்காததால், தமது எண்ணத்தை பி.ஏ.சி.ஆர், மாற்றிக் கொண்டார்.

ஸ்குரூ ஆணிகள் தயாரிப்பு இயந்திரங்களை இராஜபாளையத்தில் நிர்மாணிக்க சில பொறியியல் நிபுணர்களை ஜப்பானிலிருந்தே வரவழைக்கலாம். அது சம்பந்தமாக ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொள்ளலாமென ராஜாவுடன் ஜப்பானுக்கு வந்த பொறியியல் வல்லுநர் ஜெகன்னாதாச்சாரி கருதினார். தமது எண்ணத்தை ராஜாவிடம் தெரிவித்தபோது, அப் பெருமகனார் "சாரி! இயந்திரங்களைப் பொருத்தி நிர்மாணம் செய்ய, ஜப்பானிலிருந்து எவரையும் வரவழைக்க வேண்டாம்! உம்மால் எல்லாம் முடியும்!" என்றார் மிகுந்த நம்பிக்கையுடன்.

"என்ன ராஜா, அப்படிச் சொல்லி விட்டீர்கள்? எனக்கு இந்த இயந்திரங்கள் அத்தனையும் புதியவை ஆயிற்றே?" என்றார் ஜெகன்னாதாச்சாரி, பணிவாக.

"சாரி! மனிதன் பிறக்கும்போது, எல்லாமே அவனுக்கு புதியதுதான்! ஆர்வமும், அக்கறையும், நம்பிக்கையும் இருக்கு மானால் எல்லாப் புதுமைகளையும் பழமையாக்கிக் கொள்ளலாம்!" என்றார் ராஜா.

அதற்குமேல் ஜெகன்னாதாச்சாரி ஒன்றும் பேசவுமில்லை; ஒப்பந்தம் பற்றிச் சொல்லவுமில்லை.

இறையுணர்வில் எந்த நேரமும் திளைத்திருக்கும் பேருள்ளத்தைப் பெற்றிருந்த பி.ஏ.சி.ஆரின் வாழ்க்கையில், திருவருள் நலம் வாய்க்கப் பெற்ற, நெகிழ்ந்து போகும் நிகழ்ச்சிகள் பல நிகழ்ந்துள்ளன. அத்தகைய ஒரு நிகழ்ச்சி ஜப்பானிலும் நடந்தது.

ஒரு முறை டோக்கியோவிலிருந்து ஒசாகா செல்ல 10 மணி ரயிலில் பயணிக்க ராஜா தீர்மானித்தார். ரயிலென்றால் மணிக்கு 200 மைல் வேகத்தில் செல்லக்கூடிய பகல் எக்ஸ்பிரஸ். மின்சார லோகோமோடிவ் இயக்கத்தில் ஓடக்கூடியது. கண்ணாடி ஜன்னல்கள், கதவுகள் எல்லாமே ஒடும்போது, தானே மூடிக்கொள்ளும், மூடிய நிலையில்தான் பயணம் செய்ய முடியும். ராஜாவும் ஜெகன்னாதாச்சாரியும் 9.25க்கே ரயில் நிலையத்தை அடைந்து விட்டார்கள். பத்துமணி ரயிலுக்குக் காத்து நிற்பதைத் தவிர்த்து, 9.30க்குப் புறப்பட்ட வேறொரு எக்ஸ்பிரஸில் புறப்பட்டனர். பத்து மணி ரயில் என்ன ஆயிற்றுத் தெரியுமா? அது ஓடிக் கொண்டிருந்த போதே, மேலேயிருந்த மின்சாரக் கம்பிகள் அதன் மேலே விழ, பயணிகள் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்டோர், உயிரோடு கருகிப் போயினர்! தாங்கள் திட்டமிட்டுப் பயணிக்க இருந்த பத்து மணி எக்ஸ்பிரசின் பரிதாப நிலையை அறிந்து கொண்டபோது, பி.ஏ.சி.ஆர் வியந்து போனார். ஒரு கணம் திருச்செந்தூர் முருகப் பெருமானை நினைந்து நெகிழ்ந்தார்!

ஒசாகாவிலிருந்து நாற்பது மைல் தூரத்தில் இருந்த பிரம்மாண்டமான நூற்பாலை ஒன்றைப் பார்த்து வரலாமென, பி.ஏ.சி.ஆர், ஜெகன்னாதாச்சாரியுடன், ஒரு டாக்ஸியில் புறப்பட்டார். பாதித் தூரம் கடந்து, வெகு வேகமாகச் சென்று கொண்டிருந்த டாக்ஸியில், ஒரு லாரி மோதிவிட்டது. மோதிய வேகத்தில், லாரி, டாக்ஸியைக் கொஞ்ச தூரம் இழுத்துக் கொண்டே சென்றது! டாக்ஸியின் உள்ளே இருந்த நால்வருக்கும் இரத்தக் காயங்கள்! பி.ஏ.சி.ஆருக்கும், ஜப்பான் வழிகாட்டிக்கும், டிரைவருக்கும் சிராய்ப்புகளில் இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

ஜெகன்னாதாச்சாரியின் வலது மணிக்கட்டில் சரியான வெட்டு. இரத்தம் பிளறி வெளியேறிக் கொண்டிருந்தது!.

ஜெகன்னாதாச்சாரியைப் பார்த்த பி.ஏ.சி.ஆரின் கண்கள் கலங்கின. “ஒருவருக்கு இருவரிடம் நல்ல நேரம் பார்த்துத்தானே புறப்பட்டோம்?” என உடைந்த குரலில் தமக்குத்தாமே சொல்லிக் கொண்டார் ராஜா.” “ஒன்றுமில்லை ராஜா! ஒரு கட்டுப் போட்டுவிட்டால் எல்லாம் சரியாகிவிடும்! தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயிற்றே, அதை நினைத்துக் கொள்ளுங்கள்” என்றார் சாரி.

இதற்குள் கூட்டம் கூடி விட்டது. போலீஸ் வந்தது. பக்கத்திலிருந்த மருத்துவமனைக்கு நால்வரும் அழைத்துச் செல்லப்பட்டனர். போலீஸ், புகார் பாரத்தில் ராஜாவிடம் கையொப்பமிட வேண்டினர். புகார் தேவையில்லையெனக் கூறிவிட்டார் ராஜா. “எங்கள் கெட்ட நேரம், லாரி டிரைவர் சற்றுக் கவனக் குறைவாக இருந்து விட்டார்” என்றார் ராஜா. நன்றி தெரிவித்த போலீஸ் அதிகாரி “இந்தியர்களின் இயல்பே அப்படித்தான்! பிறரிடம் குற்றம் காண்பதைத் தவிர்ப்பார்கள்! ” எனக் கூறியவாறே விடை பெற்றார்.

ஜப்பானில் பயண நோக்கம் நிறைவேறியவுடன், சுற்றுலாத் தலங்கள் சிலவற்றைக் கண்டு மகிழ்ந்தார் ராஜா. இயல்பாகத் துள்ளித் திரியும் மான்கள் நிறைந்த பூங்கா, இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்தபோது 1942 ஆம் ஆண்டில் அணுகுண்டு வெடிப்பால் அழிந்து நின்ற ஹிரோஷிமா பகுதி, நாரா பார்க்கில் அமைந்திருந்த பிரம்மாண்டமான புத்தரின் மரச்சிலை, காமகுராவில் அமைந்த புத்தர் வெண்கலச் சிலை ஆகியவற்றை யெல்லாம் சென்று பார்த்தார்.

ஜப்பானில் ஆறு வாரம் தங்கிய பின்னர், தாய்நாடு திரும்ப விமானநிலையம் சென்றபோது, ராஜாவுக்கு மட்டுமே டிக்கட் கிடைத்தது. மேலும் ஒரு வாரம் தங்கிய பின்னர்

ஜெகன்னாதாச்சாரி இராஜபாளையத்திற்குத் தனியாக வந்து சேர்ந்தார்.

தாய்நாடு திரும்புவதற்கு ராஜாவுக்கு மட்டுமே டிக்கட் கிடைத்த செய்தி சுவையானது! சுவையானது மட்டுமல்ல! ராஜாவின் நம்பிக்கை ஒளியை, அயல்நாட்டு அதிகாரி ஒருவர் தரிசித்து வியந்த அபூர்வச் செய்தியும் கூட!

பி.ஏ.சி.ஆரும், ஜெகன்னாதாச்சாரியும் ஜப்பானில் விமான நிலையத்திற்குத் தங்களின் திரும்பும் பயணத்திற்கு, டிக்கட் உறுதி செய்யச் சென்றிருந்தனர். பத்து நாள்கள் வரை, டிக்கட் முன்கூட்டியே பதிவாகி விட்டதால், விமான நிலைய அதிகாரி, பத்து நாள்களுக்குப் பின்னர்தான் டிக்கட் கிடைக்குமெனச் சொல்லி விட்டார். மறுநாள் விமானத்தில் புறப்பட்டால்தான், மறு வாரம் நடக்க இருக்கும் தமது உறவினர் வீட்டுத் திருமணத்தில் பி.ஏ.சி.ஆர், கலந்து கொள்ள முடியும். இராஜபாளையத்தில் அவசியம் ராஜா, பங்கேற்க வேண்டிய திருமணம் அது!

விமான நிலைய அதிகாரியிடம் பி.ஏ.சி.ஆர். பணிவோடு ஒன்றைத் தெரிவித்தார்.

"சார்! நாளை ஏதாவது டிக்கட் கான்சல் ஆனால், அந்த டிக்கட்டை தயவு செய்து எனக்குத் தாங்கள் வழங்க இயலுமா? நான் அவசியமாக நாளை திரும்பியாக வேண்டிய ஒரு கட்டாயம் இருக்கிறது"

அதிகாரி சொன்னார்: "அப்படி கான்சலாகும் நிலை ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை ! நீங்கள் பத்து நாள்கள் தங்கித்தான் போக வேண்டும். வேறு வழியில்லை"

ராஜா வேண்டினார்: "எனக்கு என்னவோ ஒரு டிக்கட் கான்சல் ஆகுமென்று தோன்றுகிறது. அப்படி கான்சல் ஆனால் அந்த டிக்கட்டை எனக்கு வழங்கி உதவுங்கள்"

"எனக்கு அப்படித் தோன்றவில்லை! உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது! சரி அப்படியானால் நாளை வாருங்கள். உங்கள் நம்பிக்கை நனவானால் டிக்கட்டை உங்களுக்கே தருகிறேன்" என்றார் அதிகாரி.

மறுநாள் பெட்டி படுக்கையுடன் பி.ஏ.சி.ஆர், ஓட்டல் அறையை விட்டுப்புறப்பட்டார். டிக்கட் கிடைக்கிறதாயென அறிந்து கொண்ட பின்னர்,பெட்டி படுக்கையை எடுத்துச் செல்லலாமே!" என்றார் ஜெகன்னாதாச்சாரி.

"டிக்கட் நிச்சயமாகக் கிடைக்கும், வாரும் போகலாம்" எனப் புறப்பட்டார் ராஜா. விமான நிலையத்தை அடைந்து, முதல்நாள் தொடர்புகொண்ட அதிகாரியின் அறையை நோக்கிச் சென்ற போது, இருக்கையிலிருந்து எழுந்து நின்ற அதிகாரி, ராஜாவை நோக்கிக் கையை அசைத்து வாழ்த்துத் தெரிவித்தார். ராஜா அருகில் சென்றதும், ஓடோடி வந்து ராஜாவின் கரத்தைப் பிடித்து வெகுநேரம் குலுக்கினார். "என் வாழ்க்கையில் ஓர் அதிசயிக்கத் தக்க மனிதரை இன்று சந்திக்கிறேன். ஒரு டிக்கட் கான்சலாகி விட்டது! நேற்றே அதை அறிந்து உறுதியாகச் சொன்னீர்களே! அதெப்படி?" என வினவினார் விமான நிலைய அதிகாரி.

"எனது மனச்சாட்சி அத்தகைய உறுதியை எனக்களித்தது! " என்றார், ராஜா அமைதியாக.

காலமறிந்து கருவியறிந்து ஒருதொழிலைத்தொடங்க முடிவு எடுத்து விட்டால் அதனை எத்தனை சீக்கிரம் தொடங்க வேண்டுமோ, அத்தனை வேகமாகச் செய்ய மனம் கொண்டு செயலாற்றும் வழக்கமுடையவர் ராஜா. ஸ்குரூ ஆணித் தயாரிப்பு இயந்திரங்கள் ஜப்பானிலிருந்து வந்து சேருவதற்குள், அவைகளைப் பொருத்தக் கட்டிடங்களை கட்டிக் கொண்டிருந்தால், காலத் தாழ்வு ஏற்படுமெனக் கருதிய பி.ஏ.சி.ஆர், இராஜபாளையத்தில் கட்டி முடித்த கட்டிடங்கள் எவையேனும் கிடைக்குமாயெனக் கவனம் கொண்டார்.




கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ் - வருகை தந்த ஆர்.வி.யுடன் பி.ஏ.சி.ஆர்.

சஞ்சீவி மலையின் அடிவாரத்தில், ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகே, வன்னிய வைசியர், எண்ணை ஆலை ஒன்று தொடங்குவதற்காக, ஒரு கட்டிடம் எழுப்பப் பெற்றிருந்தது. சிக்கல்களால் எண்ணை ஆலை தொடங்கப்பட இல்லை. கட்டிடம்



கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ் – வருகை தந்த
முதல்வர் காமராஜுடன் பி.ஏ.சி.ஆர்.



கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ் - ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா வருகை

காலியாக இருந்தது. எனவே ராஜா அந்தக் கட்டிடத்தை ஸ்குரு ஆணி தயாரிக்கும் தொழிற்சாலைக்கு ஏற்றதாக இருப்பதை எண்ணிப்பார்த்து, உரியவர்களிடம் பேசினார். இராஜபாளையத்தில் ஒரு புதிய தொழிற்சாலை உதயமாவதற்கு, தங்கள் கட்டிடம் களமாக அமைவதை மகிழ்ச்சியுடன் வரவேற்றுக் கட்டிடத்தை, பி.ஏ.சி.ஆர், விரும்பியவாறு அளித்தனர். ராஜா எதிர்பார்த்தது போலவே ஜப்பானிலிருந்து இயந்திரங்கள் வந்து சேர்ந்தன. ராஜாவின் நம்பிக்கை நனவாகுமாறு ஜெகன்னாதாச்சாரி இயந்திர நிர்மாணத்தைக் குறையின்றி நிறைவேற்றினார்.

இராஜபாளையத்தில் கல்வி கற்காமலும், கல்வித்தரம் அதிகமில்லாமலும், வேலை வாய்ப்பின்றி, பொழுதை வீணே கழித்துக் கொண்டிருந்த இளைஞர்களைத் தேர்வு செய்த ராஜா, அவர்களுக்குச் சில நாள்கள் பயிற்சியளிக்க ஏற்பாடு செய்தார். முதலில் பயிற்சியைக் கடினமாகக் கருதிய படிப்பறிவு இல்லாத அந்த இளைஞர்கள், பழகப்பழக ஆர்வத்துடன் பணியாற்றத் தொடங்கினர். தொழிற்சாலை உற்பத்திக்குத் தயாரானது.

பி.ஏ.சி.ஆர், தொடங்கிய மேற்கு இராமநாதபுரம் மாவட்ட மின்சார விநியோக நிறுவனத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த பொன்னுச்சாமியை ஸ்குரு ஆணி தயாரிப்பு நிறுவனத்தின் பொறுப்பாளராக நியமித்தார் ராஜா. பொன்னுசாமி, ராஜாவின் விசுவாச ஊழியராகவும், நிறுவன வளர்ச்சிக்கு நீண்ட நாள் பணியாற்றிய பொறுப்பாளராகவும் ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகள் நிறுவனத்தில் இடையறாது பணி ஆற்றினார்.

1952 ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்ற ஸ்குரு ஆணி தயாரிப்பு நிறுவனம் 'கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ்' என அழைக்கப் பெற்றது. உற்பத்தியில் கவனம் கொண்ட ராஜா, உற்பத்தியை பெருக்க ஏதாவது செய்யலாமா என இஞ்சினியர் ஜெகன்னாதாச்சாரியுடன் ஆலோசித்தபோது, "செய்யலாம், செய்ய முடியுமெனக் கருதுகிறேன்" என்றார் இஞ்சினியர்.

இராஜபாளையம் மில்ஸ் பொறியியல் பட்டறையில், ஜெகன்னாதாச்சாரி முனைந்து செய்த சில கருவிகளை 'கௌரி ஹவுஸ்' இயந்திரங்களுடன் இணைத்துப் பொருத்திய போது, உற்பத்தி இரு மடங்காக உயர்ந்தது! அத்துடன் அதே இயந்திர சாதனங்களைக் கொண்டே, மர ஸ்குரூ ஆணியைத் தவிர, இரும்பு ஸ்குரூ ஆணி, சில ரிவிட்டுகள் ஆகிய வேறு பல உற்பத்திப் பொருள்களும் தயார் செய்யப்பெற்றன.

1956 ஆம் ஆண்டு மதுரை மீனாட்சி மில்லுக்கு, ஜப்பானிலிருந்து தங்களுக்கு இயந்திரங்களை அனுப்பி வைத்த நிறுவனத்தைச் சார்ந்த அசனோ (ASANO) என்ற ஜப்பானியர் வருகை தந்திருப்பதை அறிந்த ராஜா, அவரை அழைத்து வந்து, விருந்தளித்து, கௌரி ஹவுஸ் நிறுவனத்திற்குக் கூட்டிச் சென்றார்.

ஓடிக்கொண்டிருந்த இயந்திரங்களையும், உற்பத்தி நிலைகளையும் மிகக் கவனமாகப் பார்வையிட்டு வியந்து போனார் அந்த ஜப்பானியர். 'எங்கள் இயந்திரங்கள் தரக்கூடிய உற்பத்தியைப் பன்மடங்கு அதிகரித்துள்ள இந்திய நாட்டின் பொறியியல் நுட்ப ஆற்றலை அறிந்து அதிசயிக்கிறேன்' என வருகை தருவோர் பதிவேட்டில் எழுதினார் அசனோ!.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், தொடங்கி வைத்த கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ் நிறுவனம், இன்றைய நிலையில் தென் மாநிலங்களின் பெரும்பான்மையான ஸ்குரு ஆனித் தேவைகளை நிறைவு செய்து வருவது குறிப்பிடத்தக்கது. அப் பெருமகனார் உருவாக்கிய நூ பாலை களைப் போலவே, திருகாணிகளை உற்பத்தி செய்யும் இந்த வித்தியாசமான தொழிற்கூடமும், ஆண்டு தோறும் தழைத்துச் செழித்துத்தர நிர்ணயத்தில் பெருமை பெற்றுத் திகழ்ந்து வருகின்றது.

* * *

# 23

## காந்தி கலை மன்றமும் கர்நாடக இசை விழாவும்

“இம் மன்றத்தை உருவாக்கும் முயற்சியில், அன்பு கூர்ந்து உழைத்த என் சகோதரர் திரு. பி.ஏ.சி. இராமசாமி ராஜா அவர்களுக்கும் நான் நன்றி செலுத்த வேண்டும். கடந்த ஒன்றரை ஆண்டுக்கு மேலாக, நான் வெளியூரில் இருக்கும்படி நேரிட்டதால், கட்டிட வேலைகளை மேற்பார்க்க வேண்டிய வேலை முழுவதும் அவரே பார்த்தார். எனவே, எனது கனவை விரைவில் நனவாக்கச் செய்ததற்கு அவரே காரண பூதராவார். இது தவிர மன்றத்தின் நிதிக்குத்தாராளமாக நிதி வழங்கி உள்ளார். அது ரூ. 25,000-க்கும் மேலாகும். தனி மனிதர் ஒருவரின் பொருள் உதவிகளில், இதுவே உயர்ந்த தொகையாகும். எனவே, அவருடைய தாராள வள்ளன்மையால், இம் மன்றம் பெரிதும் நன்மை அடைந்துள்ளது. அதற்காக நான் அவருக்கு ஆழ்ந்த நன்றி உள்ளவனாக இருக்கிறேன். இந்த ஆரம்ப ஸ்தாபனத்தில் அவர் காட்டிய வள்ளன்மையை நினைவில் நிற்கச் செய்ய விரும்புகிறேன். எனவே, இந்த மண்டபத்தைக் காலஞ்சென்ற அவருடைய மருமகனார் திரு. என்.கே. ராமராஜா பெயரால் அழைப்பதே சிறந்ததாகும் என்று எண்ணுகிறேன். அது, திரு. ராமசாமி ராஜா அவர்களுக்கும் மிகுந்த மன நிறைவை அளிக்கும் என்பதறிவேன்.

ராமராஜா ஆற்றல் கொண்ட ஓர் இளைஞர். படிப்பதற்காக வெளிநாடு சென்றார் என்பதும், அவரோடு பழகிய அனைவரும் அவரிடம் பிரியம் கொண்டனர் என்பதும், இக்கூட்டத்திலுள்ள பலருக்கும் தெரிந்திருக்கலாம். அவருடைய குழந்தைப் பருவத்தி லிருந்தே, மற்ற எவரையும் விட, எனக்கு அவரை நெருக்கமாக நன்றாகத் தெரியும். சிறந்த ஆற்றல் படைத்தவர்; உன்னதமான முகத்தோற்றம் உடையவர்; அவரிடம் எனக்கு மிகுந்த அன்பு

உண்டு. அவருடைய இளம் பிராயத்திலேயே, கொடிய காலன் அவரைக் கவர்ந்து கொண்டான். அன்னாருடைய சிறந்த சீலத்தாலும், பரந்த நோக்கத்தாலும், அவர் எல்லோராலும் நன்கு மதிக்கப் பெற்றிருந்தபடியால், திரு. ராமசாமி ராஜா அவர்களுக்கு, இம் மன்றத்தில் உள்ள தொடர்பை, இந்த மண்டபத்திற்கு இவ்விளைஞரின் பெயரைச் சூட்டுவதின் மூலம், ஞாபக மூட்டச் செய்வது பொருத்தமாகும் எனக்கருதுகிறேன்"

1955 ஆம் ஆண்டில் இராஜபாளையம் 'காந்தி கலை மன்றம்', இந்திய தேசீயக் காங்கிரஸ் தலைவர் திரு. யு.என். தேபார் தலைமையில், இந்திய நாட்டின் ராஷ்ட்டிரபதி மேதகு டாக்டர் ராஜேந்திர பிரசாத் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது. அந் நிகழ்ச்சியில் தியாகசீலர் பி.எஸ். குமாரசாமி ராஜா நிகழ்த்திய வரவேற்புரையின் ஒரு பகுதியே, மேலே குறிப்பிடப் பெற்றுள்ளது.



காந்தி கலை மன்றம்



காந்தி கலை மன்ற என்.கே.ராமராஜா
மண்டப மேடைத் தோற்றம்



காந்தி கலை மன்ற அர்ப்பணிப்பு விழா



காந்தி கலை மன்றம் திறப்பு விழா - -ராஷ்ட்ரபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத் –திறந்து வைத்தபோது, பி.ஏ.சி.ஆர். மாலை அணிவித்து வரவேற்கிறார்

'கலை வளர்ச்சியிலும், அறிவு வளர்ச்சியிலும், முக்கியமாகத் தமிழ் வளர்ச்சியிலும் மக்கள் ஈடுபட்டு மகத்தான முன்னேற்றம் அடைய வேண்டும்' எனும் அளப்பரிய ஆர்வத்தால், ஓர் அமைப்பை இராஜபாளையத்தில் உருவாக்க வேண்டுமெனக் கருதி, தியாகசீலர் பி.எஸ்.கே, உள்ளார்ந்து தாம் வாழ்ந்த இல்லத்தையே 1954 ஆம் ஆண்டில் பொது நன்மைக்காக, தர்ம சாசன செட்டில்மெண்ட் செய்து அர்ப்பணித்தார். இந்த செட்டில்மெண்ட் பத்திரத்தில் முதல் சாட்சியாகப் பெருந்தகை பி.ஏ.சி.ஆரைக் கையொப்பமிடச் செய்தார் பி.எஸ்.கே. நான்கு ஆண்டுகள் சென்னை மாகாண முதலமைச்சராகப் பொறுப்பு வகித்த பி.எஸ்.கே, 1952 ஆம் ஆண்டு பொறுப்பை விடுத்து இராஜபாளையம் வந்து சேர்ந்தவுடன், காந்தி கலை மன்றம் நிறுவுவதில் கவனம் கொண்டார். அயர்வில்லாது எந்நேரமும் மன்ற உருவாக்கப் பணியில் முனைந்து நின்றபோது, 1954 ஆம் ஆண்டு பிப்ரவரியில் பி.எஸ்.கே. ஒரிஸ்ஸா கவர்னராகப் பதவி ஏற்று, இராஜபாளையம் விட்டுச் செல்ல

நேர்ந்தது. ஆற்றிக்கொண்டிருந்த மன்றப் பணிகள் அனைத்தையும், தமது தமையனார் பி.ஏ.சி.ஆரைப் பார்த்துக் கொள்ளுமாறு வேண்டிய பி.எஸ்.கே, அப் பெருமகனாரிடம் பொறுப்பை விட்டுச் சென்றிருந்தார்.

பி.எஸ்.கே. ஒரிஸ்ஸா புறப்பட்டுச் சென்ற போது, காந்தி கலை மன்றக் கட்டிடப் பணி ஒரு பாதி முடிந்திருந்தது. மறுபாதியை தமது நேரடிப் பார்வையில், கட்டிடக் கலைஞர் தாசரி பெருமாள் ராஜா துணையுடன் பி.எஸ்.கே. விரும்பிய வண்ணம், சில மாதங்களுக்குள் பி.ஏ.சி.ஆர், நிறைவு செய்தார். இடையே ஒரிரு முறை ஒரிஸ்ஸாவிலிருந்து இராஜபாளையம் வந்தபோது, தமது தமையனார் பி.ஏ.சி.ஆரின் வழிகாட்டலில் மன்றப் பணிகள் வேகமாக வளர்ந்து வருவதைக் கண்ணுற்ற பி.எஸ்.கே. வியந்து மகிழ்ந்தார். ஒரிஸ்ஸாவுக்கு புறப்படுகிற நேரத்தில் 'காந்தி கலை மன்றம் பற்றிக் கவலை ஒண்ணும் உனக்கு வேண்டாம், எல்லாத்தையும் சீக்கிரம் முடிச்சுடலாம்' எனப் பி.ஏ.சி.ஆர், தமது சகோதரர் பி.எஸ்.கே.யிடம் சொல்வாராம்.

தாம் எதிர்பார்த்த காலத்திற்கு முன்னதாகவே, காந்தி கலை மன்றப் பணிகள் முடிந்து விட்டதை அறிந்த, ஒரிஸ்ஸா கவர்னராக



ஒரிஸ்ஸாவில் கவர்னராக -பி.எஸ்.கே. பதவி ஏற்றபோது,
இராஜபாளையத்திலிருந்து சென்ற பிரமுகர்களுடன் பி.ஏ.சி.ஆர்.

வீற்றிருந்த பி.எஸ்.கே. மன்றத் திறப்பு விழாவை மகிழ்ச்சியுடன் தீர்மானித்து விட்டார்.

காந்தி கலை மன்றத்தில் ஓர் அரிய நூல் நிலையத்தை உருவாக்கவும், மன்றத்தின் நடைமுறைச் செலவுகளை எக்காலத்திலும் இடையூறின்றி ஈடுகட்டவும் ஒரு மூலதனத்தை நன்கொடைகள் மூலம் திரட்ட பி.எஸ்.கே. முயன்ற நேரத்தில், ரூ. 25,000-ஐ வழங்கியதோடு, தமது தொழில் துறை நிறுவனங்களிலிருந்து கணிசமான தொகையை அளிக்குமாறும் ஏற்பாடு செய்தார் பி.ஏ.சி.ஆர். காந்தி கலை மன்றம் திரட்டிய மொத்த மூலதனம் ஒரு லட்சத்தில், நான்கில் ஒரு பகுதிக்கு மேலாகப் பி.ஏ.சி.ஆரும் அப் பெருமகனாரின் தொழில் நிறுவனங்களும் அளித்தவை என்பது நினைக்கத்தக்கது.

தமது உள்ளார்ந்த உயரிய எண்ணத்திற்கு உறுதுணையாக நின்று ஒத்துழைப்பும், உதவியும் நல்கிய சகோதரர் பி.ஏ.சி.ஆரின் பெருங்குணத்தைப் பெரிதும் போற்றிய பி.எஸ்.கே, நெஞ்சார்ந்த அந்த நினைவு என்றென்றும் நிலைத்திருக்க வேண்டுமெனக் கருதி, பி.ஏ.சி.ஆரின் மருமகனார் என்.கே. ராமராஜா திருப்பெயரை, காந்தி கலை மன்றத்தின் பெரு மண்டபத்திற்குச் சூட்டுவதாகத் தொடக்க விழாவில் அறிவித்து அக மகிழ்ந்தார்.

'ஏழிசைப் பயனாய்' இறைவனை அனுபவித்தார்கள் அருளாளர்கள்.

'நாத தனு மனிஸம்' என்றார் தியாகராஜ சுவாமிகள்.

'ஆசை தருங்கோடி அதிசயங்கள் கண்டதிலே
ஓசை தருமின்பம் உவமையிலா இன்பமன்றோ?' என வியந்து மகிழ்ந்தான் மகாகவி பாரதி.

இத்தகைய உவமையிலா இன்பமாகிய இசையை, இறையின்பமாகச் சுகிக்கும் இதயபாவம், இறையுணர்வில் திளைக்கும் இதயங்களுக்கு இயல்பாக அமைந்து விடுகிறது. இசை இன்பத்தை இறையின்பமாக உணரும் மனப்பக்குவம் கொண்டிருந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர். இராஜபாளையம் நகரில் சங்கீத சபைகள் எதுவுமில்லாதிருந்ததை

பெருங்குறையாகக் கருதினார். நகரப் பிரமுகர்கள் சிலரை வர வழைத்து சங்கீத சபையொன்றை 1956 ஆம் ஆண்டு நிறுவினார். அந்தச் சபை 'சரஸ்வதி சங்கீத சபை' என அழைக்கப் பெற்றது.

இராஜபாளையம் சரஸ்வதி சங்கீத சபையின் தலைமைப் பொறுப்பை பி.ஏ.சி.ஆர், ஏற்றார். எம்.ஆர்.எஸ். இராதாகிருஷ்ண ராஜா, எஸ்.என். சுப்பிரமணியம் ஆகிய இருவரும் காரியதரிசிகள்.

காந்தி கலை மன்றத்தின் பல்வேறு குறிக்கோள்களில், நுண் கலைகளை வளர்க்கும், நோக்கமும் ஒன்றாக இருப்பதால், சரஸ்வதி சங்கீத சபையைக் கலை மன்றத்துடன் இணைத்து விடுவது பொருத்தமாக அமையுமெனக் கருதிய பி.ஏ.சி.ஆர், சபையைக் கூட்டி முறையாகத் தீர்மானித்துச் சபையைக் காந்தி கலை மன்றத்துடன் இணைத்தார். சரஸ்வதி சங்கீத சபை, காந்தி கலை மன்றத்தின் சங்கீதப் பிரிவாக இயங்கத் தொடங்கியது.

ஏறத்தாழ நானூறு உறுப்பினர்களைக் கொண்டு இயங்கத் தொடங்கிய சங்கீதப்பிரிவு, இராமநாதபுரம் மாவட்ட நீதிபதியாக வீற்றிருந்த எஸ். ரெங்கராஜன் முறையாக 24.6.56 இல் தொடங்கி வைக்க, அன்று காருக்குறிச்சி கே.பி.அருணாசலம் நாதசுரக் கச்சேரி இடம் பெற்றது. கர்நாடக இசைத் துறையிலும், பரத நாட்டியத்துறையிலும் மிகு புகழ் பெற்றிருந்த பிரபலமான இசைக் கலைஞர்கள், நாட்டிய சிரோன்மணிகள், டி.கே.எஸ். போன்ற நாடக விற்பன்னர்களைக் கொண்டு மாதம் ஒரு நிகழ்ச்சி கலை மன்றத்தில் நிகழ்ந்து வந்தது.

காந்தி கலை மன்றச் சங்கீதப்பிரிவின் சார்பில் ஓர் இசை விழாவை நடத்தப் பொறுப்பாளர்கள் திட்டமிட்டனர். 17.2.57 முதல் 26.2.57 வரை தொடர்ந்து பத்து நாள்கள் முதன் முதலாக இராஜபாளையம் நகர், வரலாற்றுச் சிறப்புமிக்க இசை விழாவைத் தரிசித்து மகிழ்ந்தது; செவி மடுத்துச் சுகித்தது! விழாவை ராஜா சர் முத்தையா செட்டியார் தொடங்கி வைத்தார். பாட்டும், பரதமும், குழலும் இன்னிசையும் இராஜபாளையத்தைச் சங்கீத நகராகத் திகழ வைத்து, காந்தி கலைமன்றத்துக்கு பெரும் புகழை ஈட்டித் தந்தன. நிறுவனர் பி.எஸ்.கே.யும், தலைவர் பி.ஏ.சி.ஆரும் மிக மிக மகிழ்ந்து பெருமிதம் கொண்டனர்.

1957 ஆம் ஆண்டு எதிர்பாரா துக்க நிகழ்ச்சியாக பி.எஸ்.கே.யின் மறைவு நேர்ந்தது. பின்னர் காந்தி கலை மன்றத்தின் நிர்வாக அறங்காவலராகப் பொறுப்பேற்றார் பி.ஏ.சி.ஆர். தொடர்ந்து நடந்துவந்த கலை மன்றத்தின் சங்கீதப்பிரிவு 1959 ஆம் ஆண்டு, இரண்டாவது இசை விழாவை 3.12.1959 முதல் 13.12.1959 வரை தொடர்ந்து நடத்தியது. டாக்டர் சர் சி.பி. இராமசாமி ஐயர் விழாவைத் தொடங்கி வைத்தார். பிரபலமான இசைத்துறை வல்லுநர்கள் பங்கேற்றனர். காரியதரிசிகளாக பொறுப்பு வகித்த எம்.ஆர்.எஸ். இராதாகிருஷ்ண ராஜாவும், எஸ்.என். சுப்பிரமணியமும் முறையே 57, 59 ஆம் ஆண்டுகளில் கோலாகலமாகவும், குறிக்கோளின் பயன் மிளிருமாறும் இரண்டு இசை விழாக்களைக் கொண்டாடி, காந்தி கலை மன்ற சங்கீதப் பிரிவுக்குச் செழுமை ஊட்டினர். இரண்டு இசை விழாக்களின் நினைவாக உருவாக்கிய இரு மலர்களும், இசை நுட்பங்களை, இலக்கிய அருமைகளை மணக்கச் செய்யும் அரிய பேழைகளாகத் திகழ்கின்றன.

1962இல் பி.ஏ.சி.ஆர். மறைவு பேரிழப்பாக நிகழ்ந்து விட்ட பின்னர், அப் பெருமகனாரின் புதல்வர் பி.ஆர்.இராமசுப்பிரமணிய ராஜா, காந்தி கலை மன்ற நிர்வாகப் பொறுப்பை ஏற்றார்.

காந்தி கலை மன்ற சங்கீதப் பிரிவின் சார்பில், நிர்வாக அறங்காவலர் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜா, இசைப்பள்ளி ஒன்றைத் தொடங்கி அதற்கு 'பி.ஏ.சி. இராமசாமி ராஜா இசைப் பள்ளி' எனப் பெயரிட்டு, வாய்ப்பாட்டு, இசைக்கருவிகளைக் கற்றுக் கொள்ள வாய்ப்பளித்துள்ளார். இசைப்பள்ளியின் நிர்வாகச் செலவுகளுக்கென, பி.ஏ.சி.ஆர். கல்விப்பணி அறக்கட்டளையிலிருந்து ஆண்டு தோறும் நிதி உதவி அளிக்க ஏற்பாடு செய்துள்ளார் இராமசுப்பிரமணிய ராஜா.

* * *

# 24

## மெட்ராஸ் சிமெண்ட்ஸ் தொழிற்சாலையும் மேன்மைமிகு பெருந்தகையின் புகழ் மாலையும்

பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தொடங்கிய பெரும்பான்மையான தொழில்களுக்கு அப் பெருமகனார் வேண்டி விரும்பி அரசாங்கத்திடம் விண்ணப்பித்துத் தொழில் தொடங்குவதற்குரிய உரிமங்களைப் (INDUSTRIAL LICENCE) பெற்றதில்லை. அரசாங்கம் அப் பெருமகனாரைத் தொழில் தொடங்க ஊக்கப்படுத்திய பின்னரே, உரிய உதவிகள் அளிப்பதாய் உற்சாகப்படுத்திய பிறகே பி.ஏ.சி.ஆர், அந்த வகையில் கருத்தூன்றித் தொழில்களைத் தொடங்கியுள்ள அருமை - அப் பெருந்தகை பெற்றுள்ள தனிப்பெருமை.

விருதுநகருக்கு அருகே, இராமசாமி ராஜா நகரில் தோற்றம் பெற்ற மெட்ராஸ் சிமெண்ட்ஸ் தொழிற்சாலையும் அத்தகைய அரசாங்க ஊக்குவிப்பில் உதயமானதென்பது குறிப்பிடத்தக்கது.

இந்திய நாட்டின் தொழில் அமைச்சராக வீற்றிருந்த மனுபாய்ஷா, 1956 ஆம் ஆண்டு, சென்னையில் தமிழ் நாட்டுத் தொழில் அதிபர்களைச் சந்திக்கும் நிகழ்ச்சி ஒன்று ஏற்பாடு செய்யப் பெற்றது. அந்நிகழ்ச்சியில் பி.ஏ.சி.ஆர். கலந்து கொண்டார். நிகழ்ச்சி முடிவுற்ற நிலையில், மனுபாய்ஷா, ராஜாவை அருகில் அழைத்து, "தமிழ் நாட்டுக்கு ஒரு சிமெண்ட் ஆலை, அனுமதிக்கப்பட்டுள்ளதே! ராஜா! நீங்கள் அதை ஆரம்பிக்கலாமே?" என்றார்.

"நன்றி! அந்த விஷயமாய் ஆலோசித்துச் சொல்கிறேன்!" எனக் கூறி அமைச்சரிடம் விடை பெற்றார் ராஜா.

அப்போது ஒரிஸ்ஸா கவர்னராகப் பொறுப்பேற்றிருந்த தமது சகோதரர் பி.எஸ். குமாரசாமி ராஜாவிடம், அமைச்சர் தெரிவித்ததைக்கூறி, சிமெண்ட் ஆலை சம்பந்தமாக ஆலோசித்தார் பி.ஏ.சி.ஆர். "ஆமாம் சிமெண்ட் ஆலை, தமிழ்நாட்டுக்கு ஒன்று அனுமதிக்கப்பட்டுள்ளது. பின்தங்கிய மாவட்டத்திற்குத்தான் அதை வழங்குவார்கள். நமது இராமநாதபுரம் மாவட்டம் பொருத்தமானதுதான். நாம் அதை ஆரம்பிப்பது நல்லதுதான்" என உடன்பட்ட பி.எஸ்.கே. ஆலையைத் தொடங்குவதற்குரிய சில வழி முறைகளையும் எடுத்துச் சொன்னார்.

அப்போதையத் தமிழகத் தொழில் அமைச்சராகவிருந்த ஆர்.வெங்கட்ராமனிடம் தெரிவித்தபோது "ராஜா, செய்தா நன்னாச் செய்வீங்க! செய்யுங்கோ" என மகிழ்ந்து உரைத்தார்.

முதலமைச்சர் காமராஜ், "நல்லா வரும்படியா பார்க்கலாம்னேன்" என பி.ஏ.சி.ஆரை உற்சாகப்படுத்தினார்.



சிமெண்ட் ஆலையை நிறுவுவதின் விவரங்களை
செக்கோஸ்லோவேகியா ஸ்கோடா கம்பெனி பிரதிநிதிகளுடன்
பி.ஏ.சி.ஆர். முதலமைச்சர் காமராஜரிடம் விவரிக்கிறார்

ஆலையைப் பொது மக்கள் முதலீடு செய்யும் 'பப்ளிக் லிமிடெட்' நிறுவனமாகத் தொடங்கக் கருத்துக் கொண்ட பி.ஏ.சி.ஆர், ஆலைக்கு மூலப் பொருளாக உள்ள சுண்ணாம்புக்கல் கனிம வளம் விருதுநகருக்கு அருகே சாத்தூர் வட்டத்தில் கிடைப்பதைச் சிந்தையில் கொண்டு, அந்தப் பகுதியிலேயே சிமெண்ட் ஆலையை அமைப்பதென முடிவு செய்தார்.

அன்றைய நிலையில் சிமெண்ட் ஆலையை நிர்மாணிக்க ஒரு கோடி ரூபாய் மூலதனம் அவசியமாகத் தேவைப்பட்டது. எனவே ஐம்பது லட்ச ரூபாயைப் பொதுமக்களிடமிருந்தும், நாற்பது லட்ச ரூபாயை இண்ட்ஸ்ட்ரியல் பைனான்ஸ் கார்ப்பரேஷனிட மிருந்து நீண்ட காலக்கடன் தொகையாகப் பெறுவதென்றும், பத்து லட்சத்தை வங்கிகளிடமிருந்து கடனாகப் பெற்றுக் கொள்வதென்றும் பி.ஏ.சி.ஆர். முடிவு கொண்டு தீர்மானித்தார்.

அப்போதைய பொருளாதார முதலீட்டுச் சூழ்நிலையில், பொது மக்களிடமிருந்து ஐம்பது லட்சத்தைப் பங்குத் தொகையாகப் பெறுவது அவ்வளவு எளிதான செயலல்ல. அரசாங்கம், ஓரளவு பங்குத் தொகையாக நிறுவனத்தில் முதலீடு செய்யுமேயானால், பொதுமக்கள் மிகுந்த நம்பிக்கையுடன் பங்குத்தொகை அளிப்பதில் ஆர்வம் கொள்வரெனக் கருத்துக் கொண்டு, தமிழ் நாட்டு அரசாங்கம் பத்து லட்ச ரூபாய்ப் பங்குத் தொகையாக நிறுவனத்தில் முதலீடு செய்ய முன் வந்தது ! தனியார் துறையில் அரசாங்கம் முதன் முதலாக இந்நிறுவனத்தில்தான் பங்கு முதலீடு செய்ததென்பது வரலாற்றுச் செய்தியாகும். அதுவும் இதற்காக மத்தியத் திட்டக் கமிஷனின் அனுமதியையும் பெற்றது தமிழ்நாட்டு அரசாங்கம் ! தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சியை கருத்தில் கொண்டு அரசாங்கம் பங்குத் தொகை முதலீடு செய்தது.

தொழிற்சாலை அமைப்பதற்குரிய நிலங்கள் பல்வேறு கிராமத்தைச் சார்ந்தவர்களிடம் இருந்தன. அவைகளை உரியவர் களிடம் வாங்கிய பான்மையும், நாணய மேன்மையும் பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் பெருங்குணப்பண்பை விளக்குவதாய் அமைந்தன.

நிலம் வைத்திருக்கும் கிராமவாசிகளையெல்லாம் ஒரு நாள் அழைத்துவரச் செய்தார் அப் பெருமகனார். ராஜாவின் அழைப்பைப் பெருமையாகக் கருதிய கிராமப் புறத்து நில உரிமையாளர்கள் வந்து ஒன்று கூடினர்.

"இந்த சுற்று வட்டாரத்தில உள்ள மக்களெல்லாம் சுபீட்சமா, வளமா இருக்கோணுங்கிற நல்ல நோக்கத்திலே, பெரிய தொழிலை இங்கே ஆரம்பிக்கலாமினு முயற்சி பண்ணிட்டிருக்கேன். நீங்கள்ளாம் சேர்ந்து நிலம் கொடுத்தாத்தான் தொழிலை இங்கே அமைக்கலாம். நல்ல காரியத்துக்குனு நான் கேட்கிறதுனாலே நீங்கள்ளாம் நிலம் கொடுப்பீங்கன்னு நம்பிக்கை எனக்கு இருக்கு. நிலங்களை தனித்தனியா ஒவ்வொருத்தரிடமும் பேரம் பேசி நான் வாங்கப் போறது இல்லை. நீங்க எல்லாரும் ஒண்ணாச் சேர்ந்து, ஒரு முகமா, ஏக்கருக்கு எவ்வளவு கேட்கிறீங்களோ, அதை அப்படியே கொஞ்சமும் குறைக்காது கொடுத்திடலாம்னு இருக்கேன். உங்களுக்குள்ளே பேசி முடிவுக்கு வந்து என்னிடம் சொல்லுங்கோ. எந்தக் காரணம் கொண்டும் நிலங்களைத் தனித்தனியா வாங்கவும் மாட்டேன் ; நீங்க எல்லாரும் சேர்ந்து சொல்ற தொகையிலேயிருந்து ஒரு பைசா குறைக்கவும் மாட்டேன். இங்கே ஆரம்பிக்கிற தொழில், இந்தப் பகுதி மக்களுக்குத்தான் அதிகமாப் பயன்படும். ஆகையினாலே விலையைப் பார்த்துப் பொருத்தமாச்சொல்லுங்க. இன்னொரு நாள் வந்து சொன்னாப் போதும்" எனக்கூறிக் கிராமத்தார்களை அனுப்பி வைத்தார் பி.ஏ.சி.ஆர்.

மீண்டும் ஒருநாள் நில உரிமையாளர்களெல்லாம் ஒன்று சேர்ந்து, ராஜாவை வந்து பார்த்தனர். ஏக்கருக்கு ரூ. 250 என முடிவு செய்திருப்பதாகக் கூறினர். அப்போதைய நிலையில் ஏக்கர் 50 ரூபாய்தான் மதிப்புப் பெறும்.

ராஜாவின் அன்பிற்குரிய உறவினர் ஒருவர், அப் பெருமகனாரைத் தனியாக அழைத்துச் சென்று, " தனித்தனியாகப் பேசி இவர்களிடம் நிலத்தை வாங்குவோமேயானால்

ஏக்கர் 50 ரூபாய்க்கே வாங்கிவிடலாம்" என்றார். அவரிடம் புன்னகைத்துவிட்டு, கிராமத்து நில உரிமையாளர்களிடம் வந்த பி.ஏ.சி.ஆர்,"ரொம்ப மகிழ்ச்சி. நீங்கள்ளாம் ஒண்ணா வந்து ஒருமுகமா விலை சொல்லீட்டீங்க. நான் ஏற்கனவே உங்ககிட்டே சொன்னபடி, நீங்க சொல்ற விலையை அப்படியே கொடுத் திட்றேன். அதோட, நீங்க எல்லாரும் நிலம் கொடுக்கிறதா சொல்லீட்டிங்க! நானும் ஒண்ணு சொல்றேன். நான் தொடங்கப் போற பாக்டரியிலே, உங்க குடும்பத்திலே உள்ளவங்களுக்கு வேலை போட்டுத்தர்ரேன். யார், யாருக்கு, எந்தெந்த குடும்பத்துக்கு வேலை கொடுக்கணுமின்னு சொல்லுங்க; அப்படியே கொடுத்திட்றேன்!" எனக்கூறினார்.

ராஜாவின் வாக்குத் தவறாத நாணயத்தையும், வேலைதருவதாகச் சொன்ன நல்லிணக்கத்தையும் பாராட்டிய வாறே, கிராமப் புறத்து நில உரிமையாளர்கள் பரவசத்துடன் விடைபெற்றுச் சென்றனர்.

சிமெண்டுத் தொழில், பொது மக்கள் விரும்பி முதலீடு செய்கின்ற ஒரு தொழிலாக அந்தக் காலக்கட்டத்தில் இருக்கவில்லை. என்றாலும் இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி மாவட்டங் களில் பரவலாக இருந்த இராஜபாளையம் மில்ஸ் பங்குதாரர்கள், ராஜாவின் மீது வைத்திருந்த அபரிமிதமான நம்பிக்கையின் அடிப்படையில், முதலீட்டில் பெரும் பங்கேற்க ஆர்வத்துடன் முன் வந்தனர். சிருங்கேரி மகா சந்நிதானம் அவர்களும், தருமபுரம் ஆதீனகர்த்தர் அவர்களும், தங்கள் நல்லாசியினை ராஜாவுக்கு வழங்கு முகத்தான், நிறுவனத்தின் முதலீட்டில் கணிசமான பங்கேற்று வாழ்த்தினார்கள்.

இதற்கிடையே தமது திருக்குமாரர் பி.ஆர். இராம சுப்பிரமணிய ராஜாவையும், எஸ். அர்ஜுன ராஜாவையும், பங்குமுதல் சேர்க்கும் நோக்கத்தில், மலேசியாவுக்கு அனுப்பி வைத்தார் பி.ஏ.சி.ஆர். அவர்கள் பதினைந்து லட்சத்திற்குப் பங்குமுதல் சேகரித்துத் திரும்பினர். ஆக, தொழிலுக்குரிய முதலீடு, ராஜா எதிர்பார்த்த படியே, சொல்லப் போனால் அறிவிக்கை (PROSPECTUS) வெளியிடாமலே வந்து சேர்ந்தது.

தொழிலுக்குரிய இயந்திர சாதனங்களை செக்கோஸ் லாவோகியா நாட்டிலிருந்து இறக்குமதி செய்ய முடிவெடுத்தார் ராஜா. நாளொன்றுக்கு 350 டன் சிமெண்ட் உற்பத்தித்திறன் கொண்ட இயந்திரங்களை வரவழைக்க முதலில் முடிவு செய்யப் பெற்றது. எனினும், அந்நியச் செலாவணி நிலை மிகவும் நெருக்கடியாக இருந்ததைக் கருத்தில் கொண்டு, 200 டன் உற்பத்திக்கான இயந்திரங்களை இறக்குமதி செய்யத் தீர்மானிக்கப் பெற்றது.

இந்த நேரத்தில் இந்தியாவில் குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சி நடந்தது. வேறொன்றுமல்ல; இந்திய நாட்டின் நிதி அமைச்சராக வீற்றிருந்த டி.டி. கிருஷ்ணமாச்சாரி அமைச்சரவையிலிருந்து ராஜினாமாச் செய்து விட்டார்.

இயந்திரங்கள் இறக்குமதி செய்ய நிதி அமைச்சகம் அனுமதி அளிக்க வேண்டும். எனவே, நிதி அமைச்சர் கையொப்பமிட வேண்டும். பி.ஏ.சி.ஆர், செய்தியை வாசித்தபோது சற்றே துணுக்குற்றார். ஏனெனில் ராஜாவை நன்கு அறிந்தவர் டி.டி.கே; ராஜாவிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தார் டி.டி.கே. இனி ஒருவர் நிதியமைச்சராக வந்து, அவர் கையொப்பமிட வேண்டுமெனில் இயந்திர இறக்குமதியில் பெரும் காலத் தாழ்வு ஏற்படுமே என்றுதான் ராஜா சற்றே கவலை கொண்டார். ஆனால் அப் பெருமகனாரின் கவலை, டி.டி.கே, தம்மீது அன்புகொண்டு செய்திருந்த அரிய பாங்கினை அறிந்தபோது, களிப்பாக மாறியது. டி.டி.கே. ராஜினாமாக் கடிதத்தை, நேரு பெருமகனார் ஏற்பதற்கு முன்னர், அரசாங்க ஆவணங்களில் டி.டி.கே. கடைசியாகக் கையொப்பமிட்டது ராஜாவின் ஃபைலில்தான் !

செக்கோஸ்லோவோகியாவிலிருந்து இயந்திரங்கள் வர வழைப் பதால், அந்த நாட்டுக்கே ஒருவரை அனுப்பி வைத்து, சிமெண்ட் தயாரிப்பு நுணுக்கங்களை தெளிவாக அறிந்து கொள்ள உரிய பயிற்சியளிப்பது அரிய பயனை நல்குமென ராஜா கருதினார்.

இந்த வகைக்குக் குழந்தைப் பருவம் முதலாகவே அறிந்திருந்த தமது மருமகனார் எஸ்.எஸ். இராமச்சந்திர ராஜா மிகப் பொருத்தமானவராக அமைவாரெனக் கருதினார் ராஜா. இராமச்சந்திர ராஜாவின் அறிவுக் கூர்மையும், ஆற்றல் மிக்க ஆர்வ உணர்வும், நல்லிணக்கம் கொண்ட நடைமுறைப் போக்கும், பயிற்சிக்கு உகந்தவையாக அமையுமென மனம் கொண்டார் பி.ஏ.சி.ஆர்.

இராமச்சந்திர ராஜா, பி.ஏ.சி.ஆரின் புதல்வி சிட்டம்மாளின் திருக்கரம் பற்றிச் சில மாதங்களே ஆகியிருந்தன! என்றாலும் பொருத்தமானவரை அனுப்பினால்தான் பின்னர் பொறுப்பினை அளிக்கப் பொருந்தி வருமென எண்ணி, பி.ஏ.சி.ஆர். 'எஸ்.எஸ்.ஆர்' என அன்பாகக் குறிப்பிடப் பெறுகின்ற எஸ்.எஸ்.இராமச்சந்திர ராஜாவை செக்கோஸ்லோவேகியா நாட்டிற்குப் பயிற்சிக்காக அனுப்பி வைத்தார். பயிற்சி முடியும் சந்தர்ப்பத்தில் தமது புதல்வி சிட்டம்மாளைத் தனியாக அந்த நாட்டிற்கு அனுப்பி, மருமகனார் திருமகளார் இருவரையும் ஒன்றாக இணைந்து தாய்நாட்டுக்குத் திரும்பி வருமாறு செய்தார் ராஜா.



எஸ்.எஸ். இராமச்சந்திர ராஜா செக்கோஸ்லோவோகியா நாட்டிற்குப் பயிற்சிக்காக சென்ற போது வழியனுப்பு விழா

பங்குதாரர்களின் அறங்காவலராகத் தம்மை கருதிக் கொள்ளும் இயல்புடையவரல்லவா ராஜா? தமது மருமகனார் இராமச்சந்திர ராஜா செக்கோஸ்லாவேகியா நாடு சென்று பயிற்சி பெற்றுத் திரும்பும் முழுச்செலவையும், பி.ஏ.சி.ஆர், தமது சொந்தச் செலவாகவே ஏற்றுக் கொண்டார். அப்பெருமகனார் நினைத் திருந்தால், அச்செலவு முழுவதையும் சிமெண்ட் தொழிற் சாலையையே ஏற்குமாறு செய்திருக்கலாம். தொழிற்சாலையின் நலம் கருதித்தானே பயிற்சி? பயிற்சிக்குரிய செலவைத் தொழிற்சாலை ஏற்பது முறையானதுதானே? எவரும் வினா எழுப்பி வினவ இயலாதது தானே? என்றாலும் அப் பெருந்தகையின் பேருள்ளம் அப்படி நினைக்கவில்லை ! அப் பெருமகனாரின் இயல்பான குணப்பண்பு அது ! அந்தக் குணப்பண்பின் திருவுருவமே பி.ஏ.சி.ஆர். !

அயல் நாட்டிலிருந்து சிமெண்ட் உற்பத்திக்கான அனைத்து இயந்திரங்களும் வந்து சேர்ந்தவுடன், அவைகளை நிர்மாணிக்கத் தக்க கட்டிட அமைப்புப் பணிகளும், இயந்திரங்களைப் பொருத்துவதற்கான ஆயத்த வேலைகளும் தீவிரமாகத் தொடங்கின.

சாதாரணமாக இத்தகைய பெருந் தொழில்களைத் தொடங்கும் போது, ஆயத்தப் பணிகளைத் தங்கியிருந்து கவனிக்க, வசதிகள் நிறைந்த விருந்தினர் மாளிகை, (GUEST HOUSE) பக்காக் கட்டிடங்கள் ஆகியவற்றை முதலில் உருவாக்கிக் கொள்வதுதான் வழக்கம்; நடைமுறை. ஆனால் நடைமுறை வழக்கத்திற்கு மாறுதலாகப் பி.ஏ.சி.ஆர், ஓலைகள் வேய்ந்த நீளமான குடிசைகளைத் தான் அமைக்கச் சொன்னார். இயந்திரங்களைப் பொருத்தும் பணிக்கு செக்கோஸ்லோவேகியா நாட்டிலிருந்து வருகை தந்தவர்களுக்கு மட்டும், ஆஸ்பெஸ்டாஸ் தகடுகள் வேயப்பட்ட கட்டிடங்கள் உருவாக்கி அளிக்கப் பெற்றன. தொழிற்சாலைப் பணிகள் நடந்து கொண்டிருந்தபோது பி.ஏ.சி.ஆர், பல நாள்கள் அந்தக் குடிசைகளிலேயே தங்கி யிருப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தாரென்பது நினைக்கத் தக்கது.

ஐம்பதுகளில் தமிழ்நாட்டின் பெரிய தொழில் அதிபர்களில் பெருமைக்குரிய ஒருவர்தான் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். தொழிற் சாலைப் பணிகள் நடந்து கொண்டிருந்த கால கட்டத்தில், தாம் வந்து தங்குவதற்கென, வசதியான ஒரு மாளிகையை அமைத்துக் கொள்ளலாந்தான்; அப்படி அமைத்துக் கொண்டு தங்கியிருப்பது முற்றிலும் நியாயமானதுதான். ஆலை செயல்பட்டு லாபம் ஈட்டி அதிலிருந்து தான் வசதிகளை பெற வேண்டும் என்று கூறுவார். 'மன்னன் எவ்வழி குடி மக்கள் அவ்வழி' என எண்ணிப் பார்த்து, அதன் வழி, எளிமையாக எல்லோருடனும் தங்கியிருப்பதையே அந்த அற உள்ளம் விரும்பியது !

இந்தியத் தொழில் நிதிக் கழகத்தின் (INDUSTRIAL FINANCE CORPORATION OF INDIA) சேர்மனாக வீற்றிருந்த பெரிய அதிகாரி பக்ஷி. கம்ப்ட்ரோலர் ஆப் கேபிடல் இஷ்யூஸ், (COMPTROLLER OF CAPITAL ISSUES) ஆடிட்டர் ஜெனரல் ஆப் இண்டியா (AUDITOR GENERAL OF INDIA) ஆகிய உயர்பதவிகளில் வீற்றிருந்த அவர், ராமசாமி ராஜா நகரில், தொழிலகப் பணிகள் மேற்கொண்டிருந்த வேளையில் வருகை தந்தார். ராஜா உட்பட அனைவரும் குடிசைப் பகுதியில் குடியிருந்து வருவதைக் கண்ணுற்றுப் பெருவியப்புக் கொண்டார் பக்ஷி, 'கண்டிப்பான கறார் அதிகாரி' எனப்பெயர் பெற்றவர். அவர் சென்னார் :

"மிஸ்டர் ராஜா! நீங்கள் இந்தக் குடிசையில் தங்கியிருப்பதைப் பார்க்க வினோதமாக இருக்கிறது; வியப்பாகவும் இருக்கிறது ! இந்தியாவின் எந்தப் பகுதியிலும் தொழிற்சாலைகளைத் தொடங்குவதற்கு முன்னர், முதலில் விருந்தினர் மாளிகையை உருவாக்கிக் கொள்வார்கள்; வசதிகள் நிறைந்த கட்டிடங்களில் தங்கிக் கொண்டுதான் தொழிற்சாலையை வடிவம் கொள்ளச் செய்வார்கள்! பாக்டரி வருவதற்கு முன்னரே பக்காக் கட்டிடங்கள் உருவாகிவிடும்! நீங்களோ வழக்கத்திற்கு மாறாகக் குடிசைகளில் தங்கிக் கொண்டு, தொழிற்சாலையை உருவாக்கி வருகின்றீர்கள்! சிக்கனத்துடனும், சீரிய பாங்குடனும் உருவாக்கும் இத்தகைய நிறுவனங்களுக்கு கடன் அளிப்பதை நாங்கள் மகிழ்ச்சியாக ஏற்போம்."

டால்மியா சிமெண்ட் நிறுவனத்தில் ஒரு புதிய இயந்திரத்தைப் பொருத்தும் நிகழ்ச்சியை ஒரு விழாவாகக் கொண்டாடினார்கள். ராஜாவிற்கு அழைப்பு வந்தது. தொலைபேசியில் தொடர்பு கொண்டும் ராஜாவை அழைத்தார்கள்.

விழாவில் கலந்துகொண்ட பி.ஏ.சி.ஆர், தொழிலதிபர் டால்மியாவைச் சந்தித்து, "சிமெண்ட் பாக்டரி ஒன்றை நான் ஆரம்பிக்கிறேன். இப்போது இயந்திரங்கள் வந்து கொண்டிருக்கின்றன. என்ன என்ன வகையில் நான் இயங்க வேண்டும்? எதில் அதிகக் கவனம் கொள்ள வேண்டும். தயவுசெய்து எனக்கு நீங்கள் சொல்ல வேண்டும்! " என வேண்டினார்.

"எது எப்படியாயினும், மின்சாரத் தொடர்பு (POWER SUPPLY) என்பது பாக்டரியின் உயிர் மூச்சு. அது உரிய காலத்தில் கிடைத்தாக வேண்டும். அதற்கு இப்போதிருந்தே முயற்சியைத் தொடங்கி விடுங்கள்" என்றார் தொழிலதிபர் டால்மியா.

டால்மியாவின் ஆலோசனையைக் கேட்ட பி.ஏ.சி.ஆர், இராஜபாளையம் வந்ததும், சென்னை சென்று மின்சாரத்துறை மாநில அதிகாரி (Chief Engineer) அப்பாதுரையைப் பார்த்துவரத் திட்டமிட்டார்.

அப்பாதுரை ராஜாவை நன்கு அறிந்தவர். பி.ஏ.சி.ஆர். சென்று பார்த்ததும், "நீங்கள் இதற்காக நேரே வர வேண்டுமா என்ன? தொலைபேசியில் இராஜபாளையத்திலிருந்தே என்னுடன் பேசி, ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் போதுமே ! " என்றார்.

"அதனாலென்ன? உங்களை நேராகப் பார்த்துப் பேசும் மகிழ்ச்சி, டெலிபோனில் கிடைக்குமா? தங்களை பார்த்து நேராக வேண்டிக் கொள்வதுதான் முறையானது. தொழிற்சாலைக்கு மின்சாரத் தொடர்பு கிடைப்பதுதான் ரொம்பக்கஷ்டமானது எனச் சொல்கிறார்கள்..." என ராஜா சொல்லிக் கொண்டிருந்த போதே, இடைமறித்த அப்பாதுரை,

"சரி ராஜா ! மின்சாரத் தொடர்பு கிடைப்பது ரொம்பக் கஷ்டமென்று யாரோ சொல்வதாகச் சொல்கிறீர்கள். நமக்குள் ஒரு

போட்டி ! நீங்கள் தொழிற்சாலையைக் கட்டி முடித்து, இயந்திரங் களைப் பொருத்திவிட்டு 'எங்கே மின்சாரம்?' என என்னைக் கேட்கக் கூடிய நிலை முதலில் உருவாகுமா? அல்லது அங்கே சப் ஸ்டேஷன் போட்டு விட்டு 'மின்சாரத் தொடர்பு கொடுக் கட்டுமா?' என நான் உங்களைக் கேட்கும் நிலை முதலில் உண்டாகுமா? எனப் பார்ப்போம்" என்றார் புன்னகைத்தவாறே.

தொழிற்சாலை மின்சாரத் தொடர்பை, ஏற்றுக் கொள்ளத் தயாராவதற்கு முன்னமேயே அப்பாதுரை, அயராது காட்டிய ஆர்வத்தினால், மின்சாரத்துறை, தொடர்பினை வழங்கத் தயாராகிவிட்டது ! எஸ்.எஸ். இராமச்சந்திர ராஜாவுக்கு ஃபோன் பண்ணிய அப்பாதுரை "நான் ஜெயிச்சுட்டேன்னு உங்க மாமனார் ராஜாவிடம் சொல்லுங்கள் ! " என்றாராம்.

சிமெண்ட், தொழிற்சாலையை உருவாக்கும்போது, பல நல்லிணக்கச் செயற்பாடுகள் நிகழினும், சில இடையூறுகளும் தோன்றவே செய்தன.

விருதுநகருக்கு அருகே சாத்தூர் வட்டத்தில் சுண்ணாம்புக்கல் கனிம வளம், இரண்டு மூன்று சிமெண்ட் பாக்டரிகளுக்குப் போதுமான அளவு நிறைந்து இருப்பதாகக் குறிப்பிட்டு, ஏற்கனவே சிமிண்ட் தொழிற்சாலையைத் தமிழ்நாட்டில் ஏற்படுத்தியுள்ள ஒரு தொழிலதிபர் தமது தொழிற்சாலைக்கு அந்தப் பகுதி கனிம வளத்தைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதி வேண்டி, உரிய படிவத்தில் மத்திய அரசுக்கு விண்ணபித்து விட்டார். கனிம வளத் துறையில் நுட்பமும் திறமும் கொண்ட நரசிம்மன் என்னும் வல்லுநரைக் கொண்டு, படங்களெல்லாம் உருவாக்கி, அருகிலுள்ள சிமெண்ட் தொழிற்சாலைக்கே சாத்தூர் வட்டாரச் சுண்ணாம்புக்கல் கொடுக்கப்பட வேண்டுமென உரிய விண்ணப்ப பாரத்தில் ராஜா வேண்டுதல் செய்து மத்திய அரசுக்கு அனுப்பி வைத்தார். ராஜா இந்த விண்ணப்பத்தை தயாரிக்கவும், அனுப்பி வைக்கவும் உதவியாக அமைந்த கே.நாராயணன் சேவை குறிப்பிடத்தக்கது.

கனிம வளத்தைத் தொழிற்சாலைகளுக்கு எடுத்துக் கொள்ள அனுமதிக்கும் பொறுப்பு, மத்திய தொழில் அமைச்சர் மனுபாய் ஷாவிடமே இருந்தது.

டெல்லிக்கு பி.ஏ.சி.ஆரும், எஸ். அர்ஜுன ராஜாவும் சென்று அமைச்சர் மனுபாய் ஷாவைப் பார்த்தனர்.

"கனிம வளம் அதிகமாக இருக்கும்போது, அதை இரண்டு தொழிற் சாலைகளும் பயன்படுத்திக் கொள்ளலாமே?" என்றார் அமைச்சர்.

அதிகக் கனிவளம் இருப்பதாக வல்லுநர்கள் கருதவில்லையென்றும், அருகே அமைக்கப்பெறும் தொழிற்சாலைக்கு அனுமதி அளிப்பதுதான் நியாயமானதென்றும், அமைச்சரிடம் பணிவாக எடுத்துச் சொன்னார் பி.ஏ.சி.ஆர்.

அமைச்சர் மனுபாய் ஷா மீண்டும், மீண்டும் "அதிகமாகக் கிடைக்கிறபோது இரண்டு தொழிற்சாலைகள் அவைகளைப் பயன்படுத்தினால் என்ன?" எனக் கூறிக்கொண்டே இருந்தார்.

"சரி ! நான் சொல்வதில் உங்களுக்கு நம்பிக்கை வரவில்லை! என் வேண்டுகோளை ஏற்கவும் உங்களுக்கு மனம் வரவில்லை! நீங்கள் தான் என்னை அழைத்துத் தொழிற்சாலையைத் தொடங்கச் சொன்னீர்கள். அங்கே கிடைக்கும் மூலப்பொருளை ஒரு தொழிற்சாலைக்கு வழங்கினால்தான் நல்லது. அதை அவங்களுக்கு எடுத்துக் கொள்ள அனுமதி கொடுத்து விடுங்கள். நீங்கள் தொழிற்சாலை தொடங்க எனக்கு வழங்கியுள்ள லைசென்சை உங்களுக்கே அனுப்பி விடுகிறேன். தொழிற் சாலையை நடத்த எனக்கு விருப்பமில்லை" எனச் சற்று கோபத்துடன் கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்ட ராஜாவை அமைச்சர் அழைத்து, சமாதானம் செய்தார். எனினும் ராஜாவிற்குத் திருப்தி இல்லை. சென்னை வந்ததும், முதலைமைச்சர் காமராஜரைப் பார்த்தார் ராஜா. ஏற்பட்டுள்ள சிக்கலை ஆதியோடந்தமாக எடுத்துரைத்தார் பி.ஏ.சி.ஆர்.

"அப்படியா? அந்த ஆளுக்கு இராமநாதபுரம் ஜில்லாவிலே என்ன சுண்ணாம்புக்கல் வேண்டியிருக்குன்னேன்? தெரியுது.... வேணுன்னு தகராறு பண்றாருன்னேன் ! நான் பார்த்துக்கறேன்! நீங்கபாட்டுக்குப் போயி, தொழிற்சாலையைச் சீக்கிரமா தொடங்கிற காரியத்தைப் பாருங்கன்னேன் ! ராஜா ! உங்களுக்கு கவலை ஒண்ணும் வேண்டான்னேன்" என ஊக்கமளித்து ராஜாவை அனுப்பி வைத்தார் முதலமைச்சர் தலைவர் காமராஜ்.

பின்னர் தமிழ்நாட்டு அரசாங்கத்தின் கருத்திற்கிணங்க அந்தத் தொழில் அதிபர், விண்ணப்பத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டார்.

ஸ்டாக் எக்ஸேஞ்சில் பங்குகளைப் பரிவர்த்தனை செய்து கொள்ள, பதிவு செய்வதில் சிறு சிக்கல் ஏற்பட்டது. பங்குகள் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் மட்டுமே வழங்கப் பட்டுள்ளதென்றும், பொது மக்களுக்கு வழங்கப்பட இல்லை எனத் தவறான காரணம் காட்டி, பதிவு அனுமதி மறுக்கப்பட்டது. பின்னர் மத்திய நிதி அமைச்சகம், உரிய முறையில் விளக்க மளித்துப் பதிவு செய்து கொள்ள அனுமதி வழங்கியது.

ஆலையின் அதி முக்கியமான பகுதிகளான சூளை, அறவை போன்றவற்றில் பணி செய்ய வேண்டியவர்கள், நுட்பமறிந்து திறமையாகப் பணியாற்ற வேண்டுமெனக் கருதிய பி.ஏ.சி.ஆர், அவர்களை பயிற்சி பெற வைக்க வேண்டுமென எண்ணம் கொண்டார். தமது அன்பிற்குரிய தொழிலதிபர் டால்மியாவிடம் தொடர்பு கொண்டு, பயிற்சிக் குரியவர்களை டால்மியா சிமெண்ட் தொழிற்சாலைக்கு அனுப்பிப் போதுமான பயிற்சி பெற வைத்தார் ராஜா.

தொழிற்சாலைக்குரிய பணியாளர்களைத் தேர்வு செய்கின்ற போது, நிலம் அளித்த கிராமப் புறத்துப் பெரு மக்களின் குடும்பங் களிலிருந்து பலரைத் தேர்வு செய்து, அப்பகுதி மக்களுக்கு கணிசமான அளவில் வேலை வாய்ப்பளித்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

*1961* ஆம் ஆண்டு, தமிழ் நாட்டின் தொழில் துறை வரலாற்றில், என்றென்றும் நினைக்கத் தக்க சிறப்பான ஆண்டாகும். அந்த ஆண்டில்தான் பெருந் தொழிலான சிமிண்ட் உற்பத்தியின் நான்காவது நிறுவனமாய் தமிழகத்தில் 'மெட்ராஸ் சிமெண்ட்ஸ்' தோற்றம் பெற்றது. நாட்டின் விடுதலைக்குப் பின்னர், தமிழ் நாட்டில் உருவான இரண்டாவது சிமிண்ட் ஆலையாகவும்,



மெட்ராஸ் சிமெண்ட்ஸ் ஆலைத்தோற்றம்

வறட்சி மிகுந்த இராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு கோடி ரூபாய் முதலீட்டில் உருவாக்கம் பெற்ற முதற் பெருந் தொழிலாகவும் 'மெட்ராஸ் சிமெண்ட்ஸ்' விளங்குகின்றது.

*22.1.1961* இல் அன்றையத் தமிழக முதலமைச்சர் காமராஜின் ஆற்றல் மிக்கக் கரங்களால் மெட்ராஸ் சிமெண்ட்ஸ் நிறுவனத்தின் சூளை ஒளியூட்டப் பெற்றது. *7.4.1961* ஆம் நாள் அப் பெரியாரின் திருக்கரங்களாலேயே உற்பத்தியையும் தொடங்கி வைக்கப்பெற்றது. அன்றையத் தொழில் அமைச்சராக விளங்கிய ஆர். வெங்கட்ராமன் தொடக்க விழாவிற்குத் தலைமை ஏற்றுச் சிறப்பித்தார். பி.ஏ.சி.ஆர், தமது உள்ளார்ந்த, உணர்ச்சி மிக்க வார்த்தைகளால் இருவருக்கும் நன்றி மாலை அணிவித்து மகிழ்ந்தார். முதலமைச்சரும், தொழில் அமைச்சரும் ராஜாவின் அயர்வறியா ஆக்க பூர்வமான உழைப்பையும், மக்களுக்கு வேலை



பி.ஏ.சி.ஆர். முதலமைச்சர் காமராஜரை வரவேற்றல்

வாய்ப்பை வழங்கி, வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் ராஜாவின் மனமார்ந்த ஆர்வத்தையும் பாராட்டித் தங்கள் உரைகளால் ராஜாவிற்குப் புகழ்மாலை சூட்டினர்.

முதலீடு செய்யும் பங்குதாரர்களே நிறுவனத்தின் உண்மையான முதலாளிகள் எனக்கருதும் இயல்பினைப் பெற்றவரல்லவா பெருந்தகை பி.ஏ.சி.ஆர்? தம்மை 'தர்மகர்த்தா' என்றே எண்ணிச் செயல்பட்டவரல்லவா அப் பெருமகனார்! **1957** ஆம் ஆண்டே பங்குத் தொகை அளித்தவர்கள், தொழிற்சாலையின் தொடக்க ஆண்டாகிய **1961** ஆம் ஆண்டு வரை எவ்விதமான வருமானத் தையும், தமது முதலீட்டுத் தொகையின் வழியே பெற்றுக்



தொழிலமைச்சர் ஆர்.வி. வரவேற்கப்படுகிறார்

கொள்ளாது இருந்து வருவது அப் பெருமகனாரின் உள்ளத்துள் வருத்த உணர்வை நிறைத்து வந்தது. குறைந்தது, பங்குதாரர்களுக்கு மூலதனத்திலிருந்து மூன்று சத விகித வட்டியாவது வழங்க வேண்டுமென அப் பெருமகனாரின் பேருள்ளம் உறுதி பூண்டது. ஆனால் நிறுவன விதிகளில் அப்படி வழங்குவதற்கான வழிவகை இல்லை. என்ன செய்தார் தெரியுமா? விதிகளை வேண்டுமென்றே மாற்றியமைத்து, மத்திய அரசை அனுமதிக்குச் சிறப்பாக வேண்டி, அனுமதியும் பெற்றார். பங்குதாரர்களுக்கு வட்டி வழங்கி மன அமைதியும் பெற்றார்.

பங்குதாரர்களை மதித்துப் போற்றுவது போலவே, உற்பத்திப் பொருளை உரிய விலை கொடுத்து வாங்கி உபயோகிக்கும்



பி.ஏ.சி.ஆர். வரவேற்புரையாற்றுகிறார்




முதலமைச்சர் காமராஜர் ஆலையைத் திறந்து வைக்கிறார்



ஆர்.வி. தலைமையுரையாற்றுகிறார்



முதலமைச்சர் காமராஜர் சிறப்புரையாற்றுகிறார்

நுகர்வோர் (CONSUMERS) நலத்தையும் பேணிக்காக்கும் பெரு மனம் கொண்டவர் பி.ஏ.சி.ஆர். அதனால்தான் முதன் முதலில் மெட்ராஸ் சிமெண்ட்ஸ் தொழிற்சாலையிலிருந்து, சிமெண்டை வெளியே அனுப்புகிறபோது, ராஜா, 'சீப் கெமிஸ்ட் கே. நரசிம்மனை'த் திரும்பத் திரும்பத் 'தரம் எப்படி?' 'குறையிருக் காதே?' 'நல்லா இருக்குமா?' என மீண்டும், மீண்டும் கேட்டுக் கொண்டே இருந்தாராம்! தொழில்துறையில் நாணயம், தரம் ஆகிய இரண்டும் பேணப்பெற்றால்தான் தொழிலை



ஸ்கோடா நிறுவன பிரதிநிதி வாழ்த்துரை வழங்குகிறார்

நடத்துபவருக்கும், தொழிலுக்கும் பெருமை. இல்லாவிடில் தொழில் உள போல இல்லாகிக் கெடும் என்பதில் பி.ஏ.சி.ஆர். அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்தார். எனவேதான் அப் பெருமகனார் தொடங்கிய அனைத்துத் தொழில்களுக்கும் நாணயம், தரம் ஆகிய இரண்டையும் தோரண வாயில்களாக அமைத்தார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், தொடங்கி வைத்த ஆறாவது நிறுவனமான மெட்ராஸ் சிமெண்ட்ஸ் பேராலையை, அப்



திருப்பதி வேங்கடாசலபதிப் பெருமானுக்கு முதல் சிமெண்ட் மூட்டை அர்ப்பணிக்கப்படுகிறது



திருக்கோயில்கள் சார்பில் ராஜாவுக்குச் சிறப்புச் செய்தல்



பி.ஆர்.ஆர். நன்றியுரையாற்றுகிறார்

பெருமகனார் மறைவுக்குப் பின்னர், அப் பெருந்தகையின் திருக்குமாரர் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜா விரிவாக்கம் செய்து, இந்திய நாட்டில்மட்டுமல்லாது, ஆசியாக் கண்டத்தி லேயே பல்வேறு சிறப்பிற்குரிய புகழார்ந்த நிறுவனமாக உயர்வுபெற வைத்துள்ளார். இராமசுப்பிரமணிய ராஜாவின் சிமிண்ட் ஆலை விரிவாக்க முயற்சிகளுக்கெல்லாம் பி.ஏ.சி.ஆரின் மருமகனார் எஸ்.எஸ். இராமச்சந்திர ராஜா உறு துணையாக அமைந்து பேருதவி புரிந்துள்ளார்.

* * *

# 25

## நட்புக்கோர் உதாரணமும் நன்றிக்கோர் உதவியும்

தஞ்சை மாவட்டத்தின் புகழார்ந்த நிலக்கிழார்களில் ஒருவர் கே. திருவேங்கட முதலியார். பண்பாடும், பரந்த நோக்கமும் கொண்ட பெருமகனார் அவர். பழகுதற்கு இனிய அன்பினர். அப் பெருமகனாரை மெட்ராஸ் சிமெண்ட்ஸ் நிறுவனத்திற்குப் பங்குத்தொகை சேர்க்கும் முயற்சியின் போது, 1958 ஆம் ஆண்டில் பி.ஏ.சி.ஆர், சந்திக்கும் வாய்ப்புப் பெற்றார்.

முதற் சந்திப்பிலேயே பி.ஏ.சி.ஆரின் தோற்றப் பொலிவும், திருமுகத்தில் மிளிரும் தெய்வீகக்களையும் திருவேங்கட முதலியாரைப் பெரிதும் கவர்ந்தன. முதலியாரின் உள்ளார்ந்த இனிய அன்பும், உரையாடிக் கொண்டிருந்த போது காட்டிய உயரிய பண்பாட்டுணர்வும் ராஜாவை அவரிடம் பிரியம் கொள்ள வைத்தன. எனவே 'நட்பாம் கிழமை' அவர்களுக்கிடையே தழைக்கத் தொடங்கியது.

பார்த்தபோதெல்லாம் ஒருவரை ஒருவர் உள்ளன்புடன் நேசித்ததால், அப் பெருமக்களுக்கிடையே உருவாகிய நட்புறவு வளர்பிறை ஆயிற்று. உயர்ந்த நூல்களைப் படிக்கப் படிக்க அவைகளின் நயமும், நற்கருத்துகளும் ஒவ்வொரு முறையும் புதிய புதிய வகையில் விளக்கமுறுவதுபோல, அவர்களுக்கிடையே ஏற்பட்ட தொடர்பு, பழகப்பழக நெருக்கத்தையும், நிலைத்த தன்மையையும் உருவாக்கியது.

உடுக்கை இழந்தவன் கைபோல உதவுகின்ற இயல்பு நட்புக்கு உண்டல்லவா? செல்வமும், செல்வாக்குமிக்க திருவேங்கட முதலியார், பி.ஏ.சி.ஆரின் பங்குத்தொகை சேர்க்கும் முயற்சிக்கு

பெருந் துணையாகி உதவினார். முதலியார், பங்குத் தொகை முதலீட்டுக்குக் கணிசமான அளவில் முதலீடு செய்ததோடு, தம் உறவினர்களையும், நண்பர்களையும் பங்குத்தொகை வழங்குமாறு செய்வித்தார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், மெட்ராஸ் சிமெண்ட்ஸ், நிறுவனத்தின் முதல் நிர்வாகக் குழுவில், ஓர் இயக்குநராக தஞ்சாவூர் திருவேங்கட முதலியாரை பொறுப்பு வகிக்கச் செய்தார். தமது அன்பர் களையும், தாம் மதிக்கும் ஆன்றோர்களையும் பி.ஏ.சி.ஆர், முதலியாருக்கு அறிமுகப்படுத்தி, தமது நேயத்திற்குரிய நண்பரென முதலியாரை அனைவரும் அறிந்து கொள்ளுமாறு செய்வித்தார்.

ஒரு முறை, திருவேங்கட முதலியாரிடம், தொழில்துறையில் மிகவும் பின்தங்கிய மாவட்டமாகத் திகழும் தஞ்சையில் தொழில்களை நிறுவி, மாவட்டத்தை உயர்த்தி, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திலும் பங்கு கொள்ள வேண்டிய அவசியத்தை ராஜா வலியுறுத்திச் சொன்னார்.

மரபுவழியாக விவசாயத்திலேயே நாட்டம் கொண்டிருந்த விவசாயக் குடும்பத்தைச் சார்ந்த முதலியார், தமக்குத் தொழில் துறை சம்பந்தமாகப் பாலபாடம் கூடத் தெரியாதென்றும், விவசாய வேலைகளிலேயே தலைமுறை தலைமுறையாக பங்கேற்று வரும் தஞ்சைப் பகுதியில் தொழில் துறையில் பணியாற்ற ஆட்கள் கிடைப்பது அரிதென்றும், தஞ்சாவூர் மாவட்டத்தில் தொழில் தொடங்குவது பொருத்தமாகத் தெரிய இல்லையே என்றும் தமது கருத்தை ராஜாவிடம் தெரிவித்தார்.

உரிய உதவிகள் அனைத்தையும் தாம் அளிப்பதாகவும், தஞ்சாவூரில் ஒரு நூற்பாலையைத் தொடங்கினால் அது வளர்ச்சியடைவதற்கு வாய்ப்பு இருக்கிறதென்றும் கூறிய பி.ஏ.சி.ஆர், திருவேங்கட முதலியாருக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்தார்.

மெட்ராஸ் சிமெண்ட்ஸ் தொழிற்சாலைப் பணிகள் மிகத் தீவிரமாக நடந்து கொண்டிருந்த கால கட்டத்தில், தமது நண்பர் திருவேங்கட முதலியாருக்குத் தஞ்சாவூரில் தொடங்க இருக்கும் நூற்பாலை சம்பந்தமாக ராஜா ஆலோசனைகளை அவ்வப்போது அளித்துக் கொண்டிருந்தார்.

1960 ஆம் ஆண்டின் ஒரு நன்னாளில் தஞ்சை மாவட்டத்துத் தில்லைவிளாகம் அருள்மிகு வீர கோதண்ட ராமசுவாமி திருக்கோயிலுக்கு வருகை தந்த பி.ஏ.சி.ஆர், வழிபாடு செய்து, உருவாக்கம் கொள்ள இருக்கும் நூற்பாலைக்கு இறைவன் சந்நிதியிலேயே பெயர் சூட்டி மகிழ்ந்தார். தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த தொழில் அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் ஆலோசனை அளித்தவாறு, "தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்" என நூற்பாலைக்கு ராஜா பெயரிட்டார்.

தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் உருவாக்கம் கொள்வதற்கான ஆயத்தப் பணிகளை ஆற்றுவதற்கு, தமது அலுவலர் எஸ். அர்ஜுன ராஜாவை தஞ்சாவூருக்கு ராஜா அனுப்பி வைத்தார். இராஜபாளையம் ஆலையில் பணியாற்றிக் கொண்டிருந்த அனுபவம் மிக்கவர் சிலரையும் அனுப்பிவைத்து, தமது நண்பர் முதலியாரின் தொழிற்சாலைப் பணிகள் சீராக நிறைவெய்த ராஜா துணை புரிந்தார். இராஜபாளையம் ஆலையின் மேலாளராகப் பொறுப்பு வகித்த எஸ். கந்தசாமி செட்டியாரையும் சில காலம் பணியாற்றுமாறு தஞ்சாவூருக்குப் பி.ஏ.சி.ஆர், அனுப்பி வைத்தார்.

தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் நிறுவனத்தில் தொழிலாளர்கள் சம்பந்தமான பணிகளாற்ற ராஜா, இராஜபாளையத்திலிருந்து தமது ஆலைத்தொழிலாளர் நல அதிகாரி எஸ்.என். சுப்பிரமணியத்தை அனுப்பி உதவினார்.

மெட்ராஸ் சிமெண்ட்ஸ் நிறுவனத்தைத் தொடங்கிய 1961 ஆம் ஆண்டிலேயே தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் நிறுவனத் தொடக்கப் பத்திரத்தில், தமது ராசியான தொழில்கரம் கொண்டு

கையொப்பமிட்ட பி.ஏ.சி.ஆர், அந் நிறுவனத்தின் முதல் பங்குதாரராக ஆனார்! தமது திருக்குமாரர் பி.ஆர்.ராமசுப்பிரமணிய ராஜாவையும், எஸ். அர்ஜுன ராஜாவையும் தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் நிறுவனத்தின் இயக்குநர்களாகப் பொறுப்பேற்றுப் பணியாற்றச் செய்தார்.

'பஞ்சில்லாத தஞ்சை மாவட்டத்தில், தொழில் நுட்பம் தெரியாத விவசாயிகளை வைத்துக் கொண்டு நூற்பாலையை நடத்துவது, அதற்காகப் பெரும் முதலீடு செய்வது, என்பனவெல்லாம் நடைமுறைக்கு ஒவ்வாதது' எனச் சிலர் முதலியாரைக் கலக்கமுறச் செய்த காலங்களிலெல்லாம், பெருந்தகை பி.ஏ.சி.ஆர், முதலியாருக்கு தொழில் நுணுக்கங்களையெல்லாம் எடுத் துரைத்துப்பயங்கொள்ளத் தேவையில்லையென ஊக்கப் படுத்தி, நம்பிக்கை ஒளியோடு அனுப்பி வைப்பார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் மறைவுக்குப் பின்னர், 1963 ஆம் ஆண்டில்தான் தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் உற்பத்தியைத் தொடங்கியது. அப்போதைய முதலமைச்சர் தலைவர் காமராஜ் நல்லாதரவுடனும், தொழில் அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் நல்லாசியுடனும் உற்பத்தியைத் தொடங்கிய நூற்பாலை, பி.ஏ.சி.ஆரின் எதிர்பார்ப்பை, ஆண்டு தோறும் ஏறுமுகம் கொண்டு இனிது நிறைவேற்றியது.

அதனை, பெருந்தகை பி.ஏ.சி.ஆர், சிலை திறப்பு விழா இராஜபாளையத்தில் 1971 ஆம் ஆண்டு நிகழ்ந்தபோது, திருவேங்கட முதலியார் ஒரு கட்டுரையாக வடித்து அனுப்பி இருந்தார். கட்டுரையின் ஒரிடத்தில் "அமரர் பி.ஏ.சி. இராமசாமி ராஜா எங்களுக்கு வழிகாட்டியாகவும், அறிவுரை கூறும் பெரியவராகவும் அமைந்து வலியுறுத்தி நூற்பாலையைத் தொடங்கிடச் செய்தார். அப் பெரியார் வழங்கிய ஆலோசனையால், இன்று தஞ்சை சுற்று வட்டாரமக்களில் பெரும் பாலோர் சந்தோஷமாக வாழ்ந்து வருகின்றனரென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்" எனக் குறிப்பிட்டி ருந்தார் திருவேங்கட முதலியார்.

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் பிரியத்திற்குரிய நண்பர் திருவேங்கட முதலியார் 1979 ஆம் ஆண்டில் காலமானார். ஆலையின் வருங்காலம் 'என்ன ஆகுமோ?' 'எவ்வாறு அமையுமோ?' எனப் பலர் அச்சம் கொண்டனர்.

முதலியாரின் மூத்த புதல்வர் கே.டி. இராமச்சந்திரன் நிர்வாகப் பொறுப்பை ஏற்றார். ஆலை தொடங்கிய காலத்தில், ராஜாவின் கருத்துக்கேற்ப, அப் பெருமகனாரின் திருக்குமாரர் பி.ஆர்.இராமசுப்பிரமணிய ராஜா இயக்குநராகப் பொறுப் பேற்றுத் தொடர்ந்து 18 ஆண்டுகள் அப் பொறுப்பில் இருந்து வந்தார். இயக்குநர் இராமசுப்பிரமணிய ராஜாவை, ஆலையின் நிர்வாகக் குழுத்தலைவராகப் பொறுப்பேற்கச் செய்தார் கே.டி.இராமச்சந்திரன்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜா, அப்பெருமகனாரின் ஆலோசனைகளாலும், அளப்பரிய பேருதவிகளாலும் தொடங்கப் பெற்ற தஞ்சாவூர் டெக்ஸ்டைல்ஸ் நிறுவனத்தின் நிர்வாகக் குழுத்தலைவராக 1979 ஆம் ஆண்டு முதல் பொறுப்பு வகித்து வருகிறார். ராஜாவின் நம்பிக்கை ஆலையில் ஆண்டுதோறும் நடைமுறையாகி வருகின்றது.

" செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு" எனும் திருவள்ளுவரின் திருவாக்கை, பெருந்தகை பி.ஏ.சி.ஆர், கொண்டிருந்த அரிய நட்பு, உரிய உதாரணமாக அமைந்து, மெய்ப்பித்தது !



# 26

## பெருந்தகையின் பெரும் பிரிவும் பீடுடைய பெரு வாழ்வும்

பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் துணைவியார் சேதுராமம்மாளுக்கு உடல்நலம் மருத்துவர்களால் பேண வேண்டிய நிலை உருவானது. சிறிது காலமாக அம்மையார் தேக செள கரியமில்லாது இருந்து வந்தார். சென்னையில் ஒரு நல்ல டாக்டரிடம் காண்பித்து, தமது துணைவியாரின் தேக நலத்தைப் பேணச் செய்ய வேண்டுமெனக் கருதினார் ராஜா. எனவே துணைவியாருடன், குடும்பத்தில் உதவிக் குச் சிலரையும் அழைத்துக் கொண்டு, சென்னைக்குப் புறப்பட்டார் பி.ஏ.சி.ஆர்.

தீவிர சிகிச்சைக்குப் பின்னர், சேதுராமம்மாளின் தேக சௌகரியம் ஒருவாறு இயல்பான நிலைக்கு வந்தது.

சென்னைக்கு வந்தது முதலாகவே, ராஜாவின் உடல் நிலை நாளுக்கு நாள் பழுதடைந்து வந்து கொண்டிருந்தது. அவ்வப்போது உரிய மருத்துவங்கள் பார்க்கப்பட்டு வந்தன. எனினும் ஒரு நாள் தேக நிலை கவலைக்கிடமாகப் போனது. அந்தக் காலத்தில் இன்றைய நிலையைப் போலத் தனியார் மருத்துவமனைகள் மருத்துவ வசதி நிறைந்தவையாக இருக்கவில்லை. எனவே மிகுந்த மருத்துவ வசதிகள் அமைந்த அரசினர் மருத்துவ மனையான, 'ஜி.ஹெச்'சில் ராஜாவைச் சேர்த்தனர்.

பி.ஏ.சி.ஆரின் உடல்நிலை பற்றி அறிந்த அன்றை முதலமைச்சர் தலைவர் காமராஜ், அமைச்சர் ஆர். வெங்கட்ராமனுடன் மருத்துவ மனைக்கு வருகை தந்து, ராஜாவின் தேக நிலைபற்றி அறிந்து கொண்டதுடன், டாக்டர்களை அழைத்து ராஜாவுக்கு

உடனுக்குடன் உரிய மருத்துவங்கள் செய்வதோடு, தமக்கும் அவைபற்றி நாள்தோறும் செய்தி தெரிவிக்குமாறு அறிவுறுத்திச் சென்றார். சிருங்கேரி மகாசந்நிதானம் சிறப்புப் பூசனைகள் செய்து, திருவருட்பிரசாதம் அனுப்பி வைத்திருந்தார்கள். குருஜி சின்மயானந்தா நேராக மருத்துவ மனைக்கே வந்து, நல்லாசி வழங்கினார்கள். தொழில் அதிபர்கள், பல்வேறு துறைகளைச் சார்ந்த பிரமுகர்கள், பி.ஏ.சி.ஆரின் தொழிலகங்கள், பள்ளிகள் ஆகியவற்றில் பணியாற்றும் அலுவலர்கள், இராஜபாளையத்திலிருந்து அனைத்து சமூகங்களையும் சார்ந்த சமூகத் தலைவர்கள், உறவினர்கள், நண்பர்கள்.... என நாள்தோறும் 'ஜி.ஹெச்'சில் பெருங்கூட்டம் பெருகி வந்து கொண்டே இருந்தது. சாதாரண மனிதனிலிருந்து, சரித்திரத்தை உருவாக்கும் தலைவர்கள் வரை, நோய்வாய்ப்பட்ட ஒருவரை, சோகமான முகபாவத்துடன் வந்து பார்த்துச் செல்லும் அபூர்வ நிகழ்ச்சியை, அன்றாடம் கண்டு டாக்டர்கள் பிரமித்து வியந்தனர் !

தம்மீது அன்பு கொண்டு, நாள்தோறும் சோக உணர்வுடன் பாசமும் வாஞ்சையும் மிளிர வந்து பார்த்துச் செல்லும் பெருமக்களின் நேயம் மிகுந்த நெஞ்சங்களை எண்ணிப் பி.ஏ.சி.ஆர் பெரிதும் நெகிழ்ந்தார்.

அருளாளர்களின் நல்லாசிகளாலும், பெருமக்களின் பிரார்த்தனைகளாலும் சிரத்தை மிக்க மருத்துவர்களின் தீவிரமான சிகிச்சைகளாலும், பி.ஏ.சி.ஆரின் உடல்நலம் நாளுக்கு நாள் நன்னிலை பெற்று, ஓரளவு ஆரோக்கியமான தேக சௌகரியம் பெற்றார் அப் பெருமகனார்.

அந்த ஆரோக்கிய நிலை நெடு நாள் நீடிக்கவில்லை. மீண்டும் அப் பெருமகனாரின் உடல்நலம் குன்றியது, உணவு உட்கொள்ள இயலாத அளவு, நாளுக்கு நாள் தேக நிலை நலியத் தொடங்கியது.

படுக்கையில் படுத்தவாறே, தமது பிரியத்திற்குரிய பேத்தியும், தமது திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜாவின் துணைவியாருமாகிய சுதர்சனம் அம்மையாரை, ஆதிசங்கரபகவத்

பாதர் அருளியுள்ள தட்சிணாமூர்த்தி அஷ்டகத்தை அடிக்கடி பாராயணம் செய்யச்சொல்லி, பக்தி பூர்வமாகச் செவிப்படுத்திக் கொண்டே இருப்பார் அப் பெருந்தகை. சுதர்சனம் அம்மையாரிடம் அப் பெருமகனார் காட்டிய அன்பும், பாசமும் வாஞ்சையும் அளவிடற்கரியவை. உணவு உட்கொள்ள முடியாத நிலை உருவானபோது, வேறு எவர் கொடுத்தாலும் தலையசைத்து வேண்டாமென ஒதுக்கித் தள்ளி விடுவார் ராஜா; ஆனால் சுதர்சனம் அம்மையார், உணவை அளிக்கும்போது, வேண்டா மென ஒதுக்கிவிட அப் பெருமகனாருக்கு மனம் வருவதில்லை. மிகுந்த கஷ்டத்துடன் உணவை விழுங்கி விட்டு, தமது பேத்தியைப் பார்த்துப் புன்னகைப்பார் அப் பெருந்தகை.

சென்னைக்குத் தமது மனைவியின் உடல் நலத்தைப் பேணுவதற்காக 1962 ஆம் ஆண்டில்தான் அப் பெருமகனார் குடும்பத்துடன் புறப்பட்டுச் சென்றார். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, தமது திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜாவிடம் குடும்பச் செய்திகள், தொழில்துறைத் தகவல்கள், தொடர்புடைய பெருமக்களைப் பற்றிய விவரங்கள் ஆகியவற்றைச் சிரத்தையோடு தெரிவிக்கத் தொடங்கி விட்டார் ராஜா. தமது தந்தையார், இத்தனை தகவல்களை எதற்காக இப்படி தெரிவித்துக் கொண்டே இருக்கிறார்களெனச் சில நேரங்களில் இராமசுப்பிரமணிய ராஜா எண்ணிப் பார்த்தது உண்டாம் ! தீர்க்கதரிசனத்துடன் திட்டமிட்டுச் செயற்படும் ராஜா, எந்த முடிவையும் முன்கூட்டியே தெளிவாக அறிந்து கொள்ளும் அபூர்வ சக்தியைத் தெய்வானுகூலத்தாலும், திறம்மிகு சித்தத்தாலும் பெற்றிருந்தார். எனவே தமது முடிவையும் அப்பெருமகனார் தீர்க்க தரிசனத்துடன் கணிக்கவும், கண்டு கொள்ளவும் செய்திருக்கலாம்? இல்லையா? ஆகவே தான் ராஜா, தமது வழித் தோன்றலுக்கு வழி உணர்த்தும் கடப்பாட்டை, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னமேயே தொடங்கியிருக்கலாம்! யார் கண்டார்கள் ? இறைவன் ஒருவனே அறிவான்.

**3-9-1962** ஆம் நாளின் முன்னிரவு நேரம், ராஜா 'ஜி.ஹெச்'சில் படுக்கையில் அமைதியாகப் படுத்திருக்கிறார். நெருக்கமான உறவினர்கள் அறையில் நிறைந்திருக்கின்றனர். சுதர்சனம் அம்மையார், தட்சிணாமூர்த்தி அஷ்டகத்தின் ஒரு முக்கியமான சுலோகத்தைப் பாராயணம் செய்து கொண்டிருக்கிறார்.

"மூவுலகிற்கும் ஆசானாகி, ஆல விருட்சத்தின் அடியில் பூமியில் வீற்றிருந்து, சகல முனிவர்களுக்கும் ஞானத்தை வழங்குவதுடன், பிறப்பு இறப்புகளினால் உருவாகும் கவலைகளை, கஷ்டங்களை நீக்கி விடுகின்ற பெருமானே ! தென்முகக் கடவுளே ! உன்னை நான் வணங்குகின்றேன்"

இந்தச் சுலோகத்தைப் படிக்கின்றபோது, பக்தி ஒளிரும் முக பாவத்துடன் சற்றே கண்களைத் திறந்து, சுதர்சனம் அம்மையாரைப் பார்த்துப் புன்னகைக்கிறார் பி.ஏ.சி.ஆர் ! அடுத்த கணம் கண்கள் மூடிக்கொள்கின்றன. தட்சிணாமூர்த்தி அஷ்டகத்தைப் பாராயணம் செய்த பின்னர், அம்மையார் 'மானச விலாச'த்தையும் படித்து நிறைவு செய்கிறார்.

தமது திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜாவை, அருகில் அழைக்கிறார் பி.ஏ.சி.ஆர். அனைவரையும் சற்றே, அறையை விட்டு வெளியே இருக்குமாறு வேண்டச் சொல்கிறார் ராஜா. ராஜாவின் துணைவியார் சேதுராமம்மாள், பேத்தி சுதர்சனம் அம்மையார் உட்பட அறையிலிருந்த அனைவரும் வெளியேறுகின்றனர். !

தந்தையும், தனயனும் மட்டுமே அந்த அறையில் ! பி.ஏ.சி.ஆரின் படுக்கைக்கு அருகே, இராமசுப்பிரமணிய ராஜா நின்று கொண்டிருக்கிறார். ஏதோ முக்கியமான குடும்ப விஷயம் சொல்லப் போகிறார்கள் தமது தந்தையார் என எண்ணியவாறே, ராஜாவை உன்னிப்பாக நோக்கிக் கொண்டிருக்கிறார் இராமசுப்பிரமணிய ராஜா.

தமது திருக்குமாரரை ஊன்றி நோக்கி உதடுகளைப் பிரித்தார் பி.ஏ.சி.ஆர். "ஆரோக்கியமாகி விடுவேன்னு எனக்கு நம்பிக்கை

இல்லே... எல்லாத்தையும் பார்த்துக்கோ... குடும்பத்தை நல்லா கவனிச்சுக்குவாய்... மெட்ராஸ் சிமெண்ட்சுக்கு நிறையப் பேருட்டே ஷேர் வாங்கியிருக்கேன்.. அவங்கெல்லாம் கடுமையான உழைப்பாலே சம்பாதிச்ச பணத்தை என்மேலே உள்ள நம்பிக்கையாலே கொடுத்திருக்காங்க... இன்னும் நாம அவங்களுக்கு டிவிடெண்ட் கொடுக்கலை... சீக்கிரம் கொடுத்தாகனும்.... பொதுவா.... பங்குதாரர்களை எப்போதும் மனசிலே கொண்டு, அவங்களுக்கு நன்மை செய்யறதே கடமையா, கருத்தா நீ நினைக்கோனும்......" எனக்கூறி கண்களை மூடினார் அப் பெருமகனார். அதன்பின் கண்க ளைத் திறக்கவே இல்லை! ஆவி பிரிந்தது! ஆத்மா பரம்பொருளின் திருவடிப் பேற்றை அடைந்தது!.

அறையிலிருந்து வெளியேறிய அனைவரும் ஓடோடி வந்தனர். உள்ளம் நெக்குருக, அப் பெருந்தகையின் உடலைப் பார்த்துப் பார்த்து விம்மினர்; தேம்பினர்; கண்கள் அருவிகளாய்க் கொட்டின!

செய்தி முதலமைச்சருக்கு எட்டியது! 'அஞ்சா நெஞ்சம் கொண்டவர்' எனப் பெயர்பெற்ற முதலமைச்சர் காமராஜ் கவலையோடும், கரங்களில் மாலையோடும் வந்து சேர்ந்தார். கண்கள் பனிக்க, இராமசுப்பிரமணிய ராஜாவுக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும் காமராஜ் மிகுந்த வருத்தத்துடன் ஆறுதல் கூறினார். பெருமகனாரின் பெருமைக்குரிய திருமேனியை இராஜபாளையம் கொண்டு செல்வதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்துவிட்டு புறப்பட்டுப் போனார்.

ராஜாவின் மறைவுச் செய்தி இராஜபாளையத்தை அடைந்ததும், நகரம் திகைத்து நின்றது! நகர மக்கள் சொல்ல முடியாத சோகத்தில் ஆழ்ந்து போயினர். சாலையெங்கும், தெருவெங்கும் ராஜாவின் மறைவுச் செய்தி சந்திக்கும் மக்களின் இதய துக்கமாக எங்கும் பரவியது. கடைகள் அடைக்கப்பட்டன; தொழிற்சாலைகள் நின்று போயின! நகரை வளம் கொழிக்கும் தொழிற்களமாய்

வடிவப்படுத்திய பெருந்தகையின் திருவுருவப்படங்கள் மாலைகள் அணிவித்துச் சாலைகளின் இரு புறமும் வைக்கப்பெற்று, வணங்கப் பெற்றன. அந்த இரவு நகரத்தின் பல பகுதிகள் முழுமையாக உறங்கவில்லை!.

மறுநாள் பொழுது புலரும் முன்னரே, நகரத்தின் தொழிற்தந்தை, நாற்பது ஆண்டுகளுக்கு மேல் இராஜபாளையம் நகரை ஓர் அன்னையைப் போல் அரவனைத்துக் காத்த அறச்செல்வர், அனைத்து சமூகங்களும் மதிக்கத் தக்க மரியாதைக்குரிய நடுவர், பொது நன்மைகளுக்குத் தமது அரிய நேரங்களை அர்ப்பணித்த புண்ணியசீலர், அருளாளர்களை வரவேற்று நகரில் ஆன்மீக மணம் கமழச்செய்த அருள் மனச்செம்மல் பெருந்தகை பி.ஏ.சி.ஆர் வாழ்ந்த ராமமந்திரம் மாளிகைக்கு முன்னே மக்கள் பெருவாரியாகத் திரண்டு நின்றனர்.

பெருந்தகையின் திருமேனி இராஜபாளையம் வந்தடைந்து, ராம மந்திரம் மாளிகையில், பொது மக்களின் தரிசனத்திற்காக வைக்கப் பெற்றது.

சோகத்துடனும், தாகத்துடனும் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் திருமேனியைக் கண்ட மக்கள், பெரிதும் துயர் அடைந்தனர். மரியாதை தெரிவிக்கவும், மலர் மாலைகள் அணிவிக்கவும் வரிசை, வரிசையாக நின்று, மக்கள் பெருந்தகையின் திருமேனியைத் தரிசித்தனர்.

பள்ளிக்கூடங்கள் பூட்டப்பட்டன! தொழிற்சாலைகள் மூடப் பட்டன! கடைகள் அடைக்கப்பட்டன! உள்ளத்தால், உணர்வால் இராஜபாளையம் பகுதியை உயர்த்துவதைத் தமது வாழ்வின் நோக்கமாகக் கொண்டு வாழ்ந்த பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் திருமேனி, அலங்கரிக்கப்பட்ட ஊர்தியில், திரளான மக்களின் கவலை தோய்ந்த முகங்களுக்கிடையே எடுத்துச் செல்லப்பட்டது. வெளியூர்களிலிருந்து வந்திருந்த தொழில் அதிபர்கள், பிரமுகர்கள் இறுதி ஊர்வலத்தில் பங்கேற்றனர்.

இராஜபாளையம் நகரின் கிழக்கே, சஞ்சீவி மலையின் அடிவாரத்தில் பெருந்தகையின் திருச்சடலம் வைக்கப்பெற்று, அப் பெருந்தகையின் ஒரே திருக்குமாரர் இராம சுப்பிரமணிய ராஜாவால் எரியூட்டப் பெற்றது. பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் பூத உடல் பஞ்ச பூதங்களோடு ஒன்றியது! புகழ் உடலோ மானுட நெஞ்சங்களில் ஒளிரியது; ஒளிருகின்றது; என்றென்றும் ஒளிரும்! எனவே அப் பெருந்தகை மரணமிலாப் பெருவாழ்வு பெற்றார்.

*மரணமே !*
*பட்டமரம் வெட்டுண்டால் பரவாயில்லை;*
*பாதத்தில் தைக்கின்ற முள்வளர்க்கும்*
*நெட்டைமரம் வீழ்ந்திட்டால் கவலையில்லை;*
*நிழல் நாடி நிற்போர்க்கு மயக்கம் நல்கும்*
*கெட்டமரம்-நச்சுமரம் நிலத்தில் வெட்டிக்*
*கிடந்திட்டால் வருத்தமில்லை; ஆனால் உன்கை*
*தொட்டமரம் நல்ல மரம்-கனிபழுத்துத்*
*தொங்கிக் கொண்டிருந்தமரம்; வீழ்த்தலாமா?*

*சாவே !*
*மானுடத்தை அளிப்பதென்றன் வேலை என்று*
*மனப்பால் நீ குடிக்காதே ! வேண்டுமானால்*
*ஊனுடலை அழித்திடலாம்; உடல் இயக்கும்*
*உயிர்மூச்சை நிறுத்திடலாம்; ஆனால் என்றும்*
*வானுலகு வரைபரவும் பெருமை நீரை*
*வற்ற வைக்க முடியாது ! கருணை மன்னர்*
*தேன்புகழைக் கீர்த்தியினைச் சாவே, உன்னால்*
*தீண்டிவிட முடியாது தெரிந்துகொள் நீ*

–கவிஞர் மீரா

* * *

# 27

## தந்தை மகற்கு ஆற்றிய நன்மையும் மகன் தந்தைக்கு ஆற்றிய தன்மையும்

இளம் வயதிலேயே பெருந் தொழில்களின் நிர்வாகப் பொறுப்பை ஏற்க வேண்டிய காலத்தின் கட்டாயம் இராம சுப்பிரமணிய ராஜாவுக்கு ஏற்பட்டுவிட்டது! தமது தந்தையார் இவ்வளவு சீக்கிரமாகக் காலமாவார்களென இராம சுப்பிரமணிய ராஜா சற்றும் எண்ணவுமில்லை; எதிர் பார்க்கவுமில்லை. பெருந்தகையின் பேரிழப்பு நிகழ்ந்த போது, இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு இருபத்தேழு வயதுதான் ஆகியிருந்தது. பி.ஏ.சி.ஆரின் ஆளுமைக்குரிய அனைத்துத் தொழில்களின் நுணுக்கங்களை ஒருவாறு அறிந்து கொள்ள, இராமசுப்பிரமணிய ராஜா தமது தந்தையாருடன் நெருங்கி இருந்த காலம் ஐந்தே ஆண்டுகள் தான்! என்றாலும் தமது தந்தையார் உணர்த்தியிருந்த உயர்ந்த வழியில், அழுத்தமாகக் கால் பதித்து, உள்ளார்ந்து வழங்கியிருந்த நல்லாசியை உறுதுணையாக அமைத்துக் கொண்டு, எல்லாவற்றையும் இனிதே நிர்வகித்துவிடலாமென்ற வல்லாண்மை, இராமசுப்பிரமணிய ராஜாவின் உள்ளத்தில் நல்லாண்மையாக உருக்கொண்டது !

உலகத்தில் மனிதன் எத்தனையோ பேறுகளைப் பெறுகின்றான். மனிதன் பெறுகின்ற பேறுகளிலெல்லாம் பெரும் பேறு ஒன்று உண்டு. அது வேறொன்றுமல்ல; அறிவறிந்த மக்கட்பேறுதான் அது ! அறிய வேண்டியவைகளை எல்லாம் ஆர்வத்தோடு அறிந்து கொண்ட ஒரு மகனைப் பெறுவதென்பது உலகத்தில் ஒப்புயர்வற்ற உயர்ந்த பெரும் பேறாகும்! மகனைப் பெற்ற எல்லாத் தந்தையர்களுக்கும் அத்தகைய பேறு அமைவதுமில்லை; கிடைப்பதுமில்லை. ஒரு சிலருக்கே அது வாய்க்கிறது! அமைகிறது! அந்த வாய்ப்பும், அமைவும் “தம்தம் வினையான் வரும்”



பி.ஏ.சி.ஆருடன் திருக்குமாரர் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா

என்கிறார் திருவள்ளுவர். நல்வினைப் பயன் காரணமாகவே நன்மகன் பிறக்கும் வாய்ப்புக் கிட்டுகிறதெனத் திருவள்ளுவர் நம்புகிறார்; உறுதியாக உரைக்கவும் செய்கிறார்.



பி.ஆர்.ஆர்.

பெருந்தகை ராஜாவின் நல்வினைப் பயனால் பெறுதற்கரிய நன்மகனாய், அறிவறிந்த புதல்வனாய் அப்பெருமகனாருக்கு இராமசுப்பிரமணிய ராஜா ஒரே திருக்குமாரராகப் பிறந்தா ரென்பது ஆழ்ந்து சிந்திக்கும்போது தெளிவு பெறும். 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்னும் உள்ளப்பாங்கு கொண்ட ஒரு மகனைப் பெறுவதென்பது, அதுவும் செல்வச் செழுமை கொண்ட உயர்ந்த குடியிலே அமைவதென்பது 'இலட்சத்துக்கு ஒன்று', 'கோடிக்கு ஒன்று' எனப் பொருந்துவது தான் நடைமுறை. தமது தந்தையார் சொல்வதையெல்லாம், சில நேரங்களில் சற்று கடினமாக இருந்தால்கூட, 'நம்முடைய நன்மைக்காகத்தான் சொல்கிறார்கள்' என இளமை முதலாகவே எண்ணி, அமைதி கொள்ளும் இதயப் பாங்கைப் பெற்றபேறு, பி.ஏ.சி.ஆர், பெற்ற பேறுகளிலெல்லாம் பெரும் பேறாகும்! தந்தையாரிடம் பாசமும், அன்பும் கொண்டிருந்ததோடு, தமது வாழ்க்கைக்கு வழி காட்ட வந்த தனித் தெய்வமாகவே அப் பெருமகனாரைக் கருதிய இராம சுப்பிரமணிய ராஜா, தந்தையாரிடம் பக்தியும், மரியாதையும் செலுத்தி வந்தார். இத்தகைய அறிவறிந்த தமது திருக்குமாரரை,

எந்த அவையிலும் முந்தியிருக்கச் செய்ய வேண்டுமெனக் கருதி, குழந்தைப் பருவம் முதலாகவே ஒரு குறிக்கோளுடன் பேணி வளர்த்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

மரபு வழியாக ஒரு விவசாயக் குடும்பத்தில்தான் பி.ஏ.சி.ஆர் பிறந்தார். ஒரு சில காலம் வணிகத் துறையில் கவனம் செலுத் தினாலும், தமது வாழ்க்கையின் பெரும் பகுதியைத் தொழில் களைத் தொடங்குவதிலும், வளர்ப்பதிலுமே அப் பெருமகனார் அர்ப்பணித்து, தமிழ் நாட்டின் தலைசிறந்த தொழிலதிபராகப் பெரும் புகழ் பெற்றார். ஆக்கமும், நோக்கமும் 'அரிய குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டதால், அப் பெருந்தகை தொடங்கிய தொழில்களெல்லாம் தழைத்துச் செழித்தன. தளர்வறியாது நாளும் உயர்ந்து ஓங்கின. ஒரு மனித வாழ்க்கையில் வியப்பிற்குரிய சாதனையை நிகழ்த்திய வித்தகப் பெருந்தகை பி.ஏ.சி.ஆர், செல்வச் செழுமை. கொண்ட தொழில் அதிபராகத் தம்மை வளர்த்துக் கொண்டாலும், அப் பெருமகனார் ஒரு விவசாயியின் திருமகனாரே அல்லவா? தமது ஒரே திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு ஒரு தொழில் அதிபரின் புதல்வர் எனும் தகுதியையும், பல்வேறு தொழில்களை நிர்வகிக்கும் ஆளுமையையும், செல்வச் செழுமையையும், ராஜா வழங்கியமை 'தந்தை மகற்காற்றும் நன்றி' தான் ! தந்தை மகனுக்கு அளித்த நன்மைதான்! என்றாலும் அப் பெருமகனார், அறிவறிந்த தம் புதல்வரை, இளமை முதலாகவே பேணி வளர்த்து, ஒரு தலைமைக்குரிய குணப்பண்புகள் அமையுமாறு வடிவப்படுத்தி, சிந்தனை வளமும், செயல் நலமும் மிக்கத் திறம் கொண்ட தொழில் அதிபராய் மக்கள் மதிக்கத் தக்க தகுதியை அளித்தாரே, அந்தத் தகுதிதான் அப் பெருந்தகை தமது திருக்குமாரருக்கு வழங்கிய செல்வங்களிலெல்லாம் தலை சிறந்த செல்வம்! அப் பெருமகனார் தமது திருமகனாருக்கு அளித்த நன்மை களிலெல்லாம் அரிய நன்மை!

பெருந்தகைக்குப் பின்னர், ராம்கோ தொழில் நிறுவனங்களின் சேர்மனாகப் பொறுப்பேற்ற இளைஞர் இராம சுப்பிரமணிய

ராஜாவின் நோக்கும், போக்கும் இரண்டு ஆண்டுகளுக்கு உள்ளாகவே, நகர மக்கள் மதிக்கத்தக்க மரியாதைக்குரியவராய் அவரை விளங்கச் செய்தன. மக்கள், பிரியத்துடனும் பெரு மதிப்புடனும் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜாவை 'பி.ஆர்.ஆர்' எனக் குறிப்பிடத் தொடங்கினர். அந்த இளம் வயதிலேயே, பி.ஏ.சி.ஆரிடம் பொருந்தி நின்ற பெருங் குணப்பண்புகள் பி.ஆர்.ஆரிடம் இணைந்திருப்பதைக் கண்டு, சிலர் வியந்து போயினர். குடும்ப கௌரவத்தையும், தொழில் துறை வளர்ச்சி யையும் இரு கண்களாகப் போற்றிய பி.ஆர்.ஆர், தந்தையாரைப் போலவே பொதுநலக் காரியங்களில் ஆர்வம் கொண்டு செயலாற்றத் தொடங்கினார்.

கல்வித்துறையில் தமது தந்தையாரின் நீண்ட காலக் கனவை, நனவாக்கும் முயற்சியில், தலைவர் காமராஜரின் நல்லாசியுடன் ஈடுபட்டார் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜா. தொழிற் கல்விக் கூடம் ஒன்றைப் பெருந்தகை பி.ஏ.சி.ஆர், இராஜாபாளையத்தில் தொடங்க விருப்பங் கொண்டிருந்தார். அந்த விருப்பத்தை தந்தையார் மறைந்த மறு ஆண்டில் 1963 ஆம் ஆண்டிலேயே நிறைவேற்றி விட்ட பி.ஆர்.ஆர், தமது தந்தையின் பெயரிட்டு 'பி.ஏ.சி. இராமசாமி ராஜா பாலிடெக்னிக்' என அந்தத் தொழிற் கூடத்தை அழைக்கச் செய்தார்.

கல்விக்கூடங்களை நிர்மாணிக்கும் பணியில் இராமசுப்பிரமணிய ராஜாவுக்கு 'என்.ஆர்.கே' என அன்புடன் அழைக்கப்பெற்ற, பி.ஏ.சி. ஆரின் மருமகனாரான என்.ஆர். கிருஷ்ணம ராஜா மிகுந்த உதவியாக அமைந்தார்.

சிமிண்ட் தொழிலைத் தொடங்குவதற்கு முன்னர், பி.ஏ.சி.ஆர், ஒரு ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனத்தைத் தொடங்குவதில் ஆர்வம் கொண்டு, அந்த முயற்சியில் சில காலம் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார்.

ஆஸ்பெஸ்டாஸ் தொழிற்சாலைக்கு அடிப்படையான ஒரு மூலப்பொருள் கல்நார், ஃபைபர் (FIBER) இந்தியாவில் அந்த மூலப்

பொருள் தொழிலுக்கு ஏற்ற தரத்தில் போதுமான அளவு இல்லாததால், அதனை வெளிநாடுகளிலிருந்து வரவழைத்தாக வேண்டும். பி.ஏ.சி.ஆர், பல நாடுகளுக்கும் ஃபைபர் அனுப்ப இயலுமா என வினவிக் கடிதங்கள் எழுதினார்.

அப்போது ரஷ்யாவில் விஜயலட்சுமி பண்டிட் இந்தியத் தூதுவராக இருந்தார். அந்த அம்மையாருக்குக்கூட, அங்கு ஃபைபர் கிடைக்கு மாவென பி.ஏ.சி.ஆர் எழுதிக் கேட்டார்.

அந்தக் காலத்தில் ஆங்கிலேயர் கம்பெனி ஒன்று ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் உற்பத்தி செய்து கொண்டிருந்தது. அந்தக் கம்பெனியிலிருந்து ஃபைபர் தயாராகும் நாடுகள் அனைத்திற்கும், வேறு எவருக்கும் இந்திய நாட்டுக்கு அந்த மூலப்பொருளை அனுப்பி வைக்கக் கூடாதென வலியுறுத்தித் தெரிவித்ததால் ஃபைபர் அனுப்ப எந்த நாடும் இசையவில்லை. எனவே அந்த முயற்சியைக் கைவிட்டார் ராஜா.

ராஜாவின் எந்த முயற்சியும் வெற்றி பெறாமல் போன தில்லையே? அப்பெருமகனார் வாழ்ந்த காலத்தில் அம் முயற்சி உருவாக்கம் பெறவில்லையே தவிர, அப்பெருந்தகையின் திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜா, தமது தந்தையாரின் முயற்சியை வெற்றி பெற வைக்கும் வாய்ப்புத் தானாகவே வந்து சேர்ந்தது.

தொழில் அமைச்சராக வீற்றிருந்த ஆர். வெங்கட்ராமன், பி.ஆர்.ஆர்.ஆரை அழைத்து, "ராஜா இருந்தபோதே, ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனம் ஆரம்பிக்க விரும்பினார். இப்போது தமிழ்நாட்டுக்கு ஒரு ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனம் தொடங்கு வதற்கான லைசென்சை இந்திய அரசாங்கம் வழங்கி உள்ளது. அதை உங்களுக்கு இப்போது கொடுக்கிறோம். நீங்கள், உங்கள் தந்தையாரின் விருப்பத்தை, நிறைவேற்றுங்கள்" என்றார்.

நன்றியோடும், மகிழ்ச்சியோடும் உரிமத்தைப் பெற்றுக்கொண்ட பி.ஆர்.ஆர். அரக்கோணத்தில் 60 ஏக்கர் நிலப் பரப்பில் ரூ.58

லட்சம் முதலீட்டில் 'சதர்ன் ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்' என்ற பெயரில் 1967 ஆம் ஆண்டில் நிறுவனம் உற்பத்தியைத் தொடங்குமாறு செய்வித்தார். ஆஸ்பெஸ்டாஸ் நிறுவன உருவாக்கங்களுக்குப் பி.ஏ.சி. ஆரின் பேரன்பைப் பெற்றிருந்த எஸ். அர்ஜுன ராஜா பெரிதும் உதவியாக அமைந்தார். ஆஸ்பெஸ்டாஸ் தகடு உற்பத்தியில் நிபுணரான எஸ். கணபதியை ஆலை நிர்மாணப் பொறுப்பு வகிக்க செய்தார். தமது தந்தையாரின் விருப்பத்தை நிறைவேற்றிய உணர்வில் நெகிழ்ந்து மகிழ்ந்தார் இராமசுப்பிரமணிய ராஜா. அரக்கோணம் ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனத்தின் சிறப்பான வெற்றி, அந்நிறுவனத்தை மேலும் விரிவாக்கம் செய்ய உதவியது. மாநிலம் கடந்தும் தொழிலை விஸ்தரிக்கத் துணையாகவும், தூண்டுகோலாகவும் அமைந்தது.



அரக்கோணம் ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனம்

கர்நாடக மாநிலத்தில் கரூர் என்னும் இடத்தில் 1974 ஆம் ஆண்டிலும், மத்திய பிரதேச மாநிலத்தில் மக்ஸியில் 1983 ஆம் ஆண்டிலும் இருபெரும் ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனங்கள் உருவாக்கம் பெற்றன. 5 மீட்டர் நீளமும், 1000 மில்லி மீட்டர் விட்டமும் உள்ள ஆஸ்பெஸ்டாஸ் சிமிண்ட் குழாய்களை இந்தியாவில் முதன் முதலாக மக்ஸியில் தயாரித்து ராம்கோ தொழில் நிறுவனம் தனிப்பெருமை பெற்றது. ஆஸ்பெஸ்டாஸ் குழாய்கள் உற்பத்தி நிறுவனம் மக்ஸியில் 1983 ஆம் ஆண்டு உருவாக்கம் பெற்றது. அதைத் தொடர்ந்து 1987 இல் ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் உற்பத்தி செய்யும் நிறுவனம் நிறுவப்பெற்றது.



கர்நாடகம் கரூரில் உள்ள ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனம்

பி.ஏ.சி.ஆரின் பிரியத்திற்குரிய பேரரும் பி.ஆர்.ஆரின் பாசத்திற்குரிய புதல்வருமாகிய பி.ஆர். வெங்கட்ராம ராஜாவின் நுட்பமான மேற்பார்வையில் 1989 ஆம் ஆண்டு சென்னைக்கு அருகே 'ராம்கோ சிஸ்டம்' என்ற எலக்ட்ரானிக் நிறுவனம் தொடங்கப் பெற்றுள்ளது.

முதன்முதலாக இராஜபாளையத்தில், தென் மாநிலங்களிலேயே இடம் பெறாத நவீன நூற்பாலைகள் ஸ்ரீராம்கோ ஸ்பின்னர்ஸ்', 'இராஜபாளையம் ஸ்பின்டெக்ஸ்ட்' என்னும் இரண்டையும்



மத்திய பிரதேஷ் மக்ஸியில் உள்ள ஆஸ்பெஸ்டாஸ் நிறுவனம்



ராம்கோ சிஸ்டம்

பி.ஆர்.ஆர். மிகுந்த ஊக்கத்தோடும், உற்சாகத்தோடும் 1990 ஆம் ஆண்டில் தொடங்கினார். ஒரே ஆண்டில் கட்டிடங்கள் அமைத்து, இயந்திரங்களை நிர்மாணித்து இந் நிறுவனங்களில் உற்பத்தியைத் தொடங்கியது அரிய சாதனை! அதிசயமான கட்டுப்பாட்டுடன், அற்புதமான தரத்துடன், அபூர்வமான இயந்திர சாதனங்களைக் கொண்டு இந்த ஆலைகளில் உற்பத்தி யாகும் கோம்ப்டு (COMBED) லைப் பத்து ஆண்டுகளுக்குக் கட்டாயமாக வெளிநாட்டுக்குத்தான் ஏற்றுமதி செய்தாக

வேண்டு. உள்நாட்டில் விற்பனை செய்யக் கூடாது. சிக்கலான விதிமுறைகளை ஏற்றுக் கொள்வதற்காக அரசாங்கம் சில சலுகைகளை வழங்கியுள்ளது. இறக்குமதி வரி இல்லை; வருமான வரி கிடையாது. எனினும் இத்துறையில் இறங்கிடப் பல தொழில்



நூறு சதவிகித ஏற்றுமதி நூற்பாலை

அதிபர்கள் அச்சம் கொண்டிருந்தபோது, பி.ஆர்.ஆர், தமது தந்தையாரின் போதனைகளையும், சாதனைகளையும் மனதில் கொண்டு, இத்தொழில் நிறுவனங் களைத் தொடங்கினார். ஜப்பான் நாட்டு இயந்திர நுட்பத்தாலும், உதவியாலும் நிறுவப்பெற்ற இந்நிறுவனங்களின் உற்பத்தி முழுவதும் ஜப்பானுக்கே ஏற்றுமதி செய்யப் பெறுகின்றன!

இராஜபாளையத்தில் ஸ்ரீ விஷ்ணு சங்கர் ஆலையும், எலும்பு முறிவு சிகிச்சைக்குப் பயன்படுத்தப்படும் பாண்டேஜ் தயாரிக்கும் ஆர்த்தோபிக்ஸ் இந்தியா லிமிடெட் நிறுவனமும் 1981 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றன. இந்நிறுவனத்திற்கு ஸ்விட்சர்லாந் திலிருந்தது இயந்திரங்கள் வரவழைக்கப் பெற்றன.

ராம்கோ தொழில் குடும்பத்தின் முதல் பிரஜை இராஜபாளையம் ஆலைதான்! தோரண வாயில் அமைத்துக் கொடுத்த தொழில்

நிறுவனம்! அந்த ஆலையில்தான் தமது அருமைத் திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜாவை முதன் முதலாக, தாம் காலமாவதற்கு நான்கு ஆண்டுகளுக்கு முன்னர், தொழில் துறையில் பொறுப்பேற்கச் செய்தார் பி.ஏ.சி.ஆர்.

பி.ஆர்.ஆர் பொறுப்பேற்ற பின், இராஜபாளையம் ஆலையின் வளர்ச்சி விவேகத்துடன் கூடிய வேகம் அடைந்தது. நவீன இரந்திரங்களை நிர்மாணித்து உற்பத்தியில் பெருக்கத்தையும், தரத்தில் உயர்வையும் நிலைப்படுத்துவதின் மூலமே, ஆலையில் பொருளாதாரச் செழுமையை நிலை நாட்ட முடியுமென்ற நெடுநோக்குடன் பி.ஆர்.ஆர், ஆலையின் அனைத்துப் பிரிவு களையும் பத்துக்கோடி ரூபாய் முதலீட்டில் நவீன மயமாக்கினார். எனவேதான் ஆலை தொடங்கப் பெற்று ஐம்பத்தாறு ஆண்டுகளுக்குப் பின்னரும், இராஜபாளையம் மில்ஸ் இளமைப் பொலிவுடன் வீறு நடை போட்டு வருகின்றது! விற்பனை முறையில் மாற்றம், தொழில் உறவில் இணக்கம், நிர்வாக அமைப்பில் புதிய மாற்றம் ஆகிய அவசிய நடைமுறைகளைப் புகுத்தி, பி.ஆர், இராமசுப்பிரமணிய ராஜா, ராம்கோவின் முதல் நிறுவனத்தை தமது தந்தையார் கண்ட முதற் பெருந் தொழிலை ஆரோக்கியமாக வளர்த்து வருகின்றார். எனவேதான் ஆலையைத் தொடங்கிய முதல் ஆண்டில், ஏறத்தாழ மூன்று இலட்ச ரூபாய்க்கு விற்பனையான ல் வணிகம், இன்றைய நிலையில் விற்பனை 50 கோடி ரூபாயையும் கடந்துள்ளது! ஆகவே பங்குதாரர்களுக்கு இடையீடின்றி எல்லா ஆண்டுகளும் டிவிடெண்ட் வழங்கப் பெற்று, 24 போனஸ் பங்குகளும் அளித்து, ஆலைகளின் வரலாற்றில் அதிசயிக்கத்தக்க ஓர் அத்தியாயத்தை இராஜபாளையம் ஆலை பெற்றுத் திகழ்கிறது.

தமிழ்நாட்டில் வறட்சியும், வறுமையும் மிகுந்த மாவட்டமாகிய இராமநாதபுரத்தின் ஓர் ஓரத்தில் பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் சிந்தையில் நின்று, செயலாக்கத்தில் உருவான இராஜபாளையம் ஆலையின் மகத்துவம்-மாநிலம் கடந்து ஆந்திரா, கர்நாடகம், மத்திய பிரதேசம் ஆகிய மாநிலங்களிலும்,

தமிழ்நாட்டிலும் பதினாறு பல்வேறு ஆலைகளையும், ஆறாயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்களையும், பல்லாயிரக் கணக்கான பங்குதாரர்களையும், ஏறத்தாழ 300 கோடி ஆஸ்திகளையும் இமயமாய் வளர்த்துக் கங்கையாய்ப் பெருக்கி ராம்கோ தொழில் நிறுவனத்திற்கு வழங்கியுள்ள வரலாறு நினைக்கத் தக்கது. இராஜபாளையம் ஆலை பெற்றுத்தந்த பிள்ளைகளைப் பேணிக் காப்பதுடன், அன்னையின் ஆரோக்கியத்திலும் பி.ஆர்.ஆர். அதிகக் கவனம் கொண்டுள்ளார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், தமது வாழ்வில் நிறைவாகத் தொடங்கி வைத்த மெட்ராஸ் சிமெண்ட்ஸ் நிறுவனத்தின் நேரடியான நிர்வாகப் பொறுப்பை, ராஜா காலமான பின்னர் பி.ஆர்.ஆர். ஏற்றார். தமது தந்தையார் பங்குதாரர்களிடம் கொண்டிருந்த எல்லையற்ற மதிப்பையும், ஆவி பிரியும் நேரத்திலே கூட அவர்களைப் பற்றிய சிந்தனையில் தம்மிடம் தெரிவித்த விருப்பத்தையும் உள்ளத்தில் கொண்டு நிறுவனத்தின் இயக்கத்தை பி.ஆர்.ஆர், தமது ஆளுமையில் வழிநடத்தத் தொடங்கினார்.

பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் அளித்தாக வேண்டுமென்ற உறுதியை மேற்கொண்ட பி.ஆர்.ஆர், நிறுவனத்தின் தொடக்கத்தில் அதிகப்படியான தேய்மானத் தொகையை ஒதுக்குவதால், டிவிடெண்ட் கொடுக்க வழிவகை செய்ய இயலவில்லையென்பதை அறிந்தார். எனவே சட்டப்படி, இயக்குநர்களின் அனுமதியோடு மெட்ராஸ் சிமிண்ட்ஸ் வரவு செலவு கணக்கில் ஒரு புதிய முறையைப் புகுத்தினார். நேர்கோட்டு நியதி (STRAIGHT LINE METHOD) என்ற முறையைக் கையாண்டு பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் வழங்க, உரிய ஏற்பாட்டை உள்ளார்ந்து செய்தார் பி.ஆர்.ஆர். இந்திய நாட்டின் தென் பகுதியில் இந்த நியதியை முதன் முதலில் நடைமுறைப் படுத்திய நிறுவனம் மெட்ராஸ் சிமிண்ட்ஸ்தான்! 1962 ஆம் ஆண்டிலேயே இந்நியதியை நடைமுறைப்படுத்தியது குறிப்பிடத் தக்கது!.

நாளொன்றுக்கு 200 டன் சிமெண்ட் உற்பத்தியைத் தொடங்கிய மெட்ராஸ் சிமெண்ட்ஸ், 1963 ஆம் ஆண்டில் 600 டன் உற்பத்தியைப் பெருக்குமாறு உரிய இயந்திரங்கள் பொருத்தப் பெற்று, 1964 ஆம் ஆண்டில் உற்பத்தியைத் தொடங்கியது. முதற் கட்ட உற்பத்தி தொடங்கியதிலிருந்து நான்கு ஆண்டுகளுக்குள் தமது தந்தையாரின் இதயமார்ந்த இறுதி விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் பங்குதாரர்களுக்கு பத்து சதவிகிதம் டிவிடெண்ட் வழங்கி, மன அமைதி பெற்றார் பி.ஆர்.ஆர். சாதாரணமாக சிமெண்ட் ஆலைகள், பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் வழங்கும் காலத்தைக் கணக்கில் கொண்டு கருதிப் பார்க்கையில், நான்கு ஆண்டுகள் என்பது மிக மிகக் குறுகிய காலமே என்பதால், பங்குதாரர்கள் மிகுந்த மனநிறைவு கொண்டனர்.

'வெட் பிராசஸ்' முறையில் சிமிண்ட் தயாரிக்க நிறுவப்பட்ட மெட்ராஸ் சிமெண்ட்ஸ், உலர் முறையில் நாளொன்றுக்கு 1200 டன் உற்பத்தி செய்ய, ஏறத்தாழ 14 கோடி ரூபாய் செலவில் நவீனமாக விரிவாக்கம் செய்யப்பெற்று, 1977 ஆம் ஆண்டில் உற்பத்தியைத் தொடங்கியது. காலத்திற்கேற்ற முறையில் தொழில்



நவீனமயமான மெட்ராஸ் சிமிண்ட்ஸ் ஆலை
ராமசாமி ராஜா நகர்

நுட்பங்களை புதுப்பிக்கும் முயற்சியில் இராமசுப்பிரமணிய ராஜா பெரிதும் ஈடுபாடு காட்டினார். 1985 ஆம் ஆண்டில் சிமெண்ட் அறவையில் மிகவும் நவீனமான காம்பிடான் சிமெண்ட் ஆலை



ஜெயந்திபுரம் சிமிண்ட் பேராலை

5.5 கோடி செலவில் அமைக்கப் பெற்றது. எல்லாவற்றிற்கும் மேலாக, சுற்றுப்புறச் சூழலைக் கெடுத்துவிடாத சிமெண்ட் தயாரிப்பை உருவாக்கம் செய்த இயந்திர அமைப்புகள் உன்னதமானவை.

தொடர்ந்து உற்பத்தியைப் பெருக்கும் நோக்கத்தில், ஆந்திர மாநிலம் கிருஷ்ணா மாவட்டத்தைச் சார்ந்த ஜெயந்திபுரத்தில் கணிசமான அளவில் சுண்ணாம்புக்கல் வளமும், ஆலை அமைப்பதற்குரிய அனைத்து வசதிகளும் இருப்பதால், அங்கு புதிய ஓர் ஆலையை 100 கோடி ரூபாய் முதலீட்டில், மீண்டும் பங்குதாரர்களிடம் பங்கினைப் பெறாமலேயே 1986 ஆம் ஆண்டு தொடங்கினார் பி.ஆர்.ஆர். ஜெயந்திபுரம் ஆலைத் திட்டம் மிக விரைவாக நிறைவேறியதற்கு, பெருந்தகையின் பேரரும்,

இராமசுப்பிரமணிய ராஜாவின் ஒரே புதல்வரும், கெமிகல் இன்ஜினியரிங் பி.டெக். பட்டம் பெற்று, அமெரிக்காவில் நிர்வாக இயல் பட்டமும் பெற்ற பி.ஆர். வெங்கட்ராம ராஜா ஆர்வத்துடன் தீவிரமாக அமைப்புப் பணியில் ஈடுபட்டது அடிப்படையான காரணமாகும். இந்திய நாடு இருபத்தோராவது ற்றாண்டில் அடியெடுத்து வைக்கின்ற கால கட்டத்தில் மெட்ராஸ் சிமெண்ட்ஸ், உலகத்தின் மிக நவீன தொழில் நுட்பத்தை ஜெயந்திபுரம் ஆலையில் நிர்மாணித்திருப்பது, ராம்கோ நிறுவனம் நாட்டின் பொருளாதாரச் செழுமைக்குத் தோள் கொடுத்து உதவும் தொழில் நிறுவனமாக அமைந்திருப்பதை தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

இன்றைய நிலையில், நாளொன்றுக்கு 5000 டன்னுக்கு மேல் சிமெண்ட் உற்பத்தி செய்யும் 'ராம்கோ' சிமெண்ட்ஸ் பேராலை, ஆசியாக் கண்டத்திலேயே புகழுக்குரிய தொழில் நிறுவனமாகப் பெருமை பெற்றுள்ளது !

மெட்ராஸ் சிமெண்ட்ஸ், வேறு துறைகளிலும் அதன் செயற்பாட்டை விரிவாக்கம் செய்வதின் வழியே, அதன் வளர்ச்சிக்குச் செழுமை ஊட்டும் நோக்கத்துடன், மரபு சாரா எரி சக்தித் துறையில் (NON CONVENTIONAL ENERGY) பிரவேசித்துள்ள முயற்சி குறிப்பிடத்தக்கது.

ஏறத்தாழ 50 கோடி முதலீட்டில் ஐம்பது காற்றாலைகளை (WIND MILLS) நிறுவத் திட்டமிட்டு, கன்னியாகுமரி மாவட்டத்தின் 'முப்பந்தல்' என்னும் இடத்தில், காற்றாலைகள் இயங்கத் தொடங்கியுள்ளன! ஆசியாவிலேயே இத்துறையில் பெரும் முதலீட்டில் மெட்ராஸ் சிமெண்ட்ஸ் நிறுவனம் ஈடுபட்டிருக்கும் அருமை, அந்த நிறுவனத்திற்குரிய தனிப்பெருமை.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், பெருந் தொழிலதிபராக மட்டும் திகழ இல்லை, பொது நன்மைகளில் ஆர்வம் கொண்டு, மக்களின் நல் வாழ்வுக்காகத் தொண்டாற்றி அனைத்துச் சமூகங்களின் மதிப்பிற்குரிய மக்கள் தலைவராகவும் விளங்கினார் அல்லவா?

அத்தகைய மக்கள் நலக் குறிக்கோளை, தமது தந்தையார் பின்பற்றிய வழித் தடத்திலேயே, நடைபயின்று நடை முறைப்படுத்தி வருகிற பி.ஆர்.ஆர், மரியாதைக்குரிய பொது நலத் தலைவராய்த் தம்மை இனம் காட்டிக் கொண்டது மகன் தந்தைக்காற்றும் உதவியே என மனம் கொள்ளலாம். பெருந்தகை, தலைமைப் பொறுப்பை, நகரின் பல்வேறு மக்கள் நல அமைப்புகளில் வகித்து, உரிய சேவைகளை உவந்து செய்து வந்த வரலாற்றை அறிவோம். அப் பெருமகனார் சார்ந்திருந்து தொண்டாற்றிய அனைத்து அமைப்புகளிலும் தலைமைச் சிறப்பைப் பெற்றுள்ள இராமசுப்பிரமணிய ராஜா, பல்கிப் பெருகியுள்ள பல்வேறு தொழில் நிறுவனங்களின் நிர்வாகப் பொறுப்பிற்கிடையே மக்கள் நல அமைப்புகளின் வளர்ச்சியில் நாட்டம் கொண்டு, பணியாற்றி வருகின்ற பாங்கு, அவர்தம் தந்தையாரை மக்களுக்கு நினைவூட்டுவதாகவே அமைந்து வருகின்றது.

இறையுணர்வில் எந்த நேரமும் திளைந்திருந்த பி.ஏ.சி.ஆரின் இயல்பான குணப்பண்பை, அப் பெருமகனாரது திருக்குமாரர் இராமசுப்பிரமணிய ராஜா முழுமையாகப் பெற்றிருப்பதோடு, ஆன்மீகத் திருப்பணிகளில் அளப்பரிய ஆர்வம் கொண்டுள்ள பி.ஆர்.ஆர், இறைத்தொண்டு ஆற்றுவதை வாழ்வின் இன்றியமையாச் சேவையாக ஏற்றுப்போற்றி வருகிற தன்மை, உண்மையாகவே மகன் தந்தைக்காற்றும் நன்றியாகவே கருதலாந்தானே? அருளாளர்களை, சாதுக்களை, மகா சந்நிதானங்களை வரவேற்று வழிபடும் பழக்கத்தை பி.ஏ.சி.ஆர், தமது வாழ்வில் கடைப்பிடித்து வந்தார். அப் பெருமகனாரது திருக்குமாரரோ, அருளாளர்களையும், மகா சந்நிதானங்களையும் ராம மந்திரத்திற்கே அழைத்து வந்து வழிபட்டு, பெருந்தகை உருவாக்கிய பேரெழில் கொண்ட ராம மந்திரத்தைப் புனிதர் களின் திருப்பாதங்கள் உலாவிய புண்ணியத் திருமாளிகையாகத் திகழ வைத்துள்ளார்.

மதுரை ஹார்வி மில்லின் நிர்வாக இயக்குநராக இருந்த சர் ஜேம்ஸ் டோக் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் பிரியத்திற்குரிய



பெருமகனாரும், திருக்குமாரரும் தர்மபுரம் சந்நிதானத்துடன்

நண்பராகத் திகழ்ந்தவர். பி.ஏ.சி.ஆர், மறைந்த மறு ஆண்டு, ஜேம்ஸ் டோக், இராமசுப்பிரமணிய ராஜாவை ஹார்வி நிறுவனத்தைச் சார்ந்த பாண்டியன் இன்சூரன்ஸ் கம்பெனியின் இயக்குநராக நியமித்தார். தமது நண்பர் பி.ஏ.சி.ஆரின் நினைவாக, அப் பெருமகனாரை நினைத்து ஜேம்ஸ் டோக் இந்த நியமனத்தைச் செய்திருக்கலாம். எனினும் தகுதிக்குரிய தனயனாக பி.ஆர்.ஆர், விளங்கியிருந்தால்ததானே இத்தகைய பெரும் பொறுப்பை, ஜேம்ஸ் டோக் அளிக்க முடியும்? எத்தனை பெரிய தொழில்களைத் தொடங்கியிருப்பினும், பி.ஆர்.ஆர், தம் தகுதியைப் பிறர் மதிப்பதாய் உயர்த்திக் கொண்ட பெருஞ்செயல், தந்தைக்கு ஒரு மகன் ஆற்றும் கடப்பாட்டில் தலையாயது அல்லவா? அதனால்தான் இருபத்தொன்பது வயதேயான இளைஞர் இராமசுப்பிரமணிய ராஜாவை, அரசாங்கம் தொழில் முதலீட்டுக் கழகத்தில் ஓர் இயக்குநராக நியமித்தது. அக் கழகத்தின் இயக்குநர்களில் வயதில் குறைவானவர் இராமசுப்பிரமணிய ராஜாவே !



சிருங்கேரி மகாசந்நிதானம் பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவுக்கு 'குருபக்தமணி' பட்டமளித்துச் சிறப்பித்தல்

அதனால்தான் பி.ஏ.சி.ஆரிடம் பேரன்பு கொண்டிருந்த சிருங்கேரி மகாசந்நிதானம் ஸ்ரீஸ்ரீ அபிநவ வித்தியா தீர்த்த மகா சுவாமிகள், பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜாவை சிருங்கேரிக்கு வரவழைத்து, அவர்தம் பக்திநெறியைப் பாராட்டும் வகையில் 'குருபக்தமணி' எனப் பட்டமளித்து 1974 ஆம் ஆண்டு சிறப்புச் செய்தார்கள்.

'தங்கள் தந்தையார் பெருந்தகை பி.ஏ.சி.ஆரை நினைக்கும் போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது?' இப்படியொரு வினாவை எழுப்பினோம்.

பி.ஆர்.ஆர். சொன்னார் : "அவர்களை நினைக்கும்போதெல்லாம் நன்றாக, நேர்மையாக நடந்து கொள்ள வேண்டுமென்ற நினைப்புத்தான் தோன்றுகிறது! எந்தக் காரியம் செய்தாலும், நேர்மையாகச் செய்யணும். அதில் ஒரு வேளை வெற்றி பெறவில்லையானால், அதற்காக ஒரு சிறிதும் சங்கடப்படக் கூடாது!"

இத்தகைய தூய்மையான எண்ணத்தை மகனிடம் உருவாக்கியது தந்தை மகனுக்குச் செய்த தலையாய நன்மை! அந்தத் தூய எண்ணத்தை மகன் கொண்டிருப்பது மகன் தந்தைக்குச் செய்யும் உயர்ந்த தன்மை! இல்லையா?

"சூரியன் மறைகிறபோது, தன் தேஜஸை எல்லாம் அக்னியில் வைத்துச் செல்லும்" என ஆதிகவி வால்மீகி ஒரு சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், மறைந்த போது, தமது பெருங்குணப் பண்புகளை எல்லாம், தம் குமாரர் இராமசுப்பிரமணிய ராஜாவிடம் நிறைத்துச் சென்றுவிட்டாரென்றே நினைக்கத் தோன்றுகிறது ! பாரத புண்ணிய பூமியில் 'அப்பா-மகன்' எப்படியிருக்க வேண்டுமென இலக்கிய நெறிகள் எதிர்பார்க்கின்றனவோ அப்படியே இருந்த 'அபூர்வ சேர்க்கை' இது !

* * *

## 28

# மரபின் பெருமையும் உறவின் அருமையும்

ஆந்திர நாட்டின் கிருஷ்ணா, கோதாவரி, விசாகப்பட்டினம் ஆகிய மாவட்டங்களில் ராஜுக்கள் சமூகத்தினர் வாழ்ந்து வருகின்றனர். பெரும் நிலக்கிழார்களாகப் பெருமையுடன் வாழ்ந்து வரும் ராஜு சமூகத்தினர், தெலுங்குக் கலை இலக்கியப் பண்பாட்டின் செழுமைக்குச் சிறந்த பணியாற்றி உள்ளனர்.

ராஜுக்கள் சமூகத்தில் பூசப்பாடி மரபினர் புகழார்ந்த சரித்திரத்தைப் பெற்றுள்ள போற்றற்குரிய பெருமக்களாவர். விஜயவாடா என்னும் நகரை உருவாக்கியவர் பூசப்பாடி மரபைச் சார்ந்த மாதவராஜு என்னும் மன்னராவார். ஆளுமையும், மன்னர்களுடன் நெருங்கிய தோழமையும் கொண்டிருந்த பூசப்பாடி மரபினர், மன்னர்களோடு திருமண உறவுகளும் வைத்துக்கொண்டுள்ளனர். ஒரிசாவின் கலிங்க கஜபதி மன்னரின் ஒரு மகளை மாமன்னர் கிருஷ்ண தேவராயர் மணம் புரிந்திருக்கிறார். மற்றொரு மகளை பூசப்பாடி ராசி ராஜூ வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொண்டிருக்கிறார்.

மாமன்னர் கிருஷ்ண தேவராயரின் மனத்திற்கினிய நண்பர் பூசப்பாடி சிவராமராஜு, இப் பெருமகனாரின் சந்ததியினரான அப்பல ராஜு, சின்னைய ராஜு, கிருஷ்ணம ராஜு, கோபால ராஜு ஆகியோர் இராஜபாளையத்தை உருவாக்கியதாக ஒரு செய்தி உண்டு.

பூசப்பாடி ஆனந்த கஜபதி (*1850 - 1897*) பெருமைக்குரிய விஜய நகர சமஸ்த்தானத்தின் பேரரசர் ஆவார். ரிக் வேதத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பதிப்பித்த பேரறிஞர் மாக்ஸ்

முல்லர், ஆனந்த கஜபதியின் அன்பிற்கும், மரியாதைக்கும் உரிய நண்பராகத் திகழ்ந்தார். தமது பதிப்பிற்கு, ஆனந்த கஜபதி மன்னர் அளித்த உதவியையும், ஒத்துழைப்பையும் எண்ணிப் பார்த்து, பேரறிஞர் மாக்ஸ் முல்லர் மிகுந்த நன்றிப்பெருக்குடன் தமது பதிப்பை 'ஆனந்த கஜபதி எடிசன்' என்றே குறிப்பிட்டுப் பதிப்பித்து வெளியிட்டு மகிழ்ந்தார். தெலுங்குமொழியின் பாரதியாகப் போற்றப் பெறும் 'குரஜாட அப்பா ராவ்' எனும் மகாகவியை மன்னர் பூசப்பாடி ஆனந்த கஜபதி ஆதரித்துப் பெருமைப்படுத்தி இருக்கிறார். எனவேதான் மகாகவி குரஜாட அப்பா ராவ் தமது மாபெரும் நாடக நூலான 'கன்யாசுல்கம்' படைப்பை மன்னர் ஆனந்த கஜபதிக்கு அர்ப்பணம் செய்துள்ளார்.

ஆந்திர நாட்டின் வரலாற்றில் அந்நிய ஆட்சியை எதிர்த்த 'பொப்பிலி யுத்தம்' நிகரிலாப் பெருமை பெற்ற நெகிழ்ச்சி ஊட்டும் ஓர் அரிய நிகழ்ச்சி ! தமிழ்நாட்டின் கட்டபொம்மன் நிகழ்த்திய பாஞ்சாலங்குறிச்சிப் போரைப் போல, மக்கள் மனத்தில் என்றென்றும் நினைவாய்ப் பதிந்தது; நெடிய புகழ் கொண்டது; தெலுங்கு இலக்கியத்தில் நின்று, நிலைத்த தகுதி பெற்றது! 1756 ஆம் ஆண்டு நிகழ்ந்த அந்தப் போரை நடத்திய நாயகர் வீரத் திருவிளக்கு பூசப்பாடி விஜயராம ராஜு ஆவார் !

இந்திய நாட்டை வலிமைப்படுத்தவும், ஒரு பெரும் திருநாடாக வடிவுப்படுத்தவும், சர்தார் பட்டேல் சமஸ்தான இணைப்பு முயற்சியில் இறங்கியபோது, விஜயநகர மன்னராக வீற்றிருந்த பி.வி.ஜி. ராஜு, முதன் முதலாக அந்த முயற்சிக்கு இசைவு தந்து, தமது சமஸ்தானத்தை இந்திய நாட்டுடன் இணைத்துப் புகழ் பெற்றார். பி.வி.ஜி. ராஜு பூசப்பாடி மரபினரென்பது குறிப்பிடத் தக்கது.

அந்தப் பெருமைக்குரிய மரபினரின் ஒரு கிளையினர் தான் ஐநூறு ஆண்டுகளுக்கு முன் இராஜபாளையத்தை உருவாக்கினரெனச் செய்தி இருந்தும், ஆந்திர நாட்டு ராஜுக்களுக்கும், தமிழ்நாட்டு ராஜுக்களுக்கும் நெடுங்காலமாகத் தொடர்பு இல்லாமலே போய்விட்டது. போக்குவரத்து வசதிகள் அந்தக் காலத்தில்

இல்லாமல் இருந்ததாலும், மனிதன் 'நடை' ஒன்றையே போக்கு வரத்துக்கு நம்பியிருந்ததாலும் கிளைத்துத் தழைக்க வேண்டிய தொடர்பு, மறைந்தும் மறந்தும் போய் விட்டது.

ஆந்திர நாட்டைச் சேர்ந்த காக்கிநாடாவில் 1921 ஆம் ஆண்டு காந்தி மகாத்மா தலைமையில் காங்கிரஸ் மகாசபை நடந்தது. அந்த மாநாட்டிற்கு இராஜபாளையத்திலிருந்து பி.எஸ். சின்னவெங்கட்ட ராஜா முதலிய சிலர் சென்றிருந்தனர். தமிழ்நாட்டைச் சேர்ந்த அப் பெருமக்கள், தெலுங்கில் உரையாடிக் கொண்டிருந்ததை வியந்து கவனித்தார் சிந்தலபாடி பாபி ராஜு. அற மனச்செம்மலும், உயர் பண்பாளரும், பெரும் நிலக்கிழாருமாகிய பாபி ராஜு தெலுங்கில் உரையாடிக் கொண்டிருந்தவர்களை நெருங்கி விசாரித்தார். தமிழ்நாட்டின் இராஜபாளையத்தில், தமது மரபினர் வாழ்ந்து வருவதையறிந்து மகிழ்ந்தார்.

"பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள" எனும் திருவள்ளுவரின் திருவாக்கு, உணர்வின் வழி அங்கே உருவாக்கம் பெற்றது. ஒருவரை ஒருவர் மனமார்ந்து நேசித்தனர். இராஜபாளையத்திற்கு வர வேண்டும் என வேண்டிய அழைப்பை சிந்தலபாடி பாபி ராஜு பெரு மகிழ்ச்சியுடன் ஏற்றார். ஏற்றவாறே, சில நாள்களில் இராஜபாளையம் வருகை தந்து, தமது மரபினரின் மனமார்ந்த வரவேற்பையும், மகிழ்ந்து அளித்த விருந்தோம்பலையும் ஏற்று, சிந்தலபாடி பாபி ராஜு தொடர்புக்கு ஓர் உறவுப் பாலம் அமைத்துச் சென்றார்.

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜாவும், தியாகசீலர் பி.எஸ். குமாரசாமி ராஜாவும் ஆந்திர நாட்டுத் தொடர்பை ஆர்வத்தோடு விரும்பிய பெருமக்களாவர். எனவே இருபெரு மக்களும் ஆந்திராவிற்கு அடிக்கடி சென்று வரும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர். பீமவரம் அருகே பத்தேபுரத்தைச் சார்ந்த சிந்தலபாடி பாபி ராஜு திருக்குமாரர் மூர்த்தி ராஜு செல்வமும், செல்வாக்கும் மிக்க காந்தீயத் தொண்டர். அறுபதுக்கும் மேற்பட்ட

மேனிலைப் பள்ளிகளையும், மூன்று கல்லூரிகளையும் நிறுவிய அப்பெரியார், ஆந்திர அமைச்சரவையில் அறநிலையத்துறை அமைச்சராக வீற்றிருந்தார். அப் பெருமகனார், பெருந்தகை பி.ஏ.சி.ஆருடன் நெருக்கமான தொடர்பு கொண்டிருந்தார். கணபவரம் என்னும் ஊரைச் சேர்ந்த சிந்தலபாடி சூரப்பராஜு சுதந்திர போராட்ட வீரர். இனப்பற்று மிக்க அப் பெரியார் அடிக்கடி இராஜபாளையம் வருகை தந்து, பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் பிரியத்திற்குரிய நல் விருந்தினராய் இருப்பார். அப் பெருமகனாருடன் எஸ்.ஆர். நாராயண ராஜா, பேங்க் பி.எஸ். சுப்பராஜா ஆகிய பெருமக்கள் மிகுந்த நெருக்கம் கொண்டிருந்தனர்.



ஆந்திராவில் பி.ஏ.சி.ஆர். பெற்ற மகத்தான வரவேற்பு

பி.எஸ்.கே.யின் பேரன்புக்குரிய ஆந்திர மாநிலத்துத் தொழில் அதிபர்களில் ஜி.எஸ். ராஜுவும் ஒருவர். 'சவுத் இந்தியன் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்' என்னும் மருந்து தயாரிக்கும் நிறுவனத்தை நிறுவிய ஜி.எஸ். ராஜு, தமது தொழிற்சாலைக் கட்டிடத்திற்கு பி.எஸ்.கே.யின் பெயரிட்டு மகிழ்ந்தார். இராஜபாளையத்தில் ராஜுக்கள் சமூகம் தொடங்கிய கூட்டுறவு வங்கிக்கு, ஆந்திர நாட்டின் பெருமைக்குரிய

திருமகனார் பூபதி ராஜுவை நினைவில் கொண்டு, 'பூபதி ராஜு கூட்டுறவு வங்கி' எனப் பெயரிட்டது குறிப்பிடத்தக்கது.

இராமநாதபுரம் மாவட்டக் கலெக்டராக அந்நாளில் பொறுப்பு வகித்த பீமவரத்தைச் சேர்ந்த நரசிம்ம ராஜு, ஜெய்ப்பூர் மகாராஜாவின் அவைப்புலவராக வீற்றிருந்த தணுகு பெனுமத்ச சத்யநாராயண ராஜு, பெரும் நிலக்கிழார் ஜி.எஸ். ராஜு ஆகிய ஆந்திரநாட்டுப் பெருமக்கள், இராஜபாளையத்தில் பெருந்தகை ராஜாவின் விருந்தினர்களாக இருந்து, தொடர்பையும், உறவையும் தொடர்ந்து பேணி வந்துள்ளனர்.



இராமநாதபுரம் மாவட்ட கலெக்டர்
பீமவரம் நரசிம்ம ராஜுவுக்கு வரவேற்பு

பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா, தியாகசீலர் பி.எஸ். குமாரசாமி ராஜா ஆகிய இரு பெரு மக்களும் ஆந்திர நாட்டு ராஜுக்கள் சமூகத் தொடர்பை பேணி வளர்த்து வந்ததை, பி.ஏ.சி.ஆரின் திருக்குமாரர் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜா மேலும் தழைத்துச் செழிக்க வைத்த தகைசான்ற செயலூக்கம் நினைக்கத் தக்கது.

பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் ஆந்திரநாட்டு நண்பர்களில் ஒருவராகிய சிந்தலபாடி சூரப்ப ராஜுவின் மறைவிற்குப் பின்னர், அந்த ஊர் மக்கள் அப் பெருமகனாருக்குச் சிலை நிறுவி, பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜாவை அந்தச் சிலையைத் திறந்து வைக்க, வேண்டி விரும்பி அழைத்தனர். பி.ஆர்.ஆர். இராஜபாளையம் நகரப் பிரமுகர்கள் சிலருடன் அங்கு சென்று, சிந்தலபாடி சூரப்பராஜுவின் சிலையை 1975 ஆம் ஆண்டு திறந்து வைத்துச் சிறப்பித்தார். அப் பகுதி ராஜுக்கள் சமூகத்தைச் சார்ந்தோர், இராமசுப்பிரமணிய ராஜாவுக்கும், அவருடன் சென்ற இராஜபாளையம் பிரமுகர்களுக்கும் ஊர் ஊருக்கு உள்ளார்ந்த வரவேற்புகள் அளித்துத் தங்கள் அன்பை வெளிப்படுத்தினர். தொன்மையான பாரம்பரியத் தொடர்பை வலுப்படுத்த, அந்தப் பகுதியில் ஒரு தொழில் நிறுவனத்தைத் தொடங்க வேண்டுமென இராமசுப்பிரமணிய ராஜாவைக் கேட்டுக் கொண்டனர். அப் பெருமக்களின் வேண்டுகோளைக் கருத்தில்கொண்டு, மெட்ராஸ் சிமிண்ட்ஸ் விஸ்தரிப்புப் பணியின்போது, விஜயவாடாவிற்கு அருகே, பௌத்த மதக்கேந்திரமாக வரலாற்றுப் புகழ் படைத்த ஜக்கையாபேட்டையில், ஜயந்திபுரம் சிமிண்ட் ஆலையை அமைத்தார் பி.ஆர்.ஆர்.

இராஜபாளையம் ராஜாக்கள் பொது மகாசபை கூட்டங்களுக்கு, பி.ஆர்.ஆரின் ஆர்வம் மிக்க முயற்சியால், ஆந்திர மாநிலத்திலிருந்து ராஜுக்கள் சமூகத்தைச் சார்ந்த பெருமைக்குரிய பெருமக்கள் பலர் வருகைதந்து பங்கேற்றுள்ளனர். அமைச்சர்களாயிருந்த மூர்த்தி ராஜு, ராமலிங்க ராஜு மற்றும் கே. பாபிராஜு, நாகார்ஜுனா குரூப் சேர்மன் கே.வி.கே. ராஜு, சிமிண்ட்ஸ் பி.வி. ராஜு, டி.வி.எஸ். ராஜு, பாராளுமன்ற உறுப்பினராகவிருந்த டி. பலராம ராஜு ஆகிய பெருமக்கள் இராஜபாளையம் வருகை தந்து, மகாசபை கூட்டங்களில் கலந்து கொண்டனர். ஆந்திர நாட்டிலுள்ள ராஜுக்கள் சமூகமும், இராஜபாளையத்திலுள்ள ராஜுக்கள் சமூகமும், நெருக்கமான, நிலையான தொடர்பைப் பெற வேண்டுமெனில் தங்களுக்குள் திருமண உறவை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணம் வலுப் பெற்றுக் கொண்டே வந்தது.

அந்த எண்ணத்தை நிறைவேற்றிய முதற்குடும்பம் பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் பெருமைக்குரிய குடும்பமேயாம்! அருமைக்குரிய அந்தத் திருமண உறவை முன்னோடியாக நின்று பி.ஆர்.ஆர், முனைந்து தொடங்கி வைத்தார். பி.ஏ.சி.ஆரின் பேரரும், தமது ஒரே புதல்வருமாகிய வெங்கட்டராம ராஜாவிற்கு, இராமசுப்பிரமணிய ராஜா ஆந்திர நாட்டிலிருந்து பெண் எடுத்து வாழ்க்கைத் துணை நலமாக விளங்க வைத்தார். அப்போதைய திருப்பதி திருமலை தேவஸ்தான அறங்காவலர் தலைவரும், பெரும் நிலக்கிழாருமாகிய வேங்கேசன சத்திய நாராணய ராஜு என்னும் கனக ராஜுவின் மகள் வழிப் பேத்தி, திருப்பதி திருமலை தேவஸ்தான அறங்காவலர் தலைவராயிருந்த ஜி. ரங்கராஜு, தொழிலதிபர் ஜி.எஸ். ராஜு ஆகிய பெருமக்களின் ஒன்றுவிட்ட சகோதரர் நாராயண ராஜுவின் குமாரர் ஜி.வி.என். ராஜுவின் திருமகளார் நிர்மலா, இராமசுப்பிரமணிய ராஜாவின் மருமகளாராக ராம மந்திரத்திற்கு வருகை தரும் பேறு பெற்றார். வெங்கட்டராம ராஜா - நிர்மலா



பி.ஏ.சி.ஆரின் பேரரும் பி.ஆர்.ஆரின்
திருக்குமாரருமான பி.ஆர். வெங்கட்ராம ராஜா - நிர்மலா
திருமணம் - திருப்பதியில்

திருமணம் திருப்பதியில் 6.9.1984 இல் வெங்கடேசப் பெருமானின் திருவருளோடு நிகழ்ந்தது.

பழமை பாராட்டி ஆந்திராவின் ராஜுக்கள் சமூகத்தோடு அன்பு கொண்ட பெருந்தகை பி.ஏ.சி. இராமசாமி ராஜா விதைத்த தொடர்பு, அப்பெருமகனாரது குடும்பத்தில் நிலைத்த தொடர்பாகி விழுதூன்றியது.

* * *

# 29

# சிலபார்வைகளும் பல செய்திகளும்

## குடும்பம்

அறுநூறு ஆண்டுகளுக்கு முன், ஆந்திராவிலிருந்து தமிழ் நாட்டுக்குப் படை வீரர்களாகக் குடியேறிய ராஜுக்கள், கால வளர்ச்சியில் காடு திருத்திக் கழனிகளாக்கி விவசாயத் தொழிலில் ஈடுபடத் தொடங்கினர்.

ஆந்திர நாட்டின் இருபத்தாறு கிராமங்களிலிருந்து புறப்பட்டு வந்ததால், அந்தக் கிராமங்களின் பெயர்களைத் தங்கள் வீட்டுப் பெயர்களாக கொண்டனர், இராஜபாளையத்தில் வாழ்ந்து வந்த ராஜுக்கள் சமூகத்தினர். ஆந்திராவின் 'பூசப்பாடி' எஸ்டேட்டிலிருந்து வந்தவர்கள், தங்கள் வீட்டுப் பெயரைப் 'பூசப்பாடி' என்றே கொண்டனர்.

பூசப்பாடி அழகராஜாவிற்கு நான்கு புதல்வர்கள். சின்னைய ராஜா, பெத்தி ராஜா, சக்க ராஜா, சங்கர ராஜா ஆகிய நால்வருள் சின்னைய ராஜா மூத்தவர். எனவே மரபு வழியாக வந்த கிராமமுன்சீப் பதவியைச் சின்னைய ராஜா ஏற்றிருந்தார். பெரும் விவசாயக் கூட்டுக் குடும்பத்தின் பொறுப்பையும் அப் பெருமகனார் நிர்வகித்து வந்தார். மூத்த சகோதரர் ஆயிற்றே?

செல்வ வளமும், செல்வாக்கு நலமும் பெற்றிருந்த பூசப்பாடி அழகராஜா குமாரர் சின்னைய ராஜா, சிட்டம்மாள் அம்மையாரைத் துணைவியாகப் பெற்றிருந்தார். பி.ஏ. சின்னைய ராஜா தமது துணைவியார் சிட்டம்மாள் அம்மையாருடன் இராமேஸ்வரம் சென்று, தீர்த்தமாடி, விரதமிருந்து, பின்னர் சங்கரநயினார்

கோயிலில் பிரார்த்தனை செய்து, அறிவறிந்த அருமைப் புதல்வனை 24.4.1894 இல் பெரும் பேறாகப் பெற்றார். குடும்ப கௌரவத்தையும், குலப் பெருமையையும் மேலோங்கச் செய்து, வாழ்ந்த பகுதி மக்களின் வாழ்க்கைக்கு ஒரு புதிய பிரகாசத்தைக் கொடுக்க வந்த அந்தப் புதல்வன்தான் இராமசாமி ராஜா. இராமசாமி ராஜாவுக்குப் பின்னர், 'ராமம்மாள்' என்னும் பெண் குழந்தையைப் பெற்றார் சின்னைய ராஜாவின் துணைவியார் சிட்டம்மாள் அம்மையார்.

பி.ஏ.சி, இராமசாமி ராஜா, பழையபாளையம் என்.ஏ.ராமசாமி ராஜாவின் திருமகளான அம்மணி அம்மாளை 1906 ஆம் ஆண்டு மணந்தார். பத்தொன்பதாம் வயதிலேயே இராமசாமி ராஜா தந்தையாகி விட்டார் ! 'லிங்கம்மாள்' அப் பெருமகனாரின் முதல் பெண் குழந்தை. பின்னர் 'சின்னைய ராஜா' என்றொரு மகனும், 'பாஞ்சாலியம்மாள்' என்றொரு மகளும் பிறந்து இறந்து போயின. 1923 ஆம் ஆண்டு அம்மணி அம்மாள், சேதுராமம்மாளைப் பெற்றெடுத்தார். அதன் பிறகு சிறிது காலம், தேக நலம் குன்றியிருந்த அம்மணி அம்மாள், எதிர்பாராது 1929 ஆம் ஆண்டில் இறைவனடி சேர்ந்தார்.

தந்தையார் பி.ஏ.சின்னைய ராஜா 1918 ஆம் ஆண்டில் மரணமுற்ற பின், பி.ஏ.சி. இராமசாமி ராஜா குடும்பப் பொறுப்பை ஏற்றார். அம்மணி அம்மாளின் மறைவுக்குப் பிறகு, லிங்கம்மாள், சேதுராமம்மாள் ஆகிய தமது இரு புதல்விகளுடன் இருந்து வந்த இராமசாமி ராஜா இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் 1931 ஆம் ஆண்டு மீண்டும் திருமணம் செய்து கொண்டார். அளவைத் துறையில் (SURVEY) பயிற்சி பெற்ற படிப்பாளராக விளங்கிய எம்.எஸ். ராமசாமி ராஜாவின் புதல்வி சேதுராமம்மாள், ஒரு நல்ல நாளில், இராமசாமி ராஜாவின் திருக்கரம் பற்றி, ராஜா வாழ்ந்த மாளிகையான ராம மந்திரத்துள் குடும்ப விளக்காகக் குடியேறினார்.

சேதுராமம்மாளுக்கு முதலில் ஒரு பெண் குழந்தை பிறந்து இறந்து விட்டது. அடுத்து, இராமசாமி ராஜா, ஐரோப்பிய பயணத்தில்

இருந்தபோது 1935 ஆம் ஆண்டு ராஜாவிற்கு ஆறாவது மக்கட்பேறாக, செல்வ மைந்தன் ராமசுப்பிரமணிய ராஜாவை சேதுராமம்மாள் பெற்றெடுத்தார். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், இராமசாமி ராஜாவின் அன்பிற்குரிய துணைவியார் சேதுராமம்மாள் 1937 ஆம் ஆண்டில் 'சிட்டம்மாள்' எனும் பெண் குழந்தையைப் பெற்றார்.

பி.ஏ.சி.இராமசாமி ராஜாவுக்கு அம்மணி அம்மாள் வழியாக நான்கு குழந்தைகளும், சேதுராமம்மாள் வழியாக மூன்று குழந்தைகளும் பிறந்தன. மூன்று பெண்களும், ஒரே புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவும் அப் பெருமகனாருக்கு மக்கட் பேறாக நிலைத்தனர்.

தேனி நகரில் புகழார்ந்த வணிகராய் விளங்கிய கொண்டு ராஜாவின் புதல்வர் என்.கே. ராமராஜு. பட்டம் பெற்றிருந்த ராமராஜு, ஆற்றல் மிக்கவராய், அறிவிற் சிறந்தவராய், அழகொளிரும் முகப்பொலிவு கொண்டவராய்த் திகழ்ந்தார். அவருக்குத் தமது புதல்வி லிங்கம்மாளை வாழ்க்கைத் துணைவியாக்கி மகிழ்ந்தார் இராமசாமி ராஜா. தமது முதல் மருமகப்பிள்ளை ராமராஜுவிடம் இராமசாமி ராஜா மிகுந்த பிரியம் கொண்டிருந்தார். குடும்பத்தினரையும், உறவினர்களையும் துணைவியாரையும் மீளாத் துயரத்தில் ஆழ்த்திவிட்டு, ராமராஜு 1942 ஆம் ஆண்டில் மரணமுற்றார். ராமராஜு-லிங்கம்மாள் இல்லறப் பயனாயப் பிறந்திருந்த பேத்தி சுதர்சனம் அம்மையாரிடம் அளப்பரிய பாசம் வைத்திருந்தார் ராஜா.

கொல்லம்-மதுரை பாசஞ்சர் ரயிலில் அக்காலத்தில் டாக்டர் வெங்கட்ராமன் என்ற மருத்துவர் மாதா மாதம் ஒரு குறிப்பிட்ட நாளில், ஒவ்வொரு ஸ்டேஷனிலும் சற்று தங்கி, குழந்தை வைத்தியம் பார்த்துக்கொண்டே செல்வார். சுதர்சனம் அம்மையார் ஏழு மாதக் குழந்தையாக இருந்தபோது, ஈரல் பகுதியில் சிறு சிக்கல் ஏற்பட்டிருந்தது. அந்தச் சிக்கலைப் போக்குவதற்காக இராமசாமி ராஜா சுதர்சனம் அம்மையாரைத் தோளில் சுமந்தவாறே, மாதா மாதம் டாக்டர் வருகிற நாளில், இராஜபாளையம் ரயில்வே

ஸ்டேஷனில் மணிக்கணக்காக நின்று கொண்டே இருப்பார். குழந்தையை வேறு எவரிடமும் கொடுக்க மாட்டார் ஏறத்தாழ இரண்டு மூன்று ஆண்டுகள், குறிப்பிட்ட நாளில் குழந்தையைத் தூக்கிக்கொண்டு இராஜபாளையம் ஸ்டேஷனுக்குச் சென்று, டாக்டருக்காகக் காத்திருப்பதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தார் ராஜா.

இராமசாமி ராஜாவின் துணைவியார் அம்மணி அம்மாளின் சகோதரரும் தனது மைத்துனருமான என்.ஆர். கிருஷ்ணம ராஜாவுக்கு தமது இரண்டாவது மகள் சேதுராமம்மாளைத் திருமணம் செய்து வைத்தார் ராஜா. என்.ஆர். கிருஷ்ணமாராஜா-சேதுராமம்மாள் தம்பதியருக்கு என்.கே. ராமசாமி ராஜா, என்.கே. சுப்புராம ராஜா, என்.கே. ஸ்ரீகண்ட ராஜா, என்.கே. வேங்கடேஷ் ராஜா, என்.கே. ராம்குமார் ராஜா ஆகிய ஐந்து புதல்வர்களும், ரமணிதேவி என்ற பெண்ணும் மக்கட் செல்வங்களாக உள்ளனர்.

பெருந்தொழிலதிபராக பி.ஏ.சி.இராமசாமி ராஜா புகழ்பெற்றிருந்த நிலையில் 1957 இல் தமது புதல்வி சிட்டம்மாளை பிரபல வர்த்தகர் எஸ்.என்.ஆர். ஸ்ரீரங்க ராஜாவின் புதல்வர் எஸ்.எஸ். ராமச்சந்திர ராஜாவுக்கு திருமணம் செய்து கொடுத்தார். ராமலெட்சுமி, வித்யா சேதுலட்சுமி ஆகிய இரு பெண்களும், ஒரே புதல்வர் எஸ்.ஆர்.ஸ்ரீ ராம ராஜாவும், -எஸ்.எஸ். ராமச்சந்திர ராஜா - சிட்டம்மாள் தம்பதியினரின் மரபுச் செல்வங்களாக உள்ளனர்.

இராமசாமி ராஜா தமது ஒரே புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவிற்கு 1958 ஆம் ஆண்டு விமரிசையாகத் திருமணத்தை நடத்தினார். மணமகள் யார் தெரியுமோ? தமது பிரியத்திற்குரிய பேத்தி சுதர்சனம் அம்மையார்தான் !

சுதர்சனம் அம்மையார் முதன் முதலில் கருவுற்றிருக்கும் போது, இராமசாமி ராஜா தமது மைந்தர் இராமசுப்பிரமணிய ராஜாவிடம், "உனக்கு முதலில் பெண் குழந்தைதான்பிறக்கும்" என்றார்.

"இல்லை ! இல்லை ! ஆண் குழந்தைதான் பிறக்கும் !" என்றார் இராமசுப்பிரமணிய ராஜா. "என்ன அவ்வளவு உறுதியாகச்

சொல்கிறாய்'' என வினவினார் தந்தையார்.

“திருப்பதிக்குப் போய் வேண்டியிருக்கிறேன். அதனால் ஆண் குழந்தைதான் பிறக்கும்'' என்றார் இராமசுப்பிரமணிய ராஜா.

இராமசுப்பிரமணிய ராஜாவின் நம்பிக்கை நனவாயிற்று ! ஆம், திருப்பதி வேங்கடேசப் பெருமானின் திருவருளால் சுதர்சனம் அம்மையார் 14.5.59 இல் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். திருப்பதிப் பெருமானின் திருவருளால் பிறந்த குழந்தை ஆயிற்றே? 'வெங்கட்ராம ராஜா' என நாமகரணம் சூட்டப் பெற்றது. பின்னர் 10.5.63 இல் நளினா ராமலட்சுமி, 28.8.66 இல் சாரதா தீபா ஆகிய இரு பெண்கள் இராமசுப்பிரமணிய ராஜாவின் திருமகள்களாகப் பிறந்தனர்.

என்.ஆர். கிருஷ்ணம ராஜா-சேதுராமம்மாளின் புதல்வர் என்.கே. ராம்குமார் ராஜாவிற்குத் தமது புதல்வி நளினா ராமலட்சுமியைத் திருமணம் செய்து வைத்தார் இராம சுப்பிரமணிய ராஜா. ஹரீஷ் கிருஷ்ணகுமார் மரபுச் செல்வமாக அண்மையில் பிறந்துள்ளான்.

இராமசுப்பிரமணிய ராஜாவின் ஒரே புதல்வர் பி.ஆர். வெங்கட்ராம ராஜாவுக்கு ஆந்திராவிலிருந்து பெண் கொண்டார் பி.ஆர்.ஆர். திருப்பதி திருமலை தேவஸ்தான அறங்காவலர் தரைவராகப் பொறுப்பு வகித்தவரும், பெரும் நிலக் கிழாருமாகிய வேங்கேசன சத்திய நாராயண ராஜு என்னும் கனகராஜுவின் மகள் வழிப் பேத்தி, ஜி.வி.என். ராஜுவின் திருமகளார் நிர்மலா 1984 ஆம் ஆண்டில் வெங்கட்ராம ராஜாவின் கரம் பற்றி, இராமசுப்பிரமணிய ராஜாவின் மருமகளாராக ராமமந்திரம் மாளிகைக்கு வருகை தரும் பேறு பெற்றார். வெங்கட்ராம ராஜா - நிர்மலா இல்லறப் பயனாய் 'ஸ்ரீசந்தியா','அபிநவ் ராமசுப்பிரமணிய ராஜா' ஆகிய இரு குழந்தைகள், மாளிகை ராமமந்திரத்தின் மழலைச் செல்வங்களாகி, சுதர்சனம் அம்மையார்-இராமசுப்பிரமணிய ராஜாவை மகிழ்வித்து வருகின்றன.

எஸ்.ஆர். ஸ்ரீராம ராஜா, எஸ்.எஸ். ராமச்சந்திர ராஜா சிட்டம்மாள்

திருக்குமாரர் அல்லவா? அவருக்குத் தமது புதல்வி சாரதா தீபாவை **1988** ஆம் ஆண்டில் வாழ்க்கைத் துணைவியாக்கினார் இராமசுப்பிரமணிய ராஜா. 'ஜெயந்த் ராமச்சந்திர ராஜா' என்ற பேரக் குழந்தையை அவர்கள் வழியே பெற்று மகிழ்ந்துள்ளார் பி.ஆர்.ஆர்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர். குடும்பத்தினர் அனைவரும் அப் பெருமகனாரை வாழவைத்த தெய்வமாகவே நினைத்து நெகிழ்ந்து வழிபட்டுப் போற்றி வருகின்றனர். வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வமாகிவிட்ட ராஜா, 'தோன்றாத் துணை'யாக அமைந்து, குடும்பத்திற்கு நாள்தோறும் நல்லாசி வழங்கி வருகிறார். சிலபோது கனவில் தோன்றி "நான் இருக்கேன், உங்களுடன் தான் இருக்கேன்" எனக்கூறி ராஜா தரிசனம் தருவதாய்க் கனிந்துருகிக் கூறினார் சுதர்சனம் அம்மையார்.

* * *

# அமரர் பி.ஏ.சி. ராமசாமி ராஜா அவர்களின் வம்ச விருட்க்ஷம்





ராஜா குடும்பத்தினரின் குலதெய்வம்
வேட்டை ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் திருக்கோயில்



சிருங்கேரி சாரதாபீடம் மகாசந்நிதானம் அவர்களுடன்
ராஜா குடும்பத்தினர்



சிட்டம்மாள், சேதுராமம்மாள், பி.ஆர்.ஆர், பி.ஏ.சி.ஆர், சுதர்சனம்



என்.ஆர். லிங்கம்மாள், என்.கே. சேதுராமம்மாள்,
பி.ஏ.சி.ஆர். சேதுராமம்மாள்,



பி.ஏ.சி.ஆரின் குடும்பம்



பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா - சுதர்சனம் திருமணம்



பி.ஆர். வெங்கட்டராம ராஜா - நிர்மலா திருமணம்



நளினா ராமலட்சுமி - என்.கே. ராம்குமார் ராஜா



சாரதா தீபா - ஸ்ரீராம் ராஜா



பி.ஏ.சி.ஆரின் அரவணைப்பில் பேரன் வெங்கட்டராம ராஜா



பி.ஏ.சி.ஆரின் அரவணைப்பில் பேரன் வெங்கட்டராம ராஜா



பி.ஆர்.ஆரின் அரவணைப்பில் பேத்தி சந்தியா



பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா - சுதர்சனம் அம்மையார்



என்.ஆர். கிருஷ்ணம ராஜா - சேதுராமம்மாள்



என்.கே. ராமசாமி ராஜா



என்.கே. சுப்பராம ராஜா



என்.கே. ஸ்ரீகண்ட ராஜா



என்.கே. வெங்கடேஷ் ராஜா



என்.கே. ராம்குமார் ராஜா



பி.எஸ். ரமணி தேவி





எஸ்.எஸ். ராமச்சந்திர ராஜா - சிட்டம்மாள்



பி.ஏ. ராமலட்சுமி



ஜே. வித்யா சேதுலட்சுமி



ஸ்ரீராம் ராஜா



பி.ஆர்.ஆரின்
மகன் வெங்கட்டராம ராஜா - மருமகள் நிர்மலா
மகள் நளினா ராமலட்சுமி - மருமகன் ராம்குமார் ராஜா
மகள் சாரதா தீபா - மருமகன் ஸ்ரீராம் ராஜா



பி.ஏ.சி.ஆருடன் உறவினர்கள்

## குணப்பண்பு

மனிதனின் இயக்கங்களும், செயற்பாடுகளும் மனத்தால் அமைகிறது. மனம், மனிதன் பெற்ற சிறந்த அகக் கருவி. அந்த அகக் கருவி சிலருக்குத் தூய்மையானதாக வாய்க்கிறது! வாய்த்த தூய்மையை வாழ்வு முற்றும் காப்பாற்றிக் கொள்ளும் வல்லமை, சிலருள்ளும் ஒரிருவருக்கே அமைகின்றது ! அத்தகைய வல்லமை கொண்ட அமைப்பு நலம், பெருந்தகை பி.ஏ.சி.ஆருக்கு வாய்த்திருந்ததை, அப் பெருமகனாரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் எடுத்துரைக்கின்றன.

மனம் இரண்டு வகையால் தூய்மைக் கேடு அடைகின்றது. ஆன்மாவினிடத்திலுள்ள அறியாமையாலும், புறச் சூழ்நிலையால் வந்து சேரும் நிகழ்வுகளாலும் மனம் கெட்டுப்போக வாய்ப்பு ஏற்பட்டு விடுகின்றது. இந்த இரண்டு வாயில்களின் வழியாக மனத்தூய்மையை இழந்துவிடாதிருக்க வாழ்வு முழுவதும் பி.ஏ.சி.ஆர், மேற்கொண்ட பயிற்சியும், முயற்சியும் நினைக்கத் தக்கவை.

தூய்மையான மனத்தில்தான் நற் குணங்களும், நற் பண்புகளும் உருக்கொள்கின்றன. குணப் பண்புகள் நல்லவையாகத் தோற்றம் பெறுகின்றபோது, வாழ்வில் அன்பும், நல்லிணக்கமும், பகைமையற்ற பார்வையும் இடம் பெறுகின்றன.

குழந்தைப் பருவம் நீங்கி, படித்துக் கொண்டிருந்த பள்ளிப் பருவத்திலேயே பி.ஏ.சி.ஆர், உடன் பயின்ற மாணவர்களுடன் பழகிய நல்லிணக்கத்தாலும், நல்லன்பாலும் அப் பெருமகனாரின் மாசற்ற மனத்தூய்மையை ஒருவாறு அறிய முடிகிறது.

ஸ்ரீவில்லிபுத்தூர் சி.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் ராஜா படித்துக் கொண்டிருந்தபோது, ஆறாம் வகுப்பிலிருந்து பத்தாம் வகுப்புவரை ராஜாவுடன் உடன் பயின்ற பொன்னையா (கோனார்) இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறார் ! அவருக்கு வயது இப்போது 102 ஆகின்றதாம் ! அவர் வாழ்ந்து வருகின்ற

கிராமத்தைத் தேடிச் சென்று, அவரிடம் ராஜாவின் பள்ளிப் பருவத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் அரிய வாய்ப்புக் கிட்டியது. படித்த பின்னர், வில்லிசையில் பிரபலமான பொன்னையாவை, 'வில்லிசை வித்தகர் பொன்னையாக் கோனார்' என மக்கள் அழைத்து மகிழ்ந்துள்ளனர். இன்றும்கூட, இந்தத் தள்ளாத வயதில் வில்லிசைப் பாடல்களை விறுவிறுப்பாகப் பாடுகிறார். ராஜாவின் பள்ளி வாழ்க்கை பற்றி அவர் சொன்னார்: "எல்லோரிடமும் இராமசாமி ராஜா பிரியமாய்ப் பழகுவார். அவரும் நானும் ஐந்தாறு வகுப்புகள் ஒண்ணாய்ப் படித்தோம். எப்போதும் ராஜாவைச் சுற்றி நாலைந்து பசங்க இருந்து கொண்டே இருப்போம். பெரிய வீட்டுப் பிள்ளைங்கிற நெனப்பு இல்லாமலே, ராஜா எங்களோட அன்பா இருப்பார்; வாஞ்சையாய் பழகுவார்"

இளைய வயதில் கொண்டிருந்த இத்தகைய குணப்பண்பை, வாழ்ந்த நேரங்களிலெல்லாம் கைக்கொண்டு பெருந்தகை பி.ஏ.சி.ஆர். மனத்தூய்மையில் மாசு படராமல் கவனத்தோடும், கருத்தோடும் இயங்கி வந்துள்ளார். ஆன்மாவின் வழியே தோன்றும் அறியாமைப் போக்கிக் கொள்ள அதிகாலைப் பிரார்த்தனையும், அருளாளர்கள் தொடர்பும் அப் பெருமகனாருக்குத் துணையாக அமைந்துள்ளன. புறச்சூழ்நிலையில் வந்து தோன்றும் நிகழ்வுகளில் அறச்சார்புடையவைகளில் ஒத்துப் போவதும், அவை அல்லாதவைகளில் ஒதுங்கிப் போவதுமான நடைமுறையை அப் பெருமகனார் மேற்கொண்டதால், வாழ்வு முற்றும் அப் பெருந்தகை மனத்தூய்மையைக் காப்பாற்றிக் கொள்ளும் வல்லமையைப் பெற்று, நற்குணப் பண்புகளின் நாயகராய்த் திகழ்ந்தார்.

மனத்தைத் தூய்மை உடையதாகப் பேணுவதே மனிதத் தன்மையின் முதல் முயற்சி. அந்த முயற்சியில் முழுமையாகத் தம்மைப் பயிற்சிக் களமாக உருவாக்கிக் கொண்ட அருமை - பெருந்தகை பி.ஏ.சி.ஆர், பெற்ற தனிப்பெருமை ! மற்றவர்கள் மதிக்க வேண்டுமென்பதற் காகவும், மற்றவர்கள் புகழ்ந்து பேச வேண்டுமென்பதற்காகவும் செய்யப்பெறும் செயல்கள் வெறும் ஆரவாரத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஆரவாரம் அன்புச்சார்

பில்லாதது; நெஞ்சத்து நேயம் கலவாதது. ஆரவாரமான செயல்களை, செயல்களில் ஈடுபடுவதை தூய்மையுடைய அப் பெருந்தகையின் மனம் ஒருபோதும் உடன்பட்டு இயங்கியதில்லை. மனித நேயத்துடன், மனம் ஒன்றிய, ஆத்மார்த்தமான அறச்சார்புடைய செயல்களிலேயே அப் பெருந்தகையின் பேருள்ளம் வாழ்வு முற்றும் இணைந்திருந்தது; இணைந்து செயலாற்றியது. மற்றவர் வாழ்வு கண்டு மகிழ்தல், மற்றவர்களை வாழ்விக்க முயற்சி செய்தல், மற்றவர் வாழ்க்கைக்காக அர்ப்பணிப்பு உணர்வுடன் அயராது உழைத்தல் ஆகிய குணப் பண்புகள் மனத் தூய்மையின் விளைச்சல்கள்! இத்தகைய விளைச்சல் களாக, இளமையிலிருந்தே தமது மனத்தை உருவாக்கிக் கொள்ளும் ஆற்றலை, பெருந்தகை பி.ஏ.சி.ஆர், தெய்வ பலத்தாலும், தேர்ந்து பழகிய உறவின் நலத்தாலும் பெற்றிருந்தார்.

“பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை” எனும் ஆன்றோர் திருவாக்கைத் தெளிவாக உணர்ந்தவர்தான் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். பொருளே மனித வாழ்க்கையை நிர்ணயிக்கிறது; நிலைப்படுத்துகிறது; மனித வாழ்க்கையைச் செழிக்கச் செய்கிறது. பொருள் ஈட்டல் மனிதனின் தலையாய கடமைகளுள் ஒன்று. பொருள் ஈட்டல் தர்ம வழியிலும் அமைகிறது; அதர்ம வழியிலும் உருவாகிறது; இல்லையா? முயற்சியாலும், பயிற்சியாலும் மனத்தைத் தூய்மை உடையதாக உருவாக்கிக் கொண்ட பெருந்தகை பி.ஏ.சி.ஆர், அற வழியில் ஈட்டுவதே ‘பொருள்’, அதர்ம வழியில் ஈட்டுவது ‘பாவம்’ எனக் கருதினார். எனவேதான் அப் பெருந்தகை உருவாக்கிய பெருந் தொழில்களின் ‘வரவு-செலவுகள்’ என்றென்றும் தர்மத்தின் பாதையிலேயே பயணித்துக் கொண்டுள்ளன! தொடங்கிய தொழில்களுக்கெல்லாம் பங்குத் தொகையளித்து உதவிய பங்குதாரர் முதலீட்டின் அறங்காவல ராகவே தம்மை வரித்துக் கொண்டு செயலாற்றிய பெருந்தகை பி.ஏ.சி.ஆர், இறுதி வாசகமாகத் தம் புதல்வரிடம் ‘அறங்காவல ராகவே செயலாற்று”; பங்குதாரர்களை நினைவில் கொள் எனக்கூறிய உயர்ந்த குணப்பண்பு, அப் பெருந்தகையின்

உத்தமமான உள்ளத் தூய்மையை உணர்த்தும் உன்னதமான எடுத்துக்காட்டு.

எல்லோரும் அப்பெருமகனாரை 'முதலாளி' என அழைத்து மகிழ்வர். அப்பெருந்தகையோ "எனக்கு முதலாளி-பங்குதாரர்களே!" என்பார்.

பயனுள்ள வாழ்க்கை, பணிவை அடித்தளமாகக் கொண்டது. ஆரவாரமற்ற அடக்க உணர்வு, வெற்றி மிகுந்த வாழ்க்கையின் விவேகமான குணப்பண்பு.கதிர் மணிகளை உடைய நெற்பயிர்கள் பூமியை நோக்கித் தலை தாழ்ந்து இருப்பதேபோல், அறிவிலே தெளிவும், ஆற்றலிலே வலிவும், பொருளாதார நிலையில் பொலிவும் கொண்ட பெருமக்கள் பணிவைத் தங்கள் இன்றியமையாப் பண்பாக ஏற்கின்றனர். அடக்க முடைமையின் முதிர்ச்சியில் தோன்றும் பணிவைத் தமது உடமைகளுள் ஒன்றாகவே பெற்றிருந்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். பெருந்தொழில் நாயகராகப் பிரபலமடைந்த பின்னரும், தம்மைப் பற்றிக் குறிப்பிட்டுக் கொள்ளும் வாய்ப்பு நேருகின்ற போதெல்லாம் "நானொரு சின்ன வியாபாரிதான் !" எனக் கூறிக்கொள்ளும் அடக்க உணர்வு, அப் பெருமகனாரின் பெருங் குணப்பண்பை அடையாளம் காட்டும். ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையும், எவரிடத்தும் இனிய முகபாவத்துடன் பேசுகின்ற பாங்கும், அரசாங்க அலுவலர்களுக்குக் கொடுக்கும் உரிய மரியாதையும், தம்மிடம் வேலை பார்க்கும் அனைவருடைய குடும்பச் சூழலையும் சிரத்தையுடன் கேட்டறியும் விருப்பமும்- அப் பெருமகனாரின் குணப்பண்பில் மனித நேயமும், மாசற்ற தூய்மையும் இணைந்து நிற்பதை எடுத்துக் காட்டியதோடு, அடக்கத்துடன் கூடிய அணுகுமுறையின் ஆக்கத்தையும் தெளிவாகப் புலப்படுத்தின.

"கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" எனும் அருள்வாக்கிற்கு ஏற்ப, அறிந்து கொள்வதிலும், செய்திகளைச் செவிப்படுத்திக் கொள்வதிலுமே அளப்பரிய விருப்பம் கொண்டிருந்தார் ராஜா.

எவரிடமும் சந்தித்து உரையாடுகின்றபோது, ராஜா பயன்படுத்தும் வார்த்தைகள் குறைவாகவே இருக்கும்! எதிர் நின்று பேசுபவரின் கருத்தைத் தடைப்படுத்தாமல், இடையே குறுக்கிடாமல் கேட்டுக் கொண்டே இருப்பார் ராஜா. கேட்டுக் கொண்டே செவிப்படுத்தும் செய்திகளை எடைபோட்டு, இனம் கண்டு, தீர்மானிக்கும் குண நலத்தை இயல்பாகக் கொண்டிருந்தார் அப் பெருமகனார். தாம் உடன்படாத தகவல்களையும், ஒரு சிறிதும் வெறுத்து ஒதுக்காது, முகபாவத்தில் எவ்வித மாற்றத்தையும் காட்டாது, அமைதியாக கேட்டுக் கொள்ளும் அரிய பான்மை, அப் பெருந்தகையின் குணமேன்மை ஆகும்.

பெருந் தொழில்களை நிர்மாணிக்கும் காலத்தில் தமிழகத்தின் தொழில் அமைச்சராகவிருந்த ஆர்.வி.யை, பெருந்தகை பி.ஏ.சி.ஆர். அடிக்கடி பார்ப்பது உண்டு. ஒரு நாளும் மற்றவர்களைப் பற்றி அப் பெருமகனார் குறைத்து மதிப்பிட்டதுமில்லை; குறையாகப் பேசியதும் இல்லையாம்! இத்தனைக்கும் தொழில் துறையில் ராஜாவுக்குச் சிலர் இடையூறு செய்ததும் உண்டாம்! என்றாலும் தம்மிடம் அவர்களைப் பற்றி ஒரு வார்த்தை குறையாகப் பேசியதில்லையெனக் கூறி, ராஜாவின் குணப் பண்பை வியந்து புகழ்ந்தார் ஆர்.வி.

பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் தூய்மையான பேருள்ளம், பகைமை என்பதையே அறியாதது ! பகைமை கொள்ளத் தெரியாதது ! மனத் தூய்மையைப் பேணிக் காப்பதில், ஆன்மீகச் சிந்தனையுடன், பரம்பொருளுடன் இடையறாது உறவு கொண்டிருந்த அப் பெருமகனார், எந்த ஒரு மனிதனையும் அந்நியமாக நினைக்காமல், எந்த ஒரு மனிதனிடமிருந்தும் அந்நியமாகப் போய் விடாமல், எவ்வுயிரையும் தம்முயிர்போல் கருதும் உள்ளப் பாங்கை வளர்த்துக் கொண்டே இருந்தார். எனவே எவரையும் குறைவாக மதிக்க அப் பெருந்தகையின் ஆன்மீகம் சார்ந்த பேருள்ளம் இடந்தருவதில்லை. பின்னே எங்கே வரப்போகிறது பகைமை?

பி.ஏ.சி.ஆர் தம்மைப் பிடிக்காத சிலரைத் தெளிவாக அறிந்திருப்பார். எனினும் அவர்களையும் மதித்து, மரியாதை கொடுப்பார்; அவர்களிடமும் அன்பாக பழகுவார்.

பெருஞ்செல்வர்கள், பெருந்தொழில் அதிபர்கள் 'தாம் உண்டு; தம் தொழில் உண்டு; தம் செல்வம் உண்டு' எனத்தனிமைப் படுத்திக் கொள்வதுதான் பெரும்பான்மையும் நடைமுறை. பெருந்தகை பி.ஏ.சி.ஆர், அத்தகைய நடைமுறைக்கு ஆட்படவில்லை ! பொது நன்மைகளுக்காகத் தமது வாழ்வின் அரிய நேரங்களை அர்ப்பணிப்பதில், அபரிமிதமான ஆர்வம் கொண்டு செயலாற்றிக் குணம் என்னும் குன்றேறி நிற்கும் மனம் கொண்டே வாழ்ந்திருக்கிறார். ஆன்மாவின் வளர்ச்சிக்கு மனித உறவுகள் தேவை. எவரையும் ஒதுக்காமலும், எவரிடமிருந்தும் ஒதுங்காமலும் அன்பு காட்டி வாழ்கின்ற பெருந்தன்மை ஆன்மீக வளர்ச்சிக்கு அடிப்படை. ஆன்மீக வளர்ச்சியில் நாட்டம் கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர், பொது நன்மைகளில் தேட்டம் கொண்டு, பொது மக்களின் நல் வாழ்வுக்காக அர்ப்பணிப்பு உணர்வுடன் உழைத்திருக்கிறார்; ஆர்வத்துடன் செயலாற்றியிருக்கிறார்.

'நான்தான் முதலாளி ! நான் சொன்னதைதான் நீங்கள் செய்ய வேண்டும்' என்ற போக்கே பி.ஏ.சி.ஆரிடம் ஒரு நாளும், ஒரு சிறிதும் இருந்ததில்லை. ஆழ்ந்து சிந்தித்து, ஆய்ந்து பொறுப்புகளை வழங்குவார். வழங்கிய பின்னர் அவர்கள் சுதந்திரமாகச் செயல்படுவதில் குறுக்கீடு செய்யமாட்டார் அப் பெருமகனார். மிகச் சரியாகச் செய்துவிடும் பணிகளை மனந்திறந்து பாராட்டும் குணப் பண்பு அப்பெருந்தகையிடம் குடிகொண்டிருந்தது ! எதனையும் விளக்கமாக விளங்கிக் கொள்ளும் ஆர்வத்தால், பொறுமையாகக் கேட்டுக் கொண்டேயிருப்பது பி.ஏ.சி.ஆரின் குண இயல்பாகும்.

நிறைய சம்பாதிக்க வேண்டும்; பெருஞ் செல்வராக ஆகவேண்டுமென்ற எண்ணம் மட்டும் பெருந்தகை பி.ஏ.சி.ஆரிடம் இருந்ததில்லை. அடிக்கடி 'MONEY IS IMPORTANT; PRINCIPLE IS MOST IMPORTANT' (பணம் அவசிய மானதுதான்; குறிக்கோள் அத்தியாவசியமானது) என ஆங்கிலத்தில்

அப்பெருந்தகை கூறுவதுண்டு. அந்த வார்த்தைகளே ராஜாவின் மனப் பிரதிபலிப்புத்தானே?

அரசாங்கத்திற்குச் சேர வேண்டிய வரிகளை, ஒரு பைசாக் குறைவில்லாமல் நேர்மையான முறையில் செலுத்த வேண்டுமென்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பார் அப் பெருமகனார். நாணயம், நம்பிக்கை ஆகிய இரண்டையும் தமது கண்களாகப் பாவித்த அப் பெருந்தகை, சமூக ஒழுக்கத்தை உயிராகவே மதித்துப் போற்றிப் பேணினார்.

உண்பித்து உண்ணல், வாழ்வித்து வாழ்தல், மகிழ்வித்து மகிழ்தல் எனும் உயர்ந்த குணப்பண்புக்கு அன்பே ஆதாரசக்தி, அத்தகைய அன்பின் நெகிழ்ச்சியால் பெருந்தகை பி.ஏ.சி.ஆர், வாழ்ந்த பகுதி வளம் கொழிக்கும் வடிவம் பெற்றது. அப் பெருமகனாரின் தூய்மையான மனத்தில் .ருவான பண்பு நலம் மானுடர்க்கு வாழ்வை அளித்தது.

## தொழில்

விவசாயப் பெருங் குடும்பத்தில் பிறந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர், முப்பத்தைந்து வயதுக்கு மேல் வணிகத்தில் ஈடுபட்டார். வணிகத்திலும் கூட்டு முயற்சியாகவே பல்வேறு நிறுவனங்களை உருவாக்கினார்.பெரும்பான்மையான அப்பெருமகனாரது கூட்டு வணிக முறை, வளர்ச்சிக்கோ, வணிகப் பெருக்கத்திற்கோ இடம் தர இல்லை. எனவே தமக்கும் 'பார்ட்னர்ஷிப்' வணிகத்திற்கும் பொருத்தமில்லை, ராசி இல்லை என அப் பெருமகனார் கருதியிருக்கிறார்.

குடும்பங்களில் சில குழந்தைகள் பிறக்கின்றபோதே, பெற்றோருக்கு வளத்தையும், செல்வநலத்தையும், செல்வாக்குப் பலத்தையும் கூட்டுவிக்கக் கூடிய நன் நிமித்தங்கள் உருவாக்கம்

கொள்ளுமென்பது இந்தியக் குடும்பங்களின் நம்பிக்கை. பிறந்த நேரம், வளத்தையும் வறுமையையும் நிர்ணயிக்கும் திசைகாட்டியென பெரும்பான்மையான மக்கள் நம்புகின்றனர்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆருக்கு ஆறாவது குழந்தை, அன்னையின் திருவயிற்றில் கருவுற்றபோதே, பெருந்தொழில் ஈடுபாடு பிறந்து விட்டது. தொழில் சம்மந்தமாக அயல் நாட்டுப் பயணத்தில் ராஜா, ஆய்வு செய்து தொழிலை தொடங்கிவிட முடிவு செய்த கால கட்டத்தில், அப் பெருந்தகைக்கு ஆறாவது குழந்தை ஆண் குழந்தையாக மக நட்சத்திரத்தில் ஜனனமானது ! ஆம், 1935 ஆம் ஆண்டு ராஜாவின் ஒரே புதல்வர் இராமசுப்பிரமணிய ராஜாவும் பிறந்தார்; பி.ஏ.சி.ஆரின் பேருள்ளத்துள் பெருந்தொழில் உருவாக்க வேண்டுமெனும் உறுதியும் பிறந்தது !

ஆறாவது பிறந்த தமது திருமகனார் வளர வளர, ராஜா தொழில் உலகத்தில் நாளும் வளர்ந்து கொண்டே இருந்தார். 1938 ஆம் ஆண்டு அப் பெருமகனார் முதன் முதலில் நிறுவிய இராஜபாளையம் நூற்பாலை முதலாக 1961 ஆம் ஆண்டு உருவாக்கிய மெட்ராஸ் சிமிண்ட்ஸ் பேராலை வரை ஆறு தொழில்களை அமைத்து 'பெருந் தொழிலதிபர்' எனும் பெரும் பெயர் பெற்றார். அவைகளில் ஆணி உற்பத்தி செய்யும் கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ், நிறுவனத்தைத் தவிர மற்ற ஐந்தையும் ராஜா, 'பப்ளிக் லிமிடெட்', கம்பெனியாக மிளிரச் செய்து, பங்குதாரர்களின் முதலீட்டு நிறுவனங்களாக உருவாக்கம் கொள்ளச் செய்தார்.

தொழில் துறையில் பங்குதாரர்களை மரியாதைக்குரியவர்களாக மதித்துப் போற்றி, அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய 'டிவிடெண்ட்' முறையாக ஆண்டு தோறும் வழங்கப்பட வேண்டுமென்பதில் அளப்பரிய அக்கறையும், கவனமும் கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர், ஒரு வித்தியாசமான தொழிலதிபராய் விளங்கினார்.

ஐந்து பெருந் தொழில்களை 'பப்ளிக் லிமிடெட்' நிறுவனங்களாக நிறுவிய அப் பெருமகனார், ஒன்றே ஒன்றை மட்டும் தமக்குரிய தனித்தொழிலாகக் கொண்ட காரணத்தை அறிகின்றபோதும், 'இப்படியும் ஒரு தொழிலதிபரா?' என வியந்து போகின்றோம் !

தமக்குரிய தனித்தொழிலாகக் கொண்ட திருகாணித் தொழில், வெற்றியளிப்பது வெகு குறைவென, அனுபவம் கொண்ட அநேகர் ராஜாவிடம் எடுத்துக் கூறினர். இந்தியாவில் தயாரிக்கப் பெறும் ஆணிகளின் விற்பனை, அவைகளின் 'கூர்மை'யைப் பொருத்ததுதானென்றும், சாதாரணமாக ஆணித் தயாரிப்பில் உரிய 'கூர்மை' அமைவது அரியதாக இருந்து வருவதாகவும் சொல்லக் கேட்ட பி.ஏ.சி.ஆர், தொடங்கும் கௌரி மெட்டல் நிறுவனம் நன்றாக அமைந்தால்தான் போயிற்று; ஒருவேளை நட்டம் சேர்ந்துவிடில், பங்குமுதல் அளித்தவர்களைப் பாதித்து விடுமே? நட்டம் நம்மோடு இருக்கட்டும் ! மற்றவருக்கு நட்டம் நம்மாலும், நம் தொழிலாலும் ஏற்பட்டுவிடக் கூடாதென்ற எண்ணத்தில்தான் ராஜா, ஆணித்தொழிலை தமக்குரியதாக நிறுவினாராம் ! எத்தகைய மன நலத்தை, குண வளத்தை அப் பெருமகனார் பெற்றிருந்திருக்கிறார்!

பொதுவாகத் தொழில் தொடங்குவதே பணம் சம்பாதிக்கும் நோக்கில்தான். பணம் சம்பாதிக்கும் நோக்கம் மட்டும், அப் பெருமகனார் தொழில்களைத் தொடங்குவதற்குக் காரணமாக அமையவில்லையென்பதை ஒரு நிகழ்ச்சியால் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

விருதுநகருக்கு அருகே சிமிண்ட் பேராலையை நிர்மாணிக்கும் பணியில் வெகு தீவிரமாக இயங்கிக் கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர். சென்னை சென்றபோது, அப்போது தொழில் அமைச்சராக இருந்த ஆர்.வி.யைப் பார்த்தார். ஆர்.வி., ராஜாவிடம் ஒரு நல்ல தகவலைச் சொன்னார்.

தமிழ்நாட்டில் டயர் ஃபாக்டரி ஆரம்பிக்க லைசென்சு உள்ளதென்றும், அந்த லைசென்ஸை ராஜாவுக்குக் கொடுத்தால்

நன்றாக நடத்துவாரென முதல்வர் காமராஜ் கருதுவதாகவும் ஆர்.வி. மகிழ்ச்சியாக எடுத்துக் கூறியபோது, "நீங்க ஒரு காரியத்தை ஏற்கனவே என்னிடம் நம்பிக்கையோடு கொடுத்திருக்கீங்க! அதை சரியா முடிச்சுட்டுத்தானே வேறு காரியத்தில் இறங்க முடியும்!" எனக்கூறி, ராஜா, டயர் ஃபாக்டரி லைசென்சைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

பணம் சம்பாதிக்கும் நோக்கம் மட்டும் அப் பெருந்தகைக்கு இருந்திருக்குமானால் 'ஆகா அடுத்து ஒரு லைசன்சா? கொண்டாருங்கள்' என ஆர்வத்தோடு பெற்று அந்தத் தொழிலிலும் வருமானம் பார்க்கத் தொடங்கி இருப்பார். அத்தகைய மனோபாவம் எந்தத் தொழிலைத் தொடங்கிய போதும் ராஜாவுக்கு இருந்ததில்லை.

தாம் தொடங்கும் புதிய, புதிய தொழில்களால், சுற்றுப்புறத்தில் வாழ்கின்ற மக்கள் அதிக வேலை வாய்ப்பைப் பெறுவார்களெனவும், நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தம் தொழில்களும் உரிய துணைகளாக அமையும் என்றும் அப் பெருமகனார் நம்பினார். நம்பிக்கை நனவாயிற்று, ராஜாவின் தகுதி மேலோங்கிற்று.

'தொழிலில் பணம் சம்பாதிப்பது பெரிதல்ல; நம்பிக்கை, நாணயம், தரம் ஆகியவை மேலோங்கச் செய்வதே தொழிலுக்குரிய அடிப்படையான ஆதாரங்கள். பணத்தை எப்போது வேண்டுமானாலும் ஈட்டிக் கொள்ளலாம். நம்பிக்கையோ, நாணயமோ, தரமோ ஒரு முறை தாழ்ந்துவிடில், பிறகு தொழிலை வாழ்விப்பது அருமையாகப் போய்விடும்' இத்தகைய எண்ணக் கோட்பாட்டை இதயத்தில் பதிவாக்கிக் கொண்டவர் ராஜா. எனவே அப் பெருமகனார் தொடங்கிய தொழில்களனைத்துமே மக்களிடம் தனியானதொரு பெருமையைப் பெற்று இயங்கி வருகின்றன.

தொடங்கிய நிறுவனங்கள் அனைத்திலும் நேர்மையான வரவு, செலவுகளை மேற்கொள்வதில் கவனமும், கருத்தும் கொண்டதால்,

ராஜாவின் தொழிலகங்கள், அரசாங்க அதிகாரிகளிடம் பெருமைக்குரிய மதிப்பீட்டைப் பெற்றுத்திகழ்ந்தன - திகழ்கின்றன.

தொழில் சம்பந்தமான ஆலோசனைகளை அவ்வப்போது தமது சகோதரர் பி.எஸ்.கே.யிடம் கலந்து ஆலோசிக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தார் பி.ஏ.சி.ஆர்.

'தொழில் தர்மம்' என்ற சொற்களுக்குரிய முழுமையான பொருளை ராஜா தொடங்கி வைத்த நிறுவனங்களிலும், அப் பெருமகனாரின் திருக்குமாரர் பி.ஆர்.ஆர், உருவாக்கிய தொழிலகங்களிலும் தரிசித்து மகிழலாம்; தகுதிக்கு தலை வணங்கலாம்.

'தொழிலும் ஒரு தொண்டே' என நிலை நிறுத்தியவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

## தொழில் உறவு

முதன் முதலில் 1938 ஆம் ஆண்டின் ஒரு நல்ல நாளில், இராஜபாளையம் ஆலையை, விழாவெடுத்துத் தொடங்கி வைக்கின்றபோதே, பி.ஏ.சி.ஆர், 'நிறுவனத்தின் வளர்ச்சியும், இணக்கமான இயக்கமும் தொழில் உறவை ஆதாரமாகக் கொண்டவையே' என்பதைத் தமது வரவேற்பு உரையில் குறிப்பிட்டார். தொழில் உறவு நிலைத்த தன்மைபெற வேண்டுமேயானால், நிறுவனத்தில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு, மன நிறைவு ஏற்படும்வகையில், ஆலையின் நடைமுறைகள் பேணப்பட வேண்டும். மன நிறைவான தொழிலாளியே, உரிய வேலையை சிறப்பாகச் செய்ய இயலும்; அதன் மூலம் நல்ல லாபத்தை ஈட்ட முடியும். நிர்வாகத்தை, நம்பிக்கையோடும் எண்ணிப் பார்க்க முடியும். அத்தகைய நம்பிக்கையே, நல்லிணக்கம் உருவாவதற்கு, தொழில் உறவைத் தோற்றுவிப்பதற்கு ஆதார சக்தியாக அமையுமெனக் கருதினார் ராஜா.

எனவே பி.ஏ.சி.ஆர், தாம் தொடங்கிய தொழில் நிறுவனங் களிலெல்லாம், நிர்வாகத்திற்கும், தொழிலாளர்களுக்கும் இடையே தோன்றும் நம்பிக்கை, எந்தக் காரணத்தைக் கொண்டும் நலிந்து போய்விடாமல், எக்காலத்தும் நன்னிலையில் இருக்கக் கவனம் கொண்டார். இயல்பாகவே மனித நேயமும், கருணை உணர்வும் கொண்டிருந்த அப் பெருமகனார். தொழிலாளிகளின் வேண்டுதல்களை, கோரிக்கைகளை பரிவோடும், இணக்கத் தோடும் எதிர் கொள்வதைப் பழக்கப்படுத்திக் கொண்டிருந்தார். சட்டத்தின் மூலம் முடிவாகும் தீர்மானங்கள் மனக் காயத்தை ஏற்படுத்தி விடுமெனக் கருதிய பி.ஏ.சி.ஆர், எத்தகைய பிரச்சனையானாலும் பேச்சுவார்த்தை மூலம் இணக்கமாக முடிவெடுப்பதையே பெரிதும் விரும்பினார்.

தொழிலாளர் தலைவர்களுடன் பேசி, பேச்சுவார்த்தையில் தீர்மானிக்கும் முடிவுகள் பற்றி, ராஜா வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம், தொழிலாளர்கள் பலரிடம் தனித் தனியாகக் கேட்டு, நிறைவான மனத்தோடு நிலவுகின்றார் களாவென அறிந்து கொள்வார். விசாரிப்புகளை அப் பெருமகனார் வாஞ்சையோடு வினவி, வினயத்தோடு தெரிந்து கொள்வார். தொழிலாளியின் குடும்பநிலை பற்றி அறிந்து கொள்வதிலும் ராஜா ஆர்வம் காட்டுவார். சிற்சில சமயங்களில் தொழிலாளர் சிலரை அழைத்துத் தனித்தனியாக ஆலோசனை களும், அறிவுரைகளும் ராஜா வழங்குவதுண்டு. அப் பெருமகனார் தொடங்கிய அனைத்துத் தொழில் நிறுவனங்களிலும் பணியாற்றிய தொழிலாளர்கள் ராஜாவை மிகுந்த அன்போடும், மரியாதையோடும் 'முதலாளி, முதலாளி' எனக் குறிப்பிட்டு மகிழ்ந்தார்கள்.

“பெரும்பான்மையும் 'முதலாளி' எனக் கூறப்படுபவர்கள் பணத்துக்குத்தான் மதிப்புக் கொடுப்பார்கள். பி.ஏ.சி.ஆர், ஒரு வித்தியாசமான முதலாளி ! நாணயம், கட்டுப்பாடு, ஒழுக்கம் ஆகியவற்றுக்கே அவர் மதிப்புக் கொடுப்பார் ! தொழில் அமைதியின் சூட்சுமம் தெரிந்த முதலாளி ! தொழிலாளியைப்

பார்த்து, 'உன்னால்தான் இந்த வளர்ச்சி! உன்னால் தான் இந்த வளர்ச்சி' எனத் தட்டிக் கொடுத்துத் தொழில் உறவை வளர்த்துக் கொண்ட முதலாளி! தொழிலாளிக்கு வழங்குவதை சந்தோஷமாக நினைக்கும் முதலாளி !" எனக் கருத்துத் தெரிவித்தார் இந்திய நாட்டின் முதலாளிகள் பலரைச் சந்தித்துள்ள, இந்திய தேசீயத் தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் ஜி. இராமானுஜம்.

தொழிலாளி தன்னைப்பற்றியே, தனது ஊதியம் பற்றியே நினைப்பதாலும் முதலாளி தமது நலம் பற்றியே, தமது வருமானம் பற்றியே சிந்திப்பதாலும் தொழில் உறவு நீர்த்துப் போகிறது; நிலையற்று விடுகிறது ! பிறகு, அங்கே தொழிற் சிக்கல் தோன்றி விடுகிறது ! தொழில் நலியத் தொடங்குகிறது.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், உருவாக்கிய நிறுவனங்களில் தொழில் உறவு செழுமையும், சிறப்பான தன்மையும் பெற்றிருப்பதற்கு அடிப்படை - முதலாளி, தொழிலாளியின் குடும்பம் கவலையற்று இருக்க வேண்டுமெனக் கருதுகிறார்! தொழிலாளி - தொழில் வளர்ச்சிபெற வேண்டுமெனக் கருதிப் பணியாற்றுகிறார் ! இது 'ராம்கோ' நிறுவனங்களின் அரிய சாதனை ! இத்தகைய சாதனைக்கு வழி அமைத்து, வழி காட்டியவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர், ஆவார் !

அனைவரிடமும் அன்போடு பழகும் இயல்பைப் பெற்றிருந்த பி.ஏ.சி.ஆர், தமது நிறுவனங்களில் பணியாற்றும் தொழிலாளர் களிடம்,ஒரு குடும்பத் தலைவரைப் போன்று நேயம் காட்டி வந்தார். எனவே பணியாற்றிய தொழிலாளர்கள் அனைவருமே அப் பெருமகனாரிடத்து உள்ளார்ந்த பாசமும், உரிய மரியாதையும் கொண்டிருந்தனர். உடல் நலமின்றிச் சென்னையில் 1962 ஆம் ஆண்டு பி.ஏ.சி.ஆர், தங்கியிருந்தபோது 'முதலாளி சௌகரியமில்லாது இருந்து வருகிறார்களாமே?' எனக் கவலையோடு தொழிலாளர்கள் ஒருவருக்கொருவர் கேட்டு விசாரித்துக் கலக்கம் கொண்டனர். சிலர் சென்னைக்கே சென்று, ராஜாவின் உடல் நல நிலையை நேராகக் கண்டு, கேட்டு வந்தனர்.

சென்று வந்தவர்களைச் சூழ்ந்து நின்று, ராஜாவின் உடல் நலம் பற்றித் தொழிலாளர்கள் அறிந்து கொள்வதில் அளப்பரிய ஆர்வம் காட்டினர்.

ஒருமுறை ஏ.ஐ.டி.யு.சி. சங்கப் பொறுப்பாளர் 'பி.எம்.ஆர்' எனக்கூறப் பெறும் பி.எம். ராமசாமி, ராஜாவின் உடல்நிலை பற்றி அறிந்து கொள்ள சென்னை சென்றார். அடையாறு பங்களாவில் தங்கியிருந்த அப் பெருமகனார், ராமசாமியிடம் காட்டிய வாஞ்சை நிறைந்த பேரன்பைச் சொல்லிச் சொல்லி இன்றும் நெஞ்சம் நெகிழ்கிறார். ஐ.என்.டி.யு.சி. தலைவர் பி.கோவிந்த ராஜா சென்னையில் ராஜாவைப் பார்த்து உடல்நலம் பற்றி விசாரித்தபோது, அப் பெருமகனார் தாம் ஒரு தொழிலதிபர் என்பதையே மறந்து, மிகுந்த இணக்கத்துடன் மனந்திறந்து உரையாடிய பாங்கினை இன்றும் நினைவு கூர்கிறார். அனைத்திந்திய அளவில் தொழிலாளர் பிரச்சனைகளில் பல்லாண்டுகளாக அனுபவச் செறிவு கொண்ட பெருந்தலைவர் ஜி. இராமானுஜம், "தர்ம சிந்தனையும், பரந்த மனப்பான்மையும், மனித நேயமும் கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர், இந்தியத் தொழில் அதிபர்களுக்குள் ஒரு ஜனகர் !" என ராஜாவைப் பற்றிய தமது கருத்தை முத்தாய்ப்பாகத் தெரிவித்தார். ஆக, தொழிலாளர் அமைப்பின் அனைத்திந்திய பெருந்தலைவரும், நிறுவனங்களில் பொறுப்பு வகிக்கும் அடிப்படைத் தலைவர்களும், அப் பெருமகனாரிடம் கொண்டிருந்த மதிப்பும், அப் பெருமகனாரைப் பற்றிய கணிப்பும், பெருந்தகை பி.ஏ.சி.ஆர், தொழில் உறவை வளர்த்த சிறப்பைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

ராஜாவின் வழியை நினைவில் கொண்டும். வழிகாட்டலை நெஞ்சில் கொண்டும் அப் பெருமகனாரின் திருக்குமாரர் பி.ஆர்.ஆர், 'ராம்கோ' நிறுவனங்களில் தொழில் உறவை வளர்த்து வரும் பான்மை, போற்றற்குரிய மேன்மையாகத் திகழ்ந்து வருகின்றது !

பாடுபட்ட தொழிலாளி ஓய்வுபெற்ற பின்னர் பத்தாண்டுகளுக்கு ஓய்வூதியம், மன வளமும், உடல் நலமும் பெறுதற்கெனத்

தொழிலாளர்களுக்குச் சாரல் பருவத்தில் குற்றாலமுகாம், தொழிலாளர்கள் சொந்த குடியிருப்பு கட்டிக்கொள்ள உதவி மன மகிழ்ச்சி பெறுதற்கென சுற்றுலாக்கள், எல்லாவற்றிற்கும் மேலாக தொழிலாளர்களின் குழந்தைகள் பயில்வதற்கெனத் தொழிற் கல்வி நிலையம் முதலிய பல்வேறு நலன்களை அளித்து வரும் 'ராம்கோ' தொழில் உறவில் பாராட்டத் தக்க வரலாற்றைப் படைத்து வருகின்றது.

## தெய்வபக்தி

தெய்வம் சொல்ல மனிதன் கேட்டது கீதை! மனிதன் சொல்லத் தெய்வம் கேட்டது திருவாசகம் !

"எவனைக் கண்டு உலகம் ஆத்திரப்படுவதில்லையோ, எவன் மற்றவ ரிடம் பகைமை கொள்ள மாட்டானோ, எவன் உறுதியான கொள்கையை ஏற்று, மனத்தையும், மதியையும் எனக்கு அர்ப்பணம் செய்கின்றானோ, எவன் கடமையைச் செய்வதில் வல்லவனாய்த் திகழ்கிறானோ, எவன் எல்லோரிடத்தும் கனிந்த அன்பு கொள்கின்றானோ, எவன் என்னிடத்து எல்லையற்ற பக்தி செலுத்துகிறானோ-அவனே என் அன்பன்" எனக் கீதை சொல்கிறது.

"பணிவார் பிணி தீர்த்தருளிப் பழைய அடியார்க்குன் அணியார் பாதம் கொடுத்தி..." எனத் திருவாசகம் பேசுகின்றது. பக்தியால், பணிந்து வழிபாடு செய்து வாழ்வதே தெய்வ நெறி வாழ்க்கை, அத்தகைய நெறியில் நின்று, உணர்வில் திளைக்கும் மனிதனின் உள்ளத்தில் இறைவன் எழுந்தருளுகின்றான். அதைத்தான் கீதை சொல்கிறது; திருவாசகம் பேசுகிறது! பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் பேருள்ளத்தில் தெய்வம் எழுந்தருளித் திருவருள் பாலித்ததை, அப் பெருமகனாரின் இறையுணர்வும், பக்தியும், பிரார்த்தனையும், வழி பாடும் தெளிவிக்கின்றன.

அப் பெருந்தகையின் ஜனனமே, இராமேஸ்வரம் இராமநாத சுவாமியின் திருவருளால் நிகழ்ந்ததென்பதை அறிவோம். அதனால்தான் தமது ஒவ்வொரு பிறந்த நாளுக்கும் அப்பெருமகனார் இராமேஸ்வரம் சென்று, பெருமானை வழிபட்டுப் பிரார்த்திப்பதை வழக்கமாக்கிக் கொண்டிருந்தார். தமக்கு அறுபது வயது நிறைவான போது, தமது மணிவிழாவை அடக்கமாக, குடும்பத்தினருடனும், நெருங்கிய உறவினர்களுடனும் இராமேஸ்வரம் இராமநாத சுவாமியின் திருமுன்னர் பி.ஏ.சி.ஆர். செய்து கொண்டார். இராமேஸ்வரம் திருக்கோயிலுக்கு ராஜா, யானை ஒன்றை வழங்கி மகிழ்ந்தார்.

திருக்கழுக்குன்றம் சுவாமிகளின் தொடர்பு ஏற்பட்ட பின்னர், பி.ஏ.சி.ஆர், திருச்செந்தூர் முருகப் பெருமானிடத்து மிகுந்த ஈடுபாடு கொண்டார். கார்த்திகை தோறும் மௌன விரதம் மேற்கொள்வார். ஒருமுறை ஏடு பார்த்தபோது, முற்பிறவியிலும், தாம் முருக பக்தராக இருந்ததை ஏடு தெரிவித்தபோது, அப்பெருமகனார் எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டாராம்! முருகப் பெருமானிடத்துக் கொண்டிருந்த கனிந்த பக்தியால், தமது புதல்வர் பிறந்த போது முதல் மொட்டைப் பிரார்த்தனையைத் திருச்செந்தூரிலேயே ராஜா செலுத்தினார். கந்த சஷ்டியின்போது, திருச்செந்தூருக்குக் குடும்பத்துடன் சென்று விரதமிருந்து பிரார்த்திப்பார் ! எல்லாவற்றிற்கும் மேலாக, அனுதினமும் முருகப்பெருமானை சிந்தித்துச் செயலாற்றும் பழக்கத்தை வழக்கமாக்கிக் கொண்டிருந்தார் !

தமது புதல்வி சிட்டம்மாளையும், பேத்தி சுதர்சனம் அம்மையாரையும் மதுரையில் தனிப் பங்களாவில் மூத்த மகள் லிங்கம்மாளுடன் தங்க வைத்து, கல்வி பயில வைத்திருந்தபோது, வாரத்திற்கு இருமுறை, மும்முறை இராஜபாளையத்திலிருந்து மதுரை வந்து, அவர்களைப் பார்க்கும் போது, ஒவ்வொரு மாலை நேரத்திலும் அவர்களை மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலுக்கு அழைத்துச் செல்வார். காரில் திருக்கோயிலுக்கு செல்லும் போதும், திரும்பும்போதும் பக்தி சம்பந்தமான புராணக்கதைகளை எடுத்துரைப்பார். பங்களாவில் குழந்தை

களைக் கூட்டி வைத்துக் கொண்டு இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்களை எடுத்துக் கூறுவார். ஒருமுறை மதுரை வந்திருந்தபோது, மீனாட்சி அம்மன் திருக்கோயிலுக்குச் சென்று வந்த பி.ஏ.சி.ஆர், தமது திருக்குமாரர் இராம சுப்பிரமணிய ராஜாவுக்கும், பேத்தி சுதர்சனம் அம்மையாருக்கும் திருமணம் புரிய மதுரை மீனாட்சி திருவருள் அனுமதி வழங்கியிருப்பதாக லிங்கம்மாளிடம் தெரிவித்துப் பெரிதும் மகிழ்ந்தாராம். அதன் பின்னரே இராஜபாளையத்தில் இராமசுப்பிரமணிய ராஜா-சுதர்சனம் அம்மையார் திருமணத்தை 1958 ஆம் ஆண்டு ராஜா வெகு விமரிசையாக நடத்தினார்.

தங்கள் குலதெய்வம் வேட்டைப் பெருமாள் கோயிலுக்கு, இராஜபாளையத்தில் இருந்தால் சனிக்கிழமை தோறும் சென்று வழிபாடு செய்கின்றபோது, பி.ஏ.சி.ஆர், மகனையோ, மகளையோ, உடன் அழைத்துச் செல்வது வழக்கம். தமது தந்தையார் காலத்தில் திருப்பணி செய்யப் பெற்ற சொக்கர் கோயிலுக்கு அவ்வப்போது குடும்பத்துடன் சென்று பிரார்த்திப்பார். தெய்வ பக்தியில் ஈடுபட இதுதான் நேரம் என ஒன்றுமில்லை. தெய்வ பக்தி இடையீடு இல்லாது திளைக்கும் ஓயா இயக்கம்; இடைவெளி அற்ற உள்ளுணர்வு, ராஜா, விழித்திருக்கும் நேரமெல்லாம் வாழ்வு முற்றும் இறைவனிடத்து இடையீடில்லாத உணர்வோட்டத்தைக் கொண்டிருந்தார். எந்தச் செயலாயினும் பிரார்த்தனை இல்லாமல் பி.ஏ.சி.ஆர், தொடங்கியதில்லை! தெய்வத்தையும், தெய்வத் திருவருளையும் மறந்து வாழ்கின்ற நேரம், இறந்து வாழ்கின்ற நேரமேயென ராஜா கருதினார். இறையின்பத்தில் ஈடு இணையற்ற ஆன்ம சுகத்தை இளமையிலிருந்தே அனுபவித்து வந்த பி.ஏ.சி.ஆர், எல்லாம் இறைவனது திருவருளால் நிகழ்கிறதென்பதில் பரிபூரணமான நம்பிகை கொண்டு,

"மாமனுஸ் மாயுத்யஸ்ச" (என்னைச் சிந்தித்து யுத்தத்தில் ஈடுபடு) என அருச்சுனனுக்குக் கண்ணபரமாத்மா கீதையில் அருளிய கீதோபதேசத்தை, தமது வாழ்வில் கடைப்பிடித்தார்.

சிருங்கேரி சாரதாபீடம் ஸ்ரீஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மகா சுவாமிகளை பக்தி பூர்வமாக வரவேற்றுப் பாதபூஜை செய்து மகிழ்ந்த பெருந்தகை பி.ஏ.சி,ஆர், தருமபுரம் மகாசந்நிதானம் அவர்களையும், திருவாவாடுதுறை மகா சந்நிதானம் அவர்களையும், இராஜபாளையத்தில் வரவேற்று ஆனந்தித் துள்ளார். குருமகராஜ் சின்மயானந்தாவை தென் தமிழ்நாட்டுக்கு அறிமுகப்படுத்தியதோடு ராஜா சுவாமிகளிடம் கொண்ட பக்தியால், இராஜாபாளையத்திற்கும் சுவாமிகளுக்கும் நெருக்கமான தொடர்பை ஏற்படுத்தித் தொடர்ந்து சுவாமிகளின் நல்லாசியைப் பெற்றுவந்தார். இராஜபாளையம் இராமகிருஷ்ணா சேவா சங்கத் தலைமைப் பொறுப்பை ஏற்று, 'கீதாயக்ஞம்' போன்ற அருளார்ந்த நிகழ்ச்சிகளை ராஜா நிகழச் செய்து, நகரில் தெய்வீக மணம் கமழச் செய்தார். ஒரு முறை தருமபுர ஆதீன மகாசந்நிதானத்தைக் கண்டுகொள்ள தர்மபுரம் சென்றிருந்த பி.ஏ.சி.ஆர். தஞ்சை மாவட்டத்திலுள்ள திருமடங்களுக்கெல்லாம் சென்று திருவருள் மகாசந்நிதானங்களையெல்லாம் தரிசித்தார். இராமசாமி ராஜாவின் தகுதியையும், ஆன்மீகநெறி சார்ந்த அருள் உள்ளத்தையும், தெளிவாக அறிந்திருந்த திருவாவடுதுறை, திருப்பனந்தாள், தருமபுரம் ஆதீன ஞானச் செல்வர்கள், ராஜாவுக்குப் பட்டாடை அணிவித்துப் போற்றிச் சிறப்புச் செய்தனர்.

அத்வைதத் தத்துவங்கள் பற்றியும், ஆன்மீக நெறிகள் குறித்தும் அருளாளர்களோடும்,அறிவாளர்களோடும்கலந்துரையாடுவதில் அளப்பரிய ஆர்வம் காட்டி வந்தார் அப் பெருமகனார். இராஜபாளையம் சாந்தானந்த சுவாமிகள் ராமமந்திரத்திற்கு அடிக்கடி வருகை தருவார்கள். சுவாமிகளோடும்,தமது பள்ளியில் சமஸ்கிருதப் பண்டிதராகப் பணியாற்றிய, வேத சாஸ்திரமறிந்த கே.ஜி. கிருஷ்ணமூர்த்தி ஐயரோடும், மணிக் கணக்காகத் தெய்வ நெறி குறித்துத் தெளிவு பெறுவதற்காக உரையாடி மகிழும் வழக்கத்தை கொண்டிருந்தார் ராஜா.

ஆன்மீகச் சொற்பொழிவுகளை ஆர்வத்தோடு சென்று கேட்கும் இயல்பினைப் பெற்றிருந்த ராஜா, சென்னை செல்லும்

போதெல்லாம் காலையில் 'ஹிந்து' பத்திரிகையை வாங்கியதும், 'இன்றைய நிகழ்ச்சி'ப் பகுதியில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காச்சாரியார் பிரவசனம் உள்ளதா எனப் பார்த்து, இருப்பின் தவறாது அந் நிகழ்ச்சிக்குச் சென்று செவிமடுப்பார். அறிஞர் பெருமான் பிரதிவாதி பயங்கரத்தின் ஆன்மீகச் சொற்பொழிவில்பெரிதும்ஈடுபாடு கொண்டிருந்தார் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

ஒவ்வொரு அமாவாசையும், புண்ணிய காலமாகக் கருதப்படுகின்றது. அன்று தர்ப்பணம் செய்வதால், பித்ருக்கள் மகிழ்ந்து ஆசீர்வதிப்பார்களென சாஸ்திரம் கூறுகிறது. அமாவாசை வருகின்ற நாளை, பித்ரு தினமாகக் கொள்வது சாஸ்திரம் அறிந்தோர் மரபு. பி.ஏ.சி.ஆர், தமது இருபத்தைந்தாம் வயதிலிருந்தே அமாவாசையன்று தர்ப்பணம் செய்வதை தவறாத மரபாக மேற்கொண்டிருந்தார். சென்னை சென்றால், கடற்கரைக்கே சென்று தர்ப்பணம் செய்துவிட்டு, மைலாப் பூரிலுள்ள பிரசித்திபெற்ற அனுமார் கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்வார்.

இராஜபாளையம் காந்தி கலை மன்றத்திற்கு வேண்டிய காந்தியடிகளின் உருவச்சிலை உருவாகிக் கொண்டிருந்த, ஓரிடத்திற்கு பெருந்தகை பி.ஏ.சி.ஆரும், தியாகசீலர் பி.எஸ்.கே.யும் காலை எட்டு மணிக்குச் செல்ல வேண்டியிருந்தது. அன்று அமாவாசை. தர்ப்பணம் செய்யக் கடற்கரைக்குச் சென்ற ராஜா, சாஸ்திரிகளிடம் கொஞ்சம் வேகமாக மந்திரங்களை அருளுமாறு வேண்டினார். பெரியவர் வேகமாகச் சொல்லச் சொல்கிறாரே என நினைத்து, சொல்லிக் கொண்டே வரும்போது சில மந்திரங்களை விட்டுவிட்டு கூறவே, "என்ன சுவாமிகளே! மந்திரங்களைச் சற்று வேகமாகத்தான் கூறுங்கள் என்றேனே தவிர, முற்றுமாக சிலவற்றைநீக்கிவிட நான் சொல்லவில்லையே?" என ராஜா கூறியதும், திடுக்கிட்ட சாஸ்திரியார் மன்னிக்குமாறு வேண்டி, நீக்கிவிட்ட மந்திரங்களை மீண்டும் சேர்த்துக் கூறத் தொடங்கினாராம். எத்தனை காலமாகத் தர்ப்பணம் செய்து

வருகிறார் அப்பெருந்தகை? மனதில் பதிவான மந்திரங்களாயிற்றே?

தாயுமானவர், அருணகிரிநாதர், பட்டினத்தார், ஆழ்வார் பெருமக்கள் ஆகிய அருளாளர்களிடம் நிறைந்த ஈடுபாடு கொண்டிருந்த ராஜா, நம்மாழ்வாரிடத்து ஆழ்ந்த பற்றுதல் கொண்டிருந்தார். அதிகாலைப் பிரார்த்தனையில் நம்மாழ்வார் திருவாய்மொழியிலிருந்து நான்கைந்து பாசுரங்களைப் பாடிப் பிரார்த்தனையை ராஜா நிறைவு செய்வார்.

ஒரு நாளும் இந்த வழக்கத்திலிருந்து ராஜா தவறியதே இல்லையாம்!

பேரன்களைக் காணும் தாத்தாக்கள், தமது பிரியத்தை, விருப்பத்தை பேரன்களின் மேல் ஏற்றிச் சொல்வது உலக இயல்பு. பிரியங்களும், விருப்பங்களும் தாத்தாக்களின் மனத்தைப் பொருத்தது; மனோபாவத்தைத் தெளிவாக்குவது. ‘என் பேரன் டாக்டராவான்’ என்பார் ஒரு தாத்தா. மற்றொருவரோ, ‘என் பேரன் இஞ்சினியர் ஆவான்’ என்பார். பி.ஏ.சி.ஆர். தமது பேரன் வெங்கட்ராம ராஜாவைப் பார்க்கும்போது “இவன் பெரிய ஞானியாய் வருவான் !” என்பாராம். இந்த வார்த்தைகளே அப் பெருமகனாரின் மன இயல்பை, மனோபாவத்தை அடையாளம் காட்டுகின்றன ! இல்லையா?

காசி யாத்திரைக்குக் குடும்பத்துடன் சென்று வந்தார் ராஜா. ரிஷிகேசம் வரை சென்று சாதுக்களையும், தபோ முனிவர்கள் சிலரையும் தரிசித்து வந்ததைப் பெறற்கரிய பேறு எனக்கூறுவாராம் அப் பெருந்தகை.

காலையில் திருமண் இட்டுக் கொள்ளும் பழக்கத்தைக் கொண்டிருந்த ராஜாவின் இடது கரத்து உள்ளங்கை எப்போதும் சிவப்பு, மஞ்சள் வண்ணப் பொலிவுடன் விளங்கும்.

மெட்ராஸ் சிமிண்ட்ஸ் பேராலையில் முதன் முதலில் உற்பத்தியான முதல் மூடை சிமிண்ட்டை காணிக்கையாக திருப்பதி வெங்கிடாஜலபதிக்கு அனுப்பி வைத்தார் பி.ஏ.சி.ஆர், சென்னை

மாகாண அமைச்சராக வீற்றிருந்தவரும், திருப்பதி தேவஸ்தான அறங்காவலர்கள் தலைவராக இருந்தவருமான கே.வெங்கடசாமி நாயுடு, திருப்பதிக்குரிய சிமிண்ட்டைப் பெற்றுக் கொண்டார்.

"கடவுளை மனப்பூர்வமாக நம்புகிறவர்களுக்கு மனோ தைரியம் உண்டாகும். அந்த மனோ தைரியத்தை நம்பி வாழ வேண்டுமேயன்றி, பிறர் உதவியை நம்பி வாழக்கூடாது" என்றார் காந்தியடிகள். அத்தகைய மனோ தைரியத்தைப் பெற்று மனத் தூய்மையுடன் வாழ்ந்தவர்தான் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

## கருட தரிசனம்

ஒவ்வொரு சனிக்கிழமையும் பகல் ஒரு வேளை உணவுடன் விரதம் மேற்கொள்ளும் பழக்கத்தை இளமையிலிருந்தே மேற்கொண்டிருந்தார் ராஜா. அன்று கருடனைத் தரிசித்து மன நிறைவு பெறும் வழக்கத்தையும் கொண்டிருந்தார் அப்பெருமகனார்.

சில நாள்களில் காலை வேளையிலேயே கருட தரிசனம் கிடைத்துவிடும் . அன்று மிக மகிழ்ச்சியாக விளங்குவார் பி.ஏ.சி.ஆர், சிலபோது மதியம் வரை கருடனைக் காணாது ஏங்கியிருப்பார் ராஜா. ஒரு சில சனிக்கிழமைகளில் மாலையில் தான், தரிசனம் கிட்டும். எப்படியாயினும் சனிக்கிழமைகள் தோறும் கருட தரிசனம் கண்டு வழிபடுவதை கட்டாயமாக்கிக் கொண்டிருந்தார் ராஜா.

கருடனைத் தரிசிப்பதில் சனிக்கிழமையை ராஜா விரும்பியதில் ஓர் அரிய செய்தி உண்டு. அப் பெருமகனார் தெய்வபக்தியின் வாயிலாக இறைவனது திருவடிப்பேற்றையே விரும்பினார். உலகியல் தேவைகளுக்காக அப் பெருந்தகை தெய்வ பக்தி கொண்டவரில்லை.

கருட தரிசனப் பலன்களை முன்னோர் விளக்கமாகக் கூறியுள்ளனர். ஞாயிறு அன்று கருடனை தரிசித்தால் நோய்

நொடிகள் நம்மைவிட்டு அகலும்; திங்கள் தரிசனம் குடும்ப நலத்தைப் கூட்டுவிக்கும்; செவ்வாயில் தைரியம் ஏற்படும்; புதன் பகைவரை அழிக்கும்; வியாழன் நீண்ட ஆயுளை வழங்கும்; வெள்ளிக்கிழமையில் கருடனைத் தரிசித்தால் வேண்டிய செல்வம் பெருகும்; சனிக்கிழமைத் தரிசனம் முக்தியை அளிக்கும்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், பிறப்பால் பிறப்பை நீக்கச் சனிக்கிழமைகளில் கருட தரிசனம் கண்டு வழிபட்டார். இராஜபாளையத்தில் இருக்கும்போது மட்டுமல்ல; எங்கு சென்றாலும் சனிக்கிழமையில் கருட தரிசனத்தை உயிர்த் தேவையாக ஆக்கிக் கொண்டிருந்தார். ஒரு முறை சென்னை மௌண்ட் ரோடில் அப்பெருமகனார் அமர்ந்திருக்கும் கார் சென்று கொண்டிருக்கிறது. அன்று சனிக்கிழமை ! எதிரே இறகுகளை ஆட்டாது அசைக்காது கருடன் கம்பீரமாகப் பறந்து வருகின்றது ! டிரைவர் முனிசாமி நாயுடு பார்த்து விட்டார் ! புதையலைக் கண்டது போல "கருடன் ஒச்சிந்தி" என தெலுங்கில் ஓங்கிய குரலில் உரைத்தவாறே, சாலையின் ஓரத்தில் காரை நிறுத்தினார். பி.ஏ.சி.ஆர், அவசரமாக காரிலிருந்து இறங்கி, அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக்கொண்டு இருகரம் கூப்பி மேலே பார்த்துக் கருடனைத் தரிசித்தார். மிகுந்த மகிழ்ச்சியுடன் காரில் வந்து அமர்ந்த பி.ஏ.சி.ஆரை உடன் அமர்ந்திருந்தவர் "கருடனைத் தரிசிப்பதால் உங்களுக்கு என்ன பயன் ஏற்பட்டுள்ளது?" என வினவினார். புன்னகைத்தாவாறே பி.ஏ.சி.ஆர், "கருடனைத் தரிசிப்பதால் பயன் வருவது இருக்கட்டும்! தரிசிப்பதால் நான் ஒன்றும் கெட்டுப் போகவில்லையே? இருக்கிற இருப்பிலிருந்து நான் கீழே போகாமல் இருக்கிறேனே ! அதுவே பெரிய பயன் இல்லையா?" என்றாராம்.

இராமாயணத்தில் இந்திரசித்தின் நாக பாசத்தால், இலக்குவன், அனுமன் உட்பட வானரசேனை முழுவதும் கட்டுண்டு மயங்கி வீழ்ந்து விட்டது. இராமன் பேதலித்துக் கவலைப்பட்டுக் கண் கலங்கி நிற்கிறான். உடனே கருடன் அங்கு தோன்றி, நாகபாசத்தினின்றும் அனைவரையும் விடுவித்து, இராமனுடைய

கவலையைப் போக்குகின்றது. இராமனுக்கு மகிழ்வூட்டிய கருடன், இராமசாமி ராஜாவிற்கு சனிக்கிழமைதோறும் மகிழ்ச்சியை ஊட்டியது.

தொழில்களைத்தொடங்கும்போதெல்லாம் முதன் முதலில் 'வாஸ்து' செய்கின்றபோது கருடனை நம்பிக்கையுடன் எதிர்பார்த்துக் காத்திருப்பார் ராஜா. ஒருநாளும் ராஜாவின் நம்பிக்கை பலிக்காமல் போனதில்லை. சில வேளைகளில் இரண்டு மூன்று கருடன்கள்வருகை தந்து, ராஜாவை மகிழ்விப்பதும் உண்டு. மெட்ராஸ் சிமிண்ட் பேராலைக்கு 'வாஸ்து' செய்யும்போது மூன்று கருடன்கள் வானில் பறந்து, தரிசனம் தந்தனவாம் !

கல்வி தர்ம ஸ்தாபனத்தின் மூலம் தமது தந்தையார் சின்னைய ராஜாவின் ஞாபகார்த்தமாக **1950** ஆம் ஆண்டில் ஓர் உயர்நிலைப் பள்ளியைத் தொடங்கும்போது, பி.ஏ.சி.ஆர், அந்தப்பள்ளியின் முத்திரா விலாசமாகக் கருடனையே அமைத்தார். கருடனை முத்திரா விலாசத்தில் அமைத்ததற்குரிய விளக்கத்தைப் பள்ளியின் அறிக்கைப் பதிவேட்டில் ராஜா குறிப்பிட்டுள்ளார்: அது: "கருடன் பறத்தல் மானிட வாழ்க்கையின் லட்சியப் போக்கையும், அதன் அலகில் உள்ள பசுங்கிளை செழிப்பையும், மங்களத்தையும் உணர்த்துகின்றன. கருடனின் இயக்கத்தைப் போன்ற இடையறா ஊக்கமும் உழைப்பும், தூய வானில் பறக்கும் அதன் நிலையை ஒத்த இன்ப, துன்பத்தில் மாறாத சமநிலையும் பெற்றுப் பரம்பொருளை நாடி உறுதிகள் தழைக்க வாழ்வதே கல்வியின் நோக்கமாகும்."

## விரும்பியவை

பெருந்தகை ராஜா மனித நேயம் கொண்ட தேசாபிமானியாகத் திகழ்ந்தார். மனித சமுதாயம் அன்போடும், வாழ்வியல் நலங்கள்

அனைத்தையும் பெற்று வறுமையற்று, பகையுணர்வு இல்லாது, இன்பமாக வாழ வேண்டுமென ராஜா இதயம் கொண்டிருந்தார். இந்திய நாடு எல்லாத் துறைகளிலும் மேன்மையடைந்து உயர்வுபெற வேண்டுமென அப் பெருமகனார் விரும்பினார். இத்தகைய தமது விருப்பங்களை மலர்ச்சி பெறச் செய்ய, தொழில் வளர்ச்சி ஓர் ஆதாரமாக அமையுமென ராஜா கருதினார். எனவே மிகுந்த விருப்பத்தோடு, தமது பகுதியில் தொழில்களைத் தொடங்கினார். அப் பெருமகனார் விரும்பிய எண்ணங்கள் நிறைவேறின; நிறைவேறிக் கொண்டும் வருகின்றன.

சமுதாய முன்னேற்றத்திற்கும், சுமூகமான உறவுகளுக்கும், பயனளிக்கும் நலன்களுக்கும் அப் பெருமகனார் வாழ்ந்த போது உலகத்தில் தோன்றியுள்ள அனைத்து சாதனங்களும், அமைப்புகளும் தாம் வாழ்ந்த இராஜபாளையம் நகரில் உருவாக்கம் கொள்ள வேண்டுமென ராஜா விரும்பினார். தாமே முன்னின்று, முயன்று பயனளிக்கும் பல அமைப்புகளை நகரில் நிறுவினார். சமுதாய முன்னேற்றத்திற்கு அடிப்படையான பல்வேறு சாதனங்கள் நகரில் தோன்றுமாறு செய்வித்தார்.

தாம் வாழ்ந்த பகுதி மக்கள் கல்வி கற்று, அறிவியல் மேன்மைகள் அனைத்தும் பெற்று, என்றென்றும் அறிவறிந்த பெரு மக்களாய்த் திகழ வேண்டுமென விருப்பம் கொண்ட ராஜா, அறக்கட்டளைகளை உருவாக்கி, அதன்வழி கல்வி நிலையங்களை நிறுவி, தமது விருப்பம் தழைத்துச் செழிக்க நெடுநோக்குடன் அடிகோலினார்; ஆரவாரமின்றி ஆத்மார்த்தமாக விழுச்செல்வம் விழுதூன்ற வித்திட்டார்.

மானுட வாழ்வு பற்றிய ஆழமான, ஆன்மீகச் சிந்தனைகளிலும், அருளாளர்கள், ஆதீனகர்த்தர்கள், ஞானச் செல்வர்கள் ஆகிய திருவருள் நலம் பெற்ற பெரியார்களுடன் கொள்ளும் தொடர்புகளிலும் அளப்பரிய விருப்பங் கொண்டிருந்த அப் பெருமகனார், இறைவனுடைய திருவடிப் பேற்றை அடைவதே வாழ்வுப்பயன் என்றும், இறைவனுடைய திருவருளாலேதான்

உலகத்தின் அனைத்து இயக்கமும் நிகழ்கிறது என்றும், முழுமையாக நம்பிக்கை கொண்டிருந்ததால், எந்தச் செயலைத் தொடங்கும்போதும் பிரார்த்தனை செய்தே தொடங்கும் பழக்கத்தில் பெரிதும் விருப்பம் கொண்டிருந்தார்.

உறவுகளைப் பலப்படுத்திக் கொள்வதில் உள்ளார்ந்த விருப்பம் கொண்டிருந்த ராஜா, தமது சமூக மக்களுடன் மட்டுமின்றி, நகரில் வாழ்ந்த அனைத்துச் சமூகங்களுடனும். சொல்லப்போனால் சில ஆங்கிலேயர்களுடனும், நெஞ்சார்ந்து பழகும் பான்மையால், உறவு நலத்தை மேன்மைப்படுத்திக் கொண்டார். அரசாங்க அதிகாரிகளுடனும், அலுவலகங்களில் பணியாற்றுவோரிடமும் கொண்ட தொடர்புகளை நிலைத்த தன்மையாய் ஆக்கிக் கொள்வதில் ராஜா பெரு விருப்பம் கொண்டிருந்தார்.

தொழில்களைத் தொடங்குவதற்கு முயன்ற நிலையில், முதலீடு வழங்கிய பங்குதாரர்களிடமும், உதவியாகவும் உறுதுணையாகவும் அமைந்த அரசியல் தலைவர்களிடமும் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டு நெருக்கத்தை நெகிழவிடாது பேணிக்காப்பதில் ஆர்வம் கொண்டிருந்தார் அப் பெருமகனார். தம்மைப் போலவே தமது திருக்குமாரரையும் தகுதிக்குரிய தலைமைப் பண்பில் வழி நடத்துவதை வாழ்வு முற்றும் அதிக விருப்பத்துடன் கருதிச் செயலாற்றினார்.

வாழ்வில் எளிமையும், செயலில் பெருமையும் ராஜாவின் உள்ளார்ந்த விருப்பங்களாக நின்றன ! தமது கணிப்பில் உயர்ந்த பெருமக்களிடம் கனிந்த அன்பு காட்டுவதோடு, ராஜா, தமது காரியங்கள் யாவினிலும் அவர்களை இணைத்துக் கொண்டு செயலாற்றுவதில் விருப்பங் கொண்டிருந்தார். பெண்களின் முன்னேற்றத்தில் பெரு வேட்கை கொண்டிருந்த பி.ஏ.சி.ஆர், பழமையை முழுமையாக ஒதுக்கிவிடவோ, புதுமையை முழுமையாக ஏற்றுக் கொள்ளவோ இதயம் கொண்டாரில்லை. பழமையில் நன்மைகளும், புதுமையில் நலன்களும் முன்னேற்றத்திற்கு அடிப்படையானவை எனக் கருதினார்;

அத்தகைய கருத்தையே தமது விருப்பமாகவும் கொண்டார்.

இராஜபாளையம் ஆலை தொடங்கிய பின்னர், சில ஆண்டுகள் தமது மாளிகையிலிருந்து ஆலைக்குக் குதிரையில்தான் ராஜா செல்வார். வேகமாகச் செல்வதை விரும்ப மாட்டார் அப் பெருமகனார். குதித்துக் குதித்துக் குதிரை மெல்லச் செல்வதையே ராஜா விரும்பினார். ஏன் வேகமாகச் செல்லவில்லையென்பதற்கு ராஜா ஒருமுறை விளக்கம் சொன்னார். "சிலர் நான் குதிரையில் வேகமாகச் செல்லாததை வியப்புடன் பார்க்கிறார்கள். நான் குதிரையில் செல்வதே உடற்பயிற்சி செய்வதற்காகத்தான்! குதிரை மெதுவாகக் குதித்துச் செல்லும்போதுதான் உடல் குலுங்கிப் பயிற்சிக்கு ஆட்படும். எனவே குதிரையில் மெதுவாகச் செல்வதையே நான் விரும்புகிறேன்"

ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் பள்ளிப் பருவத்தில் இரட்டை மாட்டு வண்டியில் சென்று வந்த இராமசாமி ராஜா, பின்னர் பஞ்சாயத்து போர்டு தலைவரானதும், அலுவலகத்திற்கு வில் வண்டியில் சென்று வருவதை விரும்பிப் போய் வந்தார். சில வேளைகளில் ஒற்றைக் குதிரைச்சாரட்டு வண்டியில் அவரே ஓட்டிக் கொண்டு அலுவலகம் சென்று வருவதும் உண்டு.

வீட்டில் வளர்ப்புப் பிராணிகளிடம் பிரியம் காட்டுவதில் பெரு விருப்பம்கொண்டிருந்தார் அப்பெருமகனார். நாய் ஒன்று வீட்டில் இருந்தது. 'சோடா' என அதை அழைப்பார்கள். ராஜா வீட்டினுள் நுழைந்ததும் சோடா வாலை குழைத்து வாஞ்சையுடன் அப்பெருமகனாரின் அருகே ஓடி வரும். சில வேளைகளில் ராஜா இலையில் உண்ணும் போது, அவரருகே நாய் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருக்கும். அந்தக் காலங்களில் கணவன் சாப்பிட்ட இலையில், மனைவி சாப்பிடுவது மரபாகவும் புண்ணியமாகவும் கருதப்பட்டது. ராஜாவின் துணைவியார் சேதுராமம்மாள் அருகிருந்து உணவு பரிமாறிக்கொண்டே,'ராஜா சாப்பிட்டதும் இலையில் நாய் நாக்கை வைத்து விடுமோ, என்னவோ' எனப் பயந்துகொண்டே இருப்பாராம்! ஆனால் அந்த நாய் ஒரு நாளும் அப்படிச் செய்ததில்லையாம் ! ராஜா உண்டவுடன் எழுந்து

செல்லும்போது அப் பெருமகனாரின் பின்னேயே ஓடி விடுமாம்! கறுப்புப் பூனை ஒன்று இருந்தது. பூனையும், சோடாவும் சில வேளைகளில் ஒன்று சேர்ந்து விளையாடுமாம். அதனை வியந்து பார்த்துக் கொண்டே புன்னகைப்பாராம் ராஜா. மாளிகைக்குள்ளேயே இருந்து 'காட்பாடி' என ஒரு குரல் கொடுப்பாராம் ராஜா. வெளியே கட்டில் இருக்கின்ற குதிரை கனைத்து ராஜாவை அங்கிருந்தே உற்றுப் பார்க்குமாம் ! அந்தக் குதிரை வயதாகிக் கிழடானபோது, சிலர் அதை விற்று விடுமாறு ராஜாவிடம் சொன்னார்கள். "சே! சே! வீட்டிலுள்ள மனிதர்களுக்கு வயதாகிப் போனால் விற்று விடவா செய்கிறோம்? நமக்காக அது எவ்வளவு உழைத்திருக்கிறது. கடைசிவரை அது இங்கேதான் இருக்கவேண்டும் !" என அப்பெருந்தகை கூறிவிட்டாராம். குதிரையைப் போலவே ஒரு பசு! வயதாகிப் போனபோது பசுவையும் விற்றுவிட அப் பெருமகனாருக்கு மனம் வரவில்லை.

நாட்டு வைத்தியத்திலும், ஆயுர்வேத சித்த மருத்துவத்திலும் விருப்பம் கொண்டவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். எனவே குடும்ப டாக்டராகஇருந்தவரிடம் ஒருநாளும் அப் பெருமகனார் வைத்தியம் செய்து கொண்டதில்லை ! ஒரு முறை பி.ஏ.சி.ஆருக்கு முதுகுத் தண்டில் வலி ஏற்பட்டபோது, திருவனந்தபுரம் சென்று ஆயுர்வேத மருத்துவ முறையில் 'பிழிச்சல்' வைத்தியம் செய்து கொண்டார்.

பெரும்பான்மையும் வேஷ்டியைப் பஞ்சகச்சமாக உடுத்தி, ஜிப்பா அணிந்திருப்பதுதான் ராஜாவின் வழக்கம். உஷ்ணமான உடல்நிலை இயல்பு கொண்டவர் அப் பெருமகனார். எனவே வாரம் ஒரு முறை எண்ணை ஸ்நானம் செய்வதை விருப்பமாகக் கொண்டிருந்தார். ராஜா எண்ணை ஸ்நானம் செய்திருக்கிறா ரென்பதை எளிதாகத் தெரிந்து கொள்ளலாம். எப்படி? அன்று வேஷ்டியை பஞ்சகச்ச அமைப்பில் உடுத்தமாட்டார்! தட்டுச் சுற்றாக உடுத்தியிருப்பார்!

காலை **10** மணிக்குச் சாப்பாடுதான் ராஜாவின் பழைய பழக்கம். ஆலை தொடங்கிய பின்னர் அந்தப் பழக்கம் இட்லியாக மாறியது!

மதியம் ஒரு மணிக்குமேல் சாப்பாடு; இரவு 8 மணிக்கும் சாப்பாடுதான். மதியம்சாப்பாட்டில்ஏதாவதொருகீரை அவசியம் இருந்தாக வேண்டும். புதிய வெண்ணெயை அப்போதே உருக்கி சாதத்தில் விட்டால், விருப்பமாகவும், கொஞ்சம் அதிகமாகவும் ராஜா சாப்பிடுவாரென, ராஜாவின் துணைவியார் சேதுராமம்மாள் நினைவு கூர்ந்தார். சில வேளைகளில் தந்தையாரின் விருப்பமறிந்த லிங்கம்மாள் புதிதாக உருக்கிய நெய்யைக் கொடுத்து அனுப்பு வாராம். சிவப்பு பூசணிக்காய் கறி (கும்மடி கா) ராஜாவின் விருப்பமான கறி. சாதத்தில் தயிர் ஊற்றி, நெல்லிக்காய் வடையுடன், உண்பதில் மிகுந்த விருப்பமாம். ஆப்பிள் பிரியமாகச் சாப்பிடுவார். மாலை அல்லது முன்னிரவு வேளைகளில் மாளிகையின் திண்ணையில் யாருடனாவது பேசிக் கொண்டிருக்கும்போது, உழுந்தங் காயை அவித்துக் கொண்டு வந்து வைத்தால், உரையாடிக்கொண்டே அதை உரித்து நொறுக்குத்தீனியாக ராஜா விருப்பமாகக் கொள்வாராம்.

சமஸ்கிருதத்தில் பெரு விருப்பம் கொண்டிருந்தார் அப் பெருமகனார். விருப்பம் எனச் சொல்வதைக் காட்டினும் சமஸ்கிருதமொழியில் ஈடுபாடே கொண்டிருந்தார். அதனால்தான் தம் திருக்குமாரர் பி.ஆர்.ஆர் பள்ளியில் படித்தபோதே சமஸ்கிருதத்தை விருப்பப்பாடமாக ஏற்கச்சொன்னார். தம் புதல்வி சிட்டம்மாளுக்கும், பேத்தியும் மருமகளுமான சுதர்னம் அம்மையாருக்கும் சமஸ்கிருத மொழியை முறையாகக் கற்றுக் கொடுக்க சமஸ்கிருத பண்டிதர் கே.ஜி. கிருஷ்ணமூர்த்தி ஐயரை ஏற்பாடு செய்திருந்தார் ராஜா. அவர்களும் சமஸ்கிருதத்தில் தெளிவான பாண்டித்யம் பெற்றனர். ஆங்கிலத்தில் எவராவது அழகுறப் பேசினால்,"இங்கிலீஷ், இங்கிலீஷ்தான்! கம்பீரமான லாங்வேஜ் !" என்பார் ராஜா, சமஸ்கிருதத்திற்கு அடுத்து ஆங்கில மொழியின்பாலும் அப்பெருமகனார் விருப்பம்கொண்டிருந்தார். தெலுங்கின் வளர்ச்சிக்கும், தமிழின் செழுமைக்கும் அமைப்புகள் வழியே தொண்டாற்றியவர் ராஜா.

தொழில்துறை சம்பந்தமாக நூற்றுக் கணக்காகக் கையொப்பமிட வேண்டிய கட்டாயம் சில வேளைகளில் வந்து சேரும். அப்போதெல்லாம் சமஸ்கிருத பண்டிதரை அழைத்து வந்து, அருகில் வைத்துக்கொண்டு, தட்சணா மூர்த்தி அஷ்டகத்தைப் பாராயணம் செய்யச் சொல்வார் ராஜா. கை, கையெழுத்துப் போட்டுக் கொண்டே இருக்கும் ! செவிகளோ அஷ்டகத்தைக் கேட்டுக் கொண்டே இருக்கும்.

## விரும்பாதவை

சமூகங்களுக்குள் காழ்ப்பாலும், கசப்பாலும் உருவாகும் பகைமை உணர்வை விரும்பாதவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். இன அடிப்படையிலே தோன்றும் பிரிவினை மனோபாவத்தை அப் பெருமகனார் வெறுத்து ஒதுக்கியதோடு, அந்த உணர்வின் வேரும், வேரடி மண்ணும் இல்லாமல் செய்ய முனைந்து நின்றார்.

இந்தியா விடுதலை பெற்று ஓராண்டு சென்றபோது, தேசப்பிதா காந்தியடிகள் மரணம், தேசத்தில் வகுப்பு வாதப் பெருந்தீமையைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தது. காந்தியடிகளைத் துப்பாக்கிக் குண்டுகளுக்கு இரையாக்கிய கொலையாளியைத் தவறாகப் புரிந்து கொண்டு, நாடெங்கும் முஸ்லீம் சகோதரர்களைத் தாக்கத் தொடங்கினர். இராஜபாளையத்திலும் அத்தகைய நிலை ஏற்பட இருந்ததை அறிந்த பெருந்தகை பி.ஏ.சி.ஆர், அவசர அவசரமாக ராம மந்திரத்திலிருந்து கண்மாய் வழியாக வேகமாக நடந்து சென்று மூஸ்லீம்கள் வாழ்ந்த பகுதியில் அமைதி நிலவ ஆவன செய்தார்.

பெருந்தகை பி.ஏ.சி.ஆர், எவரையும் குறித்துக் குறை சொன்னதுமில்லை; சொல்ல விரும்பியதுமில்லை ! அது போலவே பிறர் குறையைக் கேட்டதுமில்லை ; கேட்கத் தூண்டியதுமில்லை.

தமக்கு. எதிர்ப்பாகச் சிலர் பேசுவதும், இயங்குவதும் அப் பெருமகனார் அறிந்து கொண்டபோதும், அவர்களை

வேண்டாதவர்களாகவோ, விரும்பத் தகாதவர்களாகவோ ராஜா கருதுவதில்லை. அவர்களை வேண்டாதவர்களாக ஒதுக்கி வைப்பதை அப்பெருமகனார் விரும்புவதில்லை ! சுமூகமான முறையில் தொடர்புகொண்டால் எந்த மனிதனையும் வயப்படுத்தி விடலாமென அப்பெருந்தகை நம்பினார்.

பணம் நம்மை ஆள விட்டுவிடக் கூடாது; பணத்தை நாம் ஆள வேண்டுமென்பதில் உறுதி கொண்ட அப் பெருமகனார், பணத்திற்கும், பணம் படைத்தவர்க்கும் தனிக் கௌரவமளிக்க விரும்பியதில்லை. அடக்கம், எளிமை ஆகியவைகளின் மறுபக்கமான ஆரவாரம், படாடோபம் ஆகியவற்றிற்கு ஒரு நாளும் மதிப்பளிக்க ராஜா விரும்பியதில்லை. தீமை விளைவிக்கும் எண்ணங்களையும், தீமை ஊட்டும் சொற்களையும், தீமையே நிலைத்துவிடும் செயல்களையும் ராஜா விரும்பவில்லை; வெறுத்தும் ஒதுக்கினார்.

பி.ஏ.சி.ஆர். நாட்டுப் பற்றுக் கொண்டவர்; ஆனால் அரசியலில் ஈடுபட வேண்டுமென்ற எண்ணத்தை அப் பெருமகனார் கொண்டிருக்க இல்லை. அரசியலில் ஈடுபாடு கொண்டிருந்த தம் சகோதரர் பி.எஸ்.கே. முதலாகப் பல அரசியல்வாதிகளை ராஜா நேசித்தார்; அதே நேரத்தில் தாம் ஓர் அரசியல்வாதியாக ஆவதை அப்பெருமகனார் விரும்பவில்லை.

* * *

# 30

## திருவுருவச் சிலையமைப்பும் திகழுமொரு புகழ் வைப்பும்

உண்பித்து உண்ணல், வாழ்வித்து வாழ்தல், மகிழ்வித்து மகிழ்தல் என்னும் உயரிய பண்பாட்டு வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக்காட்டாய் வாழ்ந்தவர் பெருந்தகை பி.ஏ.சி.இராமசாமி ராஜா. சுற்றுச் சூழலைச் சுகமாக்கிச் சூழ்ந்திருப்போரை வளமாக்கிவாழ்வதுதான் பயனுள்ள வாழ்க்கை எனப் பரிபூரணமாக நம்பியவர் அப் பெருமகனார்.

வாழ்க்கை நீரோட்டம் போல, தடுப்பின்றித் தளராது ஓடிக் கொண்டே இருக்க வேண்டும்; தேங்கக் கூடாது. வறட்சியோ, வறுமையோ வாழ்க்கையைத் துயரத்தில் ஆழ்த்தி விடக்கூடாது. பிரச்னைகள் நம்மை ஆள அனுமதித்து விடக்கூடாது; பிரச்னை களை நாம் ஆள வேண்டும்! பிரச்னைகள், பெரும்பான்மையும் பொருளின்மையில் தோன்றி விடுகின்றன. பொருளே, மனித குல வரலாற்றில் அடிப்படையான உந்து சக்தியாக நின்று மனிதனை இயக்குகிறது; வாழ வைக்கிறது என்பதனைத் தெளிவாக உணர்ந்த பி.ஏ.சி.ஆர், தமது பகுதி மக்கள் வறுமையின் பிடியில் தளர்ந்து விடக்கூடாது, தாழ்ந்து போய்விடக்கூடாது என்ற நோக்கத்தில், பொருளீட்டும் வாய்ப்புகளை உருவாக்கும் முயற்சியாகத்தான் தொழில்துறைகளை வடிவமைத்து வழங்கினார். அப் பெருந்தகையின் அயற்சி இல்லாத முயற்சியால்தான் இராஜபாளையம் நகரமும், சுற்று வட்டாரப் பகுதியும் வளர்ச்சி பெற்றன; வாழ்க்கைக்குரிய பொருளை ஈட்டுதற்கு வாய்ப்பைப் பெற்றன.

சோம்பிக் கிடந்த பகுதி சுறுசுறுப்பானது! வாழ்க்கையின் நம்பிக்கைக்குரிய இடமாக மறுமலர்ச்சி பெற்றதால், நகரத்தில் மனிதக் குடியிருப்புகள் பல்கிப் பெருகின. தொழில் துறைகளைத்

தொடங்கி வைத்ததோடு நின்றுவிடவில்லை பெருந்தகை பி.ஏ.சி.ஆர். சமுதாய உணர்வோடு, பொது நன்மைகளில் நாட்டம் கொண்டு, மக்கள் நலப்பணிகளில் மனமுவந்து ஈடுபட்டார்; பகலிரவு பாராது பொதுப்பணிகளில் பரவச உணர்வுடன் ஆர்வம் கொண்டார்; மக்களுக்குத் தொண்டாற்றுவதை மகத்தான வாய்ப்பாகவும் மாபெரும் பேறாகவும் எண்ணிச் செயற்பட்டார் அப் பெருமகனார். பி.ஏ.சி.ஆரின் பொது நலப்பணிகளின் பயன் நகரத்தில் வாழ்ந்தவர்களுக்கும், வாழ வந்தவர்களுக்கும் துய்க்கும் நுகர்வாய்த் தொடர்ந்து கிட்டியது. அப் பெருந்தகை வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு மட்டு மல்லாது, இனி வாழப்போகும் தலைமுறையினருக்கும் ராஜாவின் பொதுப்பணி ஆக்கம், சென்று சேருமாறு நின்று நிலவியது; நிலவுகிறது.

ஆன்மீக உணர்வின் பல சிகரங்களைப் பார்த்துத் தரிசிக்க அளப்பரிய ஆர்வம் காட்டியவர் அப் பெருமகனார். ஆன்மீகம் என்பது ஆன்மாவின் தரத்தை - உயிரின் தரத்தை உயர்த்துதல் எனப் பொருள்படும். ஆன்மா தன் தரத்தை உயர்த்திக்கொள்ள நாளும் அர்ப்பணிப்பு உணர்வுடன் கூடிய கடமை ஆற்ற வேண்டும். அதனையும் இறையுணர்வோடு இணைந்து ஆற்றுகிறபோது செய்யும் செயல், மக்கள் உய்வதற்குரிய உயர்நலம் அளிக்கும். சமுதாயத்தை மேம்படுத்த இறைப்பற்றோடு பணி செய்து வாழும் பயனுடைய வாழ்க்கை, ஆன்மீகமான சமூக வாழ்க்கை தான்! அத்தகைய சமூக வாழ்க்கையைப் பெற்றிருந்த பி.ஏ.சி.ஆர், மக்கள் என்றென்றைக்கும் நினைத்துப் போற்றும் பெருந்தகையாய்ப் பெருமை அடைந்தார்.

மக்களின் பண்பாட்டுணர்வை வளர்க்கும் நகரின் பல்வேறு அமைப்புகளில் தலைமை ஏற்று, உதவியும், ஒத்துழைப்பும் நல்கிய பெருந்தகை பி.ஏ.சி.ஆர், பஞ்சாயத்திலும், நகரவையிலும் நாயகராய் வீற்றிருந்து, நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்த இராஜபளையம் நகர அமைப்பையும், நகர வாழ்வையும் எக்காலத்திற்கும் ஈடுகொடுக்கு மாறு வடிவப்படுத்திய பெரியாராய்ப் புகழ் பெற்றார்.

கருணையும், கடமையாற்றுவதில் இடையீடற்ற கவனமும் கொண்ட பேருள்ளத்தைப் பெற்றிருந்த அப் பெருந்தகை, கம்பீரமும், காண்பவரைக் கவரும் கண்ணிறைந்த தோற்றப் பொலிவையும் கொண்டிருந்தார். ஒரு முறை பார்த்தாலே உள்ளத்தை விட்டு நீங்காத திருவுருவப் பெருநலம் அப் பெருமகனாருக்குத் திருவருளால் வாய்த்திருந்தது. முகத்தோற்றத்தில் விளங்கிய தெய்வீகக் களை வசீகரமானது! கனிவும், காருண்யமும் நிறைந்த கண்களும், பேரறிவைப் புலப்படுத்தும் அகன்ற நெற்றியும் இறைப்பற்றை விளக்கும் திருமண் குறியீடும், நீண்ட கூர்மையான நாசியும், அதன் கீழ் உறுதியான உள்ளப்பாங்கை உணர்த்தும் மீசைக் கற்றையும், புன்னகை தவழும் உதடுகளையுடைய திருவாயும், சிந்தனைத் திறத்தைக் காட்டும் ஓம் எனும் உருவில் விளங்கிய இரு செவிகளும், ஆன்மீக ரேகைகள் படிந்த அளவான கழுத்துச் செறிவும், செயலூக்கத்தை அறிவிக்கும் நீண்ட திருக்கரங்களும், பெருமிதம் மிளிரும் திருமேனிப் பொலிவும், இடையில் பஞ்ச கச்சமாகக் கட்டிக்கொண்ட தூய வெள்ளை நிற வேட்டியும், காலர் இல்லாத, கரங்களை மறைத்த நீண்ட வெள்ளைச் சட்டையும், கழுத்தைச்சுற்றி இருபுறமும் முழங்கால்வரை அழகொளிர அமைந்து கிடக்கும் அங்கவஸ்திரப் பொலிவும் கொண்ட அப் பெருமகனாரின் கவர்ச்சி மிக்கக் கண்ணியமான தோற்றம் - பார்த்தவர் எவரையும் பற்றி இழுக்கும் ! பணிவு கொள்ளவும் வைக்கும் !

வாழ்வின் அரிய நேரங்களை நகர மக்களின் நல் வாழ்விற்கு அர்ப்பணித்த அறச் செல்வர் பெருந்தகை பி.ஏ.சி.ஆரை என்றென்றும் நினைவில் கொள்ளவும், அப் பெருமகனாரின் கம்பீரத் தோற்றப் பொலிவை என்றென்றைக்கும் சுலபமாகக் கண்டு தரிசிக்கவும், விரும்பிய நன்றியுணர்வுமிக்க நகரப் பெருமக்களும், தொழிலாளர்களும் அப் பெருந்தகையின் திருவுருவச் சிலையை இராஜபாளையம் நகரில் நிறுவத் திட்டமிட்டனர்.

பெருமக்கள் தாங்கள் திட்டமிட்டுள்ளதை பெருந்தகையின் திருக்குமாரர் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜாவிடம் 1969 ஆம்

ஆண்டின் மார்ச் மாதத்தில் தெரிவித்தனர். அனுமதியும் வேண்டினர். சிந்தித்துச் சொல்வதாக மறுமொழி பகன்ற பி.ஆர்.ஆர், ஆழ்ந்து ஆலோசித்து, பெருமக்கள் சிலரிடம் கலந்து பேசி, ஓர் ஆண்டிற்குப் பின்னர், தமது தந்தையாரின் திருவுருவச் சிலையை நிறுவ மகிழ்ச்சியுடன் இசைவளித்தார்.

காந்தி கலை மன்றத்தில் நகரப் பொதுமக்களின் கூட்டம் 1970 ஏப்ரலில் கூட்டப்பெற்றது. பெருந்தகை பி.ஏ.சி.இராமசாமி ராஜா திருவுருவச்சிலை நிறுவ பண்ணையார் ஆர்.வி. ராமசுந்தரம் பிள்ளை தலைவராகவும், எஸ்.ஆர். நாராயண ராஜா உப தலைவராகவும், எஸ்.அர்ஜுன ராஜா, பி.ஏ. அன்னமராஜா காரியதரிசிகளாகவும் என்.ஆர். கிருஷ்ணம ராஜா பொருளாள ராகவும்கொண்டு, நகரத்தின் அனைத்துச் சமூகங்களையும்சார்ந்த பெருமக்களும், அனைத்துத் தொழிற்சங்களையும் சேர்ந்த தொழிலாளர்களையும் உள்ளிட்ட நூற்றுக்கணக்கான உறுப்பினர் கள் அங்கம் வகிக்க அமைப்புக்குழு உருவாக்கம் பெற்றது.

சிலை அமைப்பிற்குரிய நிதி, நன்கொடையாகத்திரட்டப்பெற்றது. நகரின் அனைத்துச் சமூகங்களைச் சார்ந்தோரும், பி.ஏ.சி.ஆரின் தொழில் நிறுவனங்களில் பணியாற்றும் அனைத்துத் தொழிலாளிகளும், பெருந்தகையிடம் பிரியம் கொண்டிருந்த அன்பர்களும், அவரவர் வழங்கும் சக்திக்கேற்ப நன்கொடை அளித்துள்ள பான்மை குறிப்பிடத்தக்கது.

ராஜாவின் கம்பீரமான தோற்றப் பொலிவைக் காணுமாறு, முழு திருவுருவ வெண்கலச் சிலை, இராஜபாளையம் நகரின் முக்கியமான தென்காசிச் சாலையில், காந்தி கலை மன்றச் சாலையின் சந்திப்பில், ராஜாவின் மாளிகையான ராம மந்திரத்திற்கு அருகே நிறுவப் பெற்றது.

பி.ஏ.சி.ஆர். முதன் முதலில் தொடங்கிய இராஜபாளையம் ஆலையை சென்னை மாகாணத்தொழில், தொழிலாளர் நல அமைச்சராய் பொறுப்பேற்றிருந்த வி.வி.கிரி 1938 ஆம் ஆண்டில்



இராஜபாளையத்தில் பி.ஏ.சி.ஆர். திருவுருவச் சிலை அமைப்பு

தொடங்கி வைத்தார். முப்பத்து மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் இந்திய நாட்டின் ஜனாதிபதியாக வீற்றிருந்த வி.வி.கிரி, இராஜபாளையம் வருகை தந்து, தமது நெருங்கிய நண்பரான பி.ஏ.சி.

இராமசாமி ராஜாவின் திருவுருவச் சிலையை 5.6.71 இல் திறந்து வைத்து மகிழ்ந்தார்.



அமரர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர். திருவுருவச் சிலையை
வி.வி. கிரி திறந்து வைக்கிறார்



திருவுருவச் சிலை திறப்புவிழா சிறப்பு மலரைத்
தலைவர்கள் பார்வை இடுகின்றனர்

அந்த நாள் - இராஜபாளையம் நகர வரலாற்றில் பொன்னான திருநாள்!

அந்த நாள் - நகரின் நாயகராய் விளங்கிய பெருந்தகைக்கு, மக்கள் நன்றிப் பெருக்குடன் சிலை எடுத்துச் சிறப்புச் செய்த பெருநாள்!

அந்த நாள் - வாழ்வாங்கு வாழ்ந்த பெரியாரின் வாழ்வுப்பணிகளை அறிந்து கொள்ளவும், வடிவப் பொலிவைக் கண்டு கொள்ளவும் வருங்காலத் தலைமுறையினருக்கு வாய்ப்பளித்த தெய்வ நாள்!

நூறு ஆண்டுகளுக்கு முன் இராஜபாளையத்தில் தோன்றிய ஓர் உயர்ந்த ஆன்மா, அறுபத்தெட்டு ஆண்டுகள் மானுட உருவில் இணைந்திருந்து, ஆற்றிய பணிகளால் மானுடத் திருவுருவை அமரநிலை பெறச் செய்து, நாடு போற்றும் நாயகமாய், நகருறையும் தெய்வமாய்த் திகழ வைத்த பின்னர் இறைவனது திருவடிப் பேற்றைப் பெற்றது!

உயர்ந்த ஆன்மாவிற்கு உரியவராய் விளங்கிய பி.ஏ.சி. இராமசாமி ராஜா எங்கும், எதிலும் இறைவனைக் காண்பதே உயர்ந்த நிலை என உறுதி கொண்டு ஒவ்வொரு கணமும் வாழ்ந்திருந்தார்.

"ஈசாவாஸ்யம் இதம் ஸர்வம்"
"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம"

என வேதங்கள் குறிப்பிடுகின்றன.

இத்தகைய மேலான அனுபவச் செறிவுடன் வாழ்ந்தவர், வாழ்ந்து காட்டியவர் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.

அப் பெருமகனாரின் வாழ்வும், பணியும் - வாழ்கின்ற பெருமக்களுக்கும், வருங்காலத் தலைமுறையினருக்கும் திறமான வழியுணர்த்தும் திசை காட்டிகள்!

* * *

## அருளாளருடனும் தலைவர்களுடனும் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.



*சுவாமி சின்மயானந்த மகராஜுடன் பெருந்தகை*



*மனிதருள் மாணிக்கம் ஜவஹர்லால் நேருவை*
*பி.ஏ.சி.ஆர். வரவேற்கிறார்*



நேருவுடன் ராஜா



இந்திராகாந்தியுடன் ராஜா



ஜகஜீவன்ராமுடன் ராஜா



மத்திய அமைச்சர் மனுபாய்ஷாவுடன் ராஜா



பி.ஜி. கெர் வரவேற்பில் ராஜா



கவர்னர் விஷ்ணுராம் மேதியை பெருந்தகை வரவேற்கிறார்



ஜெய்ப்பூர் மகாராஜாவுடன் பெருந்தகை பி.ஏ.சி.ஆர்.



கவர்னர் பவநகர் மகாராஜாவுடன் பெருந்தகை

## 31

# பெருந்தகையின் நூற்றாண்டும் பேரணியும் பெருவிழாவும்

பெருந்தகை பி.ஏ.சி. ஆரின் பிறந்த நாளைத் தங்கள் பக்தியின் சிறந்த நாளாகக் கொண்டு, நகரப் பொது மக்களும், ராம்கோ நிறுவனங்களின் ஊழியர்களும் இணைந்து, ஆண்டுதோறும் ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாக ராஜாவின் பிறந்தநாள் பெருவிழாவை, மகிழ்ச்சியோடும் நெகிழ்ச்சியோடும் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

1994 ஆம் ஆண்டில் அமையும் பெருந்தகையின் பிறந்த நாள் - நூறாவது பிறந்த நாள் அல்லவா! எனவே புகழோடும் பொலிவோடும் நூற்றாண்டுப் பெருவிழாவைக் கொண்டாட வேண்டுமென அனைவரும் விரும்பினர். விருப்பத்தைப் பெருந் தகையின் திருக்குமாரர் பி.ஆர்.ஆரிடம் தெரிவித்தனர். 'நூற்றாண்டு விழாக் குழு' அமைத்துச் செயற்படுவோமென, மக்களின் விருப்பத்திற்கு பி.ஆர்.ஆர் இசைந்தார். நகரின் அனைத்துச் சமூகங்களையும் சார்ந்த பெருமக்களும், ராம்கோ ஊழியர்களும் ஒருங்கிணைந்து அமரர் பி.ஏ.சி. இராமசாமி ராஜா நூற்றாண்டு விழாக் குழு அமைக்கப் பெற்றது. குழுவின் தலைவராகப் பொறுப்பேற்று, விழாவை வெகு சிறப்பாக நடத்தி, வழிகாட்டுமாறு பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவைக் கூடியிருந் தோர் அனைவரும் ஒருமுகமாக வேண்டினர். நூற்றாண்டு விழாவை நடத்தும் பாங்கினைப் பற்றி பலர் கருத்துத் தெரிவித் தனர். படிப்பினையாகப் பின்பற்ற வேண்டிய, செயல்களின் தொகுப்பாக உள்ள பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் வாழ்க்கை வரலாற்றை, எழுதி விழாவில் வெளியிட்டால், அது இளைய தலைமுறையினருக்குப் பயன்தரும், வழிகாட்டியாக அமையு மெனப் பலரும் கருத்துத் தெரிவித்தனர். தமது அருமைத்

தந்தையாரின் பெருமைக்குரிய பெரு வாழ்வு, பலருக்கும் பயனளிக்கும் எனக் கருதி, கடந்த சில மாதங்களாக தந்தையாரின் வாழ்க்கை வரலாற்றை உருவாக்கும் முயற்சியில் கவனம் செலுத்தி வருவதாக பி.ஆர்.ஆர். மகிழ்ச்சியுடன் தெரிவித்தார்.

ஏப்ரல் மாதம் பிறந்தவுடனேயே, நூற்றாண்டு விழா ஏற்பாடுகள் வேகமாகவும் விறுவிறுப்பாகவும் செயற்படத் தொடங்கின. தமிழ்நாட்டின் இலக்கிய மாத இதழ்கள், பி.ஏ.சி.ஆரின் வாழ்க்கை வரலாற்றை, அப்பெருந்தகையின் சாதனைச் செயல்களை படங்களுடன் வெளியிட்டிருந்தன. அகண்ட தீபம் ஒளிரவிருக்கும் அமரர் ராஜாவின் நினைவாலயம், எம்.ஆர்.எஸ். ராதாகிருஷ்ண ராஜா அன்புடன் வழங்க உள்ள பெருந்தகையின் திருவுருவச் சிலையின் உருவாக்கம், நூற்றாண்டு விழா நினைவாக 75 லட்ச ரூபாய் முதலீட்டில் அமைய இருக்கும் ராம்கோ தொழில் பயிற்சி நிலையம், 60 லட்சம் முதலீட்டில் அமைய உள்ள பி.ஏ.சி.ஆர். நூற்றாண்டு நினைவுச் சமூகக்கூடம், நகரின் காந்தி சிலை முன்னே 5 லட்சம் முதலீட்டில் அமைக்கும் கடிகார அமைப்பு, ஆகிய உருவாக்கக் கட்டுமானப் பணிகள் நாளும் பொழுதும் விரைவாக நடந்த வண்ணமிருந்தன. மெட்ராஸ் சிமெண்ட்ஸ் ஊழியர்கள் கன்னியாகுமரியிலிருந்து 19.4.94 இல் மாவட்ட ஆட்சித்தலைவர் ஏற்றி வைத்த நூற்றாண்டு விழா ஜோதியை ஏந்தி, இராஜபாளையம் நோக்கிப் புறப்பட்டனர். வரும் வழியெல்லாம் 'பி.ஏ.சி.ஆர் திருநாமம் வாழ்க' என முழக்கமிட்ட வாறே வந்தனர்.

நூற்றாண்டுப் பெருவிழா நாளுக்கு ஒருவாரம் முன்னதாகவே இராஜபாளையம் விழாக் கோலம் பூணத் தொடங்கி விட்டது! நகரின் முக்கிய சாலைகளில் பிரம்மாண்டமான அலங்கார வளைவுகள், விழாவுக்கு வருகைதரும் பிரமுகர்களை வரவேற்றும், பி.ஏ.சி.ஆரின் சாதனைகளை நினைவூட்டும் வாசகங்களைக் கொண்டும் அமைக்கப் பெற்றன. அண்ணாந்து பார்த்து அதிசயிக்கும் ராஜாவின் திருவுருவக் 'கட் அவுட்'கள் பல இடங் களில் எழுந்தன. நகரின் காந்தி சிலைக்கருகே விழாத் தலைமை

ஏற்கவிருக்கும் முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வெங்கட்ராமன் 'கட்-அவுட்' டும் அமரர் ராஜாவின் 'கட்- அவுட்'டும் அருகருகே அமைந்திருந்தன. விழாப் பெரு நாளுக்கு இரண்டு நாள்கள் முன்னர், நகரின் மையப்பகுதியில், 'பி.ஏ.சி.ஆர். நூற்றாண்டு விழா' என்ற வாசகம் பொறித்த இராட்சச பலூன்கள் பறக்கத் தொடங்கின.




நகரில் பிரம்மாண்டமான நூற்றாண்டுவிழா
வரவேற்பு வளைவுகளில் ஒன்று

தினசரிப் பத்திரிகைகளில், பி.ஏ.சி.ஆரிடம் பெரு மதிப்புக் கொண்ட பெருமக்கள், தங்கள் நிறுவனங்களின் சார்பாக நூற்றாண்டு விழாவை வாழ்த்தி விளம்பரங்கள் வெளியிடத் தொடங்கி விட்டனர். விழாவிற்கு முந்தைய நாள்-23.4.94 பிற்பகல் 3 மணி அளவில் பி.ஏ.சி.இராமசாமி ராஜா மருத்துவ மனைக்கு எதிரே சின்மயா வித்யாலயா-பி.ஏ.சி.ஆர் மேனிலைக் குடிமைப்பள்ளி அமைந்துள்ள இளந்தோப்பிலிருந்து பிரம் மாண்டமான பேரணி ஊர்வலம் புறப்பட்டது. அலங்கரிக்கப் பட்ட யானைகள் கம்பீரமாக அசைந்து அசைந்து முன்வர



பேரணியில் கலை நிகழ்ச்சி



ஊர்வலத்தைக் காணும் திரளான மக்கள்



ஊர்வலத்தில் பள்ளி மாணவ - மாணவியர்



பி.ஏ.சி. ராமசாமி ராஜா கல்வி தர்மஸ்தாபன ஊர்தி

அவைகளின் மீது அமர்ந்திருந்தோர் வண்ணக் கொடிகளை ஏந்தி இருந்தனர். வெள்ளை நிறச் சீருடை அணிந்தோர் அமர்ந்த அழகிய குதிரைகள் துள்ளித் துள்ளி நடந்து வர, வண்ணச் வண்ணச் சீருடைகள் பூண்ட பள்ளிப் பிள்ளைகள், பாலிடெக்னிக், தொழிற் பயிற்சி நிலைய மாணவர்கள் 'அமரர் பி.ஏ..சி.ஆர் திருநாமம் வாழ்க வாழ்க' எனும் வாழ்த்தொலி களுடன் வரிசை வரிசையாக நடந்து வந்த அற்புதக் காட்சி கண் களைக் கவர்ந்தன. 'ராம்கோ' தொழில் நிறுவனங்களைச் சார்ந்த தொழிலாளர்கள் ஆண்களும், பெண்களும் தங்கள் தங்கள் நிறுவனப் பதாகைகளுடன் வந்த வண்ணமிருந்தனர். இடை இடையே கிராமிய ஆடல்பாடல்கள், கரக ஆட்டங்கள், ஒயிலாட்டங்கள், பொய்க்கால் குதிரை ஆட்டங்கள், ஆகியவை கண்ணுக்கும் செவிக்கும் விருந்தளித்தன. குதிரைகளுக்குப் பின்னால் இராணுவ போலீஸ் பாண்டு வாத்தியத்தை ஒலித்தவாறே வந்த இராணுவ வீரர்கள், என்.சி.சி. படையினர், ஊர்க்காவல் படையினர் பேரணிக்கு மிடுக் கூட்டினர். மங்கள வாத்தியமான நாதசுரம் முழங்கியது. ஊர்வலத்தினிடையே ஊர்ந்து வந்த ஊர்திகள் பெருந்தகையின் அற்புதச் சாதனைகளை நினை வூட்டின. பி.ஏ.சி.ஆர் வாழ்ந்த 'ராம மந்திரம்' மாளிகையை ஓர் ஊர்தி அடையாளம் காட்டியது; பி.ஏ.சி.ஆர்.அறக் கட்டளையின், சார்பில் 7500 மாணவ மாணவிகள் பயிலும் கல்வி தர்மஸ்தாபன திருப்பணிகளை வெளிப்படுத்த இன்னொரு ஊர்தி உருவாக்கம் கொண்டிருந்தது; ராம்கோ இண்டஸ்ட்ரீஸ், ராம்கோ சிமெண்ட்ஸ், ராம்கோ பஞ்சாலைப் பிரிவு என அமைந்த ஊர்திகளின் வடிவமைப்பு வனப்புடன், பெருந்தகையின் பேராற்றல் கொண்ட சாதனைகளை நினைப்பூட்டின! ஊர் வலத்தில் இடம் பெற்ற கேரள பஞ்சமேளம் கருத்தைக் கவர்ந்தது. வணிகர்கள் தங்கள் மரியாதையை புலப்படுத்தும் வகையில் வரிசை வரிசையாக ஊர்வலத்தில் பங்கேற்று நடந்து வந்தனர். இராஜபாளையம் ராஜுக்கள் சமுதாயம், குறிப்பாக பழைய பாளையம் ராஜுக்கள் சமுதாயப் பெருமக்கள் தங்கள் தலைவருடன் பேரணியில் பங்கேற்றனர். மலைக் குறவர்




வண்ணக் கொடி ஏந்தியோர் - அலங்கரிக்கப் பெற்ற
யானைகளில்



ஊர்வலத்தைக் காணும் திரளான மக்கள்



நூற்றாண்டு விழாவில் நகரில் அமைக்கப் பெற்ற
பி.ஏ.சி.ஆரின் திருப்பேருருவம் (கட்-அவுட்)



நகரின் மையப்பகுதியில் அமைந்த நூற்றாண்டுவிழா
நினைவுக் கடிகார அமைப்பிற்கு அருகே
பி.ஏ.சி.ஆர்., ஆர்.வி. கட்-அவுட்கள்

சமுதாயத்தைச் சேர்ந்த சிலர் பேரணியில் நடந்து வந்தனர். ஊர்வலப் பேரணி ஓர்இடத்தைக் கடப்பதற்கு ஏறத்தாழ ஒன்றரை மணி நேரம் ஆயிற்று! இளந்தோப்பிலிருந்து புறப்பட்ட ஊர்வலம், மதுரைப் பெருஞ்சாலை வழியாகச் சென்று, என்.ஆர்.கே. திருமண மண்டபத்தை அடைந்தது.

பேரணி ஊர்வலம் புறப்படுவதற்கு முன்னரே, வெயிலையும் பொருட்படுத்தாது மதுரை தென்காசிப் பெருஞ்சாலையின் இருபுறமும், பிற்பகல் இரண்டு மணியிலிருந்தே ஊர்வலத்தைக் காணப் பேராவலுடன் பெண்கள், ஆண்கள், குழந்தைகள் அனைவரும் பல்லாயிரக் கணக்கில் கூடி நின்றனர். சாலையின் ஓரங்களில் நின்ற மரங்களிலெல்லாம் மனிதர்கள்! கட்டிடங் களின் மாடிகளிலெல்லாம் மக்கள் நெருக்கமாக நின்று கொண்டிருந்தனர். சொல்லப்போனால் நகரத்தின் மக்கள் தொகை முழுவதும் சாலையின் ஒரங்களில் சங்கமமாகி நின்றன. நகரத்தின் சுற்று வட்டார மக்கள் காணக்கிடைக்காத பேரணியைக் கண்டு மகிழ, தங்கள் கிராமங்களையே காலி செய்து விட்டு வந்ததுபோல் தோன்றியது! ஊர்வலம் வருவதை யொட்டி நகரின் பிரதான சாலையான மதுரை தென்காசி சாலையில் போக்குவரத்துத் தடைப்படுத்தப்பட்டு இருந்ததால், எவ்வித இடையூறுமின்றிப் பேரணி நகர்ந்து நகர்ந்து செல்வதற்கும், இருபுறமும் நின்று கொண்டிருந்த மக்கள் பார்த்துப் பார்த்துப் பரவசம் கொள்வதற்கும் அரிய வசதி உரிய வகையில் அமைந் திருந்தது. வீடியோ எடுப்போர் விறுவிறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தனர். வரலாற்றுச் சிறப்புமிக்க பேரணி ஊர்வலத்தை பத்திரிகைகளில் வர்ணித்து எழுதுவதற்காக, நிருபர்கள் பேரணியைப் பார்ப்பதும், குறிப்பு எழுதுவதுமாக, ஆங்காங்கே நின்று கொண்டிருந்தனர். மதுரை-தென்காசிச் சாலையில் ஸ்டேட் வங்கிக்கு முன் அமைத்திருந்த அலங்கரிக்கப் பெற்ற மேடையில் அமர்ந்து, நூற்றாண்டுப் பெருவிழாத் தலைவர் ஆர். வெங்கட்டராமன், பி.ஆர்.ஆர் மற்றும் பிரமுகர்கள் பேரணி ஊர்வலத்தைக் கண்டு களித்தனர். அரசாங்கம் நடத்தும் ஊர்வலப் பேரணிகளை எத்தனையோமுறை முன்னாள்




பேரணி ஊர்வலத்தைக் கண்டு மகிழும்
ஆர்.வி.யும், பி.ஆர்.ஆரும்.

குடியரசுத் தலைவர் ஆர்.வி. பார்த்து மகிழ்ந்தவர்தான். எனினும் தமிழ்நாட்டில் ஒரு தொழில் அதிபரின் நூற்றாண்டு விழாவை யொட்டி நாட்டிலேயே முதன் முதலாக நடைபெறும் பேரணியை அன்று கண்டு மகிழ்ந்தார் ஆர்.வி ! ஆம், அரசு சார்பிலும், அரசியல் கட்சிகளின் சார்பிலும்தான் நாட்டில் இதுவரை பேரணிகள் நடந்துள்ளன. ஒரு தொழில் அதிபருக்காக, இத்தகைய பிரம்மாண்டமான பேரணி, உற்சாகத்தோடும் உத்வேகத்தோடும் எந்த ஒரு நகரத்திலும் தமிழ் நாட்டில் நடந்த தில்லையே! இராஜபாளையம் நகரில் இடம் பெற்ற அமரர் பி.ஏ.சி.ஆர். நினைவுப் பேரணி ஊர்வலம்-அபூர்வமானது! அரிய வரலாறு படைத்தது!

பெருந்தகையின் சாதனைகளைப் போற்றும் வகையிலும், எண்ணி மதித்து நன்றி உணர்வைக் காட்டும் வகையிலும் வணிகப் பெருமக்கள் தென்காசிச் சாலையில் இடம் பெற்றிருந்த தங்கள் நிறுவனங்களிலெல்லாம், அமரர் பி.ஏ.சி.ஆரின் திருவுருவப்படத்தை அங்கங்கே அலங்கரித்து வைத்து இரவில்



*ஊர்வலத்தில் ராஜபாளையம் ஆலைத் தொழிலாளர்கள்*

மின்சார வண்ண விளக்குகளால் பொலிவூட்டி இருந்தனர். நிறுவனங்களின் கட்டிடங்களிலெல்லாம் வண்ண விளக்குகள் கண்ணைக் கவர்ந்தன.

பெருந்தகை வாழ்ந்திருந்த ராமமந்திரத்திற்கு அருகேயுள்ள பி.ஏ.சி.ஆரின் திருவுருவச் சிலைக்கு அமைத்திருந்த அற்புதமான மின்விளக்கு. ஜோடனைகளை, மக்கள் திரள் திரளாகக் கூடி நின்று பார்த்து வியந்தனர்; பரவசத்துடன் கண்டு மகிழ்ந்தனர். வீதியெங்கும் அமைத்திருந்த குழல் விளக்குகள், இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. ராம்கோ நிறுவனங் களின் கட்டிடங்கள், கல்விச் சாலைகள் பெருந்தகை வாழ்ந்த ராமமந்திரம் மாளிகை அனைத்தும் வண்ண வண்ண மின் விளக்குகளால் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. அன்றைய நாள் கலை நிகழ்ச்சியாக அமைந்த செல்வி சிந்தூரி பரத நாட்டியத்தை ஆயிரக் கணக்கான மக்கள் கூடியமர்ந்து, கண்டும் கேட்டும் ரசித்து மகிழ்ந்தனர்.




செல்வி சிந்தூரி நாட்டிய நிகழ்ச்சி

மிகப் பெரிய அறச் செல்வருக்கு, மிகப் பெரிய அளவில் அமைக்கப் பெற்ற நூற்றாண்டுப் பெருவிழா 24.4.94 ஞாயிறு அன்று அதிகாலை, தமிழ்நாட்டின் ஆங்கில, தமிழ் தினசரிப் பத்திரிகைகளில் வாழ்க்கை வரலாற்றுடன் வாழ்த்துக்களும் வணக்கங்களும் இடம் பெற, சிறப்பு மலர்கள் வெளியாகி இருந்தன! அமரர் பி.ஏ.சி.ஆரின் குடும்பத்தினர் திருக்கோயில் களுக்குச் சென்று வழிபாடு செய்தனர்.

'நகர நாயகர்' 'நகரின் புதிய ஒளி' 'தொழில் தந்தை' 'அறப்பணிச் செல்வர்' 'ஆன்மீகச் செம்மல்' 'வாழ்வாங்கு வாழ்ந்து வரலாறு படைத்த பெரியார்' 'பிறர் நலம் பேணிய பெருந்தகை' அமரர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் நூற்றாண்டுப் பெருவிழா, மக்களின் மகிழ்ச்சிக்குரிய ஒரு திருவிழாவாக மலர்ந்தது! இராஜபாளையம் பி.ஏ.சி. இராமசாமி ராஜா பாலிடெக்னிக் வளாகத்தில் அமைக்கப்பட்டிருந்த நூற்றாண்டுப் பெருவிழாப் பந்தல், பல்லாயிரக் கணக்கானோர் அமர்ந்து விழாவினைப் பார்த்து மகிழுமாறு வசதிகள் செய்யப்பட்டிருந்தது. அமரர்,

தீர்க்கதரிசி பி.ஏ.சி.ஆரின், பேராண்மையும் பெருங்கருணையும் கொண்ட முகப் பொலிவு, பின்புலமாக அமைய விசாலமாக அமைக்கப் பெற்றிருந்த விழா மேடை, வித்தகமாக அலங்கரிக்கப் பெற்றிருந்தது.

அமரரின் நினைவாலயத்தில் தவத்திரு சுவாமி தயானந்த சரசுவதி அகண்ட தீபத்தை அமர ஜோதியாக ஏற்றுவித்து, நூற்றாண்டு நினைவுச் சமூகக் கூடத்தை ஜி. ராமானுஜம் திறந்து வைத்து, ராம்கோ தொழிற் பயிற்சி நிலையத்தை ஏ. சிவசைலம் திறந்து வைத்த பின்னர், விழா நாயகர் ஆர்.வி.யுடன், விழாவில் பங்கேற்கும் பிரமுகர்கள் விழாப் பந்தலுக்கு வருகை புரிந்தனர்.



சஞ்சீவிமலை அடிவாரத்தில் பி.ஏ.சி.ஆர். நினைவாலயம்

மங்கல நாதசுர வாத்தியம் முழங்கிக் கொண்டிருக்க, மங்கலப் பொருளுடன் மங்கையர் விழாப் பந்தலின் வாயிலில் பிரமுகர் களை மகிழ்ச்சியுடன் வரவேற்க, பெருந்தகையின் திருக்குமாரர் பி.ஆர். இராமசுப்பிரமணிய ராஜா பெருமக்களை விழா மேடைக்கு அழைத்துச் சென்றார்.



பி.ஏ.சி.ஆர். நினைவாலயத்தில் சுவாமி தயானந்த சரசுவதி அவர்கள் அகண்ட தீபத்தை ஏற்றி வைக்கிறார்கள்



நூற்றாண்டுவிழா சமூகக் கூடத்தை ஜி. ராமானுஜம் அவர்கள் திருவிளக்கை ஏற்றி, திறந்து வைக்கிறார்



ராம்கோ தொழிற் பயிற்சிக் கூடத்தை ஏ. சிவசைலம் அவர்கள் திறந்து வைக்கிறார்

விழா மேடையில் விழாத் தலைவர் ஆர்.வி.யும், சுவாமி தயானந்த சரசுவதியும் அமர்ந்த பின்னர், விழாவில் பங்கேற்ற ஜி.ராமானுஜம், ஏ. சிவசைலம், ஜி.கே.சுந்தரம், டாக்டர் பிரதாப் ரெட்டி, காமராஜ் மாவட்ட ஆட்சித் தலைவர் வெங்கட்ரமணன் ஆகியோருடன் பி.ஆர்.ஆர் அமர்ந்தார். இறைவணக்கம் நிகழ்ந்த பின்னர், விழாத் தொடக்கத்தை குறிக்கும் வகையில் மங்கல மங்கையரால் குத்துவிளக்கு ஏற்றுவிக்கப் பெற்றது.

நூற்றாண்டு விழாத் தலைவரும், பி.ஏ.சி.ஆரின் திருக்குமாரருமான பி.ஆர்.ஆர். வரவேற்புரை நிகழ்த்தினார்.

விழாவில் பங்கேற்ற பிரமுகர்களைப்பற்றிய பெருமைகளை, தொடர்புகளைப் பற்றியும், குறிப்பாக ஆர்.வி. தமது தந்தை யாருக்கும், தமக்கும் அளித்த உதவிகளையும், ஒத்துழைப்புகளையும் உருக்கமாக நினைவுகூர்ந்து உள்ளார்ந்து வரவேற்றார் பி.ஆர்.ஆர்.




பி.ஆர்.ஆரின் வரவேற்புரை




தலைமை ஏற்ற ஆர்.வி. அவர்களுக்கு பி.ஆர்.ஆர்.
மாலை அணிவித்து மகிழ்கிறார்



நூற்றாண்டு விழாவிற்கு வருகை புரிந்த பெருமக்கள்

பிறர் நலம் பேணிய தமது தந்தையாரின் பெருங்குணப் பண்பையும், பகுதி மக்களின் வாழ்வுக்கு அமைத்துத் தந்த பெருந் தொழில்களையும், அறமனச் செல்வராகவும், ஆன்மீக நெறியாள ராகவும் விளங்கிய அரிய தன்மைகளையும் குறிப்பிட்டு, நூற்றாண்டு விழாவிற்கு வருகை தந்திருந்த அனைவரையும், விழாக் குழுவின் சார்பிலும், தமது குடும்பத்தார் சார்பிலும் பேரன்போடும், பெரு மதிப்போடும் பி.ஆர்.ஆர். வரவேற்றார்.

“சரியான சிந்தனை (right thinking) சரியான வாழ்க்கை (right living) முறைகளைக் கையாண்ட அமரர் பி.ஏ.சி.ஆர், தமக்கென வெற்றி வாய்ப்புக்குரிய, தனித்தன்மையுடைய நெறிகளைப் பின்பற்றிய பேரறிவாளர். குடும்பத்தின் குருவாகவே அப் பெருமகனார் விளங்க, அவருடைய மாணவர்களாகவே குடும்பத்தினர் திகழ்ந்து வந்துள்ளனர்! வேதங்கள், சாஸ்திரங்கள் ஆகியவற்றின் ‘ஊடுபாவை’ உணர்ந்து கொள்ள வாழ்வு முற்றும் ஆர்வம் காட்டிய பெருமகனார் அமரர் பி.ஏ.சி.ஆர்” என நல்லாசி வழங்கிய சுவாமி தயானந்த சரஸ்வதி குறிப்பிட்டு மகிழ்ந்தார்கள்.

நூற்றாண்டு விழா நினைவுச் சமூகக் கூடத்தைத் திறந்து வைத்த இந்தியத் தேசீயத் தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் ஜி.இராமானுஜம், "இருபது வருடம் இடைவிடாது தொடர்பு கொண்டிருந்த அமரர் பி.ஏ.சி.ஆர். ஒரு அதிசயமான தொழில் அதிபர்! மனிதாபிமானத்துடன் நடந்து கொண்ட தர்மசீலர்! தொழிற்சங்க எதிர்பார்ப்பைக் காட்டினும், தொழிலாளர்களுக்கு வழங்குவதில், பி.ஏ.சி.ஆர் பெரிய மனம் கொண்டு சற்று தாராளமாகவே நடந்து கொள்வார். எனவே பேச்சுவார்த்தையில் ஈடுபடுகிற வேளையில், பெரும்பான்மையும் முடிவை அப் பெருந்தகையின் விருப்பத்திற்கே விட்டு விடுவது என் வழக்கம்" என்றார்.

"தீர்க்கதரிசியாகவும், தொழில் துறையில் முன்னோடியாகவும் திகழ்ந்த அமரர் பி.ஏ.சி.ஆர், என் தந்தையார் அனந்தராம கிருஷ்ணனுடன் நெருங்கிப் பழகி நட்பு பூண்டிருந்தார். ஒரு தொழிற்சாலையை எப்படி நடத்த வேண்டும் என்பதற்கான முன் மாதிரியாக தமது தொழிலகத்தை நிர்வகித்ததோடு, கல்வி, மருத்துவம் போன்ற சமுதாயத் தேவைகளை நிறைவு செய்யும் தர்ம ஸ்தாபனத்தை உருவாக்கி, பொறியியல் துறையில் நாட்டம் கொண்டு அவர் ஆற்றிய பணிகள் பாராட்டிற்குரியவை" என ராம்கோ தொழிற் பயிற்சி நிலையத்தைத் திறந்து வைத்த, அமால்கமேஷன்ஸ் தலைவர், தொழிலதிபர் ஏ. சிவசைலம் குறிப்பிட்டார்.

நூற்றாண்டு விழா நினைவு மலரை வெளியிட்டுப் பேசிய, கோவை லெட்சுமி மில்ஸ் கம்பெனியின் தலைவர், தொழிலதிபர் ஜி.கே. சுந்தரம் கூறினார்: "தமிழ் நாட்டில் வாழ்ந்து வரும் சின்னஞ்சிறிய சமூகத்தைச் சார்ந்த அமரர் இராமசாமி ராஜா, இராஜபாளையத்திற்கு மட்டுமல்லாது, தமிழ்நாடு முழுமைக்குமான தொழில் வரலாற்றின் தனி அத்தியாயமாகத் திகழ்கிறார். அவர் சாதனை புரிந்ததற்கு அடிப்படைக் காரணமாக அமைவது எனக்குத் தெரிந்தவரை-தொழிலைப் பற்றித் தெளிவாக அறிந்து கொண்ட பின்னரே தொழிலைத் தொடங்கியதுதான்! 'சர்ஜிகல்' போன்ற அவசியத் தேவைக்கான தொழில்களை, சிறிது

பெரிதென்று பாராமல் தொடங்கிய கர்மவீரர்! தொழில் உறவு பேணத்தக்க ஒன்று என்பதை ஆழமாக உணர்ந்து, தொழில் உறவில் இராஜபாளையத்தை முன் மாதிரியாகக் கொள்கிற வகையில், 'தொழிலாளர்-நிர்வாகம்' ஆகியவை ஒருமை யுணர்வுடன் செயலாற்றச் செய்த ராஜா, புகழார்ந்த தொழில் மேதையாக போற்றப் பெற்றார்"



நூற்றாண்டுவிழா நினைவு மலரை ஜி.கே. சுந்தரம் அவர்கள் வெளியிட முதல் பிரதியை ஆர்.வி. பெற்றுக் கொள்கிறார்

அப்போலோ குரூப் மருத்துவ மனைகளின் தலைவர் பி.சி.ரெட்டி, ரூபாய் 12 கோடி முதலீட்டில் நிறுவத் திட்ட மிட்டுள்ள நவீன, ராம்கோ அப்போலோ மருத்துவ நிலையம்' உருவாக உரிய உதவியும், ஒத்துழைப்பும் வழங்குவதாக உறுதியளித்துப் பாராட்டுரை வழங்கினார். தங்கள் அப்போலோ மருத்துவமனை இன்று உலகப் புகழ் பெற்று விளங்குவதாகவும், ஆர்.வி.யின் கைராசியான கரங்கள் இங்கு இப்போது 'ராம்கோ அப்போலோ மெடிகல் சென்டருக்கு, அடிக்கல் நாட்டுவதால்,

ஏழை எளிய மக்களுக்குச் சேவை செய்வதில், அமைய இருக்கும் மருத்துவமனை நிச்சயமாக உலகப் புகழ் பெறுமென நம்பிக்கை தெரிவித்தார். அமரர் ராஜாவின் மைந்தர் தமது அன்பிற்குரிய ராமசுப்பிரமணிய ராஜாவை, இத்தகைய மக்கள் நலனில் ஆர்வம் கொண்டிருப்பதையறிந்து, பெரிதும் பாராட்டுவதாக பி.சி.ரெட்டி மகிழ்ந்து கூறினார்.




ராம்கோ - அப்போலோ மெடிக்கல் செண்டருக்கு ஆர்.வி. அடிக்கல் நாட்டுகிறார்

டாக்டர் பி.சி. ரெட்டி கரம் ஒலிக்கக் களிப்படைகிறார்.

மாவட்ட ஆட்சியாளர், வாழ்த்துரை வழங்கிய பின்னர் விழாத் தலைவர் ஆர். வெங்கட்டராமன், அமரர் பி.ஏ.சி. இராமசாமி ராஜாவின் திருவுருவச் சிலையை நெகிழ்ச்சியுடன் திறந்து வைத்து, அப்பெருந்தகையின் வாழ்க்கை வரலாற்று நூலை மகிழ்ச்சியுடன் வெளியிட்டு, ராம்கோ அப்போலோ மெடிகல் சென்டருக்கு அடிக்கல் நாட்டினார். சிறப்புரையாகத் தமது தலைமை உரையை ஆர்.வி. ஆற்றினார்:




ஆர்.வி. திறந்துவைத்த அமரர் பி.ஏ.சி.ஆரின்
திருவுருவச்சிலை

“இரண்டு நாள்களாக இராஜபாளையம் விழாக்கோலம் பூண்டுள்ளது. மக்கள் எங்கும் மகிழ்ச்சியாகக் காணப்படு கின்றனர். இராஜபாளையத்தில் பிறந்த பெரியார் அமரர் இராமசாமி ராஜாவின் நூற்றாண்டு விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. தான் உண்டு, தன் குடும்பம் உண்டு என வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருந்தால், இத்தகைய சிறப்பு ஏற்பட்டிருக்குமா? இந்த நகர், இந்தப் பகுதி, இந்த நாடு வளம் பெற வேண்டுமென பொதுநலம் கொண்ட பெருவாழ்வைப் பெற்றதால்தான் அமரர் ராஜாவை ‘பெரியவர்’



பி.ஏ.சி.ஆரின் வாழ்க்கை வரலாற்று நூலை
ஆர்.வி. வெளியிடுகிறார்

என்றும் 'பெருந்தகை' என்றும் போற்றுகிறோம். அவரது நூறாவது பிறந்த நாளில், நூற்றாண்டுப் பெருவிழா அமைத்துக் கொண்டாடுகிறோம்!" எனக் கூறிய ஆர்.வெங்கட்டராமன், அமரர் ராஜா வாழ்ந்த காலத்தில் தொழில் தொடங்குவதிலுள்ள இன்னல்கள், இடையூறுகள் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, "அத்தகைய சூழ்நிலை இருந்த காலத்திலேயே, துணிச்சலாகத் தொழிலைத் தொடங்கினார் இராமசாமி ராஜா. ராஜா தொழில் தொடங்கிய நோக்கம், தமக்கு வருமானம் வர வேண்டும்; தாம் வளமாக வாழ வேண்டுமென்பதல்ல; வறட்சியான இந்தப் பகுதி, வறுமையின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமென்பதே ராஜாவின் தலையாய நோக்கம். தமது நோக்கம் வெற்றி பெறுமென்பதை ராஜா தீர்க்க தரிசனமாகக் கண்டார்" என மகிழ்ந்துரைத்தார் ஆர்.வி.

தாம் தொழில் அமைச்சராகத் தமிழ்நாட்டில் பொறுப் பேற்றிருந்தபோது, நாடு இருந்த நிலைகளை விளக்கி, தொழில்

மயமான நாடே வறுமையை ஓட்டுமெனத் தீவிரமாக முயன்று வரும்போது தமிழ் நாட்டில் தொழில் தொடங்குபவர்களோடு அதிகத் தொடர்பு தாம் கொண்டிருந்ததாகவும், தாம் தொடர்பு கொண்டிருந்த தொழிலதிபர்கள் பலரில், அமரர் ராஜா வித்தியாசமான அரிய குணநலன்கள் பெற்றிருந்தாரென, முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர்.வி. அமரர் ராஜாவிற்கு புகழாரம் சூட்டிப் போற்றினார்.

"கோபப்படமாட்டார்; யாரையும் குறையாகப் பேச மாட்டார்; தொழில் நடத்துவதில் உள்ள சங்கடங்களை அதிகமாக வெளிக் காட்டிக் கொள்ள மாட்டார்; அவருடைய தோற்றப் பொலிவே, எவரும் அவரிடம் மரியாதை கொள்ளத் தோன்றும்! என்னிடமும், தலைவர் காமராஜிடமும் அதிக மதிப்பு வைத்திருந்தார்; நானும் ராஜாவிடம் அதிக மரியாதை வைத்திருந்தேன்." என அமரர் இராமசாமி ராஜாவிடம் ஆர்.வி.கொண்டிருந்த தொடர்பு குறித்துப் பெரு மகிழ்ச்சியுடன் வர்ணித்தார் நூற்றாண்டு பெருவிழாத் தலைவர்.

"சமுதாய நலத்தைப் பேணுவதில் அமரர் ராஜா அதிக அக்கறை கொண்டிருந்தார். அதனால்தான் தர்ம ஸ்தாபனத்தைக் தொடங்கினார். ராஜாவைப் போலவே அவரது குமாரர் ராமசுப்பிரமணிய ராஜா தொழில் துறையைப் பன்மடங்காக வளர்த்திருப்பதோடு, சமுதாய நலனிலும் அபரிமிதமாக ஆவல் கொண்டு செயலாற்றி வருகிறார். அத்தகைய ஆவலால்தான் நூற்றாண்டு விழா நினைவாக தொழிற்பயிற்சி நிலையம், சமூகக் கூடம், உலகப் புகழ் கொண்ட பி.சி.ரெட்டியின் ஒத்துழைப்புடன் ராம்கோ அப்போலோ மருத்துவமனை ஆகியவற்றை இன்று தொடங்கியுள்ளார். இந்து தர்மத்தில் மிகுந்த நம்பிக்கை கொண்ட ராஜாவின் குடும்பத்தார் மேலும் வளர்க; அவர்களது அறச் செயல்கள் ஓங்குக! " எனச் சிறப்புரையை நிறைவு செய்தார் ஆர்.வி. பின்னர், நூற்றாண்டு விழா நினைவு அன்பளிப்பை, பங்கேற்ற பிரமுகர்கள் அனைவருக்கும் பெருமகிழ்ச்சியுடன் பி.ஆர்.ஆர். வழங்கினார். வாழ்க்கை வரலாறு எழுதிய எழுத்

தாளருக்கும், நினைவாலயம் அமைத்த சிற்பிக்கும், திருவுருவச்சிலை அமைத்த கலைஞருக்கும், சமூகக் கூடத்தை நிர்மாணித்த நிறுவனத்தாருக்கும், நினைவு மலர் உருவாக்கி அளித்த அமைப்பிற்கும், சிறப்புச் செய்து நினைவுப் பரிசுகள் வழங்கப் பெற்றன.

திரைப்படமாக எடுக்கப் பெற்ற பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் வரலாறு, விழாவில் திரையிடப் பெற்றது. பெருந்தகையின் பேரன் பி.ஆர்.வெங்கட்டராம ராஜா நன்றி கூற, விழா இனிது நிறைவெய்தியது.

நூற்றாண்டு விழாப் பகல் விருந்து, பல்லாயிரக் கணக்கான பொது மக்களுக்கு வழங்கப் பெற்றது. பழையபாளையம் பாரதி கல்யாண மண்டபம், கே.எஸ்.ஆர். கல்யாண மண்டபம், ஜெயராம் மில்ஸ் ஆகிய நகரின் மூன்று இடங்களில் பொதுமக்களுக்கு விருந்தளிக்கப் பெற்றது. பிரமுகர்களுக்கும், முக்கிய விருந்தினர்களுக்கும் சர்ஜிகல் ஆலை வளாகத்தில் அமைக்கப் பெற்ற பிரம்மாண்டமான பந்தலிலும், சமூகக் கூடத்திலும் விருந்து கொடுக்கப் பெற்றது.

நூற்றாண்டு விழா நினைவாக 'ராம்கோ' நிறுவனங்களில், 'ராம்கோ' தர்ம ஸ்தாபனங்களில் பணியாற்றும் அனைவருக்கும் ஸ்வீட் பாக்கெட்டுடன், வேட்டி, அங்கவஸ்திரம், சேலை ஆகியவை ரூபாய் 50 லட்சம் செலவில் நினைவுப் பரிசில் வழங்கப்பட்டது.

அன்று இரவு இலட்சக் கணக்கான மக்கள் ஆர்வத்துடன் கண்டுகளித்த அகமகிழக் கேட்டு இன்புற்ற கங்கை அமரன் கலை நிகழ்ச்சி நடைபெற்றது. பிரபல திரைப்படப் பின்னனிப் பாடகர்கள் எஸ்.பி.பாலசுப்பிரமணியம், மனோ, ஆகியோர் கலை நிகழ்ச்சி இசைக்குழுவில் பங்கேற்றிருந்தனர். நகரம் கண்டிராத மக்கள் வெள்ளம், இரவை துரத்திவிட்ட மின்னொளி வெள்ளத்துடன் சங்கமமாகி அலை அலையாக எழுந்த அபூர்வக் காட்சி, பார்க்கப் புரவசமூட்டுவதாய் அமைந்தது!.



தொழிலாளர்களுக்கு நூற்றாண்டு நினைவு
அன்பளிப்பு வழங்குகிறார் பி.ஆர்.ஆர்.




கங்கை அமரன், எஸ்.பி. பாலசுப்பிரமணியம்,
மனோ கலை நிகழ்ச்சி



இசைநிகழ்ச்சியில் திரளாக கலந்து கொண்ட மகளிர்



லால்குடி கிருஷ்ணன், லால்குடி விஜயலட்சுமி
இரட்டை வயலின் இன்னிசை




*பி.ஆர். வெங்கட்டராம ராஜா நன்றியுரையாற்றுகிறார்*

நூற்றாண்டு விழாக் குழுவினருக்கும், இரவென்றும் பகலென்றும் பாராது விழாப் பணியாற்றிய பெருமக்களுக்கும், ராம்கோ ஊழியர்களுக்கும் 25.4.94 அன்று பி.ஆர்.ஆர், நன்றிப் பெருக் குடனும், நல்லதோர் இன்னிசை நிகழ்ச்சியுடனும், பி.ஏ.சி.ஆர் நூற்றாண்டு நினைவுச் சமூகக் கூடத்தில் இரவு விருந்தளித்தார். இரட்டை வயலின் இன்னிசையை லால்குடி கிருஷ்ணன், லால்குடி விஜயலட்சுமி ஆகிய இருவரும் வழங்கி மகிழ்வித்தனர்.

உயிருக்கு ஊதியமாக அமைபவை ஈதலும், இசைபட வாழ்தலுமே என்றார் திருவள்ளுவர். இசைபட வாழ்ந்த பெருந்தகையின் நூறாவது பிறந்த நாள் பெருவிழா இன்னிசையோடு நிறைவு பெற்றது.

புதிய வரலாறு படைத்த, போற்றுதலுக்குரிய பெருந்தகை பி.ஏ.சி.ஆரின் நூற்றாண்டுப் பெருவிழா, உருவாக்கிய புகழார்ந்த சரித்திரம் என்றென்றும் மக்கள் மனத்தில் பசுமையாக நின்று நிலவும்.

உள்ளத்தால் பொய்யாது ஒழுகின், உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.

குறள்.294.

* * *

